# அறிந்தவைகளுக்கு அப்பால்...

## ஓஷோ

மொழியாக்கம்

சுவாமி ஆனந்த் பரமேஷ்




**கவிதா** பப்ளிகேஷன்

தொலைபேசி : 24364243

தபால் பெட்டி எண் : 6123

8, மாசிலாமணி தெரு, பாண்டிபஜார்

தி.நகர், சென்னை – 600 017.

**ARINTHAVAIKALUKKU APPAL...** (Tamil)


Originally published in English as
**DIMENSION BEYOND THE KNOWN**
Under the author name OSHO




| | | |
|---|---|---|
| Translated by | : | **Swamy ANAND PARMESH** |
| Coordination by | : | **Swamy PREM RICHA** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | 1998 |
| Second Edition | : | 2003 |
| Third Edition | : | 2008 |
| Fourth Edition | : | November, 2010 |
| Fifth Edition | : | August, 2014 |
| Pages | : | 272 |
| **Price** | : | **Rs.100.00** |
| ISBN | : | 978-81-8345-264-9 |
| Printed at | : | Zigma Graphics, Chennai - 5. |

Published by :
**KAVITHA PUBLICATION**
Post Box No. 6123, # 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 24364243 / 24322177 / 2433 6502 Tele Fax : 044 - 24364243
E-mail : kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.com

# முன்னுரை

இந்த நூற்றாண்டில் அவதரித்த, சந்தேகமில்லாமல் மிகவும் சர்ச்சைக்குள்ளான மனிதர் ஓஷோ. பல சுதந்திரமடைந்த (free) நாட்டு அரசாங்கங்கள், இந்த ஞானமடைந்த குருவை வேட்டையாடி கொல்ல முயன்றார்கள். ஆனல், அது போனிக்ஸ் (PHOENIX) பறவையைப் போல, மீண்டும் அவர் உயிர்த்தெழவே வழிவகுத்திருக்கும். உண்மையை எப்படி ஒருவரால் அடக்க முடியும்?

இந்த புத்தகத்தில், ஓஷோ, பம்பாயில் 1970-1973 இல்பேசிய 6 பிரசங்கங்கள் அடங்கியிருக்கின்றன. இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றியும், அதனுடைய எல்லையற்ற தன்மையைப்பற்றியும் ஓஷோ மிகவும் புதிய முறையில் விளக்கியிருக்கிறார். அந்த மறைபொருளான ஆன்மிக ரகசியத்தை எல்லோரும் அறிந்து கொள்ளும் வகையில், தனக்கே உரித்தான எளிய நடையில் விளக்கியிருக்கிறார்.

நான் படித்த இந்த ஒரே புத்தகத்தில்தான், அவர் தன்னுடைய முந்தைய பிறவியைப்பற்றி அழகாகத் தொகுத்துப் பேசியிருக்கிறார். காலத்திற்கும், தன்னுடைய முந்தைய பிறவிகளுக்கும் மற்றும் இந்தப் பிறவியில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளுக்கும் உள்ள சம்மந்தத்தைப் பற்றி அவர் விளக்கியிருக்கிறார். அதைப்போல இறப்பின் நிகழ்வைப்பற்றியும், திபேத்தியன் போர்டோ (TIBETAN BORDO) மற்றும் மறுபிறவி பற்றியும், அவர் விளக்கமாகக் கூறியிருக்கிறார். அது சாதாரண அறிவுப்பூர்வமான கற்பனையோ அல்லது ஆதார மற்ற கொள்கையின் அடிப்படையில் அமைந்ததோ அல்ல. அவைகள் அனைத்தும், அவருடைய தனிப்பட்ட அனுபவத்தின் வெளிப்பாடு.

ஓஷோ, இந்த ஆன்மிக கோட்பாட்டை எடுத்துக் கொண்டு, தனக்கே உரித்தான எளிமையான மற்றும் தொகுப்பாக அடுத்தடுத்து விளக்கிக் கொண்டு செல்வது என்பது அவருடைய பல புரியாத புதிர்களில் ஒன்று என்று கூறலாம்.

அவரே தன்னிலையாக விளங்குகிறார். இந்தப் புத்தகத்தில் உள்ள அவருடைய பிரசங்கங்கள், இந்த பேரியிக்க உயிர்த்தன்மையைப் போல, அவ்வளவு புரியாத புதிராகவே இருக்கின்றன.

**சுவாமி ஆனந்த் யோகேந்திரா,**
(SWAMY ANAND YOGENDRA, B.A., LLB.)

# உள்ளே...

1. இதைத்தவிர சொல்வதற்கு எதுவுமில்லை 5
(NOTHING ELSE TO TELL EXCEPT THIS)

2. நான் எதற்காக வந்தேன்? 62
(WHY I HAVE COME)

3. பாதைகள் பல பயணிகளோ சிலர் 116
(PATHS ARE MANY, THE TRAVELLERS ARE FEW)

4. திருப்பு முனைக்கான நேரம் இதுவே 170
(THIS IS A TIME OF CRISIS)

5. புதிய மனிதனின் பிறப்பு 210
(THE BIRTH OF A NEW MAN)

6. வாழ்வு முழுவதும் புரியாத புதிர்களே 239
(LIFE IS FULL OF MYSTERIES)



# 1. இதைத்தவிர சொல்வதற்கு எதுவுமில்லை (NOTHING ELSE TO TELL EXCEPT THIS)

''நான் உங்களுடைய புத்தகங்களைப் படித்திருக்கிறேன். மற்றும் உங்களுடைய சொல்லாற்றலில், ஒரு வசியமும் தெளிவும் காணப்படுகின்றன. சிலசமயம், நீங்கள் மஹாவீராவைப் பற்றியும், மற்றும் சிலசமயம் கிருஷ்ணா அல்லது புத்தாவைப்பற்றியும், அடுத்து ஜீசஸ், முகமது போன்றவர்களைப்பற்றியும் பேசுகிறீர்கள். கீதையின் உட்கருத்தை மிக விரிவாக, எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ளும் அளவுக்கு எடுத்துரைக்கிறீர்கள். மேலும், உபநிஷத்தைப் பற்றியும், வேதத்தைப் பற்றியும் நீங்கள் தெளிவாக பிரசங்கம் செய்கிறீர்கள். உங்கள் பிரசங்கங்களை, கோவில்களிலும், சர்ச்சுகளிலும் நடத்தத் தயங்கவில்லை. அதே சமயத்தில், மேற்சொல்லிய ஞானிகளால் என்னிடம் எந்தத் தாக்குதலும், பிடிப்பும் ஏற்படவில்லை என்றும் கூறுகிறீர்கள். எனக்கும் அவர்களுக்கும், எந்தவித சம்மந்தமும் இல்லையென்றும், அவர்களோடு நான் பல விஷயங்களில் ஒத்துப் போகவில்லை என்றும் சொல்லுகிறீர்கள். பழைய மத ஏடுகளையும், நம்பிக்கைகளையும், நீங்கள் தொடர்ந்து தாக்கி வருகிறீர்கள். உங்களுடைய உண்மையான நோக்கம்தான் என்ன? நீங்கள் ஏதாவது புதிய மதத்தை உங்கள் பாணியில் ஏற்படுத்த விரும்புகிறீர்களா? உங்களிடம் எல்லையில்லாத அறிவும், விஷய ஞானமும் இருப்பதைக் காட்டிக் கொள்ள விரும்புகிறீர்களா? அல்லது எல்லோரையும் குழப்ப நினைக்கிறீர்களா?

நீங்கள் வார்த்தைகளை உபயோகித்துதான், உங்கள் கருத்துக்களை விளக்குகிறீர்கள். ஆனால், அதேசமயம், நீங்கள், ''வார்த்தைகளோடு நீங்கள் ஐக்கியமாகிவிட்டால், நீங்கள் எந்த ஆன்மிக முன்னேற்றமும் காணமுடியாது என்று வேறு கூறுகிறீர்கள். மேலும், நீங்கள், ''என்னையோ அல்லது என் வார்த்தைகளையோ சார்ந்து இருக்காதீர்கள், என்னை நம்பாதீர்கள். அப்படிச் செய்தால், நீங்கள் ஒரே தவறை மீண்டும் செய்தவராவீர்கள்'' என்றும் கூறுகிறீர்கள். மேலும், நீங்கள் மறுப்பது என்பது ஆன்மிகத்துக்கு வழி விடும் என்றும் சொல்லுகிறீர்கள்.

தயவு செய்து நீங்கள்யார்? நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள் என்பதை விளக்கவும். நீங்கள் என்ன செய்ய விரும்புகிறீர்கள், உங்களுடைய நோக்கம்தான் என்ன? தயவு செய்து விளக்கவும்.''

முதலில், மஹாவீரர், புத்தர், கிருஸ்து அல்லது முகமது போன்றவர்களால், நான் ஆக்ரமிக்கப்படவில்லை. ஒரு மதத்தின் அழகு என்ன என்று எடுத்துக்கொண்டால், ஒருவகையில், அது எப்பொழுதும் பழமையுடையதாகவே இருப்பதுதான். ஆகவே, ஒரு வகையில், மத அனுபவம் என்பது பலபேர்களால் அறியப்பட்ட ஒன்றாக இருந்தது. ஆனால், எந்த மத அனுபவமும், ஒருவரை ''இது என்னுடையது'' என்று சொந்தம் கொண்டாட வைத்ததில்லை.

இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலில், இந்த மத அனுபவம் ஏற்படும் பொழுது, 'இது என்னுடையது' என்ற உணர்வு ஒருவரிடம் மடிகிறது. ஆகவேதான் , இந்த உலகத்தில், மத அனுபவத்தைத்தவிர, மற்ற எல்லாவற்றிலும் ''என்னுடையது'' என்று ஒருவரால் சொந்தம் கொண்டாட முடியும். ஏனெனில் ''என்னுடையது'' என்ற உணர்வு ஒருவரிடம் இறந்தால்தான், அந்த ஆன்மிக அனுபவமே ஏற்படும். அது மாத்திரமல்ல, அந்த அனுபவம் புதுமையானது என்று யாரும் சொல்ல முடியாது. ஏனெனில் உண்மை புதியதும் அல்ல, பழையதும் அல்ல.

இந்த அடிப்படையில்தான், நான் மஹாவீரா, ஜீசஸ், கிருஷ்ணா, முகமது மற்றும் பலபேர்களைப் பற்றிப் பேசுகிறேன். அவர்களுடைய மத அனுபவங்கள் வித்தியாசமானவை. நான் அவர்களால் ஆக்ரமிக்கப்படவில்லை என்று சொல்வதற்கு காரணம் என்னவென்றால், நான் வெளிப்படுத்தும் கருத்துக்கள் அனைத்தும் என்னுடைய சொந்த மத அனுபவத்தாலும் மற்றும் ஞானத்தாலும் ஏற்பட்டவை. நான் அவர்களைப் பற்றிப் பேசுகிறேன். நான் அவர்களது பெயர்களை உபயோகிக்கிறேன். ஏனென்றால், நான் அறிந்த, உணர்ந்த பல, அவர்கள் அறிந்ததோடு ஒத்துப் போன காரணத்தினால்தான். ஆனால், என்னைப் பொறுத்தவரையில், அந்த அனுபவம் முழுக்க முழுக்க என்னுடையதே. இதனால், அவைகள் 'என்னுடையது' என்று சொந்தம் கொண்டாடுவதாக அர்த்தம் ஆகாது. அவைகள் என்னுடைய முயற்சியால் ஏற்பட்ட தனித்தன்மை வாய்ந்த அனுபவம் அவ்வளவுதான்.

அந்த அனுபவத்தில், அவர்கள் எல்லாம் சரியாக இருக்கிறார்கள் என்று அறிந்துகொண்டேன். ஆகவேதான், அவர்களது பெயர்களை தேவையான பொழுது உபயோகிக்கிறேன். அவர்கள் என்னுடைய சாட்சியாக விளங்குகிறார்கள். அதாவது என்னுடைய ஆன்மிக

அனுபவத்துக்கு, அவர்கள் சாட்சியாக இருக்கிறார்கள். ஆனால், இந்த அனுபவம் புதியது என்று என்னால் சொல்ல முடியாது. இருந்தாலும், இன்னொரு வகையில் அதை அப்படியும் அழைக்கலாம். இதுதான் மதத்தன்மையில் அடிப்படையான விளங்காத புதிர்!

ஒரு மத அனுபவத்தை 'புதியது'(NEW) என்றும் அழைக்கலாம். ஏனெனில், அந்த அனுபவத்தைப் பெறுபவர் அதை முதன் முதலாக உணருவதால், அது அவருக்கு முழுமையாக புதிதாகவே விளங்கும். அது அவருக்கு முன்பு எப்பொழுதும் ஏற்பட்டதில்லை. அது வேறு யாருக்கோ ஏற்பட்டிருக்கலாம். ஆனால், அதை ஒருவர் முதன் முதலாக தானே அனுபவிக்கும்பொழுது, அது வேறு யாருக்கும் ஏற்பட்டிருக்காது என்ற உணர்வு அவருக்குத் தோன்றும். ஏனெனில் அது அவ்வளவு புதுமையாகவும், வித்தியாசமாகவும் இருக்கும்.

அந்த அனுபவம், ஒரு மனிதனின் பிரக்ஞைத்தன்மையோடு ஒன்று சேரும்பொழுது. அந்த அனுபவம் முதன் முதலாக ஏற்பட்டது போன்றுதான் உணர்வைக் கொடுக்கும். அது அவ்வளவு புதுமையாகவும், புதிதாகவும் இருக்கும். அதை அனுபவிப்பவர், அது ஒருக்காலும் பழமையானது என்று நினைக்க மாட்டார். அது, காலையில் மலரும் மலரைப்போல புதியபொலிவுடன் இருக்கும். அதனுடைய இதழ்கள் பனியால் நனைக்கப்பெற்றிருக்கும். காலைக்கதிர்கள் அவைகளின் மேல் படியும். அந்த மலரை முதன் முதலாகப் பார்ப்பவர்கள், அது ஒருக்காலும் பழமையானது என்று நினைக்கமாட்டார்கள். ஒவ்வொரு காலையிலும் பல புதிய மலர்கள் தோன்றினாலும் கூட, அவைகள் அனைத்தும் பழையது என்று உணரமாட்டார்கள்.

ஒவ்வொரு காலையிலும், பனித்துளிகளும், சூரியக் கதிர்களும் அந்த புதிய மலர்களில் படிந்தவாறே இருக்கும். தினமும் அந்த மலர்களை யாருடைய கண்களாவது பார்த்துக்கொண்டுதான் இருக்கும். ஆனால், அவைகளை முதன்முதலில் யார் பார்த்தாலும், அவைகளை முன்பே வேறு யாரும் பார்த்திருப்பார்கள் என்று நம்பமாட்டார்கள். ஆகவே, அது அவ்வளவு புதுமையாக இருப்பதால், ஒருவன் அந்த உண்மை ஒருக்காலும் பழமையானதாக இருக்க முடியாது என்றும், அது

எப்பொழுதும் புதிதாக இருக்கும் என்றும் சொன்னால், அது தவறு என்று சொல்ல முடியாது.

மதம் என்பது மிகப் பழமையானது என்றும், சாசுவதமானது என்றும் நாம் கூறுகிறோம். ஏனெனில், உண்மை என்பது முடிவில்லாதது. ஆனால் மதம் என்பது கூட புதியதுதான். ஏனெனில், உண்மையை நீங்கள் எப்படிப் புரிந்துகொண்டாலும் சரி, அந்த அனுபவம் என்பது எப்பொழுதும் புதியதாகவும், கைபடாத மலரைப் போல புதுமையாகவே இருக்கும். ஒருவன், மதம் என்பது மிகப் பழமையானது என்றோ அல்லது அடுத்தவன், அது மிகவும் புதுமையானது என்றோ கூறினாலும், அவர்கள் உண்மைக்கு புறம்பாகப் பேசவில்லை என்றுதான் எடுத்துக்கொள்ள வேண்டும். உண்மை என்பது தெய்வீகமானது, சாசுவதமானது என்றும் அது புதுமைத் தன்மையில் இருக்க முடியாது என்றும் ஒருவன் கூறினால், அவன் உண்மைக்கு மாறுபட்டுக் கூறுகிறான் என்று எடுத்துக் கொள்ள முடியாது. வேறு ஒருவன், அது எப்பொழுதும் புதுமையாகவே விளங்கக்கூடியது என்று அறிவித்தாலும், அதையும் புறக்கணிக்க முடியாது.

குருட்ஜீவை (GURDJIEFF) கேட்டால், அவர் மதம் என்பது சாசுவதமானது மற்றும் பழமையானது என்றே கூறுவர். ஆனால் கிருஷ்ணமூர்த்தியைக் கேட்டால், அவர் அது மிக மிக புதுமையானது என்றும், அது ஒருக்காலும் பழமையானதாக இருக்க முடியாது என்றே கூறுவார். ஆனால், இந்த இரு அபிப்பிராயங்களும், பாதிபாதிதான் உண்மை!

நீங்கள் என்னிடம் கேட்ட கேள்வியை, குருட்ஜீவிடமோ அல்லது கிருஷ்ணமூர்த்தியிடமோ கேட்க முடியாது. ஏனெனில், அவர்களுடைய பதில்களில் பாதி உண்மைதான் இருக்கும். பாதி உண்மை என்பது எப்பொழுதும் நிலையானதாகவே இருக்கும். முழு உண்மை எப்பொழுதும் நிலையற்றதாகவே இருக்கும். ஏனெனில், அந்த முழு உண்மையில், முரண்பாடும் கலந்தே இருக்கிறது.

ஒருவன், உண்மை ஒளிமயமானது என்று கூறலாம். இவன், இருட்டை மறுத்து, அது பொய் என்று கூறுகிறான். ஆனால், இப்படி இருட்டை மறுப்பதால், அந்த இருட்டு பொய் என்றாகிவிடாது. இவன், இருட்டின் இருப்புத்தன்மையை மறுப்பதால், ஒருநிலையான கருத்தில்

நிலைத்து நிற்கிறான். கணிதத்தைப் போல, அவனுடைய தத்துவம் தெளிவாகவும், நேரடியாகவும், நிலையானதாகவும் இருக்கலாம். அவனுடைய தத்துவத்தில் எந்த ஏற்ற இறக்கமோ இருக்க முடியாது. அதே சமயம், வேறு ஒருவன், இருட்டு தான் எங்கும் நிறைந்திருக்கிறது, அதுதான் நிலையானது என்றும், ஒளி ஒரு மாயத்தோற்றம் தான் என்று சொன்னாலும், அவனடைய தத்துவம் நிலையானதாகி விடுகிறது (CONSISTENT).

ஆனால், ஒருவன், உண்மை என்பது ஒளியும், இருட்டும் கலந்தது என்றும் சொன்னால், அங்குதான் பிரச்சனை ஏற்படுகிறது. இவன், ஒளியும், இருட்டும் உண்மையின் இருமுனைகள் என்று நம்புகிறான். ஒளியும், இருட்டும் இருவெவ்வேறு தன்மைகள் என்றால், ஒளியை அதிகப்படுத்தினால், இருட்டு குறையக் கூடாது; அல்லது ஒளியைக் குறைத்தால், இருட்டு அதிகமாகக் கூடாது. ஆனால், நடைமுறையில் அப்படி இல்லை. ஒளியைக்கூட்டினாலோ அல்லது குறைத்தாலோ, இருட்டும் அதற்கு ஏற்றார் போல் கூடுகிறது அல்லது குறைகிறது. இதனால் என்ன விளங்குகிறது என்றால், இருட்டும், ஒளியும் ஒன்றை ஒன்று சார்ந்தே இருக்கிறது. அவைகள் இரண்டும் ஒரு பொருளின் இருமுனைகள்தான்.

ஆகவே, நான் உண்மையை முழுமையாகச் சொல்லும்பொழுது, நான் நிலையற்ற தன்மையில் இருப்பதாக நீங்கள் சங்கடப்படுகிறீர்கள். நான் ஒரு சமயத்தில் இரு மாறுபட்ட கருத்துகளை வெளியிடுகிறேன். உண்மை சாசுவதமானது என்று நான் கூறும்பொழுது, அது புதுமையானதும் கூட என்று சொல்வது சரியாகாது. அதே சமயத்தில், நான் உண்மை புதுமைப் பொலிவுமிக்கது என்றும் கூறுகிறேன். அது எப்பொழுதும் அப்படியே இருக்கிறது என்றும் சொல்கிறேன். இப்பொழுது, உண்மை சாசுவதமானது, பழமையானது என்று சொல்வது சரியாகாது. ஆகவே, நான் உண்மையின் இந்த இரண்டு தன்மைகளை ஒன்றாக வெளிப்படுத்தி, அதன் முழுமையை முழுமையாக உடனே சுட்டிக் காட்டுகிறேன்.

ஆகவே, உண்மையை முழுமையாக வெளியிடும்பொழுது, முரண்பாடான, நிலையற்ற அறிவிப்பைத்தான் வெளியிடவேண்டி வரும். மஹாவீராவின் 'சய்யத்தவதா' (SAYATAVADA) கொள்கையில்,

அவர் இந்த இரண்டு மாறுபட்ட தன்மைகளைச் சமச்சீர் நிலைக்குக் கொண்டு வர முயலுகிறார். ஆகவே, அவர் முதல்வரியில் சொன்னதை, அடுத்த வரியில் மறுக்க வேண்டியதாகிவிட்டது. இப்படி அவர், மறைக்கவேண்டிய அந்த மாறுபட்ட தன்மையையும் அடுத்தடுத்து சேர்க்க வேண்டியதாகிவிட்டது.

அந்த மாறுபட்ட நிலையை ஒதுக்கினால், உண்மையை முழுமையாக வெளியிட்டதாக ஆகாது. ஆகவே, உண்மையின் வெளிப்பாடு தெளிவாகவும், சந்தேகமற இருந்தாலும், அது உண்மையை பாதி அளவு சொன்னதாகவே நீங்கள் எடுத்துக் கொள்ள வேண்டும். நிலையற்ற நிலையே உண்மையின் உண்மைத்தன்மை. அதுதான் அதன் அழகும் மற்றும் சிக்கல் நிறைந்ததும் ஆகும்!. ஆனால், அதனுடைய சக்தி இந்த மாறுபட்ட நிலையில்தான் மறைந்திருக்கிறது.

அந்த மாறுபட்ட தன்மையில், எந்தப் பொய்மையும் கலக்க முடியாது என்பது மிகத் தெளிவான விஷயம். ஆனால், அந்தப் பொய்மை அந்த மாறுபட்ட இடத்தில் (OPPOSITE POLES) வசிக்க நேரிடலாம். அப்பொழுது உண்மை, அந்த மாறுபட்ட நிலையில் தானே இரண்டர கலந்து நிற்கும். ஆகவேதான், பொய்மை மேலோட்டமாக இருக்கிறது. அதனால் அது மிகத் தெளிவாகத் தெரிகிறது. உண்மை எப்பொழுதும் மறைந்தே காணப்படுகிறது.

வாழ்வு, தன் முழுமையை இந்த மாறுபட்ட நிலையில் அஸ்திரமாக அமைத்திருக்கிறது. வாழ்க்கையில், இந்த மாறுபட்ட நிலையின் போராட்டம் இல்லாமல், எதுவும் நிகழாது. ஆனால், இந்த நிலையற்ற தன்மையை, நாம் நமது அறிவைக்கொண்டும், மனதைக் கொண்டும் களைய நினைக்கிறோம். நிலையான தன்மையை ஏற்படுத்துவதுவதே, நம்முடைய பகுத்தறிவின் குறிக்கோள். ஆனால், முழுமை எப்பொழுதும் நிலையற்ற தன்மையில் தான் இருக்கும். இந்த பேரியக்க உயிர்த் தன்மையில், எல்லாமே நிலையற்ற நிலையில்தான் ஒருங்கே இருக்கின்றன. வாழ்வும், இறப்பும் ஒருங்கிணைந்து இருக்கின்றன.

விஷயங்களை இரண்டு மாறுபட்ட தன்மையில் பிரிப்பதால், தர்க்கம் மிகத் தெளிவாக இருக்கலாம். தர்க்கத்தைப் (LOGIC)

பொருத்தவரையில், வாழ்வு- வாழ்வுதான். இறப்பு- இறப்புதான். இரண்டும் ஒருங்கிணைந்து இருக்க முடியாது. தர்க்கத்தின் மூலமாகப் பார்த்தால், நாம் Aயை A என்றுதான் கூற வேண்டும். அது ஒருக்காலும் Bயாக இருக்க முடியாது. அதைப் போல இறப்பு இறப்புதான், அது ஒருக்காலும் வாழ்வாக முடியாது. இப்படித்தான், கணிதத்தைப் போல, நாம் கொள்கைகளை வகுத்திருக்கிறோம். இதனால் வாழ்வில் புதிர் இழக்கப்பட்டு விட்டது. ஆகவேதான், உங்களால் பகுத்தறிவைக் கொண்டு உண்மையை நெருங்க முடியாது என்று கூறுகிறேன். ஒரு முயற்சி, வாழ்வை நிலைப்படுத்த முயலுகிறது. அடுத்தது தன் இயல்பாக, நிலையற்ற தன்மையில் இருக்கிறது. ஆகவே, பகுத்தறிவைக்கொண்டு உண்மையை நிலைப்படுத்த முடியாது. நீங்கள் அதை தர்க்கத்தின் மூலமாக, பகுத்தறிவு மூலமாக மிகத்திறமையாக வாதிடலாம். வாதத்தில் உங்களை யாராலேயும் ஜெயிக்க முடியாது என்ற நிலை ஏற்படலாம். ஆனால், உங்களால் உண்மையை நெருங்க முடியாது. இதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்.

நான் ஒரு தத்துவவாதியோ அல்லது ஒரு தர்க்கவாதியோ அல்ல. ஆனால், நான் தர்க்கத்தை எப்பொழுதும் உபயோகிக்கிறேன். இதை நான் ஏன் கையாளுகிறேன் என்றால், நீங்கள் உங்கள் எண்ணங்களிலிருந்து விடுபட வேண்டும் என்பதற்காகத்தான். நீங்கள் உங்கள் பகுத்தறிவிலிருந்து விடுபடாவிட்டால், அல்லது உங்களது பகுத்தறிவு அழியாவிட்டால், உங்களால் அதைத் தாண்டிச் செல்ல முடியாது. நான் ஒரு ஏணியில் ஏறிக் கொண்டு இருக்கிறேன். ஆனால் அந்த ஏணிதான் என் குறிக்கோள் அல்ல. நான் அதைவிட்டு அகலவேண்டும். அதற்கு அப்பால் என்ன இருக்கிறது என்பதை அறிந்துகொள்ளவே, என் பகுத்தறிவை உபயோகப்படுத்துகிறேன். பகுத்தறிவால், எதையும் ஏற்படுத்த நான் விரும்பவில்லை. அதனுடைய இயலாத நிலையை எடுத்துக்காட்டவே, அதைக் கையாளுகிறேன்.

ஆகவே, என் அறிக்கைகள் எப்பொழுதும் நிலையற்றதாகவும், தர்க்கத்துக்கு புறம்பாகவும் இருக்கும். ஆனால், அது தர்க்கத்துக்கு உட்பட்டு இருந்தால், நான் ஒரு முறையை மிகவும் மேலோட்டமாக அறிமுகப்படுத்துகிறேன் என்று தயவுசெய்து புரிந்துகொள்ளுங்கள். பின்பு நீங்கள் சொல்வதற்கு ஏற்றவாறு ஒரு அடித்தளத்தை நான்

தயாரிக்கிறேன். நான் இசைக்கருவிகளை, இசைக்கு ஏற்றவாறு ஒழுங்குபடுத்துகிறேன். ஆனால், இன்னும் இசை எழும்பவில்லை.

பகுத்தறிவுக்கும், பகுத்தறிவற்ற தன்மைக்கும் உள்ள எல்லைக் கோடு அழியும் பொழுதுதான், என்னுடைய தனித்தன்மையுள்ள, எனக்கே உரித்தான இசை ஆரம்பிக்கும். அந்த இசைக்கருவிகளை ஒழுங்குபடுத்தியபிறகு, இசை மெல்ல உதயமாகும். இசைக்காக, அந்த இசைக்கருவிகளை முன்கூட்டியே ஒழுங்குபடுத்துதலை, தவறாகப் புரிந்துகொள்ளாதீர்கள். அப்படிச் செய்தால், அது பல சங்கடங்களை விளைவிக்கும். நீங்கள் கேட்கலாம், ''அது என்ன விஷயம்? டிரம்மை உபயோகிக்கும் முன், ஏன் சுத்தியலை உபயோகிக்கிறீர்கள்? பிறகு ஏன், நீங்கள் அதை உபயோகிப்பது இல்லை?'' என்று. ஆனால் சுத்தியலை உபயோகிப்பது, அந்த டிரம்மை சரியான இசைக்கு ஏற்றவாறு செய்வதற்காகத்தான். அந்த டிரம்மை ஒழுங்குபடுத்திய பிறகு, அந்த சுத்தியலுக்கு வேலை ஏது? சுத்தியலோடு அந்த டிரம்மை வாசிக்க முடியாது.

அதைப் போலத்தான், பகுத்தறிவுக்கு அப்பால் என்ன இருக்கிறது என்பதை அறிய பகுத்தறிவு ஆரம்பத்தில் உபயோகிப்படுத்தப் படுகிறது. இதில் உள்ள கஷ்டம் என்னவென்றால், முதலில் பகுத்தறிவை ஏற்றுக்கொண்டவர்கள, பிறகு நான் அவர்களைப் பகுத்தறிவுக்கு அப்பால் உள்ள ஒரு இருட்டு சூழ்நிலைக்கு அழைத்துச் செல்லும் பொழுது, அவர்கள் அதிர்ச்சியடைகிறார்கள். பகுத்தறிவோடு செல்லும் பொழுது, அவர்கள் காணும் பொருள்கள் அனைத்தும் பிரகாசமாகவும், தெளிவாகவும், நம்பிக்கையூட்டுவதாகவும் இருந்தன. அப்பொழுது சில பேர்கள், நான் அவர்களுக்கு வெளிச்சத்தைக் காட்டுவதாகக் கூறி, இப்பொழுது இருட்டை நோக்கி அழைத்துச் செல்கிறார் என்று என்னைக் குறை சொல்ல நேரிடும். அதனால், அவர்கள் என் மேல் அதிருப்பதி அடைந்து, ''நீங்கள் இதுவரை சொன்னதை விரும்புகிறேன். ஆனால், இதற்கு மேல் என்னால் உங்களுடன் வரமுடியாது'' என்று கூறக்கூடும். அவர்கள் பகுத்தறிவைக் கொண்டு உண்மையை அறிந்துகொள்ளலாம் என்று என்மேல் நம்பிக்கை வைத்து முதலில் வருகிறார்கள். ஆனால், உண்மையை அடைய, அதற்கு அப்பால் செல்ல வேண்டும் எனறு நான் உறுதியாகக் கூறுகிறேன்.

ஆகவே, முதலில் என்னை முழு நம்பிக்கையோடு அணுகு பவர்கள் கூட, பிறகு அவர்களால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. என்னைப் பின் தொடர விரும்பவில்லை. அல்லது என்னோடு சேர்ந்து வர விருப்பம் இல்லை. ஏனெனில் அவர்கள் நம்ப முடியாத புரியாத புதிர்கள் மட்டும் தான் நான் பேசவேண்டும் என்று எதிர்ப்பார்க்கிறார்கள். ஆகவே, இரண்டு வித மக்களால், எனக்கு பிரச்சினைகள் ஏற்படுகின்றன. பகுத்தறிவை மட்டும் நம்புவர்கள் என்னோடு ஒரு எல்லைவரைதான் வர விரும்புகிறார்கள். ஆனால், என்னை முழுமையாக நம்புபவர்கள், மற்றும் பகுத்தறிவை நம்பாதவர்கள் என்னோடு வரவே விரும்புவதில்லை! என்னோடு அவர்கள் ஒரு எல்லை வரை வந்தால், பிறகு நான் அவர்களை எண்ணமற்ற நிலைக்கு அழைத்துச் செல்வேன் என்று அவர்கள் ஒருக்காலும் புரிந்து கொள்வதில்லை.

இதை நான் புரிந்துதான் சொல்கிறேன். வாழ்வு அப்படித்தான் இருக்கும் போலும். ஆனால், பகுத்தறிவு ஒரு கருவிதான்; அதுவே அடையக்கூடிய முடிவாகாது. ஆகவேதான், நான் முதலில் தர்க்கத்துக்குப் புறம்பாக முழுமையாகப் பேசிவிட்டு, பிறகு தர்க்கத்தோடு கூடிய கருத்துக்களை எப்பொழுதும் வெளிப்படுத்துகிறேன். இப்படி பேசுவது பொருத்தமில்லாது போலவும், நிலையில்லாதது போலவும் தோன்றும். ஆனால், அவைகளை நான் நன்றாகத் தீர்மானித்துதான் பேசுகிறேன். அதை மேம்போக்காகவோ, அல்லது பகுத்தறிவற்ற தன்மையிலேயோ பேசவில்லை. என்னைப் பொறுத்தவரை, அதற்குச் சரியான காரணம் உள்ளது.

சிலசமயம், மஹாவீரா, புத்தர், கிருஷ்ணா அல்லது கிருஸ்து போன்றவர்களால் நான் ஆட்கொள்ளப்படவில்லை என்று கூறுகிறேன். அவர்களுடைய பாதிப்பால் நான் எதையும் கூறவில்லை. நான் ஒவ்வொன்றையும் அனுபவப்பட்டு நானே அறிந்த பிறகுதான், நான் அவைகளை வெளியிடுகிறேன். அப்பொழுது, நான் அதை அறிந்தவர்களுடைய அனுபவத்தோடு அவைகள் ஒத்துப்போவதை அறிந்து கொண்டேன். பிறகு, நான் அவர்களைப் பற்றிப் பேசும்பொழுது அல்லது நான் பொதுவாகப் பேசும் பொழுது அவர்களுடைய கருத்துகளை இடையே சொல்லி நான் அவர்களைப் பற்றிப்

பேசுவதையே மறந்துவிடுகிறேன். அந்த நிலையில், நான் அவர்களோடு முழுமையாக ஒன்றாகக் கலந்து விடுவதால், அவர்களுடைய அறிக்கையே; என்னுடையதாகி விடுகிறது.

பார்க்கப் போனால், என்னுடைய அறிக்கைகளுக்கும், அவர்களுடைய கருத்துக்களுக்கும் எந்த வேறுபாடும் என்னால் காண முடியவில்லை. நான் அவர்களைப் பற்றிப் பேசும்பொழுது, நான் என்னைப் பற்றித்தான் பேசுவதாக மிக ஆழமாக உணருகிறேன். ஆகவே, அவர்களுடைய அறிக்கைகளை திரும்பச் சொல்லும்பொழுது, நான் எந்தவித நிர்ப்பந்தங்களுக்கும் ஆளாவதில்லை. நான் முழுமையாக அவர்களோடும் மற்றும் அவர்களுடைய கருத்துகளோடும் கரைந்துவிடுகிறேன். அப்பொழுது யார் என்னை உன்னிப்பாகக் கேட்கிறார்களோ, அவர்கள், நான் முன் சொல்லிய ஞானிகளின் கருத்துக்களால் பாதிக்கப்படவில்லை என்பதை அறிந்து, ''எப்படி உங்களால் அப்படி அவர்களோடு ஒன்று கலக்க முடிகிறது? அந்த ஞானிகளின் ஆதிக்கத்துக்கு முழுமையாக ஏற்கெனவே உட்பட்டவர்கள் கூட, கொஞ்சம் இடைவெளியை ஏற்படுத்தியே வைத்திருக்கிறார்கள். உங்களால் எப்படி அப்படி இரண்டறக் கலக்க முடிகிறது?'' என்று வியப்போடு கேட்கிறார்கள்.

ஒருவர், ஒரு பொருளினாலேயோ அல்லது வேறுஒரு நபரினாலேயோ பாதிக்கப்பட்டால் அல்லது ஆக்ரமிக்கப்பட்டால், தேவைக்கேற்ப, அவர்களுக்கும், அந்தப்பொருளுக்கும் அல்லது நபருக்கும் ஒரு இடைவெளியை ஏற்படுத்தத்தான் வேண்டும். ஏனெனில், பாதிக்கப்பட்ட அவர்கள், பாதித்த நபரை விட சிறிது அறியாமையில் இருக்கிறார்கள். பொதுவாக பாதிப்பு அல்லது ஆக்ரமிப்பு என்பது அறியாமை என்ற இடைவெளியால் ஏற்படுகிறது. ஆனால், ஒருவனிடம் அதே ஞானம் இருந்தால், இந்த 'பாதிப்பு' என்ற வார்த்தை அர்த்தம் இழந்துவிடுகிறது.

ஆகவே, சுய ஞானத்தில், பாதிப்பு என்ற பேச்சுக்கே இடமில்லை. அதற்கு மாறாக, ஒத்த அனுபவம், ஒத்த கருத்துணர்வு, ஒத்த கருத்து வெளிப்பாடு என்பவைகள் தானே, இயல்பாக ஏற்படும். உதாரணமாக, நான் பாடினால், அதே மெட்டமைப்பு, அதே சமயத்தில் வேறு ஒருவரிடமிருந்து வெளிப்படும். அந்தப் பாட்டின் தாள அமைப்பு, அதே

முறையில் வேறு ஒருவரிடமிருந்து வெளிப்படும். அப்பொழுது என்னுடைய பாட்டு, அவருடைய பாட்டினால் ஆக்ரமிக்கப்படுகிறது என்று எப்படி உங்களால் சொல்ல முடியும்? எங்கள் இரண்டு நபருக்கும் பாட்டுக்கும் இடையில் எந்த இடைவெளியும் இல்லையே?

ஆகவே, என்னைப் பொருத்தவரையில், இடைவெளி என்ற பேச்சுக்கே இடமில்லை. நான் மஹாவீராவின் அறிக்கையை விளக்க ஆரம்பிக்கும் பொழுது அல்லது கிருஷ்ணாவின் கீதையைப் பற்றி பேசும்பொழுது, நான் கிட்டத்தட்ட என்னுடைய அறிக்கையையே விளக்குகிறேன். கிருஷ்ணா அல்லது கிருஸ்து அல்லது மஹாவீரா போன்றவர்கள் எனக்கு ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுத்து, என்னைப் பேச வைக்கிறார்கள். ஆனால், விரைவிலேயே, நான் அவர்களைப் பற்றிப் பேசுவதையே மறந்துவிடுகிறேன்! நான் ஆரம்பத்தில் அவர்களோடுதான் தொடங்குகிறேன். ஆனால், முடிவில் நான் அறிந்ததோடு தான் முடிக்கிறேன். நான் அவர்களைப் பற்றிப் பேசுவதை எப்பொழுது நிறுத்தினேன் என்பதையும், என்னுடைய கருத்துக்களை எப்பொழுது ஆரம்பித்தேன் என்பதைக் கூட என்னால் தீர்மானிக்க முடியாது. அல்லது நான் எப்பொழுது அவர்களோடு ஒன்றாக முழுமையாக கலந்தேன் என்பதையும் என்னால் சொல்லமுடியாது.

நான் கீதையை ஒரு தடவை கூடப் படித்ததில்லை என்று சொன்னால், உங்களால் ஆச்சரியப்படாமல் இருக்க முடியாது! ஆனால், அதை சிறிது படித்ததுமே, போதும் என்ற உணர்வு ஏற்பட்டு, அதை மூடிவைத்துவிடுவேன். பிறகு நான் கீதையைப் பற்றிப் பேசும் பொழுது, நான் அதை முதன்முதலாக என்னிடமிருந்தே கேட்பதை நான் உணருகிறேன்! அதைப் பற்றி, ஏற்கெனவே எனக்கு எந்த அபிப்ராயமும் இல்லாததால், நான் அதற்கு முரண்பாடாக எதையும் கூறமுடியாது. யார் ஒருவர் அதை ஏற்கெனவே மிக ஆழமாக படித்து, சிந்தித்து இருக்கிறார்களோ, அவர்கள்தான், தான் படித்ததற்கு மாறுபட்டு தன் கருத்துகளைக் கூற முடியும். கீதையை முழுமையாக படிக்காத நிலையில்,என்னால் அதை ஆதரித்தோ அல்லது மறுத்தோ எதையும் கூறமுடியாது.

நான் இன்னொன்றை இப்பொழுது கூறப் போகிறேன். அது உங்களுக்கு மிகவும் வித்தியாசமாகவேபடும்! அதாவது, கீதையைப்

படிப்பதற்கு எடுத்து சில வரிகளைப் புரட்டியபிறகு, அதை அப்படியே மூடிவைத்து விடுவேன். ஆனால், எதையாவது சாதாரண புத்தகத்தை எடுத்துப் படிக்க முயன்றால், அதை மிக ஆழ்ந்து படிப்பேன்! அதாவது ஆரம்பத்திலிருந்து அதன் முடிவு வரை. ஏனென்றால், அது என்னுடைய அனுபவத்தின் பகுதியாக இருக்கவில்லை. இது உங்களுக்கு மிகவும் வித்தியாசமாகப்படலாம். ஆனால், அந்தச் சாதாரண புத்தகத்தை மிக்க ஈடுபாட்டுடன் படிப்பதை என்னால் தவிர்க்க முடியவில்லை. ஆனால், கீதையை எடுத்து சிலபக்கங்களைப் புரட்டும்பொழுதே, அது எனக்கு எந்தப் புதிய செய்தியையும் அறிவிக்கப் போவதில்லை என்ற உணர்வு வெளிப்படுகிறது.

நீங்கள் என்னிடம் ஒரு துப்பறியும் கதைப் புத்தகத்தைக் கொடுத்தால், நான் அதை மிகத் தீவிரமாகப் படித்து முடித்துவிடுவேன். ஏனென்றால், என்னைப் பொறுத்தவரையில், அது புதுமையானது. ஆனால், கிருஷ்ணாவின் கீதையைப் புரட்டும்பொழுது, அதை நானே ஏற்கெனவே எழுதியதுபோல ஒரு உணர்வு ஏற்படுகிறது. அதில் எழுதி இருப்பது அனைத்தும், எனக்கு ஏற்கெனவே தெரிந்திருப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது. ஆகவே, அதைப் படிக்காமலே, அதை நான் அறிந்து வைத்திருந்தேன்.

ஆகவே, நான் கீதைப்பற்றிப் பேசும்பொழுது, நான் கீதையை அப்படியே உள்ளபடி பேசுவது இல்லை. அது ஒரு சாக்குதான். நான் உண்மையில் கீதையைத்தான் ஆரம்பிக்கிறேன். ஆனால், மேற்கொண்டு பேசுவது அனைத்தும், நான் என்ன பேச விரும்புகிறேனோ அதைப் பற்றித்தான் பேசுகிறேன்! நான் கீதையைப் பற்றி மிக அழகாக, தெளிவாகப் பேசினேன் என்று நீங்கள் நினைத்தால், அது கிருஷ்ணா என்னிடம் ஏற்படுத்திய பாதிப்பால் அல்ல. ஆனால், நான் சொல்பவைகளை, ஏற்கனவே கிருஷ்ணா சொல்லியிருக்கிறார் அவ்வளவுதான்.

இப்படியாக, நான் கீதையைப்பற்றி பேசுவது என்பது அதற்கு வியாக்யானம் செய்வதாகாது. கீதையைப் பற்றி திலக் (TILAK) மற்றும் காந்தி சொன்னது அதன் வியாக்யானம் அல்லது விளக்கம்தான். அவர்கள் கீதையினால் மிகவும் ஆழமாகப் பாதிக்கப்பட்டவர்கள். ஆனால், நான் சொல்வது, கீதையில் ஒருக்காலும் வருவதில்லை. கீதையில் படித்த

அந்தக்கருத்துக்கள் அனைத்தும், என்னுள்ளேயும் அப்படியே பதிந்து இருக்கிறது. கீதையைத் தொட்டு எழுந்த அந்த இசை என்னுள்ளும் தொட்டு எழுந்து என் சொந்த இசைக்கு ஏற்றவாறு அமைந்து என்னை மேலே செலுத்துகின்றது. அப்பொழுதுதான் அதைப்பற்றி விளக்குவது அனைத்தும், என்னுடைய கருத்தையே விளக்குவதாக அமைகிறது. கீதை அந்த சந்தர்ப்பத்தை எனக்கு அளிக்கிறது. அவ்வளவுதான். நான் கிருஷ்ணாவைப் பற்றி பேசும்பொழுது, நான் கிருஷ்ணாவைப்பற்றி மிக ஆழமாகச் சொல்வேன். அப்பொழுது, நான் என்னைப் பற்றித் தான் மிக ஆழமாகச் சொல்கிறேன் என்பதை நீங்கள் உணர வேண்டும்.

அதைப்போலத்தான் மஹாவீரா, கிறிஸ்து, லாட்சூ அல்லது முகமதுவைப் பற்றிப் பேசும்பொழுது, அவர்கள் ஒரு அடையாளமாகவே அல்லது ஒரு சாக்காகவே இருக்கிறார்கள். என்னைப் பொருத்தவரையில், அவைகளில் உள்ள ஒரே வித்தியாசம் அவர்களது பெயர்கள்தான்! அவர்கள் பல விளக்குகள் போல விளங்குகிறார்கள். ஆனால் அதிலிருந்து ஒளிரும் ஒளி வெள்ளம் ஒன்றுதான். முகமது என்ற விளக்கிலிருந்தோ அல்லது மஹாவீரா என்ற விளக்கிலிருந்தோ அல்லது புத்தர் என்ற விளக்கிலிருந்தோ ஒளிரும் ஒளியில், என்னைப் பொறுத்தவரையில், எந்த வித்தியாசமும் இல்லை.

• ஆனால், அநேக தடவைகள், நான் முகமது அல்லது மஹாவீரா அல்லது புத்தாவைப்பற்றி மாறுபட்டும் பேசி வருகிறேன். இது பிரச்சினையை உண்டு பண்ணுகிறது. நான் அவர்களைப் பற்றி மிக ஆழமாகப் பேசுகிறேன். இருந்தும், அதே சமயம், அவர்களுக்கு மாறான கருத்துக்களையும் வெளியிடுகிறேன். நான் அவர்களுக்கு மாறுபட்டு பேசும்பொழுது, அதைக் கேட்பவர்களுக்கும் அப்படித்தான் தோன்றும். ஏனென்றால் அதைக் கேட்பவர்கள் அந்த விளக்குகளுக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். ஆனால், என்னைப் பொறுத்த வரையில், ஒன்றை மிக ஆழமாக அலசும்பொழுது, நான் அந்த ஒளிக்குத் தான் முக்கியத்துவம் கொடுக்கிறனே். ஆனால், கேட்பவர்களுக்கு, நான் அந்த விளக்குக்குத் தான் முக்கியத்துவம் கொடுத்துப் பேசுவதாகத் தோன்றும்; அந்த ஒளிக்கு அல்ல. இதுதான் பிரச்சினையே.

யாராவது அந்த விளக்கில் மயங்கினால், அதன் தோற்றத்திலும், அழகிலும் பற்றுகொண்டால், நான் எப்பொழுதும் அந்த விளக்குக்கு

மாறாகவே அல்லது முரணாகவே பேசுவேன். அப்பொழுது அந்த ஆள் நிச்சயம் குழப்பம் அடையத்தான் வேண்டும். ஏனெனில், அவனைப் பொருத்தவரையில், மஹாவீரா என்ற விளக்குக்கும், மஹாவீரா என்ற தெய்வீக ஒளிக்கும் வித்தியாசம் தெரிய வாய்ப்பில்லை. ஆகவேதான், யாராவது அந்த விளக்குக்கு முக்யத்துவம் கொடுப்பது தெரிந்தால், நான் உடனே அதற்கு மாறாகப் பேச ஆரம்பித்து விடுகிறேன். ஆனால், அந்த ஒளிக்கு முக்கியத்துவம் கொடுப்பது தெரிந்தால், நானும் அதில் ஒன்றிப் போய்விடுகிறேன். இதுதான் வித்தியாசம்.

ஆனால், மஹாவீரா என்ற விளக்குக்கும், முகமது என்ற விளக்குக்கும் வித்தியாசம் இருக்கிறது. இந்த வித்தியாசத்தில்தான், ஒரு ஜைனனுக்கும், ஒரு முகமதியனுக்கும் வேற்றுமை காணப்படுகிறது. ஏனெனில் அந்த விளக்குகள் வித்தியாசமாக அமைந்திருக்கின்றன. அதைப் போல கிறிஸ்து என்ற விளக்குக்கும், புத்தர் என்ற விளக்குக்கும் வேற்றுமை உண்டு. அவைகள் அப்படித்தான் இருக்கும். ஆனால் இந்த வித்தியாசங்கள் உடல் சம்பந்தமாகவும் சூழ்நிலை மற்றும் தோற்றம் பற்றியதாகவே இருக்கும்.

தோற்றம் மற்றும் சூழ்நிலை சம்மந்தமாக விருப்பம் உள்ளவர்களுக்கு, அந்த விளக்குகளின் ஒளி கண்ணுக்குத் தெரியாது. ஏனென்றால், யாரெல்லாம் அந்த வெளிச்சத்தை மட்டும் காண்கிறார்களோ, அவர்கள் அந்த விளக்கை மறந்து விடுவார்கள். அந்த வெளிச்சத்தைக் கண்ட பிறகு, ஒருவரால் அந்த விளக்கை ஞாபகப்படுத்திக் கொள்ள முடியாது. அந்த வெளிச்சத்தை இதுவரை பார்க்காதவர்களால் தான், அந்த விளக்கை ஞாபகப்படுத்திக் கொள்ள முடியும்.

ஒரு பின்பற்றுபவருடைய நிலை என்னவென்றால், அவர் அந்த விளக்கின் நிழலில் இருந்துகொண்டு, வெளியே பார்க்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும். அந்த நிலையிலிருந்து, அவரால் வெளிச்சத்தைப் பார்க்கமுடியாது; அந்த விளக்கின் அடித்தளத்தை மட்டுமே காண முடியும். ஆனால், விளக்குகளின் அடித்தளம் எப்பொழுதும் மாறுபட்டவைதான். அவைகளின் அடியில் மிக ஆழ்ந்த இருட்டுதான் இருக்கும். அந்த அடித்தளத்தில் நின்றுகொண்டு, அதைப் பின்பற்றுபவர்கள். ஒருவருக்கொருவர் சண்டையிட்டவாறே

இருப்பார்கள். ஆகவே, யாராவது அந்த விளக்கு போன்ற நிலையில் உள்ளவர்களின் நிழலில் நின்று கொண்டு இருப்பதை நான் பார்க்கும்பொழுது, நான் உடனே மிகவும் கடுமையாக அந்த விளக்கைப் பற்றிப் பேச ஆரம்பித்து விடுகிறேன்.

ஆகவேதான், ஒருவரைப் பின்பற்றுபவர் உண்மையை ஒருக்காலும் புரிந்துகொள்ள முடியாது என்று கூறுகிறேன். ஒருவர் பின்பற்றுவதற்கு, அவர் பின்பற்றுபவரின் நிழலில் தான் நிற்க வேண்டும். அதாவது அந்த விளக்கின் அடியில் இருண்ட பகுதியில்தான் நிற்கவேண்டும். அவர் எந்த அளவுக்கு தீவிரமாகப் பின்பற்றுகிறாரோ, அந்த அளவுக்கு அந்த நிழலின் இருட்டுத்தன்மை அதிகமாகவே இருக்கும். அப்படிப் பின்பற்று பவர்கள் அந்த நிழலின் மேற்பரப்பில் நிற்கும்பொழுது, மற்றவர்களை ஓரளவுக்குப் புரிந்துகொள்வார்கள். ஆனால், அவர், அந்த நிழலின் நேர்கீழே நிற்கும்பொழுது, பிறரை ஒருக்காலும் புரிந்துகொள்ள முடியாது. ஆகவே, ஒருவர் உண்மை யிலேயே வெளிச்சத்தைப் பார்க்க விரும்பினால், அவர் அந்த நிழலின் மேற்பரப்பிலிருந்து அப்பால் செல்ல வேண்டும். எப்பொழுது ஒருவர் அந்த வெளிச்சத்தைப் பார்த்துவிட்டாரோ, பிறகு அந்த விளக்குகளுக்கு இடையே உள்ள வித்தியாசங்கள் அனைத்தும் அர்த்தம் இழக்கிறது.

ஆகவே, என்னைப் பொறுத்தவரையில், நான் கிறிஸ்துவைப் பற்றியோ அல்லது கிருஷ்ணாவைப் பற்றியோ அல்லது புத்தாவைப் பற்றியோ பேசும்பொழுது, நான் எந்த வேற்றுமையையும் காண்பது கிடையாது. நான் அந்த ஒரே வெளிச்சத்தைப் பற்றி மட்டுமே பேசுகிறேன். அந்த வெளிச்சம் அனேக விளக்குகளின் ஒளியாக விளங்கு கின்றது. ஆனால், நான் அந்த விளக்குகளினால் பாதிக்கப்படுவதே இல்லை. எனக்குத் தெரிந்த அந்த ஒளியைப் பற்றி மட்டும் தான் பேசுகிறேன். நான் எப்பொழுதாவது ஒத்த எதிரொலியை (RESONANCE) மற்றும் ஒத்த இசைத்தன்மையை உணருகிறேனோ, அதை என்னால் ஒதுக்கவோ அல்லது மறுக்கவோ முடிவதில்லை. ஏனென்றால், அதை மறுப்பது என்பது மிகவும் தவறான செயல். அது, அந்த வெளிச்சத்துக்கு பின்புறம் நோக்கி நிற்பதற்கு ஒப்பாகும். ஆனால் ஒரு பின்பற்றுபவர், அந்த விளக்கின் அடிநிழலில் உட்காறும் தவறை செய்கிறார். ஆகவே, அந்த ஒளிக்கு பின்புறம் நிற்பதற்கும், அந்த விளக்கின் அடிநிழலில்

உட்காருவதற்கும் எந்த வித்தியாசமும் இல்லை. இரண்டும் சமமான தவறுதான். ஆனால், நீங்கள் கிருஷ்ணமூர்த்தியைக் கேட்டால், இந்த ஒத்த எதிரொலியை அவர் ஒத்துக் கொள்ள மாட்டார். அவருக்கு என்ன நிகழ்ந்ததுவோ, அதுவே கிருஷ்ணாவுக்கும் நேர்ந்திருக்கும் என்பதை அவர் ஒத்துக்கொள்ளமாட்டார். அதைப் போலத்தான் மற்றவர்களையும், அவர் ஒத்துக்கொள்ள மாட்டார். ஏன், இதைப்பற்றி அவர் பேசக்கூட மாட்டார்!

இது மிகவும் தவறானது. ஏனெனில், உண்மை முழுமையாக தனி மனிதனுக்கு அப்பாற்பட்டது. அது யாரையும் சார்ந்து இருப்பதில்லை. உண்மை, தன்னிடம் விளங்கியது போல, மற்றவர்களிடமும் விளங்கும் என்று எடுத்துக் கொண்டால், அதனுடைய மதிப்பு ஒருக்காலும் குறையாது. அதற்கு மாறாக, அதனுடைய மதிப்பு மிகவும் உயரும். அந்த தெய்வீக அனுபவம் பிறருக்கும் நேர்ந்ததால், அந்த உண்மையின் வலிமை அல்லது பெருமை ஒருக்காலும் மங்காது. உண்மை அந்த அளவுக்கு மெலிந்தது அல்ல. ஆகவே, உண்மையை பங்கு போட்டுக் கொள்ள முடியாது என்று வாதிட முயன்றால், அது தவறே.

என்னுடைய சங்கடம் என்னவென்றால்: நான் எங்கேயெல்லாம் உண்மையைக் காண்கிறேனோ, அதை நான் உடனே ஏற்றுக் கொள்கிறேன். ஆனால், அவைகளினால் நான் பாதிக்கபடுவதில்லை. ஆனால், உண்மையின் பெயரில், மக்கள் உண்மைக்குப் புறம்பாக அல்லது மாறாக, வேறு ஒன்றாக மாறும் பொழுது, அதை நான் வன்மையாக மறுக்கிறேன். ஒன்றை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். நான் எதைச் செய்தாலும், அதை முழுமையாகவே செய்வேன். ஆகவேதான், என்னைப் புரிந்துப் புரிந்துகொள்ள கஷ்டப்படுகிறார்கள். நான் எப்பொழுதுமே ஒத்துப் போவதற்கு எதிரி. ஏனென்றால், இப்படி அனுசரித்துப் போவதால், ஒருவன் உண்மையை ஒருக்காலும் அடைய முடியாது.

என்னுடைய இயல்பு என்ன வென்றால், நான் எதைச் சொன்னாலும், அதை என் ஆதாரத்தன்மையிலிருந்து, முழுவேகத்தில் தான் வெளிப்படுத்துவேன். ஆகவே, யாராவது ஒளியைப் பற்றிப் பேசினால், நான் மஹாவீரா ஒரு கடவுள் என்றும், கிருஷ்ணா கடவுளின் அவதாரம் என்றும், ஜீசஸ் கடவுளின் மைந்தன்தான் என்றும் கூறுவேன்.

ஆனால், யாராவது அந்த விளக்கைப் பற்றி அப்படிபேசினால், நான், அப்படி பேசுபவரை, ஒரு கொலைக்குற்றம் செய்தவர் என்று சாடுவேன். இந்த இரண்டு நிலைகளிலும், நான் எதைச் சொன்னாலும், அதை ஆணித் தரமாக, முழுமையாக வெளியிடுவேன்.

நான் எதைப்பற்றியாவது விளக்கம் அளித்தால், அதைப் பற்றி ஏற்கனவே சொன்னது எனது ஞாபகத்துக்கு வருவது இல்லை. அவைகள் முரண்டுபட்டு இருந்தாலும், அந்த விளக்கங்கள் உண்மை மற்றும் முழுமையானது. நான் உங்களுடைய உடலைப் பற்றிப் பேசினால், என்னுடைய கருத்துக்கள் இறப்பின் அடிப்படை கொண்டதாகவே இருக்கும். ஆனால், நான் உங்களைப் பற்றிப் பேசும்பொழுது, நீங்கள் சாசுவதமானவர் என்றே கூறுவேன். இந்த இரண்டு கருத்துகளும் முரண்பாடானவை என்று எண்ணிக் கொள்ளாதீர்கள். அவைகள் இரண்டும் ஒன்றை ஒன்று சார்ந்தே இருக்கின்றன. அவைகளுக்கிடையே எந்த சமாதானத்தையும், அனுசரிப்பையும் ஏற்படுத்த வேண்டிய அவசியம் இல்லை. உங்கள் உடல் இறக்க வேண்டியதுதான். அது இறப்பின் அடிப்படையில் அமைந்திருக்கிறது.

நீங்கள் தான் உடல் என்று நம்பினால், நீங்கள் இறக்கப் போவது திண்ணம் என்று முழு வீச்சில் என் கருத்தை வெளியிடுவேன். உங்களைக் காப்பாற்றக்கூடிய சாத்யக்கூறு கொஞ்சமாவது உண்டு என்று நான் ஒருக்காலும் சொல்லமாட்டேன். நான் உங்கள் ஆன்மா மற்றும் உயிர்தன்மையைப் பற்றி பேசினால், நீங்கள் இதுவரை இங்கு பிறக்கவே இல்லை என்றுதான் கூறுவேன். நீங்கள் எப்பொழுதும் சாசுவதமாகவே இருக்கிறீர்கள் என்றுதான் கூறுவேன். ஆகவே, இறப்பு என்ற பேச்சுக்கே இடமில்லை. இந்த இரண்டு அறிக்கைகளும், அவைகளைப் பொருத்தவரையில் முழுமையானதுதான். ஆனால், ஒன்றை ஒன்று எதிர்த்து நிற்கவில்லை. அவைகளுடைய இயல்புகள் வெவ் வேறானவை. ஆகவேதான், அவைகள் உங்களிடம் குழப்பத்தை ஏற்படுத்துகின்றன.

என்னுடைய விளக்கங்கள் அனைத்தும் என்னால் அப்போதைக்கப்போது கூறப்படுபவை; அவைகள் எழுதப்படவில்லை. இது உங்கள் குழப்பத்தை மேலும் அதிகப்படுத்துகிறது. எழுதிய விளக்கங்களில், முரண்பாடுகள் மிகக் குறைவாகவே இருக்கும்.

அவைகள் யாருக்காகவும் தனிப்பட்டு எழுதப்படுவதில்லை. அங்கு கேட்பவர் அல்லது படிப்பவர், எழுதுபவர்க்கு முன்பு உட்கார்ந்திருக்கவில்லை. ஆனால், ஒருவர் பேசும்பொழுது, அதைக் கேட்பவர் அவருக்கு முன்பு அமர்ந்திருக்கிறார். பேசுபவர், அந்த கேட்பவரையும் கருத்தில் கொள்ள வேண்டும். ஆகவே, நான் எதையாவது பற்றிப் பேசும்பொழுது, நான் மாத்திரம் அதற்குப் பொறுப்பல்ல. எனக்கு முன்னால் அமர்ந்து கேட்பவரும் பொறுப்பை ஏற்க வேண்டி வருகிறது.

பொறுப்புகள் இங்கு பகிர்ந்து செயல்படுகின்றன. என்னுடைய அறிக்கைகளுக்கு நான் தான் நிச்சயமாகப் பொறுப்பு. ஆனால், அந்த அறிக்கையை அந்த முறையில் நான் வெளியிடுவதற்கு, அதைக் கேட்பவர்களும் காரணமாகிறார்கள். ஏனெனில், அந்தச் சூழ்நிலையை அவர்கள்தான் ஏற்படுத்துகிறார்கள். அதைப் போல கேட்பவர்கள் வேறு ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தினால், என்னுடைய அறிக்கையும் வேறு மாதிரியாகவே இருக்கும். அதைப்போல, என்னுடைய அறிவிப்பு, கேட்பவர் இல்லாமல், பொதுப்படையாக இருக்குமானால், அதன் தன்மையே வேறு மாதிரியாக இருக்கும்.

என்னுடைய அறிக்கைகள் அனைத்தும் என்னால் அப்போதைக்கப்போது பேசப்பட்டவை. ஆகவே, நான் பேசிய வார்த்தைகள் அனைத்தும் மிகவும் உயிர்த்துடிப்பு உள்ளவை. அந்த உயிர்த்துடிப்பு பேசுபவரிடமிருந்தும் மற்றும் கேட்பவரிடமிருந்தும் வந்தவை. அங்கு கேட்பவர் இல்லாவிட்டால், பேசுபவரின் வார்த்தைகள் அங்கே இல்லாத ஏதோ ஒன்றிற்காக எழுப்பும், பாலமாகவே அமையும். ஆனால், இரண்டு கரைகள் இல்லாமல், எப்படி ஒரு பாலம் அமைய முடியும்? ஒரு கரையில் மட்டும் எழுப்பப்பட்ட பாலம் நிச்சயமாக கீழே விழுந்துவிடும்.

ஆகவே, இந்த உலகத்தில் உண்டான உண்மையை பற்றிய முக்கியமான அறிக்கைகள் அனைத்தும் பேசப்பட்டவைதான், எழுதப்பட்டவை அல்ல. நான் ஏதாவது எழுதவிரும்பினால், நான் வார்த்தைகளைத்தான் கையாளவேண்டும். அது யாரையோ குறித்துதான் எழுதப்படவேண்டும். ஆகவே, நான் பிறருக்கு கடிதம் எழுதுவதைத் தவிர, வேறு எதையும் எழுதியது இல்லை. ஏனென்றால், என்னைப் பொறுத்தவரையில், அந்தக்கடிதம், யாருக்கு எழுதுகிறேனோ,

அவரோடு நேரடியாகப் பேசுவதற்கு சமம்தான். அந்தக் கடிதத்தை யாருக்கு எழுதுகிறோமோ, அவர் நம் முன்னே உட்கார்ந்திருக்கிறார்.

அதைப் போல, ஆயிரக்கணக்கானவர்களுக்கு முன், ஒரே சமயத்தில் நான் பேசும்பொழுது, என்னுடைய அறிக்கை, ஆயிரக்கணக்கில் பெருக்கப்படுகிறது. ஆயிரக்கணக்கான பேர்களில் ஒருவர் திரும்பச்சொல்லும் பொழுது, அந்த அறிக்கையில் அவர் தன்னையும் சேர்த்துக் கொள்கிறார். இது மேலும் மேலும் சிக்கலை வளர்க்கிறது. அந்த வகையில், அதற்கு மாறாக ஏதும் செய்வதற்கு, நான் எந்த ஆர்வமும் காட்டுவது இல்லை. அந்த சங்கடத்தை நீங்களும் முழுமையாக உணர்கிறீர்கள் என்பதில் தான் நான் ஆர்வம் காட்டுகிறேன். ஒரு விதைக்கப்பட்ட உண்மையின் சிக்கல் தன்மையை, ஒருவன் புரிந்து கொண்டால் மட்டுமே, அவன் ஆன்மீகத்தில் மேலே செல்ல முடியும்.

ஆகவே, நான் இந்த சிக்கலை (COMPLEXITY) குறைக்க ஒருபோதும் ஆர்வம் காட்டுவது இல்லை. ஏனென்றால், அப்படி நான் முயற்சி செய்தால், உண்மையின் முழுமை சிதைந்து போகும். அதை வேண்டுமானால் கொஞ்சம் எளிமையாக்கலாம். அப்படிச் செய்தாலும், அந்த முழுமையின் சில கண்ணிகளை நாம் வெட்டியதுபோல் தான் ஆகும். அப்பொழுது அது கிட்டத்தட்ட இறப்பையே சந்திக்க நேரிடும். ஆகவே, அதனுடைய சிக்கல் நிறைந்த தன்மையை, நான் ஒருக்காலும் குறைக்க விரும்புவதே இல்லை. என்னுடைய முழுமையான ஆர்வம் என்னவென்றால், நீங்கள்தான் அந்த எளிமையை, அந்த சிக்கல் நிறைந்த உண்மையின் இதயத்தில் காண வேண்டும். அப்பொழுது நீங்கள் வளருகிறீர்கள்.

நான் விரும்பினால், அதை எளிமைப் படுத்த முடியும். அது ஒன்றும் பெரிய காரியமில்லை. அப்பொழுது என் அறிக்கைகள், கணக்கு போல் மிகத்தெளிவாக இருக்கும். எனக்கு எந்தப் பிரச்சினையும் இருக்காது. ஆனால், நான் என்னுடைய பிரச்சினை அல்லது கஷ்டத்தைப் பற்றி கவலைப்படுவது இல்லை. அவைகள் எனக்கு ஒரு பிரச்சினையே இல்லை. ஆனால், நீங்களே அந்த எளிமையை, அந்த சிக்கலின் நடுவே காணும் பொழுது, அந்த முரண்பாடுகளுக்கிடையே காணும்பொழுது, அந்த நிலையற்றத் தன்மையின் நடுவில் நிலைத்தன்மையை உணரும்பொழுது, அப்பொழுது நீங்கள் வளருகின்றீர்கள். உங்களுடைய

பார்வை மேல் நோக்கிச் செல்கிறது. எப்பொழுது உங்கள் பார்வை மேல் நோக்கிச் செல்கிறதோ, அப்பொழுதே உங்களால் அதைக் காண முடியும். அப்பொழுது தான், அந்த சிக்கல் நிறைந்த உண்மை, உங்களுக்கு எளிமையாகப் புலப்படும்.

ஒரு மலையில் ஏறும்பொழுது, நாம் பல வழிகளைக் காண்கிறோம்-அவைகளில் சில கடுமையானவை. சிலவற்றுக்கு படிகள் உண்டு. பல பாதைகள் ஒழுங்கற்றே இருக்கும். ஆனால், முடிவில் அதன் உச்சிக்குச் சென்றபிறகு, அந்தப் பாதைகள் அனைத்தும் சுலபமாகவே தெரியும். நீங்கள் எல்லாவற்றையும் ஒன்றுசேர முழுமையாகப் பார்த்தால், எல்லா வழிகளும் அந்த மலையின் உச்சியை நோக்கித்தான் செல்வதை அறிவீர்கள். அவைகள் ஒன்றை ஒன்று மறிப்பதில்லை அல்லது முரணாக செல்வதில்லை. ஆனால் ஒருவன் ஒரு வழியைத் தேர்ந்து எடுத்து மேலே செல்லும்பொழுது, மற்றைய வழிகள் அனைத்தும் தவறாகவேபடும். ஆனால், ஒருவன் அந்த மலை உச்சியிலிருந்து கீழே பார்க்கும்பொழுது, எல்லா வழிகளும் மேல் நோக்கியே வருகின்றன என்று அறிந்துகொள்கிறான். ஆனால் ஒருவன், தன்னுடைய வழி மாத்திரம்தான் சரி, மற்றைய வழிகள் அனைத்தும் தவறு என்று பிறரிடம் சொல்லும் பொழுதுதான், பிரச்சினையே உருவாகிறது.

என்னுடைய அறிக்கைகள் அனைத்தும், யாரோ ஒருவரைக் குறித்து தான் வெளியிடப்பட்டவை. என்னுடைய ஒவ்வொரு அறிக்கைக்கும் சரியான விலாசம் உண்டு. அந்த அறிக்கைகள், அந்த குறிப்பிட்ட சூழ்நிலைக்கு ஏற்றவாறு, ஒரு குறிப்பிட்ட நபரின் நலனுக்காக, மேம்பாட்டுக்காக விளக்கப்பட்டது. தேர்ந்தெடுத்த பாதையின் மீது மாறுபட்ட மனநிலை உடைய மனிதன் ஒருவனை நான் பார்த்தால், அவனுக்கு ஏற்றவாறு அவன் நினைக்கும்வழி தான் சரி, மற்றவை அனைத்தும் தவறு என்று கூறிவிடுவேன் இது எதற்காக வென்றால், அவன் தேர்ந்த வழியில் நம்பிக்கையோடு முன்னேறி செல்லவேண்டும் என்பதற்காகத்தான். இது அவனுடைய தனிப்பட்ட நன்மைக்காக செய்கிறேன். இப்படி அவன் தன் வழியில் உச்சிக்கு சென்று, பார்க்கும்பொழுது எல்லா வழிகளும் சரிதான் என்று அவனே உணர்ந்து, சிரிக்க ஆரம்பித்து விடுவான்.

ஆனால், அவன் ஒருவழியில் பாதி தூரம் சென்று, பக்கத்தில் வேறு ஒரு வழி மேலே செல்வதைப் பார்த்து, உடனே அந்த வழியில் சென்று, அதில் பாதி தூரம் சென்ற பிறகு, பக்கத்தில் மூன்றாவது வழி ஒன்று மேலே செல்வதைக் கண்டு, உடனே அந்த வழியில் செல்ல நினைத்தால், அவனால் ஒருக்காலும் உச்சியை அடைய முடியாது. அவன் மனம் இப்பொழுது சிதறுண்டு, நிலையற்ற தன்மையில் செயல் படுகிறது. இதைப் போன்ற மனிதர்களிடம் நான், நீங்கள் சரியான வழியில் தான் செல்கிறீர்கள். அந்த வழியிலேயே செல்லுங்கள். மற்றைய வழிகள் அனைத்தும் தவறு'' என்று சொல்கிறேன். ஆனால், இன்னொரு மனிதன் தன் பக்கத்தில் உள்ள வழியை தேர்ந்து எடுக்கும்பொழுது, அவனும் அதே நிலையில் தான் இருக்கிறான். அதாவது நிலையற்ற மனநிலையோடு அவனிடமும் அதே போலத் தான் சொல்லிவிடுவேன். அதாவது, அவனே தேர்ந்து எடுத்த வழிதான் சரியானதென்று. ஆனால், இந்த இரண்டு மனிதர்களும் சந்திக்க நேர்ந்து, தங்கள் வழிகளை ஒத்துப்பார்த்தால், அவர்களுக்கு குழப்பம்தான் நேரிடும்.

புத்தாவும், மஹாவீரரும் இப்படிப்பட்ட சூழ்நிலையை சிந்திக்கவில்லை. அவர்களுடைய அறிக்கைகள், அவர்களுக்கு முன்னால் விளக்கப்பட்டது அல்ல. ஆகவேதான், 500 வருடங்களுக்குப் பிறகும், அவர்களைப் பின்பற்றுபவர்கள், இதனால் பல தொல்லைகளுக்கு ஆளாகியிருக்கிறார்கள். நீங்கள் என்னிடம் கேட்ட கேள்வியை, புத்தாவிடம் கேட்டிருக்க முடியாது.

ஆகவேதான், 500 வருடங்களுக்குப் பிறகு, பல பிரிவுகள் தோன்றியிருக்கின்றன. அறிக்கைகள் பல வெளியிடப்பட்டன. ஆனால் எதுவும் எழுதப்படவில்லை. ஆகவே, அவைகளை ஒத்துப்பார்ப்பதற்கு வழியில்லாமல் போய்விட்டது. ஒரு கருத்து, ஒரு மனிதனிடம் சொல்லப்பட்டது, வேறு ஒரு கருத்து அடுத்தவனிடம் சொல்லப் பட்டது, மூன்றாவது கருத்து மூன்றாவது ஆளிடம் என்று பல கருத்துகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால், எதையும் முறைப்படுத்தி எழுதவில்லை. ஆகவே, அவருடைய பல அறிக்கைகளை ஒத்துப்பார்க்கும் சந்தர்ப்பமே ஏற்படவில்லை. இந்த பல அறிக்கைகள், தனிப்பட்ட சீடனுக்காக, தனிப்பட்ட முறையில் விளக்கப்பட்டவை. ஆனால், இவைகளையெல்லாம் எழுதி வைத்திருந்தால், ஒருக்கால், பல சிக்கல்கள் ஏற்பட்டிருக்கலாம்.

ஆகவேதான், ரொம்ப காலமாக, மத சம்மந்தமாக எதையும் எழுதி வைக்கக் கூடாது என்று பழைய மதங்கள் வலியுறுத்தி வந்திருக்கின்றன. ஏனெனில், அப்படி எழுதி வைத்தால், அவைகளின் முரண்பாடுகள் வெளியே தெளிவாக தெரிந்துவிடும். பிறகு அதன்மேல் பல கேள்விகள் பிறக்க ஆரம்பித்துவிடும். முதலில் அந்த அறிக்கைகள் தனிப்பட்டு விளக்கப்பட்டவை. ஆனால் அவை எழுதி வைக்கப் பட்டால், அவைகள் அந்தத் தனிப்பட்ட தன்மையை இழந்து விடுகிறது.

ஆகவேதான், நான் எதிர்நோக்கும் கஷ்டங்களை, புத்தாவும், மஹாவீரரும் எதிர் நோக்கவில்லை. ஆனால், இப்பொழுது வேறு வழியில்லை. ஏனெனில், நான் இப்பொழுது எதைப் பேசினாலும், அது நாடாவில் பதிவு செய்யப்பட்டு விடுகிறது! அது தனிப்பட்ட ஆளுக்கு உரியதாக இருந்தாலும் சரி. அது அப்படி பதிவுசெய்யப்பட்ட பிறகு, அது சமூகத்தின் சொத்தாகிவிடுகிறது. இப்படி பல சூழ்நிலைகளில், பல நேரங்களில், பல பேர்களுக்கு பலவிதமாக சொல்லப்பட்டவைகள் அனைத்தும் ஒன்றாகச் சேர்க்கப்பட்டு விடுவதால், அதில் ஒரு நிலையான தன்மையை, பொதுவான கருத்தைக் காண்பது மிகவும் கஷ்டமாகி விடுகிறது.

இப்பொழுது அப்படித்தான் நேரிடும். இதைத் தடுப்பதற்கு வழியே இல்லை. இது நல்லதுதான் என்று நான் நினைக்கிறேன். புத்தரின் முன்னிலையில், அவர் சொன்னது பதிவு செய்யப்பட்டிருந்தால், அதற்கு அவர் உடனே சரியான பதிலை சொல்லியிருக்கக் கூடும். ஆனால், அவரது விளக்கங்களை, 500 வருடங்களுக்குப் பிறகுதான் எழுதி வைத்தார்கள். அப்பொழுது அதன்மேல் கேள்வி எழுப்பப்பட்டபொழுது, அதற்கு பதில் சொல்ல அங்கே புத்தா இல்லை. இதனுடைய விளைவு என்னவென்றால், ஒரு அறிக்கையை நம்பும் ஒரு சிலர், தனியாக ஒரு பிரிவை ஏற்படுத்திக் கொண்டு விட்டார்கள். அதற்கு முரண்பாடான கொள்கையை ஏற்றுக் கொண்டவர்கள், வேறு ஒரு பிரிவை உண்டாக்கிக் கொண்டார்கள். இப்படி பல பிரிவுகளும் இந்த முறையில்தான் தோன்றின.

என்னுடைய கொள்கையைக் கொண்டு, வேறு ஒரு பிரிவு ஏற்பட எந்தச் சாத்யக் கூறும் இல்லை. என்னுடைய விளக்கத்தைப் பெற, நீங்கள் என்னிடம் நேரடியாகக் கேள்விகளைக் கேட்கலாம். நாளைவரை, நீங்கள்

அதற்காகக் காத்துக் கொண்டிருக்கத் தேவையில்லை. நீங்கள் இன்றைக்கே அதைத் தெளிவுப்படுத்திக் கொள்ளலாம்.

நான் வார்த்தைகளைக் கொண்டு விளக்கம் அளித்தாலும், உண்மையை வார்த்தைகளைக் கொண்டு விளக்க முடியாது என்று ஏன் நீங்கள் கூறிவருகிறீர்கள். ஆனால், பிறரோடு பேச விரும்புவர்களுக்கு, வார்த்தைகளைத் தவிர்த்து வேறு வழி எதுவும் கிடையாது. சாதாரணமாக, நான் என்ன சொல்ல விரும்புகிறேனோ, அவைகளை வார்த்தைகளைக் கொண்டு வெளிப்படுத்தலாம். ஆனால், நான் என்ன சொல்ல விரும்புகிறேனோ, அப்படிப்பட்ட சில கருத்துகளை வார்த்தைகளால் ஒருக்காலும் வெளிப்படுத்த முடியாது. இந்த இரண்டு அறிவிப்புகளும் உண்மைதான். நம்முடைய சூழ்நிலை, வார்த்தைகளைக் கொண்டு தான் பேச வேண்டும். நாம் கலந்து உரையாடுவதற்கு வேறு வழி இல்லை.

இப்படிப்பட்ட சூழ்நிலையை, நாம் மாற்ற முயற்சி செய்ய வேண்டும். ஒருவன் மிக ஆழமாக தியானத்தில் ஆழ்ந்து சென்றால், வார்த்தைகளை உபயோகிக்காமல் கலந்துரையாட முடியும். ஆனால், அவனை அந்த அளவுக்கு ஆழமாகத் தியானத்தில் ஈடுபடச் செய்ய, நான் முதலில் வார்த்தைகளை உபயோகிக்கத்தான் வேண்டும். இதற்கு தொடர்ந்து நீண்ட கால முயற்சி தேவை. அது, அந்த கட்டத்தை எட்டும் வரை, நான் உங்களோடு வார்தைகளைக் கொண்டுதான் பேசியாக வேண்டும்.

அந்த வார்த்தைகளற்ற உலகத்துக்கு உங்களை அழைத்துச்செல்ல, நான் வார்த்தைகளை உபயோகிக்கத்தான் வேண்டும். இப்பொழுது உள்ள சூழ்நிலை இதுதான். ஆனால், இதில் மிகப் பெரிய அபாயம் கூட உண்டு. அதாவது, நான் வார்த்தைகளைக் கொண்டு பேசும்பொழுது, நீங்கள் அந்த வார்த்தைகளோடு ஐக்கியமாகி விடுவீர்கள் என்று நான் புரிந்தே அதைக் கையாளுகிறேன். நீங்கள் அதை மட்டும் நம்பி செயல்பட்டால், நான் எடுத்துக்கொண்ட முயற்சி அனைத்தும் தோல்வியைத்தான் தழுவும். நம்முடைய குறிக்கோளே, அந்த வார்த்தைகளற்ற உலகத்தை அடைவதுதான். அதை வார்த்தைகளைக் கொண்டு ஒருக்காலும் அடைய முடியாது. ஆனால், வார்த்தைகளை உபயோகிக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். இந்த வகையில்,

நாம் உதவியற்று இருக்கிறோம். வேறு வழியே கிடையாது. வார்த்தைகளைக் கொண்டு பேசும்பொழுது, நாம் வார்த்தைகளுக்கு எதிராகப் பேசுவதற்கும், அதே வார்த்தைகளைத் தான் உபயோகிக் வேண்டியுள்ளது! வேறு வழியில்லை.

ஒருவர் அமைதி நிலையை அடையலாம். அதில் ஒன்றும் சங்கடம் இல்லை. இந்த வார்த்தைகளின் சங்கடத்தால், அவர்கள் நேரடியாகவே அமைதி நிலையை அடைந்து விடுகிறார்கள். அவர்கள் இந்தப் பிரச்சினையிலிருந்து தப்பித்து விடுகிறார்கள். ஆனால், அவர்கள் தாங்கள் சொல்ல விரும்புவதை, வெளிப்படுத்த முடியாத நிலையில் இருப்பதையும் அறிந்தேதான் இருக்கிறார்கள்.

நான் இவர்களைப்போல அமைதி நிலையை அடைவது என்பது எனக்கு ஒன்றும் பெரிய காரியம் இல்லை. என்றால் அது சாத்யம்தான். ஆனால் நான் அப்படி அடைந்தால், அது உங்களுக்கு வியப்பைத்தான் கொடுக்கும். ஏனெனில், நான் இப்பொழுது செய்து கொண்டுவரும் முயற்சி, மிகவும் கஷ்டமான காரியம். எது முடியாதோ, அதை முடிக்க முடியும் என்று நான் முயல்கிறேன். ஆனால், நான் அமைதி நிலையை அடைந்து விட்டால், உங்களுக்கு எதுவும் செய்ய முடியாது. எதையும் விளக்க முடியாது. அந்த அபாயம் அப்படியேதான் இருக்கும்.

ஆகவே, நான் பேசினால், நீங்கள் என் வார்த்தைகளைப் பிடித்துக்கொண்டு தொங்கிக்கொண்டு இருக்கிறீர்கள். இதனால் ஏற்படும் அபாயம் என்னவென்றால், நான் எதை முக்கியமாக உங்களிடம் வெளிப்படுத்த விரும்புகிறேனோ, அது கிட்டத்தட்ட முடியாத முயற்சியாகி விடுகிறது. சுருக்கமாகச் சொன்னால், என்னுடைய முயற்சி வீணாகிறது. ஆனால், நான் அமைதியாகி விட்டால், நான் எதையும் உங்களுக்கு விளக்க வேண்டிய நிலையில் இருக்க மாட்டேன். அது முடியாத காரியம். ஆகவேதான் நான் பேசி, சாதிக்க முயல்கிறேன். முதலில், நான் பேசி விளக்கம் கொடுத்தால், அது அப்படியே சில பேர்களிடம் செல்லலாம். நான் ஒரு 100 பேர்களிடம் விளக்கினால், அதில் குறைந்தது ஒருவராவது என்னுடைய வார்த்தைகளில் ஐக்கியமாகாமல், என்னுடைய செய்தியை மட்டும் எடுத்துக் கொள்ளலாம். பாக்கி உள்ள 99 பேர்களைப் பொருத்தவரையில், என்னுடைய முயற்சி தோல்விதான். அப்படியே இருக்கட்டுமே! இப்படியாக, குறைந்தது ஒருவரையாவது

என் நோக்கத்தில் செலுத்த முடிகிறதே! என்னுடைய செய்தியை தெரிவிக்க முடிகிறதே. ஆனால், நான் அமைதியடைந்து விட்டால், அந்த ஒருவரைக் கூட என்னால் மேலே உயர்த்த முடியாது. அந்த சிறிய சாத்யக் கூறும் அடைபட்டு விடுகிறது. ஆகவேதான், நான் என்னுடைய முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டு வருகிறேன்.

ஒரு வியப்பான செய்தி என்னவென்றால், யார் ஒருவர், தன் வார்த்தைகளைக் கொண்டு தான் சொல்ல வேண்டியதை விளக்க முடியும் என்று நினைக்கிறாரோ, அவர் அதிகம் பேசுவதே இல்லை! அவர்கள் மிகக் குறைவாகவேப் பேசுகிறார்கள். அத்துடன் முடித்துக் கொள்கிறார்கள். ஆனால் மற்றும் சிலர், தான் சொல்ல வேண்டியதை, வார்த்தைகளால் முழுமையாக விளக்க முடியாது என்று நம்புகிறார்கள், அவர்கள் தான் மிகவும் அதிகமாகப் பேசுகிறார்கள்! ஏனென்றால், அவர்கள் எவ்வளவு அதிகமாகப் பேசினாலும், தான் சொல்ல வேண்டியதை இன்னும் முழுமையாக வெளிப்படுத்தவில்லை என்பதை அவர்கள் அறிந்தே இருக்கிறார்கள். அவர்கள் மேலும், மறுபடியும், மறுபடியும் பேசிக் கொண்டே இருக்கிறார்கள்.

ஆகவேதான், புத்தா தினசரி காலை, மாலை என்று சுமார் 40 வருடங்கள் பேசிக் கொண்டே இருந்தார். அது எதற்காக என்றால், வார்த்தைகளின் மூலம் தான் சொல்ல வேண்டியதை விளக்க முடிந்தது என்பதற்காக அல்ல. அதற்கு மாறாக, தன் பேச்சை முடித்த பிறகு, ஒவ்வொரு நேரமும், தான் சொல்ல வேண்டியதை இன்னும் முழுமையாகச் சொல்ல முடியவில்லையே என்ற திருப்தியற்ற காரணத்தினால்தான். ஆகவே தான் அவர் மறுபடியும் மறுபடியும் பேசினார். அவர் பல மாறுபட்ட முறையில், வித்தியாசமாக, பற்பல வார்த்தைகளைக் கொண்டு பேசியிருக்கலாம். ஆகவேதான் அவருக்கு 40 வருடம் பிடித்தது!

ஆனால் என்னைப் பொருத்தவரையில், நான் 40 வருடகாலம் பேசினால், மக்கள் என்னுடைய வார்த்தைகளில்தான் சிக்கித்தவிப் பார்கள் என்ற பயம் எனக்கு இருக்கிறது! அப்படி 40 வருடகாலம், நான் வார்த்தைகளைக் கையாளும் பொழுது, இடையிடையே, நான், ''என்னுடைய வார்த்தைகளில் சிக்கிக் கொள்ளாதீர்கள்'' என்று

கூறவேண்டிவரும்! இது ஒரு விநோதமான சூழ்நிலையைத்தான் தோற்றுவிக்கும். இருப்பினும், எனக்கு வேறு வழி தெரியவில்லை!

ஒருவரை வார்த்தைகளுக்கு அப்பால் எடுத்துச்செல்ல, வார்த்தைகளைத்தான் உபயோகிக்க வேண்டியுள்ளது. வேறு வழியில்லை. அந்த சூழ்நிலை எப்படியிருக்கிறது என்றால்: ஒரு அறை இருக்கிறது. அந்த அறையிலிருந்து வெளியே செல்ல, நாம் அந்த அறைக்குள்ளேயே 5-10 அடிகள் வைக்க வேண்டும். சிலபேர்கள் கேட்கலாம், ''இப்படி அறைக்குள்ளேயே நடந்தால், எப்படி அந்த அறையை விட்டு வெளியே செல்வது'' என்று. ஆனால், எல்லாமே, நீங்கள் எப்படி அந்த அறையில் நடக்கிறவர்கள் என்பதைப் பொறுத்தே அமையும்.

ஒரு மனிதன் அந்த அறையில் சுற்றி சுற்றிவந்தால், அவன் மைல் கணக்கில் நடந்தாலும், அவனால் அந்த அறையைவிட்டு வெளியே வரமுடியாது. ஆனால் ஒருவன் நேரடியாக அதன் வாசலுக்குச் செல்லலாம். இந்த இரண்டு முறைகளிலும், அவன் சில அடிகள் வைத்து அந்த அறைக்குள்ளேயே நடந்ததாக வேண்டும்.

இந்த உலகத்தில் எல்லாமே சுற்றி சுற்றித்தான் நடக்கிறது என்பதை அறிந்து வியக்காமல் இருக்கமுடியாது. நம்முடைய பாதை வட்டவடிவமாகவே இருக்கிறது. நாம் அதிலேயே தான் சுற்றி சுற்றிவருகிறோம். நீங்கள் பிரக்ஞையாக ஏதும் செய்யாவிட்டால், இப்படி வட்டமடித்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். நேராக நடந்து செல்வதற்கு, உங்களுடைய முயற்சிதேவை. அதுவே ஒரு பெரிய சாதனைதான்!

நீங்கள் வட்டத்தில் நடக்க, எப்படி முதன்முதலில் ஆரம்பித்தீர்கள் என்பதையே உங்களால் புரிந்து கொள்ளமுடியாது. ஆகவேதான், நேரான கோட்டை வரையமுடியாது என்று வடிவியல் (GEOMETRY) கூறுகிறது. எல்லா நேர் கோடுகளும், ஒரு பெரிய வட்டத்தின் பகுதிதான். அந்த நேர்கோடு ஒரு மாயத்தோற்றம்தான். நேர்கோடு என்று இந்த உலகத்தில் எதுவும் கிடையாது. அது வெறும் கருத்துதான். நடைமுறையில் சாத்யம் இல்லை. நேர்கோடு என்பதுவெறும் கற்பனை கருத்துதான் என்று 'யூக்லிட்டு' (EUCLID) சொல்லுகிறார். இருந்தாலும், இந்த பூமியில் ஒரு

அளவுக்கு, நேர் கோட்டை வரையமுடியும். ஆனால், இந்த பூமி வட்டமாக இருப்பதால், பிறகுமெல்ல இந்த கோடும் வட்டமாகிவிடும். இந்த அறையில், ஒரு நேர்கோட்டை வரையமுடியும். ஆனால், அது இந்த பூமியின் வட்டவடிவத்தில் ஒரு பகுதிதான்.

*''அது வளைவானதுதானா?''*

நம்மால் பார்க்க முடியாத அளவுக்கு, அது மிகச்சிறிய வளைவு. ஆனால் அதை, அதன் இரண்டு முனைகளிலும் அதிகப்படுத்தினால், அதன் வளைவு தெளிவாகத் தெரியும். பிறகு அந்த வளைவு ஒரு வட்டமாக இந்த உலகத்தைச் சுற்றியிருப்பதை அறியலாம். அதாவது நேர்கோடாக இருந்தது, இப்பொழுதுவளைவாக வட்டமாக இருப்பதை அறிய முடியும். ஆகவேதான் ஒரு நேர்கோட்டை இந்த உலகத்தைப் பொருத்தவரையில் வரையமுடியாது.

நாம் அதைப்பற்றி ஆழமாக சிந்தித்தால், தியானத் தன்மையில் ஒரு பெரிய சிக்கல் ஏற்பட்டுவிடும். அதாவது எல்லா எண்ணங்களும் வட்டவடிவமாகவே இருக்கும்! ஏன், நமது பிரக்ஞைத் தன்மையே வட்டவடிவத்தில்தான் நகர்ந்து கொண்டிருக்கும். இதில் மிகவும் கடினமான காரியமும், தியானத்தன்மையில் மிகவும் எளிமை நிறைந்ததும் என்னவென்றால், இந்த வட்டத்தில் நகருவதிலிருந்து உடனே ஒரே தாவலாக குதித்து அதிலிருந்து வெளியே செல்லுதல்தான். இதைத் தவிர வேறு வழியில்லை.

வார்த்தைகளும் இந்த வட்டத்தில்தான் சுழலுகின்றன. ஆனால், வார்த்தைகள் எப்படி வட்டமாக இருக்கமுடியும் என்று நீங்கள் கருதலாம். ஆனால், அவைகள் வட்டத்தில்தான் இயங்குகின்றன. நீங்கள் ஒரு வார்த்தையை, தெளிவாக விளக்குவதற்கு, நீங்கள் பல வார்த்தைகளைக் கையாள வேண்டும். நீங்கள் அகராதியைப் புரட்டி, 'மனிதன்' என்றவார்த்தைக்கு விளக்கம் கேட்டால், நீங்கள், அதில் மனிதஇனம் (HUMANBEING) என்று குறிப்பிடப்பட்டிருப்பதைக் காண்பீர்கள். பிறகு மனித இயல்புகள் (HUMAN) என்பதற்கு விளக்கம் கேட்டால், 'மனிதனுக்குரிய குணங்கள்' (HAVING THE QUALITY OF MAN) என்று இருக்கும். இதெல்லாம் என்ன? இது மிகப்பெரிய பைத்தியக்காரச் செயல் என்பது விளங்கவில்லையா? நமக்கு மனிதனையும்,

மனிதஇயல்புகளைப் பற்றியும விளக்கத்[redacted]ல்லை. இதற்குஎன்னஅர்த்தம்?

அகராதியைப் புரட்டி அர்த்தம் காண்பவர்களுக்கு, அது வட்டவடிவமாக இருப்பது புரியவில்லை! ஒரு வார்த்தையை விளக்குவதற்கு, அடுத்த வார்த்தை தேவைப்படுகிறது. அடுத்த வார்த்தையை விளக்குவதற்கு, முதல்வார்த்தை தேவைப்படுகிறது! ஒரு மனிதன் என்பது மனிதகுலம் என்றும், மனிதகுலம் என்பது மனிதன் என்றும் விளக்கப்பட்டிருக்கிறது! மனிதன் என்பதற்கு எங்கே விளக்கம் இருக்கிறது? ஆகவே, எல்லா விளக்கங்களும் ஒரு வட்டத்தில்தான் செயல்படுகின்றன. அதைப்போல எல்லாக் கொள்கைகளும் ஒரு வட்டத்தில்தான் நகர்ந்து கொண்டு இருக்கின்றன. ஒரு கொள்கையை விளக்குவதற்கு, நீங்கள் வேறு ஒன்றை உபயோகிக்கிறீர்கள். அதைப் போல பின்னதை விளக்க, முன்னதை கையாளுகிறீர்கள். நமது பிரக்ஞைத் தன்மையும் வட்டத்தில் தான் செயல்படுகிறது. ஆகவேதான்; வயதான காலத்தில், நாம் குழந்தையைப் போல நடந்து கொள்கிறோம். அந்த வட்டம் முடிவடைகிறது!

நீங்கள் எவ்வளவு வார்த்தைகளை உபயோகித்தாலும், அவைகள் அனைத்தும் ஒரு வட்டத்தில் தான் செயல்படுகின்றன. அவைகளின் பாதை ஒருக்காலும் நேர் கோட்டில் இருப்பது இல்லை. உங்களால் நேரடியாகச் செல்ல முடிந்தால், நீங்கள் வார்த்தைகளற்ற உலகத்தைத்தான் அடைவீர்கள். ஆனால், நாம் வார்த்தைகளடங்கிய உலகத்தில் வாழ்வதால், நான் அந்த வார்த்தைகளுக்கு மாறுபட்டு ஏதும் சொல்ல விரும்பினால், நான் வார்த்தைகளைத்தான் கையாள வேண்டியுள்ளது. இது ஒரு வித பைத்தியக்கார செயல்தான். ஆனால், நான் தவறேதும் செய்யவில்லை. வார்த்தைகள் இல்லாமல், உங்களால் புரிந்துகொள்ள முடியாது என்பதால், நான் அந்த வார்த்தைகளுக்கு எதிராக அதே மொழியில்தான் பேசவேண்டியுள்ளது; நீங்கள் அந்த வார்த்தைகளோடு சம்மந்தப்படமாட்டீர்கள் என்ற நம்பிக்கையில். அப்படி நிகழ்ந்தால்தான், நான் விரும்பியதை, உங்களிடம் எடுத்துச் செல்ல முடியும்.

நீங்கள் என் வார்த்தைகளில் கவனம் வைத்தால், நீங்கள் என் கருத்தை அல்லது செய்தியை தவறவிட்டு விடுவீர்கள். நீங்கள் என்

வார்த்தைகளையும் புரிந்துகொள்ள வேண்டும். அதே சமயம், அந்த வார்த்தைகளற்ற உலகத்தைச் சுட்டிக் காட்டுவதையும் புரிந்து கொள்ள வேண்டும். ஆகவேதான் நான் பழைய மத ஏடுகளுக்கு எதிராகவே பேசி வருகிறேன். அதேசமயம், நான் இப்பொழுது பேசுவது கூட பிறகு ஒரு மத ஏடாக ஆகலாம் என்று புரிந்தே பேசுகிறேன். எல்லா மதஏடுகளும் இப்படித்தான் ஏற்பட்டன. ஆனால், வார்த்தைகளுக்கு எதிரான அறிக்கைகள் நிறைந்த எந்த மத ஏடுகளையும் நீங்கள் காண முடியாது. அதற்கு அர்த்தம் என்னவென்றால், மத ஏடுகளுக்குப் புறம்பாக வேறு எந்த மத ஏடுகளும் அறிக்கைகள் ஏற்படுத்தவில்லை. அது கீதையாக இருந்தாலும் சரி, குரானாக இருந்தாலும் அல்லது பைபிள் அல்லது மஹாவீரா அல்லது புத்தா கூட மாறுபடவில்லை.

என்னிடம் வேறு ஏதோ வித்தியாசமான மாறுதல் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதற்கு எந்த அத்தாட்சியும் கிடையாது. நான் வார்த்தைகளுக்கு எதிராகவே மறுபடியும் மறுபடியும் தொடர்ந்துதான் பேசுவேன். அதற்காக நான் பல வார்த்தைகளை கையாளத்தான் வேண்டும். இந்த முடியாத காரியம் தொடரத்தான் செய்யும். அதில் பொதிந்த கருத்தை சில பேர்கள் எடுத்து, அதையே ஒரு புதிய மத ஏடாக உண்டாக்கக் கூடும். ஆனால், நான் பேசுவதை நிறுத்த மாட்டேன். ஏனெனில், அதைப் போல உண்டாக்கக் கூடிய சந்தர்ப்பம் 100ல் ஒரு சதம் கூட இருக்காது. நான் பேசுவதை நிறுத்தினால், இந்த 1 சதம் கூட ஏற்பட வழி இருக்காது. ஆனால், இந்தப் பயத்திற்கு எந்த ஆதாரமும் கிடையாது. ஏனெனில், என்னுடைய வார்த்தைகளை மறுத்துப் பேசுவதற்கும், மற்றும் அவைகளிலிருந்து உண்டாக்கப்பட்ட புதிய மத ஏடுகளையும் எதிர்க்கக்கூடிய, யாரோ ஒருவர் எனக்குப் பிற்பாடு வரக்கூடும். ஆகவே, எந்தப் பயமும் வேண்டாம்!

ஆனால், ஒரு வித்தியாசமான நிகழ்ச்சி இங்கு ஏற்பட்டுக் கொண்டு இருக்கிறது. அதாவது, வருங்காலத்தில், இந்த உலகத்தில் நான் செய்த வேலையை அல்லது கருத்தை, யார் அதற்கு எதிராக இப்பொழுது பேசிக்கொண்டு இருக்கிறார்களோ, அவர்களே அதை மேலும் பரப்பக்கூடும். இன்றைக்கு அது எப்படியிருக்கிறது என்றால், ஒருவர் புத்தரை பரப்ப வேண்டுமென்றால், அல்லது அவரை ஆதரித்துப் பேச வேண்டுமென்றால், அவர் இப்பொழுது புத்தருக்கு

எதிராகவே பேசுகிறார். பழைய கற்களை எப்படி பல பேர்கள் எடுத்து அழகு பார்க்கிறார்களோ, அதைப் போல இப்பொழுது புத்தரின் அறிக்கைகளை எடுத்து வைத்துக் கொண்டு பல பேர்கள் பலவிதமாக அலசிக் கொண்டு இருக்கிறார்கள். ஆனால், புத்தரை அகற்றாதவரை, அந்த பழைய கற்களையும் உங்களால் அகற்ற முடியாது. யார் புத்தரை, கடவுளுக்கு இணையாக கருதுகிறார்களோ, அவர்களுடைய உள்ளத்தில் அந்த பழைய கற்கள் பொக்கிஷம் போல் பதிந்து விடுகின்றன. அந்த பழைய கற்களை அவர்களுடைய உள்ளத்திலிருந்து எடுக்க வேண்டுமென்றால், புத்தரையும் அவர்களது உள்ளத்திலிருந்து பிடுங்கி எடுக்க வேண்டும். இல்லாவிட்டால்,அந்தக் கற்கள் அங்கேயே தான் இருக்கும்.

இப்பொழுது, என்னுடைய இயலாமையை, நீங்கள் புரிந்து கொண்டிருக்கலாம். நான் எதற்காக புத்தருக்கு எதிராகப் பேசுகிறேன் என்பதை நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள் என நினைக்கிறேன். நான் அவருடைய வேலையைத் தான் தொடர்ந்து செய்கிறேன். இருந்தும் அவருக்கு மாறுபட்டே பேசிவருகிறேன். அப்படி இல்லாவிட்டால், புத்தரின் பெயரையும், மற்றும் அவருடைய வார்த்தைகளையும் தங்களுடன் ஐக்கியப்படுத்தியவர்களை, எப்படி அவைகளிலிருந்து விடுவிப்பது? நான் அவர்களிடமிருந்து புத்தரை அகற்றாவிட்டால், அவர்களை அங்கிருந்து என்னால் அகற்ற முடியாது. அவர்களை அசைத்து மேலே செலுத்துவதற்காக, நான் புத்தரை தேவையில்லாமல் தொல்லை கொடுக்கவே வேண்டியுள்ளது.

அதைப்போல, வேதத்தையும் அவர்களிடமிருந்து அகற்றா விட்டால், அந்த மக்களை அசைப்பதற்கு வேறு வழியே கிடையாது. அவர்கள் அதையே காலம் முழுவதும் தூக்கிக் கொண்டு திரிவார்கள். அந்த வேதங்கள் உபயோகமற்றது என்று அவர்களை நம்பவைத்தா லொழிய, அவர்கள் அதை ஒருக்காலும் விடமாட்டார்கள். எப்படியோ, அவர்களது மனதை ஒன்றுமற்றதாக்க (EMPTY) வேண்டும். அப்பொழுதுதான் ஆன்மீகத்தில் மேற்கொண்டு ஏதாவது செய்ய முடியும்.

இப்படி மனம் வெறுமை நிலையை அடைந்தபிறகு, வேதம் என்ன சொன்னதோ, அதையே நான் மீண்டும் சொல்கிறேன்.

அப்பொழுது சிக்கல்கள் மேலும் அதிகரிக்கத்தான் செய்யும். பொய் நண்பர்களும், பொய் விரோதிகளும் தேவையில்லாமல் உருவாகு வார்கள். நடைமுறையில், ஒருவர் 100க்கு 99 சதம் பொய்யான நண்பர்களையும், பொய்யான எதிரிகளையுமே சந்திக்க நேரிடும். ஒரு பொய்யான நண்பன் யாரென்றால், நான் பேசுவது அனைத்தும் மத ஏடுகள் சம்மந்தப்பட்டதுதான் என்று நம்புபவன். ஒரு பொய்யான பகைவன் யாரென்றால், நான் பேசுவது எல்லாம் மத ஏடுகளுக்கு புறம்பானது என்று நம்புபவன். ஆனால், அது அப்படித்தான் நிகழும். அதைத் தவிர்க்க முடியாது. அதற்காகக் கவலைப்படவும் தேவை யில்லை. இதுதான் அப்போதைய நிலைமையாக இருக்கும். இதை எதிர்கொள்ள வேண்டியதுதான்.

**''ஆகவே, நீங்கள் எதையும் எழுத விரும்பவில்லை?''**

இல்லை நான் எதையும் எழுதிவைக்க விரும்பவில்லை. அதற்கு பல காரணங்கள் உண்டு. முதலில், எழுதுவது என்பது முட்டாள்தனம்; மேலும் அது பயனற்றது. அது பயனற்றது என்று ஏன் சொல்லுகிறேன் என்றால் நான் யாருக்காக அதை எழுத வேண்டும்? என்னைப் பொருத்தவரையில், அது விலாசம் இல்லாது எழுதப்படும் கடிதம் போலத்தான் அமையும். அதை எழுதி, கவரில் வைத்து ஒட்டி, அட்ரஸ் எழுதாமல் யாருக்கு அனுப்ப முடியும்?

ஒரு அறிக்கை எப்பொழுதும் குறிப்பிட்டு தான் வெளிப்படுத்தப்படும். அது மக்களுக்கு என்றால், அவர்களைக் குறித்துதான் அது வெளிப்படுத்தப்படும். தெரியாத கூட்டத்தில் பேசும்பொழுது, இப்படித்தான் அது அமையும். ஆனால், அந்த கூட்டம் எவ்வளவுக்கு அதிகமாகத் தெரியாது இருக்கிறதோ, அவ்வளவு குறைவாகவே, சொல்பவைகளும் இருக்கும். ஆனால் அந்த குறைவான செய்திகள் மிக ஆழமாக, அர்த்தம் நிரம்பியதாக இருக்கும்.

உண்மையைப் பற்றி ஆழமாக, ஒரு குறிப்பிட்ட தேர்ந்த நபரிடம் மாத்திரம்தான் கூற முடியும். சாதாரணமாக, விரைவில் கலைந்து போகும் கூட்டத்தில், சிறிய விஷயங்களை மிகவும் மேலோட்டமாகவே சொல்லப்படும். எவ்வளவுக்கெவ்வளவு கூட்டம் அதிகமாக இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அதன் புரிந்துகொள்ளும் ஆற்றல்

குறைவாகவே இருக்கும். அதைப் போல ஒரு கூட்டம் எவ்வளவுக்கெவ்வளவு தெரியாது இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அதன் புரிந்து கொள்ளும் தன்மையும் குறைவாகவே இருக்கும் என்று நீங்கள் தீர்மானித்துக் கொள்ளலாம். அதைப்போல, கூட்டத்துக்கு எவ்வளவுக்கெவ்வளவு நூல்கள் வெளியாகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அது உலக சம்மந்தப்பட்ட எளிய விஷயங்கள் அடங்கியதாகவே இருக்கும். ஆனால் விஷயஞானம் நிறைந்த இந்த நூல்களைக் கொண்டு, நீங்கள் ஆகாயத்தில் பறக்க முடியாது.

காளிதாசனின் கவிதைகளில், நீங்கள் மிகவும் மென்மையான அர்த்தத்தை உணர்ந்தால், அந்த உணர்வை நீங்கள் நவீன காலத்து கவிதைகளிடம் பெறவில்லை என்றால் அது காளிதாசன் மற்றும் நவீன காலத்து கவிஞர்களில் உள்ள வேறுபாட்டால் அல்ல. கவிகாளிதாசன் தன் கவிதைகளை ஒரு இளவரசன் மற்றும் சில தேர்ந்து எடுத்த நபர்களுக்கு முன்னால் பாடியவை. ஆனால் நவீன காலத்து கவிதைகள் எழுதப்பட்டு, செய்தித்தாள்களில் அச்சடிக்கப்பட்டவை. ஒருவன், ஒரு டீக்கடையில் டீயை அருந்தும் பொழுதும், அல்லது பட்டாணியைக் கொறிக்கும் பொழுதும் அல்லது புகை பிடிக்கும் பொழுதும் அந்த செய்தித் தாளில் உள்ள கவிதையைப் படிக்கலாம். அதை,அவன் மிகவும் மேம்போக்காகப் புரட்டலாம். இப்பொழுது அந்த கவிதை யாருக்காக எழுதப்பட்டது? அதைப்பற்றி நவீன காலத்து கவிஞர்களுக்கு கவலை இல்லை. அவர்,அந்த கவிதைகளை அடிமட்ட மனிதனையும் சேர்த்து எல்லோருக்குமாக எழுதியிருக்கிறார். அவர் தன் கவிதைகளை எழுதும்பொழுது, எல்லோரையும் மனத்தில் எண்ணிக் கொள்ள வேண்டும்.

ஆனால் என்னுடைய கஷ்டம் என்னவென்றால், உங்களில் யாரேனும் நன்றாக உள் வாங்கிக் கொள்ளும் தன்மைப் படைத்தவராக இருந்தாலும், உண்மையை முழுமையாக வெளிப்படுத்துவது என்பது மிகவும் சிரமமான காரியம். ஆனால், சாதாரண மனிதர்களைப் பொருத்த வரையில், உண்மையை விளங்க வைப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. அந்த கேள்வியே எழும்பாது. நம்மிடம் உள்ள ஒரு சில மிகவும் புரிந்துகொள்ளக் கூடிய சக்தி படைத்தவர்களால் மட்டுமே, ஒரு விஷயத்தை மிக ஆழமாகப் புரிந்து கொள்ள முடியும். இந்த ஒரு சிலரில் கூட, 100க்கு 99 பேர்கள், நான் உண்மையாக சொல்ல வருவதை தவற

விட்டு விடுவார்கள். ஆகவே, இந்த ஆழமான விஷயத்தை ஒரு கூட்டத்தில் சொல்வதில் எந்த அர்த்தமும் கிடையாது. ஆகவே, அவைகளை எழுத்தில் கொண்டு வருவது கூட்டத்துக்காக வேண்டி தான். அதனால் என்ன பிரயோஜனம்?

நான் என் கருத்துகளை அல்லது அறிவிப்புகளாக எழுதாதற்கு வேறு காரணங்களும் உண்டு. அதாவது எழுதப்படும் மொழியை மாற்றினால், கருத்தும் மாறும் என்ற நம்பிக்கையில் உள்ளவன்நான். மொழிகளின் வித்தியாசம், கருத்து சிதைவை உண்டாக்கி விடும். ஒவ்வொரு மொழிக்கும் சில கட்டுப்பாடுகள் உண்டு. அது கருத்து மாற்றத்தை ஏற்படுத்தும்.

இதைச் சுலபமாகப் புரிந்து கொள்ள முடியாது. நான் பேசுவது ஒரு முறையில் ஒரு மொழியில் இருக்கும். அந்தத் தொடர்பு முழுமையான உயிரோட்டத்தில் விளங்கும். என்னைக் கேட்பவரும் உயிரோடு இயங்குகிறார். நானும் அப்படியே இயங்குகிறேன். நான் பேசும்பொழுது, என்னைக் கேட்பவர்கள், என்னை கேட்பது மாத்திரமல்ல, என்னைப் பார்க்கவும் செய்கிறார்கள். என்னுடைய முகமாற்றம், என் கண்களில் ஒளிரும் சிறு சிறு மாற்றங்கள், என் விரல்களின் ஏற்ற இறக்கங்கள் என்று அனைத்தும் உங்களால் பார்க்கப்படுகின்றன. நீங்கள் என்னை மாத்திரம் கேட்கவில்லை. என்னுடைய உதடு அசைவுகளையும் பார்க்கிறீர்கள். என்னுடைய வார்த்தைகள் மாத்திரம் பேசவில்லை. என்னுடைய உதடுகளும் பேசுகின்றன. என்னுடைய கண்களும் கூட ஏதோ அறிவுறுத்துகின்றன. என்னைக் கேட்பவர், இவைகள் அனைத்தையும் எடுத்துக் கொள்கிறார். நான் சொல்லும் கருத்துக்கள், கேட்பவர் மனத்தில் ஒரு மாதிரியாகவும் படிய வாய்ப்புண்டு. ஏனென்றால், மேற்சொல்லிய அனைத்தும், கேட்பவர் மனத்தில் வித்தியாசமான உணர்வை ஏற்படுத்தும்.

யாராவது ஒருவர் என்னுடைய புத்தகத்தைப் படிக்க நேர்ந்தால், நான் இருக்க வேண்டிய இடத்தில், அவர்கள் கருப்பு அச்சடித்த எழுத்துக்களையும், கருப்பு மையையும் தான் பார்ப்பார்கள்! நானும், அந்த கருப்பு மையும் ஒன்றாகிவிடுமா என்ன? அங்கு கொடுப்பது, எடுப்பது என்ற செயல்களுக்கு இடமே இல்லை. அந்த அச்சு எழுத்துகளில், எந்த நோக்குதல், அல்லது வெளிப்படுத்துதல் மாறுதல்

என்று எதுவும் நிகழாது. சுருக்கமாகச் சொன்னால், அதில் எந்த உயிரோட்டமும் இருக்காது. அது ஒரு இறந்த செய்திதான். நீங்கள் என்னுடைய புத்தகத்தைப் படிக்கும் பொழுது, நான் பேசிய பேச்சின் முக்கியமான பகுதியின் உயிர்த்தன்மை இழந்துதான் நிற்கும். படிப்பவரின் கையில், அந்த அறிக்கை வெறும் இறந்த செய்தியாகவே இருக்கும்.

ஒரு கேட்பவரை விட, ஒரு படிப்பவர் தன் ஆர்வத்தை சுலபமாக இழக்கிறார். ஒருவன் கேட்கும்பொழுது, அவன் செலுத்தும் ஆர்வம், அவன் அதைப் படிப்பதை விட மிக அதிகமாகவே இருக்கும். அவன் கேட்கும்பொழுது, தன் முழுகவனத்தையும் ஒருங்கே பேசுபவரிடம் செலுத்துகிறான். ஏனென்றால், அவர் இதற்கு முன்பு என்ன பேசினாரோ, அது ஒருக்காலும் திரும்பவும் சொல்லப்படாது. நீங்கள் அதில் ஒரு பகுதியைப் புரிந்துகொண்டவர்கள் என்றும் அடுத்தபகுதியை மறுபடியும் சொல்ல வேண்டும் என்றும் வற்புறுத்த முடியாது. அவைகள் சொன்னதுதான். அது முடிந்தது முடிந்ததுதான். நான் பேசும் ஒவ்வொரு கணமும், மற்றும் அப்படிப் பேசிய அனைத்தும் எல்லையற்ற பள்ளத்தாக்கில் விழுந்து மறைந்துவிடுகின்றன. நீங்கள் அதைப் பிடித்துக் கொள்வது, உங்களுடைய சாமர்த்தியத்தையும், ஆர்வத்தையும் பொருத்தது. இல்லாவிட்டால், அது பாட்டுக்கு சென்று விடும். அது ஒருபோதும் திரும்பி வராது.

ஆனால் ஒரு புத்தகத்தைப் படிக்கும்பொழுது, இதைப் போன்ற பயத்துக்கு வழியே இல்லை. ஏனென்றால், நீங்கள் ஒரே பக்கத்தை திரும்பத்திரும்பப் படிக்கலாம். ஆகவே, ஒரு புத்தகத்தைப் படிக்கும்பொழுது, நீங்கள் கவனமாக இருக்க வேண்டும் என்ற அவசியம் கிடையாது. ஆகவேதான், வார்த்தைகளை எழுதும் நாட்களில், அவ்வளவு கவனம் செலுத்தப் படுவதில்லை. பிற்பாடு திரும்பவும் படித்துக்கொள்ளலாம் என்ற அலட்சியம். அது அப்படித்தான் செயல்படும்.

ஒரு புத்தகத்தைப் படிக்கும்பொழுது, உங்களுக்கு அதில் ஏதாவது புரியாவிட்டால், நீங்கள் மீண்டும் அந்தப் பக்கத்தைப் புரட்டி,மறுபடியும் படிக்கலாம். ஆனால், நான் பேசுவதை கேட்கும் பொழுது, அதைப் போல மீண்டும் செய்ய முடியாது. நீங்கள்

தவறவிட்டது, தவறவிட்டதுதான். ஆகவேதான், நீங்கள் கேட்கும்பொழுது, உங்களுடைய முழு கவனத்தையும் அதிலேயே வைக்கிறீர்கள். அப்பொழுது உங்களுடைய பிரக்ஞைத்தன்மை, முழுமையாக செயல்படுகிறது. நீங்கள் ஒய்வாகப் படிக்கும்பொழுது, நீங்கள் ஏதாவது தவறவிட்டுவிட்டால், ஒன்றும் கெட்டுவிடாது. அதை மீண்டும் நீங்கள் படித்துத் தெரிந்து கொள்ளலாம். ஒரு புத்தகத்தின்மேல் வைக்கும் கவனமும், புரிந்துகொள்ளுதலும் குறைவுதான். அதைத் திரும்பவும் படித்தல் அதிகமாகிறது. (கவனம் குறையும் பொழுது, புரிந்து கொள்ளுதலும் குறைகிறது.)

ஆகவே, காரணம் ஏதும் இல்லாமல், புத்தர், மஹாவீரர் மற்றும் ஜீசஸ் எல்லோரும் தங்கள் கருத்தை வெளியிட மொழி என்ற சாதனத்தையே பயன்படுத்தினார்கள். அவைகளை அவர்கள் எழுதி வைத்திருக்கலாம். அவர்கள் நேரடியாகப் பேசுவதையே ஆதரித்தார்கள். அதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. ஒன்று, ஒரு கருத்தை வாய்மொழியாகச் சொல்லும்பொழுது, அவர்கள் நினைத்ததை பலமாதிரியாக விளக்கலாம். மேலும், அதிகமாக விவரிக்கலாம். அந்த வார்த்தைகளுக்கு ஏற்ப பலவற்றை சொல்லலாம். இவைகளையெல்லாம் எழுத்துமூலமாக விவரிக்கமுடியாது.

ஆகவேதான், இந்த நாட்களில் சினிமாப்படங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. அதே சமயம் எழுத்தில் இருக்கும் நாவல்கள் தன் முக்கியத்துவத்தை இழந்துவிட்டது. இது ஏனென்றால், படங்கள் வாழ்க்கையை உயிருள்ளதாக கண் முன் தோற்றம் அளிக்கிறது. நாவல்கள் யாருக்கு வேண்டும்? அது இறந்த நிகழ்ச்சிகளின் தொகுப்பு. ஒரு நாவல் ரொம்ப காலம் ஜீவித்திருக்கமுடியாது. ஆகவே சினிமாப் படங்கள் வரவர மிகவும் முக்கியத்துவம் பெறுகின்றன. ஆகவேதான் மெக்லூகான் (MCLUGAN) என்பவர் சினிமாவை 'சூடான சாதனம்' (HOT MEDIUM) என்று கூறினார். ஆகவே தொலைக்காட்சி மற்றும் சினிமா எல்லாம் உயிருள்ள சாதனம் அல்லது சூடான சாதனம் என்று அழைக்கலாம். அவைகளின் இரத்தத்தில் சூடு இருக்கிறது!

எழுதப்பட்ட வார்த்தைகளுக்கு, முக்கியத்துவம் கொடுக்கும் அளவுக்கு, நாம் எதையும் கண்டுபிடிக்கவில்லை. நான் பேசும்பொழுது, எகர்காவகு ரமக்கியக்குவம் கொடுக்கவேண்டு மென்றால், நான் சிறிச'

சப்தமாக அதைக் கூறுவேன். என் குரலில் சிறிது ஏற்றம், இறக்கத்தையும், கரகரப்பையும் உண்டு பண்ணுவேன். அப்படி அந்தக்கருத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பேன். ஆனால், ஒரு புத்தகத்தில் உள்ள வார்த்தைகளில் இவைகளையெல்லாம் எதிர்பார்க்க முடியாது. வார்த்தைகள் வெறும் இறந்த சருகுகள். அதை ஒரு 'குளிர்ந்த சாதனம்' (COLD MEDIUM) என்று வேண்டுமானால் அழைக்கலாம். அதில் எந்த இரத்த ஓட்டமும் கிடையாது. தொலைக்காட்சி வந்தபிறகு, உங்களது டெலிபோனும் முக்கியத்துவம் இழந்துவிட்டது. அதைப்போல ரேடியோ இப்போதைக்கு தொலைக்காட்சி மற்றும் சினிமாப்படம்தான் உயிருள்ள சாதனமாக விளங்குகின்றன.

ஒரு புத்தகத்தில், காதல் என்று இருந்தால், அது வெறும் 'காதல்' தான். அதை எழுதியிருப்பவர் காதல் செய்தவராக இருக்கலாம் அல்லது காதல் செய்யாமலே எழுதியிருக்கலாம் அல்லது அவர் காதலில் வாழ்பவராக இருக்கலாம் அல்லது காதல் என்றால் என்னவென்றே தெரியாதவராகக் கூட இருக்கலாம். அதில் எந்தத் துடிப்பும், ஆர்வமும், உயிரோட்டமும் இருக்காது. அது வெறும் இறப்பிற்குச் சமம்தான். 'பிரார்த்தனை' என்ற வார்த்தையை ஜீசஸ் சொல்லும்பொழுது, அதனுடைய உண்மையான அர்த்தம், ஒருவர் அதற்கு ஒரு புத்தகத்தின் மூலமாக விளக்கம் அளிப்பதற்கு முற்றிலும் மாறானது. ஜீசஸின் முழு வாழ்க்கையுமே, ஆரம்பத்திலிருந்து, முடிவுவரை பிரார்த்தனை மயம்தான். ஆகவே, ஜீசஸ் பிரார்த்தனை என்ற வார்த்தையின் மூலம் என்ன விளக்க முயன்றாரோ அதன் உண்மையான அர்த்தம் ஒரு அகராதியில் உள்ள விளக்கத்துக்கு முற்றிலும் மாறானது.

ஒருவர் பேசும்பொழுது, அது உடனே ஒரு மாற்றத்தை ஏற்படுத்திக்கொண்டு, அதைக் கேட்பவரிடம் போய்ச் சேருகிறது. அப்படி பேசுபவரின் இதயத்துடிப்பு, கேட்பவரிடத்தும் சென்று அடைகிறது. கதவுகள் திறக்கப்படுகின்றன. கேட்பவரின் தடங்கல்கள் அல்லது கேடயங்கள் தானாகவே வழிவிடுகின்றன.

நீங்கள் கவனமாகக் கேட்கும்பொழுது, அந்த முழுமையான கவனத்தில், உங்களுடைய எண்ணங்கள் நிற்கின்றன. அப்படி கேட்கும்பொழுது, நீங்கள் மிகவும் கவனமாக இருந்தால், அந்த அளவுக்கு உங்களுடைய எண்ணங்கள் குறைகிறது. உங்கள் கதவுகள்

திறந்தே இருக்கின்றன. அப்பொழுது நீங்கள் பிறரிடமிருந்து மிகவும் அதிகமாக வாங்கும் தன்மையில் இருக்கிறீர்கள். அப்பொழுது, எந்தவித தடங்கலும் இல்லாமல், ஏதோ ஒன்று உங்கள் இதயத்தில் நேரடியாக ஊடுருவுகிறது. அந்த நிலையில் நீங்களும், அந்த பேசுபவரும் ஒருவரை ஒருவர் மிகவும் நெருங்கி அறிந்து கொள்கிறீர்கள். உங்களுடைய இதயத்தின் ஆழத்தில், ஒருமித்த உறவு ஏற்படுத்தப்படுகிறது. இருந்தும் அது கேட்பவரின் உள்ளத்தில் மிக ஆழமாக எதிரொலிக்கிறது.

இப்படிப்பட்ட ஆழ்ந்த உறவு, ஒரு புத்தகத்தைப் படிக்கும் பொழுது ஏற்படாது. ஏனெனில் அங்கு அதை எழுதியவர் இல்லை. நீங்கள் படிக்கும்பொழுது நீங்கள் உடனே அதைப் புரிந்துகொள்ளமுடியாவிட்டால், நீங்கள் ஏதாவது முயற்சிசெய்து அதைப் புரிந்து கொள்ள முயலுவீர்கள். ஆனால், அதைக் கேட்கும்பொழுது எந்தவித முயற்சியும் இல்லாமல், அதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள்.

என்னுடைய பேச்சை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட புத்தகத்தை நீங்கள் படிக்கும்பொழுது, நீங்கள் என்னை நேரடியாக அறிந்திருப்பதால், நீங்கள் படிப்பதையே மறந்து விடுவீர்கள். ஒரு சில கணங்கள் கழித்து, நீங்கள் படிக்கவில்லை என்றும், நீங்கள் என்னை கேட்கிறீர்கள் என்ற உணர்வு உங்களிடம் ஏற்படும். ஆனால் என்னுடைய வார்த்தைகளில் சிறிது மாற்றம் ஏற்பட்டாலும் அல்லது நான் பேசும் முறையை சிறிது மாற்றினாலும், அதனுடைய உயிர்த்துடிப்பு அல்லது உயிரோட்டம் உடைந்து விடும் அல்லது தடுக்கப்பட்டு விடும். என்னை ஏற்கனவே கேட்டவர்கள், என் புத்தகத்தைப் படிக்கும்பொழுது, என்னைக் கேட்பது போன்ற உணர்வை அடைவார்கள். ஆனால், அதிலும் வேற்றுமை உண்டு. ஏனெனில், இங்கு சொல்லப்படும் முறையில் மாற்றம் ஏற்படுகிறது. அதாவது நான் நேரடியாக சொல்வதில் உள்ள உயிரோட்டம், அதைப்படிப்பதில் அவ்வளவாக இருக்காது.

இதில் உள்ள சங்கடம் என்னவென்றால், நான் என்ன சொல்ல முயலுகிறேனோ, அவைகள் நான் சொல்லும் முறைக்கு ஏற்றவாறு மாறுபடும். உதாரணமாக, நான் சொல்வதை ஒரு கவிதையாக வடித்தால், அது ஒரு நெறிமுறைக்கு உட்பட்டுதான் என்விளக்கம் அமையவேண்டியிருக்கும். அதற்காக நான் சில வார்த்தைகளைப் பொறுக்கவேண்டும் அல்லது தேர்ந்து எடுக்கவேண்டும். அந்த

வார்த்தைகளை முறைப்படுத்தவேண்டும். அப்பொழுது என்னுடைய சில கருத்துகளை மறுக்கவேண்டும், சிலவற்றை மட்டும் தேர்ந்து எடுக்கவேண்டும். சிலவற்றை வெட்டி ஒழுங்குபடுத்தவேண்டும். ஆனால், அதே கருத்தை உரைநடையில் எழுதும்பொழுது, அதனுடைய விளக்கம் முற்றிலும் மாறுபடுகிறது.

ஆகவேதான், இந்த உலகத்தில் உள்ள சிறந்த புத்தகங்கள் எல்லாம், பாடலாகவே உள்ளன. ஏனென்றால், அவைகளில் சொல்லப்பட்ட விஷயங்கள் எல்லாம் தர்க்கத்துக்கு அப்பாற்பட்டது. ஆகவே அவைகளை உரையில் சொல்வது என்பது சாத்யம் இல்லை. உரைநடை மிகவும் தர்க்கம் சம்மந்தமானது. ஆனால் கவிதைகள் தர்க்கத்துக்கு அப்பாற்பட்டது. கவிதைகளில் தர்க்கமற்றதன்மை அங்கீகரிக்கப்படுகிறது, மறக்கப்படுகிறது. ஆனால் உரைநடையில் அப்படியில்லை.

ஆழமான அர்த்தம் நிரம்பிய கவிதை எப்பொழுதுமே தர்க்கத்துக்கு உட்படாமலே இருக்கும். அதைப்போல ஆழமான உரைநடை எப்பொழுதுமே தர்க்கத்துக்கு உட்பட்டுதான் இருக்கும். நீங்கள் உபநிஷத்தையோ அல்லது கீதையையோ உரைநடையில் எழுதமுயற்சித்தால், அவைகளில் எது உயிரோட்டமுள்ளதாக இருந்ததோ, அது இப்பொழுது இழக்கப்பட்டிருக்கும். ஏனெனில், இப்பொழுது சொல்லும் முறை மாற்றப்பட்டிருக்கிறது. அந்த கவிதைகளில் உள்ள அழகு இப்பொழுது அபத்தமாகவும், அறிவுக்கு உட்படாததாகவும் காணப்படும். அவைகள் இயல்பாக கவிதையில் தர்க்கத்து அப்பாற்பட்டு விளங்குகிறது. ஆனால், இப்பொழுது உரைநடையில், அதை தர்க்கத்துக்கு உட்பட்டு விளக்க வேண்டியுள்ளது.

உபநிஷத்தையும், கீதையையும், கவிதை வடிவத்தில்தான் சொன்னார்கள் அல்லது ஓதினார்கள். ஆனால் புத்தாவும், மஹாவீராவும் எதையும் கவிதை வடிவத்தில் சொன்னதில்லை. இதற்கு காரணம் உண்டு. உபநிஷத்தையும், கீதையையும் பாடியபிறகு, இந்த உலகத்தில் மாற்றம் ஏற்பட்டு, வார்த்தைகளிலும் மாற்றம் உண்டாயிற்று. அவைகளை எழுதிய காலத்தில், இந்த உலகம் கவித்தன்மை நிரம்பியதாக இருந்தது. மக்கள் மிகவும் எளிமையாகவும், மிகவும் நேர்மையாகவும் இருந்தார்கள். அப்பொழுது தர்க்கத்துக்கு வேலையே இல்லை.

அவர்களிடம், நீங்கள் 'கடவுள் இருக்கிறார்' என்று சொன்னால், அதை அவர்கள் அப்படியே ஆமாம் என்று ஏற்றுக் கொள்வார்கள். அவர்கள் சுற்றும் முற்றும் பார்த்து ''கடவுள் எப்படியிருப்பார்? கடவுள் எங்கே இருக்கிறார்?'' என்று கேட்க மாட்டார்கள்.

நீங்கள் குழந்தைகள் செய்வதைக் கவனித்தால், அந்தக் காலத்தில் உள்ள மக்கள் எப்படியிருப்பார்கள் என்பதை உங்களால் சற்று யூகிக்க முடியும். ஒரு குழந்தை மிகவும் கஷ்டமான கேள்வியைக் கேட்கலாம். ஆனால் நீங்கள் அதற்கு அளிக்கும் எளிமையான பதிலைக் கொண்டு திருப்தி அடைந்துவிடும். ஒரு குழந்தை உங்களிடம், தன்னுடைய சகோதரியும், சகோதரனும் எப்படி வந்தார்கள் என்று கேட்கக் கூடும். நீங்கள் அதற்கு, அவர்களை ஒரு நாரை கொண்டு வந்து நம்வீட்டில் போட்டது என்று சொன்னால், அவைகள் திருப்தி அடைந்துவிடும்! பிறகு அவர்கள் இயல்பாக விளையாடச் சென்று விடுவார்கள். அவர்கள் கேட்ட கேள்வி மிகவும் அடிப்படையானது. அதற்கு நீங்கள் அளித்த பதில் அபத்தமானதுதான். ஆனாலும், அவைகள் அந்தப்பதிலை மிகச் சாதாரணமாக எடுத்துக்கொண்டு, விளையாடச்சென்று விட்டன. அந்த எளிமையான பதிலில் அவைகள் திருப்தி அடைந்துவிட்டன. உங்கள் பதில் எவ்வளவு கவித்தன்மை நிரம்பியதாக அல்லது கற்பனை மிகுந்ததாக இருக்கின்றனவோ, அந்த அளவுக்கு அவர்கள் சந்தோஷமடைந்து திருப்தியடைகிறார்கள். ஆகவே தான், சிறிய குழந்தைகளின் புத்தகங்களில் எளிய கவிதைகள் காணப்படுகின்றன. ஒரு குழந்தையின் இதயத்தை, ஒரு கவிதை சுலபமாக சென்று அடைந்து விடுகிறது. அதில் தாளமும், இசையும் சேர்ந்து இருப்பதால், அவர் களுடைய மனத்தை அது சீக்கிரம் ஆக்ரமிக்கிறது. ஒரு குழந்தை பாடலின் கானத்திலும், இசையிலும் கற்பனையாக வாழ்கின்றது.

புத்தரும், மஹாவீரரும் உரைநடையைத்தான் பயன்படுத்து கிறார்கள். ஏனெனில் அவர்களது காலகட்டத்தில், மக்கள் நிறைய தர்க்கத்தில் பரிச்சயம் உடையவர்களாக இருந்தார்கள் மற்றும் எதையும் தர்க்கரீதியாக சிந்திக்க ஆரம்பித்துவிட்டார்கள். அறிவுப்பூர்வமான கேள்விகளைக்கேட்க ஆரம்பித்து விட்டார்கள். அதற்கு மிக நீண்ட பதில்களை அளித்து விளக்கினாலும், அவர்கள் அதனால் சுலபமாக திருப்தியடைந்து விடுவது இல்லை. பிறகு மேற்கொண்டு 25

கேள்விகளைக் கேட்க ஆரம்பித்துவிடுவார்கள்! ஆகவேதான், புத்தாவும், மஹாவீராவும் உரைநடையில் விளக்கினார்கள்.

இப்பொழுது ஒருக்காலும் கவிதையில் பதில் அளிக்கமுடியாது. இப்பொழுது கவிதைகளை ஒரு மகிழ்ச்சிக்காக எழுதுகிறார்கள். ஒரு காலத்தில் எல்லா அடிப்படையான, சிந்திக்கக்கூடிய ஆழமான விஷயங்களும், கவிதை வடிவில் தான் சொல்லப்பட்டன. ஆனால், இப்பொழுது அப்படிப்பட்ட விஷயங்களை கவிதையில் கொடுக்க முடியாது. இப்பொழுது ஓய்வாக இருக்கும், கவித்தன்மையுள்ளவர்கள், உங்களை மகிழ்விக்க, கவிதைகளை எழுதிவருகிறார்கள். ஆனால் முக்கியமான விஷயங்கள் உரைநடையில்தான் சொல்லப்படுகின்றன. மனிதன் இன்னும் குழந்தையாகவே இல்லை! அவன் இப்பொழுது வளர்ந்துவிட்டான்! அவன் எல்லா விஷயங்களையும் தர்க்க ரீதியாக எண்ண ஆரம்பித்துவிட்டான். உரைநடையில்தான் தர்க்கத்தைக் கையாள முடியும்.

சொல்லும் முறையினால், கருத்து மாறுபாடு ஏற்படும். நான்நினைப்பது என்னவென்றால், தொடர்பு சாதனங்கள் நவீனமாகும்பொழுது, எடுத்துச் சொல்லுகின்ற முறையிலும் மேலும் மேலும் மாற்றம் அடையத்தான் செய்யும். சில காலத்துக்கு முன்பு, அச்சடித்த எழுத்துக்கள் முக்கிய பங்கு வகித்தன. இப்பொழுது தொழில் நுட்பம் முன்னேற முன்னேற, முற்காலத்தில் நேரடியாக சொன்னது போல, இப்பொழுது தொலைக்காட்சி மற்றும் சினிமா மூலமாக நேரடியாக மக்களைப் பார்த்து விளக்க முடியும். அந்தவகையில், நம்முடைய விளக்கங்கள் உயிரோட்டமுள்ளவைகளாகவே இருக்கின்றன.

வருங்காலத்தில், யாரும் புத்தகத்தைக் கூட படிக்கமாட்டார்கள். தொலைக்காட்சியின் மூலம், நான் ஒரே நேரத்தில் இந்த முழு உலகத்தோடும் பேச முடியும். என்னுடைய பேச்சுக்கள் நேரடியாக மக்களைப் போய்ச்சேரும். ஆகவே, வருங்காலத்தில், புத்தகத்திற்கு மதிப்பு இருக்காது. இப்பொழுதே அது மதிப்பிழந்து வருகிறது. எல்லோரும் பார்ப்பதையும், கேட்பதையுமே விரும்புகிறார்கள். இவைகள் மேலும்மேலும் விரிவடையும். புத்தகங்கள் பார்க்கும் சாதனமாக மாற வேண்டிவரும். இப்பொழுது சிறிய ஒளி நாடாக்கள்

(MICRO FILMS) மற்றும் பிலிம்கள் (FILMS) வந்துவிட்டன. ஆகவே ஒரு புத்தகத்தை அப்படியே திரையில் பார்த்துப் படிக்கலாம். ஆகவே, விரைவில் வார்த்தைகள் படங்களாக மாறிவிடும்.

இயலாமையின் காரணமாகவே, எழுத்துவடிவம் ஏற்பட்டது என்று நான் கருதுகிறேன். அதைத்தவிர அப்பொழுது வேறு வழியில்லை. ஆனால் இப்பொழுது ஏதாவது முக்கிய விஷயத்தை வெளிப்படுத்தவிரும்பினால், பேச்சைத்தான் உபயோகிக்கிறார்கள். என்னைப்பொருத்தவரையில், நான் யாருக்காக எழுதவேண்டும் என்று புரியவில்லை. அதைப்போல, என் முன்னால் யாரும் இல்லாத பொழுது, நான் எதையும் பேச விரும்புவதும் இல்லை. நான் யாருக்காகப் பேசவேண்டும்? அப்படியாரும் இல்லாதபொழுது, நான் பேசுவதால், கிடைக்கும் இன்பம் எனக்கு ஏற்படுவது இல்லை.

ஒரு எழுத்தாளனுக்கும், ஒரு ஞானமடைந்தவனுக்கும் உள்ள வித்தியாசம் இதுதான். ஒரு எழுத்தாளன், தன் மனத்தில் உள்ளதை அப்படியே வெளிப்படுத்துவதில் ஆர்வம் காட்டுகிறான். அதை அவனால் சரியாக செய்யமுடிந்தால், அவன் மகிழ்ச்சியடைகிறான். அவன் அதை எழுதிமுடித்த பிறகு, ஒரு பெரிய சுமை அவனை விட்டு நீங்கியது போல உணருகிறான்.

என்னைப் பொறுத்தவரையில், இதைப் போன்ற சுமைகள் எதுவும் கிடையாது. நான் உங்களோடு பேசும்பொழுது, நான், என்னிடம் உள்ளதை உங்களிடம் சொன்னதற்காக, எந்த மகிழ்ச்சியையும் அடைவது இல்லை. அதனால், எந்தச் சுமையும் குறைந்ததாக உணர்வதேஇல்லை. நான் சொல்வது, ஒருவகையில், என் எண்ணத்தை குறைவாக வெளியிடுவதுதான். ஆனால், அது உங்கள் கேள்விக்கு, அதிகமான பதிலைத்தருவதாக அமையும்.

நான் உங்களுக்கு ஏதாவது சொல்லவேண்டும் என்ற உணர்வு எனக்கு ஏற்படுவதில்லை. நீங்கள் ஏதாவது அறிய விரும்பினால் மாத்திரமே, நான் அதைப்பற்றி ஏதாவது சொல்லவேண்டும் என்ற உந்துதல் என்னிடம் ஏற்படுகிறது. என்னுடைய மனம் எப்படியிருக்கிறது என்றால், நீங்கள் என்னுடைய கிணற்றுக்குள், ஒரு வாளியை விட்டால், அதில் ஏதாவது தட்டுப்படும்! நீங்கள் கேள்விகேட்டாலொழிய, நான்

பேசுவதற்கு மிகவும் சங்கடப்படுகிறேன். வருங்காலத்தில், நான் பேசுவது மிகவும் குறைவாகிவிடும். ஆகவே நான் அதற்காக உங்களிடம் மன்னிப்புக்கோரவேண்டும்.

நான் கீதையைப்பற்றி ப் பேசுவதற்கு, எனக்கு மன்னிப்பு தேவைப்படும். அந்த மன்னிப்பை நீங்கள் உண்டாக்கினால், பிறகு நான் பேசக்கூடும். சுவற்றில் ஆணியோ அல்லது சட்டமோ இல்லாதபொழுது, நான் எதில், எதற்காக என் சட்டையை மாட்டவேண்டும்? நான் எந்தப் பிரச்சினையையும் பிடித்துக்கொண்டு தொங்கவிரும்பவில்லை. நான் வெறுமனே அமைதியாக- ஒன்றும் அற்றதன்மையில் இருந்துவிடுவேன். நீங்களும் இந்த அறையைக் காலி செய்துவிட்டு, உங்களையும் காலிசெய்து கொள்ளுங்கள்!

யாராவது ஒருவர் பேசவிரும்பினால், பேசத்தேவைப்பட்டால், நீங்கள் அந்த அறையில் இல்லாவிட்டாலும், அவர் பேசத்தயாராகி விடுகிறார். அங்கே எதுவுமே இல்லாவிட்டாலும்கூட, அவருடைய மனம் பேசத்தயாராகி விடுகிறது. தேவையான விஷயங்கள் அனைத்தும் சேர்ந்தபிறகு, அவர் பேசத் தயாராகி விடுகிறார்.

ஆனால் என்னைப் பொருத்தவரையில், இது உண்மையில்லை. நான் முழுமையாக ஒன்றும் அற்ற நிலையில் தான் இருக்கிறேன். நீங்கள் கேள்விகள் கேட்டு, என்னைப் பேசத்தூண்டினால் மட்டுமே, நான் பேச ஆரம்பிப்பேன். ஆகவேதான், என்னால் எழுதுவது என்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. யார் ஒருவரிடம் மனம் நிறைந்து விஷய ஞானம் உள்ளதோ, அவரால் மட்டுமே எழுதமுடியும்.

*''நீங்கள் ஏன் உங்கள் சுயசரிதத்தை எழுதக்கூடாது?''*

இது நீங்கள் கேட்கவேண்டிய கேள்விதான். அதாவது நான் ஏன், என் சுயசரிதத்தை எழுதக்கூடாது என்று. இதுமிகவும் உற்சாகத்தைக் கொடுக்கக் கூடியதுதான். ஆனால் உண்மையாகப் பேசினால், யார் ஒருவன் தன்னை அறிந்துகொண்டானோ, அவனால் தன் சுயசரிதத்தை எழுதமுடியாது. எல்லா சுயசரிதைகளும், அகங்காரத்தைத்தான் அடிப்படையாகக் கொண்டது. நம்மால் சுயசரிதை என்று அழைக்கப் படுவது, ஒருவனது ஆத்மாவின் சரிதையாகாது. உங்களுடைய ஆத்மா என்ன என்பது உங்களுக்கே புரியாத போது, நீங்கள் என்ன

எழுதினாலும், அது உங்களுடைய அகங்காரச் சரிதைதான் என்பதை நீங்கள் புரிந்துகொள்ளவேண்டும்.

இங்கே நீங்கள் ஒன்றைப் புரிந்துகொள்ளவேண்டும். ஜீசஸோ அல்லது கிருஷ்ணாவோ அல்லது புத்தாவோ தன் சுயசரிதையை எழுதியது கிடையாது. அவர்கள் அதைப்பற்றி பிறரிடம் சொன்னதும் கிடையாது. தான் யார் என்று அறிந்தவர்களுக்கு தங்களைப்பற்றி எழுதுவதோ அல்லது பேசுவதோ முடியாதகாரியம். ஏனென்றால் அதற்குப்பிறகு, அவன் உருவமற்ற உணர்வைப் பெறுகிறான். பிறகு அவன்தன்னைப் பற்றி சொல்லும் உண்மைகள்- அதாவது தான் பிறந்த தேதி மற்றும் சில முக்கிய நிகழ்ச்சிகள் நடந்த நாள் போன்றவைகள் அனைத்தும் மறைந்துவிடும். பிறகு என்ன நடக்கும் என்றால், இந்த உண்மைகள் எல்லாம் தன் நிலையை இழந்துவிடும். அதாவது அவைகள் தன் முக்கியத்துவத்தை இழந்துவிடும். அவைகள் அனைத்தும் அர்த்தமற்றதாகி விடுகிறது. உங்கள் ஆன்மா விழிப்பு நிலையை அடையும்பொழுது, அது ஒரு பிரளயவெள்ளம்போல் உங்களை மூழ்கடித்து, பிறகு நீங்கள் உங்கள் கண்களைத் திறக்கும்பொழுது, எல்லாமே மறைந்து சென்றிருக்கும். எதுவுமே பாக்கி இருக்காது. என்ன நடந்தது என்று சொல்வதற்கு உங்களிடம் யாருமே இருக்கமாட்டார்கள்!

ஒருவர் தன் ஆன்மாவை அறிந்தபிறகு, சுயசரிதை என்பது ஏதோ கனவில் நடந்ததைச் சொல்வது போல்தான் ஆகும். அந்தக் கனவு, மூன்றாவது நாள் வேறு ஒரு கனவு என்று மாறிக்கொண்டே இருக்கும். இந்த மாதிரியான சுயசரிதை ஒரு கற்பனைமிக்க மாயாஜாலக்கதை போல்தான் இருக்கும்.

ஆகவேதான் ,ஒரு விழிப்படைந்த மனிதர், தன் சுயசரிதையை எழுதுவது மிகவும் கடினம். விழிப்புநிலையை அடைந்த பிறகு அல்லது ஞான நிலையை அடைந்தபிறகு, எதுவுமே எழுதுவதற்கு தகுதியில்லாதது போலத் தோன்றும். எல்லாமே கனவுபோல் தோற்றமளிக்கும். விழிப்படைவதற்கு உண்டான அனுபவம் மாத்திரம்தான் எஞ்சி நிற்கும். ஆனால், அந்த அனுபவத்தை எழுத்தில் வடிக்க முடியாது. அது உணர்வு மய்மானது. அப்படியே முயற்சி செய்து அதை எழுதினால், அது மிகவும் முட்டாள்தனமான செய்கையாகும்.

இருந்தாலும், இந்த அனுபவத்தை பல வழிகளில், பல முறைகளில் எடுத்துச்சொல்ல பலர் முயன்றிருக்கிறார்கள்.

எனக்கு என்ன நிகழ்ந்தது என்று நான் என் முழுவாழ்க்கையிலும் சொல்லிக்கொண்டே இருப்பேன். இதைத் தவிர, நான் வேறு எதையும் சொல்லமாட்டேன். ஆனால், இதையும் என்னால் எழுதமுடியாது. அதை எழுதிமுடித்தபிறகு, இதைப்பற்றி சொல்லியிருக்க வேண்டாமே என்ற உணர்வுதான் மேலிடும். எழுதக்கூடிய அளவுக்கு என்ன இருக்கிறது? ஒருவர், ''நான் ஆன்மாவின் அனுபவத்தை அடைந்தேன். அது நிறைந்த அமைதியும், ஆனந்தமும் உடையது''என்று எழுதலாம். ஆனால், இது முட்டாள்தனமாகப்படவில்லையா? எல்லாம் வார்த்தை குவியல்கள்! இதனால் நீங்கள் அடையும் பயன் என்ன?

புத்தர், மஹாவீரா மற்றும் ஜீசஸ், தாங்கள் அறிந்ததை, பல வழிகளில் தங்கள் வாழ்நாள் முழுவதும் சொல்லிக் கொண்டே இருந்தார்கள். அவர்கள் ஒருக்காலும் களைப்படையவே இல்லை. அவர்கள், தாங்கள் சொல்வதற்கு இன்னும் பாக்கியிருக்கிறது என்றே உணர்ந்தார்கள். ஆகவே, அவர்கள் தொடர்ந்து பல முறைகளில் பேசிக்கொண்டே இருந்தார்கள். அது முடியவே இல்லை. புத்தர் மற்றும் மஹாவீரா தாங்கள் பேசியதை வேண்டுமானால், நிறுத்தியிருக்கலாம். ஆனால், அவர்கள் சொல்ல வந்தது முற்றுப் பெறாமலேதான் இருக்கிறது.

இதில் உள்ள பிரச்சினை இரண்டுவிதமானது. அதாவது எவைகளெல்லாம் சொல்லப்பட்டவையோ, அவைகளெல்லாம் கனவுபோல இருக்கும். எவைகளெல்லாம் சொல்லப்படவில்லையோ, அவைகள்தான் முக்கியமாக சொல்ல வேண்டியதாகத் திகழும். எனக்கு என்ன நேர்ந்தது என்று உங்களிடம் சொன்னால், அதனால் உங்களுக்கு என்ன பிரயோஜனம்? என்னுடைய கொள்கை அல்லது செயல் என்னவென்றால், அந்த அனுபவத்தை அடையும் வழியில் உங்களை அழைத்துச் செல்வதுதான். அப்பொழுதுதான், எனக்கு உண்மையாக என்ன நேர்ந்தது என்று உங்களால் புரிந்து கொள்ள முடியும். அதற்கு முன்னால், உங்களால் அதைப்புரிந்து கொள்ள முடியாது. ஆகவே, எனக்கு என்ன நேர்ந்தது என்று நான் சொன்னால், அதனால் எந்தப் பயனும் விளையாது. உங்களை இப்படி என்மேல் சந்தேகப்படும்படி செய்யப்படுவதில், யாருக்கு என்ன பயன்? அது உங்களிடம் தீங்கையும்

விளைவிக்கலாம். ஆகவே, இதில் சரியான வழி எதுவென்றால், உங்களை அந்த வழியில் அழைத்துச் செல்வதுதான். அப்பொழுது அந்தக்கரையிலிருந்து, நீங்கள் தள்ளப்பட்டால்,ஒரு நாள் நீங்கள் அந்த அனுபவத்தை அடைய நேரிடலாம். அந்த நாளில்தான்,உங்களுக்கு முழு நம்பிக்கை ஏற்படும். அது எப்படி நிகழ்ந்தது என்று உண்மையாக அறிந்துகொள்வீர்கள். இதைத்தவிர, வேறுவழிகளில் இதில் முழு நம்பிக்கை ஏற்படாது.

புத்தர் இறக்கும் பொழுது, மக்கள் அவரிடம், ''இறப்புக்குப்பிறகு நீங்கள் எங்கு செல்வீர்கள்?'' என்று கேட்டார்கள். அதற்கு புத்தர், ''நான் எங்கேயும் செல்லமாட்டேன். நான் வேறு எங்கு செல்லமுடியும்? நான் எங்கேயும் சென்றதில்லை. எனக்கு இந்த இடத்தைத் தவிர வேறு எதுவும் தெரியாது'' என்றார். இதற்குப் பிறகும், மக்கள் அவரிடம் மீண்டும், அவர் இறப்புக்குப் பிறகு எங்கே செல்வார் என்று கேட்டார்கள். ஆனால், அவர் ஏற்கனவே உண்மையை சொல்லிவிட்டார். புத்தாவின் கொள்கைகளின் அடிப்படை என்னவென்றால் ''எங்கும் அற்றது'', ''எதுவுமில்லாதது'' என்பதுதான். ஆகவே, அந்த நிலையில் அவர் எங்கேயும் இருக்கமாட்டார். ஆகவே, ஒருவர் இறப்புக்குப் பிறகு இங்கேதான் இருப்பார் என்ற கேள்விக்கே இங்கு இடமில்லை.

நீங்கள் அமைதியாகவும், சாந்தமாகவும் இருந்தால், நீங்கள் மூச்சு விடுவதைத்தவிர, வேறுசெயல் உங்களிடம் என்ன இருக்க முடியும்? அப்பொழுது மூச்சு மட்டும்தான் இருக்கும். வேறுஎதுவும் இருக்காது. ஒரு சோப்பு குமிழில்(BUBBLE)எப்படி காற்று அதனுள்ளே இருக்கிறதோ, அதைப்போல மூச்சு உங்களிடம் இருக்கிறது. நீங்கள் ஒரு சிலநேரம், அமைதியாக இருந்தால், உங்களிடம் எந்த எண்ணமும் இல்லாமல் இருக்கும்பொழுது, மூச்சைத்தவிர வேறு எதுவும் உங்களிடம் நிகழாததை உங்களால் புரிந்துகொள்ளமுடியும். நீங்கள் மூச்சை உள்ளே இழுப்பதும் மற்றும் அதைவெளியே விடுவதும், ஒருசோப்பு குமிழில் அல்லது பலூனில் காற்று உள்ளே செல்வதற்கும், பிறகு வெளியே வருவதற்கும் ஒப்பாகும். ஆகவேதான் புத்தர், ''நான் ஒரு சோப்பு குமிழ்போல இருக்கிறேன். நான் இதற்குமுன் எங்கே இருந்தேன்? அந்தக் குமிழ் வெடித்தபிறகு, அது எங்கே சென்றது என்று நீங்கள் கேட்கிறீர்கள்?'' என்று விளக்கம் அளித்தார். புத்தரைப்போல, தான் ஒரு

இருந்தாலும், இந்த அனுபவத்தை பல வழிகளில், பல முறைகளில் எடுத்துச்சொல்ல பலர் முயன்றிருக்கிறார்கள்.

எனக்கு என்ன நிகழ்ந்தது என்று நான் என் முழுவாழ்க்கையிலும் சொல்லிக்கொண்டே இருப்பேன். இதைத் தவிர, நான் வேறு எதையும் சொல்லமாட்டேன். ஆனால், இதையும் என்னால் எழுதமுடியாது. அதை எழுதிமுடித்தபிறகு, இதைப்பற்றி சொல்லியிருக்க வேண்டாமே என்ற உணர்வுதான் மேலிடும். எழுதக்கூடிய அளவுக்கு என்ன இருக்கிறது? ஒருவர், ''நான் ஆன்மாவின் அனுபவத்தை அடைந்தேன். அது நிறைந்த அமைதியும், ஆனந்தமும் உடையது'' என்று எழுதலாம். ஆனால், இது முட்டாள்தனமாகப்படவில்லையா? எல்லாம் வார்த்தை குவியல்கள்! இதனால் நீங்கள் அடையும் பயன் என்ன?

புத்தர், மஹாவீரா மற்றும் ஜீசஸ், தாங்கள் அறிந்ததை, பல வழிகளில் தங்கள் வாழ்நாள் முழுவதும் சொல்லிக் கொண்டே இருந்தார்கள். அவர்கள் ஒருக்காலும் களைப்படையவே இல்லை. அவர்கள், தாங்கள் சொல்வதற்கு இன்னும் பாக்கியிருக்கிறது என்றே உணர்ந்தார்கள். ஆகவே, அவர்கள் தொடர்ந்து பல முறைகளில் பேசிக்கொண்டே இருந்தார்கள். அது முடியவே இல்லை. புத்தர் மற்றும் மஹாவீரா தாங்கள் பேசியதை வேண்டுமானால், நிறுத்தியிருக்கலாம். ஆனால், அவர்கள் சொல்ல வந்தது முற்றுப் பெறாமலேதான் இருக்கிறது.

இதில் உள்ள பிரச்சினை இரண்டுவிதமானது. அதாவது எவைகளெல்லாம் சொல்லப்பட்டவையோ, அவைகளெல்லாம் கனவுபோல இருக்கும். எவைகளெல்லாம் சொல்லப்படவில்லையோ, அவைகள்தான் முக்கியமாக சொல்ல வேண்டியதாகத் திகழும். எனக்கு என்ன நேர்ந்தது என்று உங்களிடம் சொன்னால், அதனால் உங்களுக்கு என்ன பிரயோஜனம்?. என்னுடைய கொள்கை அல்லது செயல் என்னவென்றால், அந்த் அனுபவத்தை அடையும் வழியில் உங்களை அழைத்துச் செல்வதுதான். அப்பொழுதுதான், எனக்கு உண்மையாக என்ன நேர்ந்தது என்று உங்களால் புரிந்து கொள்ள முடியும். அதற்கு முன்னால், உங்களால் அதைப்புரிந்து கொள்ள முடியாது. ஆகவே, எனக்கு என்ன நேர்ந்தது என்று நான் சொன்னால், அதனால் எந்தப் பயனும் விளையாது. உங்களை இப்படி என்மேல் சந்தேகப்படும்படி செய்யப்படுவதில், யாருக்கு என்ன பயன்? அது உங்களிடம் தீங்கையும்

சோப்பு குமிழ்போல் இருப்பதாக ஒருவர் உணர்ந்தால், அவர் எப்படி தன் சுயசரிதையை எழுதமுடியும்? அல்லது தன்னுடைய அனுபவத்தை எப்படி பிறருக்குச் சொல்ல முடியும்? அவர் எதைச் சொன்னாலும், எப்படி சொன்னாலும், அதைத் தவறாகவே பிறர் அர்த்தம் பண்ணிக் கொள்வார்கள்.

ஜப்பானில், 'லின் சி' (LIN CHI) என்ற துறவி ஒருவர் இருந்தார். ஒரு நாள் லின் சி, அங்குள்ள புத்தர் சிலைகளையெல்லாம் அகற்றச் சொன்னனார். அவரைப் போன்று வேறுயாரையும் இதுவரை மக்கள் கண்டதில்லை. அதற்கு முன்புதான், அவர் அந்த சிலைகளை வழிபட்டார்! இப்பொழுது அவைகளை அவர் அகற்றச் சொன்னார். மக்களில் சிலர் எழுந்து நின்று அவரிடம், ''நீங்கள் சரியாகத்தான் சிந்திக்கிறீர்களா? நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்பது உங்களுக்கே புரிகிறதா?'' என்று சந்தேகத்துடன் கேட்டார்கள்.

லின் சி, ''என்னைப் பற்றி நான் நினைக்கும் அளவுக்கு, புத்தாவும் அப்படித்தான் நினைத்திருப்பார் என்று நம்புகிறேன். ஆனால், நான் அங்கு இல்லாத பொழுது அதாவது நான் ஒரு சோப்புக் குமிழியாக இருக்கும்பொழுது, புத்தாவைப் போன்ற ஒருவர் அங்கே இருக்க முடியாது என்று எண்ணுகிறேன்'' என்று பதில் அளித்தார்.

ஆனால் லின்சி அன்று மாலையே புத்தாவை வழிபட ஆரம்பித்தார். மக்கள் மறுபடியும் அவரிடம், நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்று கேட்டார்கள். அதற்கு அவர், ''புத்தருடைய ஒன்றும் அற்றத்தன்மையால், நான் என்னுடைய இருப்புநிலைக்கு தள்ளப் படுகிறேன். ஆகவேதான், அவருக்கு நான் நன்றி கூறுகிறேன். ஒரு சோப்பு குமிழ், இன்றைய சோப்பு குமிழ், இன்னொரு சோப்பு குமிழிக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறது. அவ்வளவு தான்'' என்றார். ஆனால், இந்த அறிக்கைகளை சரியான முறையில் புரிந்துகொள்ள முடியாது. அவர் தவறான முறையில் செல்கிறார் என்றுதான் மக்கள் நினைத்தார்கள். ஏனெனில், அவர் புத்தருக்கு மாறாக செயல்படுகிறார்.

சுயசரிதம் ஒருக்காலும் நிலைத்து நிற்காது. ஆழமாகச் சிந்தித்தால், ஆன்மா கூட நிலைத்து இருக்க முடியாது. இதுவரை, நாம் புரிந்துகொண்டது என்னவென்றால், அகங்காரம் மாத்திரம் தான் நிலைத்து நிற்காது என்று கருதி வந்தோம். இந்தக்கருத்து பல

ஆயிரக்கணக்கான வருடங்களாக நிலைத்து வந்திருக்கிறது. ஒருவர் தன்னை அறிந்த பிறகு, இந்த அகங்காரம் நிலைத்து நிற்காது என்றுதான் நாம் கற்பிக்கப்பட்டு வந்திருக்கிறோம். ஆனால், சரியாகச் சொல்வதானால், ஆன்மாவும் நிலைத்து நிற்காது.

இதை ஒருவர் புரிந்துகொள்ளும்பொழுது, அவர் பயத்தால் நிரப்பப் படுகிறார். ஆகவேதான், நம்மால் புத்தரைப் புரிந்து கொள்ள முடியவில்லை. புத்தர், ''ஆன்மா கூட நிலைத்து நிற்காது. நாம் ஆன்மாவற்று தான் இயங்குவோம்'' என்று சொல்கிறார். இந்த உலகத்தில் புத்தரைப் புரிந்து கொள்வது மிகவும் கஷ்டம்.

மஹாவீரா, அகங்காரத்தின் இறப்பைப்பற்றி பேசுகிறார். இதை எல்லோராலும் புரிந்து கொள்ள முடியும். இதனால், ஆன்மாவுக்கும் அழிவு உண்டு என்று மஹாவீரருக்கு தெரியாதது இல்லை. ஆனால், நம்முடைய குறுகிய புரிந்து கொள்ளுதலை அவர் புரிந்து வைத்திருந்தார். ஆகவேதான், அவர் அகங்காரத்தின் இறப்பைப்பற்றி பேசினார். அகங்காரம் மறைந்தால், ஆன்மாவும் தானே கரைந்துவிடும் என்பது அவருக்குத் தெரியும்.

முதன்முதலில் இதுவரை ரகசியமாகவே திகழ்ந்ததை, புத்தர் வெளிப்படுத்தினார். உபநிஷத்துக்கும் தெரியும், மஹாவீராவுக்கும் தெரியும். அதாவது முடிவில் ஆன்மாவும் அழிந்துவிடும் என்று. ஏனென்றால் அகங்காரத்தின் மறுபக்கம்தான் ஆன்மா. பலகாலமாகக் காப்பாற்றப்பட்ட இந்த ரகசியத்தை, புத்தர் வெளிப்படுத்திவிட்டார். இது பலவித சங்கடங்களைத் தோற்றுவித்தது. அகங்காரம் அழிவது பற்றி யாரும் கவலைப்படவில்லை. ஆனால், ஆன்மாவும் அழிந்து விடும் என்றால், ஆன்மிகத்தினால் என்ன பயன் என்று ஒவ்வொருவரும் எண்ண ஆரம்பித்துவிட்டார்களா. எல்லாமே பயனற்றது. நாம் எங்கே செல்கிறோம் என்று கேட்க ஆரம்பித்துவிட்டார்கள்.

ஆனால் புத்தா சொன்னது சரியே. இந்த நிலையில், ஒரு சுயசரிதம் எப்படி எழுது முடியும்? எல்லாமே கனவுகளின் தொகுப்புதான். ஒரு சோப்பு குமிழில் காணப்படும் வானவில்லின் நிறங்களைப்போல. அந்த குமிழி உடைந்து விட்டால், அந்த வர்ணங்களும் மறைந்துவிடும். இது ஒரு தெளிவான உண்மை.

***''ஒருவர் தன் அனுபவத்தையெல்லாம் தொகுத்து எழுதினால், அதனால் பிறருக்கு உபயோகமுண்டா?''***

கடவுள் தன்மையை தேடுபவர்க்கு வேண்டுமானால், அது உபயோகமாக இருக்கலாம். ஆனால், ஞானமடைந்தவருக்கு அதை எழுதுவது என்பது மிகக்கடினம். இந்த வகையில், ஒரு சித்தரின் அல்லது ஞானமடைந்தவரின் கஷ்டத்தைவிட ''சாதக்''(SADAK) அல்லது அதைத் தேடுபவரின் கஷ்டம் குறைவானதுதான். ஞானமடைந்தவருடைய கஷ்டம் எதனால் என்றால், இந்த அறையில் எந்த ஆவிகளும்(SPIRITS) கிடையாது என்று அவருக்குத் தெரியும். ஆனால் உங்களைப் பொறுத்தவரையில், அவைகள் உண்டு. அதைப் போல, ஒரு சித்தருக்கும் ஆவிகள் இல்லை என்பது தெரியும். ஆனால், அவர், ஒரு கட்டத்தில் பலமுறைகளைக் கையாண்டு, அதை அவர் அறிந்திருக்க நேரிடும். ஆனால் இப்பொழுது, அந்த முறைகளும், அந்த ஆவிகளும் பொய் என்பது அவருக்குத் தெரியும்.

இப்படி அறிந்த பிறகு, ஒரு முறைறைக் கையாண்டு அந்த ஆவிகள் விரட்டப்பட்டன என்று எப்படி அவரால் சொல்லமுடியும்? இது உங்களுக்குப் புரிகிறதா? ஒரு குருவின் சங்கடம் இதுதான். ஆவிகள் என்பது பொய் என்றும், அதை விரட்டக்கூடிய முறைகளும் பொய் என்பதும் அவருக்குத் தெரியும். அந்த முறைகள் இருட்டில் தவிப்பவனுக்கு, ஒரு சிறு உதவியாகவே இருக்கும். ஆவி என்பதும், அதை விரட்டும் முறைகளும் பொய் என்று இருக்கும்பொழுது, அந்த முறைகளை உபயோகித்து, ஆவியை விரட்டுவது என்பது மட்டும் எப்படி மெய்யாக இருக்க முடியும்? அப்படிச் சொல்வது இப்பொழுது அர்த்தமற்றதாகிவிடுகிறது. ஆனால், அப்படி அவர் சொன்னால், அது உங்களுக்கு வேண்டுமானால் உதவியாக இருக்கலாம்.

தன்னுடைய முறையின் சக்தியினால், தான் அதை விரட்டி விட்டேன் என்று ஒரு குரு சொல்ல மாட்டார். அதற்காக, அவர், ''சில முறைகளைக் கையாண்டு, அந்த ஆவிகளை மறையச் சொல்லாம் என்றும் அந்த சாதகர் இந்த இந்த முறைகளைக் கையாண்டால், அந்த ஆவி சென்றுவிடும்'' என்றும் கூறலாம். தன்னுடைய முறையினால் ஏற்பட்ட சக்தியைக் கொண்டு, அவைகளை விரட்டினேன் என்று ஒரு குரு

சொன்னால், அது பொய்யான அறிவிப்பு. இப்பொழுது அந்த முறையும், அந்த ஆவியும் பொய் என்பது அவருக்கு விளங்கும்.

ஆகவே, அந்த மனிதனது அறிக்கை பொதுவாக தன்னைப் பற்றியதாகவே இருக்காது. அவர் தன்னைப் பற்றி இப்படி எதையும் பேசமாட்டார். அவர் உங்களைப் பற்றியும், உங்களுடைய சூழ்நிலைக்கு ஏற்றவாறும்தான் பேசுவார். ஆகவே, அவர் பொய்யாக அறிக்கை வெளியிட்டால், அது உங்களுக்கு உதவுவதாகவே இருக்கும். ஆகவே, அது அவருடைய பிரச்சனை.

***''இந்த முழு 'சாதனா' (SADHANA) வும், அல்லது ஆன்மீக முயற்சியும், ஆவிகளைப் போல உண்மையல்ல என்று நீங்கள் கூறுகிறீர்களா?''***

ஆமாம். அப்படித்தான். ஏனென்றால், நீங்கள் முடிவாக அடைந்தது உங்கள் கூடவே இருக்கும். அடுத்து எதிலிருந்து விடுதலை அடைந்தீர்களோ, அது மீண்டும் உங்களைக்கட்டுப்படுத்தாது. ஆனால், ஒரு குருவைப் பொருத்த வரையில், இது அவருக்கு கொஞ்சம் கஷ்டத்தையே கொடுக்கும். ஆகவேதான், குருவும் பல சங்கடங்களில் இருக்கிறார் என்று நான் கூறுகிறேன். அவர் சகல சாதனா முயற்சிகளும் பொய் என்று சொன்னால், அவர் உங்களை சங்கடத்தில் ஆழ்த்துகிறார். ஏனென்றால், உங்களைப் பொறுத்தவரையில் அந்த முறை பொய்யாகிறது. அதே சமயம், அந்த ஆவி என்பது உண்மையாகிறது. ஒரு முறை பொய்யாக இருந்தாலும், அது அந்த ஆவி பற்றிய விஷயத்தைப் பொய்யாக்கினால், அந்த முறை அர்த்தமுடையதாகிறது. உங்களுக்குப் புரிகிறதா?

ஒரு ஆவியைப் பொய் என்று சொல்வதன் மூலம், அது பொய்யாகிவிடாது. ஒரு தவறை, சரி என்று சொல்வதன் மூலம் அது சரியாகிவிடாது. ஆனால், நாம் அதை உடனே ஏற்றுக் கொள்கிறோம். நீங்கள் எவ்வளவுதான் கோபத்தைத் தவறு என்று சொன்னாலும், அது தவறாகி விடாது.

அதே சமயம், யாராவது தியானம் தவறானது என்று சொன்னால், நீங்கள் உடனே அப்படி இருக்கலாம் என்று நம்பத்தொடங்கி விடுகிறீர்கள். அதைப் போல ஒருவரை சாது (SAINT) என்று சொன்னால், நீங்கள் அதை உடனே ஏற்றுக் கொள்ள மாட்டீர்கள். ஆனால், ஒருவரை

திருடன் என்று சொன்னால், நீங்கள் அதை உடனே ஏற்றுக் கொண்டு, உண்மை என்று நம்பி விடுகிறீர்கள.

நீங்கள் ஒருவரை சாது என்று ஏற்றுக் கொள்வதற்கு முன், அல்லது நம்புவதற்கு முன், நீங்கள் அவரை பலவழிகளில் சோதனை செய்ய விரும்புகிறீர்கள். அவர் உண்மையான சாதுதானா என்று உறுதிப்படுத்திக்கொள்ள விரும்புகிறீர்கள். நீங்கள் ஏன் அப்படி ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறீர்கள் என்றால், வேறு யாராவது உண்மையான சாது என்று இருந்தால், இவரை எப்படி நம்புவது என்ற தயக்கம் தான் காரணம். அப்பொழுது உங்களுடைய அறிவுப்பூர்வமான அகங்காரம் பாதிக்கப்படுகிறது. அவர் உங்களைவிட சிறந்த சாது இல்லை என்று நீங்கள் நிருபிக்க விரும்புகிறீர்கள். அதே சமயம், ஒருவரைக் காட்டி, அவர் திருடன் என்று கூறினால், நீங்கள் அதைப் பற்றி கவலைப்படுவது இல்லை. அவரை சோதனை செய்து பார்க்க விரும்புவது இல்லை. அதை நீங்கள் உடனே நம்பிவிடுகிறீர்கள். ஏனெனில், நீங்கள் மாத்திரம் திருடன் அல்ல, வேறு ஒருவரும் உங்களைப் போலவே மோசமாக இருக்கிறார் என்பதில் உங்களுக்கு ஒரு ஆறுதல்!

ஒருவரை மறுப்பது, கேவலப்படுத்துவது என்பது சுலபமாக ஏற்றுக் கொள்ளப்படும். ஆனால், அவரைப் புகழ்வது என்பதை சுலபமாக ஏற்றுக் கொள்ளமாட்டீர்கள். நீங்கள் ஒருவரை உண்மையிலேயே புகழுவதற்கு உரியவர் என்று கருதினாலும், அதை ஏற்றுக் கொள்வது என்பது சில நிபந்தனையின் அடிப்படையில்தான் இருக்கும். நீங்கள் அவரை இப்பொழுது ஏற்றுக்கொள்ளலாம். ஏனென்றால், வேறு வழியில்லை. ஆனால், உங்கள் கருத்தை மாற்றிக் கொள்ள, தகுந்த சந்தர்ப்பத்தைப் பார்த்துக் கொண்டிருப்பீர்கள். கண்டித்தல் என்பதுதான் முழுமையானது. உங்களிடம் ஏற்பட்ட கண்டிக்கும் சந்தர்ப்பை மாற்ற வேண்டிய சந்தர்ப்பம் உண்டானாலும், நீங்கள் அவ்வளவு சுலபத்தில் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அதை அலட்சியம் தான் செய்வீர்கள்.

இதைப் போல நிகழ்ச்சிகள், உங்கள் வாழ்க்கை முழுவதும் ஏற்படும். ஏதாவது தவறு என்று காணப்பட்டால், அதை நாம் உடனே நம்பிவிடுகிறோம் ஏனென்றால் நாம் சரியாக செயல்படுவதிலிருந்து, அது

காப்பாற்றுகிறது. ஒருவர் தொடர்ந்து சரியாக செயல்பட, தகுந்த மனவலிமை தேவை. கோபம் இயல்பாக, அப்போதைக்கு உடனே செயல்படுவது. ஆனால் அது தவறு என்று தெரிந்தும், அதை நாம் தொடர்ந்து செய்து வருகிறோம். ஆனால், தியானத்தை ஒருவர் எப்பொழுதும் செய்து வரவேண்டும். ஆனால் இது மிக மிக கஷ்டம். ஆனால், யாராவது தியானம் என்பது பொய் என்று கூறினால், நாம் விடுதலை உணர்வை அடைகிறோம் . ஏனெனில் அது நம்மை ஒரு கஷ்டமான காரியத்திலிருந்து காப்பாற்றுகிறது!

***''நீங்கள் தியானம் என்பது ஒரு செயல் இல்லை. அது ஒரு மாறுபட்ட செயலற்ற நிலை என்று கூறுகிறீர்கள். இதை நீங்கள் கொஞ்சம் விளக்க முடியுமா''***

ஒரு ஞானமடைந்தவருக்கு இது ஒரு சங்கடமான வேலை. ஏனென்றால், அவர் தன் அனுபவத்தை எல்லாம் உங்களுக்கு விளக்கினால், நீங்கள் அந்த ஆன்மீகப் பாதையை விட்டு விலகி வந்து விடுகிறீர்கள். ஏனெனில், அவர் விளக்கியது அனைத்தும், உங்களுடைய அனுபவத்தை அகற்றிவிடும். உதாரணமாக, நான் தியானம் என்பது வித்தியாசமான இறப்புநிலை அல்லது செயலற்ற நிலை என்று கூறுகிறேன். நான் சொல்வது உண்மைதான். இருந்தாலும், உங்களைப் பொருத்தவரையில், அதை ஒரு செயலாகவே கருதி வந்திருக்கிறீர்கள். நீங்கள் அதை ஒரு செயலற்ற நிலை என்று நம்பினால், நீங்கள் எதையும் செய்து அடைவதற்கு ஒன்றும் இல்லை என்றே எண்ண ஆரம்பித்து விடுவீர்கள். அதை ஒரு செயல் என்று நீங்கள் கருதினால்தான், நீங்கள் ஏதாவது செய்ய வேண்டியிருக்கும். அதை ஒரு செயலற்ற பிரக்ஞைநிலை என்று நீங்கள் கருதினால், நீங்கள் எதையும் செய்ய வேண்டியதில்லை என்று நினைத்து ஆறுதல் அடைகிறீர்கள்.

நீங்கள், ''ஒருக்கால் இது ஒரு வித்தியாசமான ஆன்மீக நிலை போலும். ஆகவே, இதற்காக நான் எதையும் செய்ய வேண்டியதில்லை'' என்று நினைக்க ஆரம்பித்துவிடுகிறீர்கள். பிறகு என்ன? உங்கள் கோபம், உங்கள் பால் உணர்வு, உங்கள் பேராசை அனைத்தும் தொடர்ந்து வரும். ஆனால், தியானம் மட்டும் நிகழாது. நீங்கள் அதைச் செய்ய மாட்டீர்கள்.

ஆகவே நான் உண்மையைச் சொன்னால், அதனால் உங்களுக்கு எந்த உபயோகமும் ஏற்படாது. இங்கு என்னுடைய சங்கடம் என்னவென்றால், உங்கள் மனத்தில் நிலைநிறுத்தக் கூடிய வகையில் நான் ஏதாவது மாறுபட்டு சொல்லியாக வேண்டும். அது பெரும்பாலும் உண்மைக்குப் புறம்பாகவே இருக்கும். ஆனால், என்னுடைய மனத்தில் எதையாவது வைத்துக் கொண்டு, உங்களிடம் சொல்ல நினைத்தால், அதனால் உங்களுக்கு எந்தப் பிரயோஜனமும் இருக்காது. அது உபயோகமற்றது மட்டும் இல்லை, அதில் ஆபத்தும் தொங்கி நிற்கிறது. ஏனெனில், நீங்கள் கேட்பவராக இருக்கிறீர்கள். நான் அடைந்த உண்மை நிலையை அப்படியே முழுமையாக சொன்னால், உங்களுடைய ஆழ்மனத்தில் ஒரு தடுப்பு (HINDRANCE) தானே உண்டாகி விடும்.

ஆகவேதான், நான், என் உணர்வை உண்மையாக உங்களிடம் விளக்கினால், அதனால் உங்களுக்கு எந்த பிரயோஜனமும் கிடையாது. நான் உங்களுக்கு எந்த உதவியும் செய்வதாகாது. அதற்கு மாறாக, நான் சொல்வதால், அது உங்களிடம் ஒரு தடையைத் தான் ஏற்படுத்தும். அது கிருஷ்ணமூர்த்தியின் உரையைப் போலத்தான் இருக்கும். அது மக்களுக்கு உதவி செய்வதைவிட, அது அவர்களிடம் தடையை உண்டு பண்ணி, அவர்களுடைய ஆன்மீக முன்னேற்றத்தைத் தடுக்கவே செய்யும். நான் அதை ஆழமாகப் பார்க்கும்பொழுது, அப்படிப் பேசுவது மிகுந்த கெடுதலைத்தான் செய்யும் என்ற உணர்வே என்னிடம் அதிகமாகிறது. அவர் சொல்வதும் நினைத்ததும் ஆழமான உண்மைதான். ஆனால், அதனால் உங்களுக்கு எந்த நன்மையும் ஏற்படாது. உங்களைப் பொருத்த வரையில், அது உங்களை ஆன்மீகத்தில் எதையும் செய்யாது தடுத்து விடும்.

***''மவுனம் மிகவும் சக்தி வாய்ந்தது என்றால், ஏன் எல்லோரும் வார்த்தைகளை உபயோகிக்கிறார்கள்?''***

ஆமாம், மவுனம் மிகவும் சக்தி படைத்ததுதான். ஆனால் முதலில் அந்த மவுனம் என்ன சொல்கிறது என்று கேட்க மக்கள் வேண்டும். அதற்கு வார்த்தைகளை உபயோகித்து தான் ஆக வேண்டும்.

***''எதற்காக மக்களை கேட்க வைக்க வேண்டும்? இது அவசியம்தானா?''***

ஆமாம், அது அவசியம் என்று நான் கருதுகிறேன். ஏனெனில், நீங்கள் ஆழமான பள்ளத்தை நோக்கி, தெரியாமல் செல்கிறீர்கள். நீங்கள் அதில் விழுந்து உங்கள் கைகளையோ அல்லது கால்களையோ முறித்துக் கொள்வது உறுதி என்பது எனக்குத் தெளிவாக விளங்குகிறது. இந்த உண்மையை நான் உங்களிடம் அமைதியாகத் தெரிவிக்கிறேன். ஆனால், இந்த என்னுடைய அமைதியான அறிவிப்பை, உங்களுடைய காதுகளால் கேட்க முடியாது. ஆகவே, நான் சப்தம் போட்டுச் சொல்ல வேண்டியிருக்கிறது. நான், ''ஜாக்கிரதை! நீங்கள் அந்தப் பள்ளத்தில் வீழ்ந்து விடுவீர்கள்'' என்று சப்தம் போட்டு எச்சரிக்கிறேன்.

***''இதனால் நீங்கள் உங்கள் சக்தியை இழக்கிறீர்களா?''***

இல்லவே இல்லை. நான் எந்த சக்தியையும் இழப்பதில்லை. யார் ஒருவன், அந்த சக்தியின் ஆரம்பம் எங்கே என்பதை அறிந்து வைத்திருக்கிறானோ, அவன் ஒருக்காலும், தன் சக்தியை இழப்பது இல்லை. அதை அறியாதவன் தான், அதை இழக்கிறான்.

நான், சுயசரிதம்போல் எதையாவது எழுதினால், அது உண்மையாகவும் இருக்கலாம். அது உண்மையாக இருந்தால், அது உங்களுக்குக் கெடுதலைத் தான் உண்டு பண்ணும்! அது பொய்யாக இருக்குமானால், அப்படிப்பட்ட ஒன்றை, நான் எழுதவே விரும்பவில்லை. ஆனால், அது முழு உண்மையாக இருக்குமானால், அது உங்களுக்கு நன்மை பயக்காது. ஏனெனில், நீங்கள் இப்பொழுது செய்துகொண்டு வருபவைகள் அனைத்தும் உபயோகமற்றது என்று நான் கூறவேண்டி வரும். நீங்கள் அதை ஏற்றுக்கொள்ள உடனே தயாராகி விடுவீர்கள்.

ஒருநாள், ஒருவர் என்னிடம் வந்து, ''தியானம் செய்வது உபயோகமற்றது என்று கிருஷ்ணமூர்த்தி சொன்னதால், நான் தியானம் செய்வதை நிறுத்தி விட்டேன்'' என்று கூறினார்.

அதற்கு நான், ''நீங்கள் நல்ல காரியத்தைத்தான் செய்திருக்கிறீர்கள். ஆனால், அதனால் நீங்கள் அடைந்த நன்மை என்ன? நீங்கள் எதுவுமே அடையவில்லையே. நீங்கள் எதற்காக முதலில் தியானம் செய்ய ஆரம்பித்தீர்கள்? நீங்கள் உங்கள் அறியாமையையும், கோபத்தையும் விட நினைத்தீர்கள். நீங்கள் தியானத்தை விட்டதனால், அதை

அடைந்தீர்களா? இல்லை. பிறகு எதற்காக அதை நிறுத்தினீர்கள்? ஏனென்றால் கிருஷ்ணமூர்த்தி சொன்னதால், நீங்கள் அதை விட்டு விட்டீர்கள்''. என்றேன்.

''ஒரு ஞானமடைந்தவர், அது உபயோகமற்றது என்று சொன்னதால், நான் எதற்காக அதைத் தொடர்ந்து செய்ய வேண்டும்'' என்று நீங்கள் நினைத்தீர்கள். இதுதான் பிரச்சினையே. அது உபயோகமற்றது என்பது எனக்கும் தெரியும். அவரைப் போல, நானும் சில பேர்களிடம் அப்படி கூறியிருக்கிறேன். ஆனால், நான் அப்படி யாரிடம் கூறினேன் என்றால், யார் ஒருவர் மிக நீண்டகாலமாக தியானத்தையே செய்துகொண்டு இருக்கிறாரோ, அவரிடம்தான் சொல்வேன். அவரால்தான் அது உபயோகமற்றது என்று உண்மையாகப் புரிந்து கொள்ள முடியும். அதைப்போல உள்ளவர்கள், ஒரு கட்டத்துக்கு வந்து விடுகிறார்கள். அப்பொழுது தியானம் உபயோகமற்றது என்று முழுமையாக உணரத்தொடங்குகிறார்கள்.

ஆனால், ஒரு சந்தையில், தியானம் உபயோகமற்றது என்று கூறினால், அது ஆபத்தையே உண்டு பண்ணும். கேட்பவர்களில் பெரும்பாலோர், தியானத்தை ஒருக்காலும் செய்திருக்க மாட்டார்கள். அந்த அறியாமை நிறைந்த மனிதர்களுக்கு, அது என்னவென்றே தெரியாது. நீங்கள் அவர்களிடம் சென்று தியானம் உபயோகமற்றது என்று சொன்னால், அவர்கள் ஒருக்காலும் அதைப்பற்றி சிந்திக்கக் கூடமாட்டார்கள். அவர்கள் ஒரு சுமை குறைந்தது'' என்று கூட நினைக்கலாம். கிருஷ்ணமூர்த்தியை, சிலர் சுமார் 40 வருடகாலமாக கேட்டு வருகிறார்கள். அவர்கள் முட்டாள்தனமாக வெறுமனே உட்கார்ந்திருக்கிறார்கள். எதுவுமே செய்வதில்லை. ஏனென்றால், தியானம் உபயோகமற்றது என்று கிருஷ்ணமூர்த்தியே சொல்லி விட்டாராம்! ஆனால், கிருஷ்ணமூர்த்தி சொன்னதில் எந்தத்தவறும் இல்லைதான். அவர் தன் வாழ்நாள் முழுவதும் அப்படியேதான் சொல்லி வந்திருக்கிறார். ஆனால், நான், அது சரியில்லை என்றுதான் கூறுவேன். ஏனெனில், அவர் அப்படிச் சொல்லும்பொழுது, உங்களுடைய தகுதியை, நிலைமையை அவர்தன் மனத்துக்குள் எடுத்துக் கொள்ளவில்லை. அவர் தன் அனுபவத்தைப் பற்றியே பேசி வருகிறார்.

இதனால்தான், நான் எப்பொழுதும் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கிறனே். நான் என்னை ஒருக்காலும் முழுமையாக வெளிப்படுத்திக் கொள்வது இல்லை. மற்றும் என்னைப் பற்றி எதையும் அதிகமாகச் சொல்வது இல்லை. நான் என்னைப் பற்றி முழுமையாகச் சொல்ல வேண்டுமானால், உண்மையைத்தான் சொல்ல வேண்டியிருக்கும். அது உங்களுக்கு இப்போது ஒருக்காலும் பயன்தராது. ஆனால், நான் உங்களைப் பற்றி பேசினால், அதாவது நான் உங்களை மனத்தில் வைத்துக்கொண்டு பேசினால், நீங்கள் என்னிடம் வந்து, ''நீங்கள் எதற்காக அப்படிக் கூறினீர்கள்?'' என்று கேட்கக்கூடும். இது மிகவும் வித்தியாசமான அனுபவம்தான்! பிறகு அதற்கு எதிர்ப்பு ஏற்படும். எதிர்ப்பு எதுவும் ஏற்படாத வகையில், என்னால் ஒன்றை விளக்க முடியும். ஆனால், அதனாலேயும் உங்களுக்கு எந்தப் பிரயோஜனமும் உண்டாகாது. நீங்கள் எந்த நிலையில் இருக்கிறீர்களோ, அதே நிலையில் நீங்கள் இருக்க, அது ஒரு சாக்காக அமைந்து விடும்.

ஒரு ஞானியின் சங்கடம் என்னவென்றால், அவர் தான் அறிந்ததை முழுமையாக வெளியிடமுடியாது. ஆகவே, ஒரு வகையில் பழைய முறையே சிறந்தது என்று கூட நினைக்கிறேன். அது உங்களிடம் மிக ஆழமாகக் கூடச் செல்லும். நீங்கள் எந்த நிலையில் இருக்கிறீர்களோ, அதற்கு ஏற்றார் போல், அவர்கள் ஏதோ சொல்லி விட்டுச் சென்றார்கள். எல்லா அறிவிப்புகளும் ஒரு தோராயமானதுதான். அது ஒருக்காலும் முழுமையாக இருக்க முடியாது. ஆனால், நீங்கள் ஆன்மிகத்தில் முன்னேற முன்னேற, உங்களுடைய குரு புதிதாக அறிவித்துக் கொண்டே இருப்பார். மேலும் அவர், ''இப்பொழுது இதை விட்டு விடுங்கள்; அதை விட்டு விடுங்கள். இது உபயோகமற்றது'' என்று அறிவித்துக் கொண்டே இருப்பார்.

நீங்கள் ஒரு சரியான கட்டத்துக்கு வந்த பிறகு, அவர் ''கடவுள் என்பது உபயோகமற்றது. ஆன்மா என்பது உபயோகமற்றது, தியானமும் உபயோகமற்றது'' என்று ஒரு நாஃ அறிவித்து விடுவார்! ஆனால், அதற்கு முன்பு இதைப் போல ஒருநாளும் உங்களிடம் சொல்ல மாட்டார். நீங்கள் ஒரு சரியான, முடிவான நிலைக்கு வந்த பிறகே எல்லாமே உபயோகமற்றது என்று கூறுவார். அப்பொழுது எதுவுமே உண்மையில் உபயோகமற்றது என்று நீங்கள் தள்ளமாட்டீர்கள்! அப்பொழுது

வெறுமனே சிரித்து, எல்லாவற்றையும் அறிந்து கொள்வீர்கள்! இதுதான் ஆன்மீக விநோதம்!

தியானம் உபயோகமற்றது என்று நான் கூறினாலும், நீங்கள் அதைத் தொடர்ந்து செய்தால், நீங்கள் சரியான நபர்தான் என்று நான் உணர்ந்து கொள்வேன்! அதைப் போல, சந்நியாசமும் உபயோகமற்றது என்று நான் அறிவித்தாலும், நீங்கள் அதை எடுக்க முன்வந்தால், நான் சரியான ஆளிடம்தான் அப்படிச் சொல்லியிருக்கிறேன் என்று மகிழ்ச்சியடைவேன்!

ஆகவே, நான் பேசிய விஷயங்கள் பற்றி சற்று கவனித்தால், அதற்காக நான்பட்ட சங்கடங்கள் தான் என் நினைவுக்கு வருகின்றன! ஆகவேதான், இவைகளைப் பற்றி நீங்களே கொஞ்சம் கொஞ்சமாக, மெதுவாக புரிந்துகொள்வீர்கள் என்று முடிவாக அறிவிக்கிறேன்.





## 2. "நான் எதற்காக வந்தேன்?"
## ( WHY I HAVE COME )

***''யாராவது தன் உடலைப் பற்றிப் பேசினால், நீங்கள் உடல், இறப்பை அடிப்படையாகக் கொண்டது என்று கூறுகிறீர்கள். யாராவது தன் ஆன்மாவைப் பற்றிப் பேசினால், நீங்கள், ''இதற்குமுன் நீங்கள் பிறக்கவே இல்லை'' என்று சொல்கிறீர்கள். புத்தர் ஆன்மாவைப் பற்றி சொல்லும்பொழுது ''அது வெறும் நீர்க் குமிழிதான். அது இப்பொழுது மறைந்து விட்டது. நானே அங்கே இல்லை. அப்படியிருக்கும்பொழுது, நான் எங்கே சொல்வேன்?'' என்று கேட்கிறார். அப்படியென்றால், எதுதான் சாசுவதமானது (IMMORTAL)? யார் மீண்டும் பிறவி எடுக்காமல் இருக்கிறார்கள்?''***

கடலில் உண்டாகும் அலைகள் வரும், போகும். ஆனால், கடல் என்னவோ அப்படியேதான் இருக்கும். கடல் அலைகள், கடலிலிருந்து வேறுபட்டது அல்ல. அலைகள், கடலிலிருந்து பிறந்ததுதான். அது அந்த உருவத்தை எடுத்துவிட்டு, பிறகு இறந்துவிடுகிறது. ஒரு அலை எப்பொழுதும் அலையாகவே இருந்தால், அதை 'அலை' என்று அழைக்க முடியாது. 'அலை' என்பதன் அர்த்தம் என்னவென்றால், 'அது பிறந்த உடனே இறந்துவிடல்' என்பதாகும். எங்கிருந்து அலை உண்டானதோ, அது அப்படியோதான் இருக்கிறது. ஆனால், உண்டான அலை இப்பொழுது அங்கு இல்லை. அந்த முடிவற்ற சாசுவதமான மார்பகத்தில், மாற்றம் என்ற கடலின் அழகு நிலைதான் அது. அந்தக்கடல் பிறப்பற்றது. அந்த அலைகள் பிறப்பெடுத்துக் கொண்டே இருக்கின்றன. அந்த கடல் இறப்பது இல்லை. ஆனால் அலைகள் இறந்துகொண்டே இருக்கின்றன. எந்தக் கணத்தில், அந்த அலைகள், அவைகள்தான் கடல் என்று உணர்கின்றனவோ, அப்பொழுதே அவைகள் பிறப்பையும், இறப்பையும் தாண்டிச் செல்கின்றன. ஆனால், அவைகள் தாங்கள் அலைகள் மட்டும்தான் என்று எப்பொழுது நம்புகின்றனவோ, அப்பொழுது அவைகள் பிறப்பு-இறப்பு வளையத்துக்குள் அடங்கிவிடுகின்றன.

எவைகள் பிறப்பற்றதோ, அவைகள் இறப்பும் அற்றது. பிறப்பு எங்கிருந்து ஏற்படும்? எதுவும், ஒன்றும் அற்ற நிலையிலிருந்து உண்டாகாது. எங்கிருந்து இறப்பு நிகழும்? ஒன்றும் அற்ற நிலையில், எதுவும் இறப்பது இல்லை. எது நிலையாக உள்ளதோ, அதுவே

சாசுவதமானது. காலம் அதைக் கட்டுப்படுத்தாது; அதில் எந்த பாகுபாட்டையும் ஏற்படுத்தாது. இந்த இறப்புநிலை அல்லது உயிர்த்தன்மை நம்முடைய ஆளுகைக்கு உட்பட்டது அல்ல. ஏனெனில், நம்முடைய புலன்கள், உருவத்தையும், வடிவங்களையும் சார்ந்து இருக்கின்றன. பெயரும், உருவமும் அற்ற தன்மையில், நம்முடைய புலன்கள் ஒரு போதும் நிலைத்திருக்காது.

நீங்கள் அடிக்கடி கடற்கரையில் நின்று விட்டு, பிறகு திரும்பும்பொழுது, கடலைக்கண்டதாகக் கூறுவீர்கள். ஆனால், நீங்கள் கடலைப் பார்க்கவில்லை; நீங்கள் பார்த்தது கடல் அலையைத்தான். கடலை உங்களால் பார்க்க முடியாது. நீங்கள் பார்க்கக்கூடியது வெறும் கடல் அலையைத் தான். மேலே உள்ளவற்றை மட்டும்தான், உங்கள் புலன்கள் கண்டு கொள்ளும். அதனுள் இருப்பவை அனைத்தும், புலன்களின் சக்திக்கு அப்பாற்பட்டது. உருவமற்றதை அதனால் புரிந்து கொள்முடியாது.

[புலன்கள் இருப்பதால்தான், பெயரும், பொருள்களும் உள்ள உலகம் பிறந்திருக்கிறது. அது உண்மையான இருப்புநிலை இல்லை. எவையெல்லாம் பெயரும், உருவமும் கொண்டதாக பிறக்கின்றனவோ, அவையெல்லாம் அழியக்கூடியவை. எது பெயரும், உருவமும் கொண்டதாக இல்லையோ, அதுவே சாசுவதமானது. அது பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை.] புத்தர், தான் ஒரு நீர்க்குமிழி போல பிறந்தேன் என்று சொல்லும்பொழுது, அவர் அந்த நீர்க்குமிழியின் இரண்டு தன்மைகளைப் பற்றி குறிப்பிடுகிறார். அந்த நீர்க்குமிழிக்குள் என்ன இருக்கிறது? எது எல்லையற்ற நிலையில், எல்லாம் தன்னகத்தேயுள்ள பரவெளியில் உள்ள காற்றுதான், அந்த நீர்க்குமிழிக்குள் சிறிய அளவாக நிரம்பி இருக்கிறது. அந்த சிறிய காற்றே, அந்த நீர்க்குமிழியாக இருக்கிறது.

இயற்கையாக, எல்லாவற்றையும் போல, அந்த நீர்க்குமிழியும் விரிவடைகிறது. ஒரு கட்டத்தில், அது உடைந்து, வெடித்துவிடுகிறது. அப்பொழுது,அதில் உள்ள காற்று, வெளியே உள்ள காற்றுடனும், அதில் உள்ள நீர், வெளியே உள்ள நீருடனும் கலந்து விடுகின்றன. இதற்கிடையில் ஏற்பட்ட உருவம், ஒரு வானவில்லைப் போன்றதுதான்.

ஆனால், அதில் உள்ள காற்றிலேயோ, அல்லது நீரிலேயோ எந்த மாற்றமும் இல்லை. அவைகள் முன்பும் அப்படியே இருந்தன; பின்பும் அப்படியே இருக்கின்றன. அதற்கிடையில் உண்டான உருவம், இப்பொழுது இறந்து விட்டது . அவ்வளவுதான்.

ஆகவே, நம்மையே நாம் ஒரு நீர்க்குமிழிபோல் கருதிக் கொண்டால், நம்முடைய உருவமே பிறப்பு இறப்பினால் கட்டுப் படுத்தப்பட்டது என்று அறிந்து கொள்ளலாம். நமக்குள்ளே இருப்பது சாசுவதமானது. ஆனால், நாம் அந்த நீர்க்குமிழியோடு மிகவும் ஐக்கியமாகி இருக்கிறோம். ஆகவே, நான் உங்களை உடல் அளவில் பார்த்தால், நீங்கள் இறப்பை அடிப்படையாக் கொண்டு, அதை நோக்கி மெல்ல செல்கிறவர்கள். இல்லை, தினமும் கொஞ்சம் கொஞ்சமாக இறந்து கொண்டிருக்கிறவர்கள். அதாவது, நீங்கள் பிறந்த கணத்திலிருந்து, இறக்க ஆரம்பிக்கிறீர்கள். வேறு விதமாகச் சொன்னால், நீங்கள் இறப்பைத் தவிர, வேறு எதையுமே செய்யவில்லை. அந்த நீர்க்குமிழி வெடிக்க 7 விநாடிகளை எடுத்துக் கொள்ளலாம். ஆனால், நீங்கள் வெடிக்க 70 ஆண்டுகளை எடுத்துக் கொள்கிறீர்கள்.

இந்த எல்லையற்ற காலத்தில், 7 விநாடிக்கும், 70 ஆண்டு களுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை. எல்லா வித்தியாசங்களும் நம்முடைய குறுகிய பார்வையாலேயே ஏற்படுகின்றன. காலம் முடிவற்றது என்றால், அதாவது ஆதியும் அந்தமும் கிடையாது என்றால், 7 விநாடிக்கும், 70 ஆண்டுகளுக்கும் என்ன பெரிய வித்தியாசம் இருக்கப் போகிறது? காலத்திற்கு ஒரு வரையறை இருந்தால், உதாரணமாக 100 வருடம் என்று இருந்தால், 7 விநாடிகள் என்பது மிகவும் குறுகியதாகவும், 70 ஆண்டுகள் என்பது மிகவும் நீண்டகாலமாகவும் தோற்றம் அளிக்கலாம். ஆதியும், அந்தமும் இல்லாத எல்லையற்ற காலத்தில், 7 விநாடிக்கும், 70 ஆண்டுகளுக்கும் எந்த வித்தியாசமும் கிடையாது. அந்த நீர்க்குமிழி எத்தனை தடவை வெடித்தாலும், அதற்கு அர்த்தம் எதுவும் கிடையாது.

அந்த நீர்க்குமிழி உண்டாகும்பொழுதே, அது உடைய ஆரம்பிக்கிறது. ஆகவேதான், நான் உடலை, இறப்பை ஆதாரமாகக் கொண்டது என்று கூறுகிறேன். நான் உடல் என்று குறிப்பிடுவது, பிறப்பைக் கொண்டு உருவாகும் உருவத்தையும், பெயரையும் தான்.

அதைப் போல நான் ஆன்மா என்று குறிப்பிடுவது, அந்த உருவமும், பெயரும் மறைந்தபிறகு நிலைத்திருப்பது எதுவோ அதைத்தான். ஆன்மா என்பதை கடலுக்கும், உடல் என்பதை கடல் அலைக்கும் ஒப்பிடுகிறேன். ஆகவே, நீங்கள் இதைத் தீர்க்கமாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

நம் உள்ளே உள்ள உயிர்த்தன்மைக்கு இறப்பே கிடையாது. நாம் உள்ளே ஆழமாகச் செல்லும்பொழுது, ''நான் ஒருபோதும் இறப்பது இல்லை'' என்ற உணர்வு உங்களுக்கு ஏற்படும். பல்லாயிரக்கணக்கான மக்கள் இறந்துகொண்டு இருப்பதை நாம் பார்த்தும், நாமும் ஒரு காலத்தில் கண்டிப்பாக இறப்போம் என்ற நம்பிக்கை, ஏன் நம்மிடம் உண்டாவது இல்லை? நம்முடைய மன ஆழத்தில், ''நாமும் இறப்போம்'' என்ற எதிரொலி உண்டாவது இல்லை. நம் கண்முன்பு, மக்கள் இறந்து கொண்டு இருக்கிறார்கள். இருந்தும், நாம் நிலையானவர்கள் என்றே கருதிக்கொண்டிருக்கிறோம். ஆனால், நாம் நம்முடைய மன ஆழத்திற்குச் செல்லும் பொழுதுதான் ''நாமும் இறப்போம்'' என்ற உணர்வு ஏற்படுகிறது. எல்லாம் இறக்கும்பொழுது, நாமும் இறக்கத்தான் வேண்டும் என்று பகுத்தறிவு சொல்கிறது. ஆனால் பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட ஒரு சில குரல்கள் ''நான் ஒரு போதும் இறக்க மாட்டேன்'' என்றே கூறிக் கொண்டேயிருக்கிறது.

ஆகவேதான், இறப்புக்கு நடுவில் நம்மால் வாழ்ந்து கொண்டு இருக்க முடிகிறது. இல்லாவிட்டால், நம்மை சூழ்ந்து நடக்கும், அடிக்கடி ஏற்படும் இறப்பைக் காணும்பொழுது, நாமும் உடனே இறந்து விடுவோம். நாம் வாழ்வதில் ஏன் இவ்வளவு நம்பிக்கையோடு இருக்கிறோம்? அந்த நம்பிக்கை எப்படி ஏற்படுகிறது என்றால், நமக்குள்ளே உள்ள ஏதோ ஒன்று ''நாம் ஒருபோதும் இறக்க மாட்டோம்'' என்று கூவிக்கொண்டிருப்பது தான் காரணம். எவ்வளவுதான் இறப்புகள், நீங்களும் இறப்பீர்கள் என்று அறிவுறுத்தினாலும், அந்தக் குரல் நம் உள்ளே கேட்டுக் கொண்டே தான் இருக்கிறது.

ஆகவே, எந்த மனிதனும் தன் இறப்பைப் பற்றி நினைப்பதே இல்லை. தானும் இறப்போம் என்று அவன் கற்பனை செய்து கூட பார்க்கமாட்டான். அப்படியே அவன் இறப்பதாகக் கற்பனை பண்ணிப் பார்த்தாலும், அவன் உயிரோடு இருந்து மற்றவற்றைப்

பார்த்துக் கொண்டுதான் இருக்கிறான். நாம் கற்பனையில் கூட, அந்த இறப்பின் பிடிக்குள் இருப்பதை உணர மறுக்கிறோம். ஏன் என்றால், நாம் கற்பனை பண்ணும் பொழுது கூட, நாம் இறப்புக்கு வெளியே இருந்து கொண்டு தான் கவனிக்கிறோம்.

நம் உள்ளேயிருந்து வெளிப்படும் குரல், அந்தக் கடலின் குரலே தவிர வேறல்ல. அது நம்மிடம், ''எங்கேயிருக்கிறது அந்த இறப்பு?'' என்று கேட்கிறது. இறப்பைப் பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. ஆகவேதான், நாம் அதைக்கண்டு பயப்படுகிறோம். ஆனால், இந்த குரல், நம் உடம்பிலிருந்து வருகிறது. ஆகவேதான், இந்த இரண்டு குரல்களும், நம்மைக் குழப்பத்தில் ஆழ்த்துகின்றன. நாம், நம் உடல் கொடுக்கும் குரலோடு ஐக்கியமானால், நம்முடைய உடல் இறப்பை நோக்கிச் செல்கிறது என்று ஆன்மா தன் குரலை வெளிப்படுத்துகிறது. நாம் எவ்வளவுதான், இந்த குரலை அலட்சியப் படுத்தினாலும், அல்லது விஞ்ஞானிகள், மருத்துவர்கள் அல்லது மருந்துகள், மருத்துவக் கருவிகள் போன்றவைகளின் உதவியை நாடினாலும், நமது உடல் ஒருபோதும் 'நான் வாழ்வேன்' என்று உறுதிபடக் கூறுவது இல்லை. இறப்பற்ற உணர்வே அதற்குக் கிடையாது. ஆனால், தான் தினமும் இறந்து கொண்டு இருக்கிறோம் என்று அதற்குத் தெரியும்.

தான் ஒரு நீர்க்குமிழி என்று உங்களுடைய உடலுக்கு நன்றாகத் தெரியும். ஆனால், நாம், ஒரு நீர்க்குமிழி இல்லை என்பதை நம்ப மறுக்கிறோம். நாம் எப்பொழுது அந்த நீர்க்குமிழியோடு ஐக்கியமாகிவிடுகிறோமோ, அப்பொழுதே எல்லாவித இறுக்கமும் உங்களிடம் ஏற்பட்டு விடுகிறது. உங்கள் உள்ளேயுள்ள அந்த சாசுவதமானது எப்பொழுது அந்த அலையோடு சம்மந்தப்பட்டு விடுகிறோதோ, அப்பொழுதே கஷ்டங்கள் ஆரம்பமாகி விடுகின்றன. இந்த ஐக்கியமாதல் அறியாமையால் ஏற்படுகிறது. இந்த சம்மந்தத்திலிருந்து விடுதலையாதல் என்பதே அறிவுப் பூர்வமானது. எதிலும் மாறுதல் இல்லை. எல்லாமே முன்பு எப்படி இருந்தோ, அப்படியா இப்பொழுதும் உள்ளது. இந்த உடலும், ஆன்மாவும் அப்படியேதான் இருக்கின்றன. ஆனால் இந்த ஐக்கியமாதல் என்ற மயக்கம் அல்லது மாயைதான் மறைகிறது. அப்பொழுது, உடல் இறக்கும்பொழுது, நாம் அனாவசியமாக பயப்படத் தேவையில்லை.

இந்த உடல் இறக்கத்தான் வேண்டும். அதைக் காப்பாற்றக்கூடிய சாத்யக் கூறு இருந்தால், நாம் பயப்படுவதில் அர்த்தம் உண்டு. அப்படி ஏதும் சாத்யம் இல்லாத பொழுது, நாம் இறப்பதற்கு பயப்படுவதில் எந்த அர்த்தமும் இல்லை.

ஒரு பட்டாளத்தான் முதன்முதலில் சண்டைக்குச் செல்ல, வீட்டை விட்டு வெளியே வரும்பொழுது, அவன் பயப்படத்தான் செய்வரன். அந்த சண்டைக் களத்தில் கூட பயத்தோடு தான் இருப்பான். ஆனால், அங்கு குண்டுமழை பொழியும் பொழுது, அவன் பயமெல்லாம் பறந்துவிடும். ஏனெனில், தன்னைக் காப்பாற்றக் கூடிய சாத்யம் அனைத்தும் அப்பொழுது அழிந்துவிட்டது. அந்த நிலையில், அவன் சீட்டு ஆடினாலும் அதிசயம் அல்ல! ஆனால், அவன் ஒரு சாதாரண மனிதன்தான். அவனிடம் எந்தக் குறிப்பிட்ட தனித்தன்மையும் கிடையாது. இந்தச் சூழ்நிலையில், இறப்பதற்குப் பயப்படுவதில் அர்த்தம் இல்லை என்று தீர்க்கமாக அவன் உணருகிறான்.

ஆனால், படைக் களத்தில் ஒரு சிலர் உயிர் பிழைக்கக் கூடிய சாத்யமும் உண்டு. ஆகவே, படைவீரனுக்கு ஒரளவு பயம் இருக்கக்கூடிய வாய்ப்பும் உண்டு. ஆனால், நிச்சயமாக இறக்கக்கூடிய சந்தர்ப்பத்தில், அந்த பயம் அறவே போய்விடும். அந்த நிலையில், ''நான்தான் உடல்'' என்ற மாயக்கருத்து திடீரென்று மறைந்துவிடும். ஏனெனில், நீங்கள் தப்புவதற்குச் சந்தர்ப்பம் இல்லாத நிலையில், இறப்பு பயம் மறைந்துவிடும். அப்பொழுது உடல் இறக்கப் போகிறது என்பது நிச்சயமாகிறது. உடலின் தலைவிதி அதுதான். அதைத் தடுப்பதற்கு வேறு வழியே கிடையாது.

உடலின் இறப்பு நிச்சயம் என்று ஒருவன் தீர்மானிக்கும் பொழுது, உடலுக்கு அப்பால் உள்ள நிலை ஒருபோதும் பிறப்பது இல்லை மற்றும் இறப்பது இல்லை என்பது திடீரென்று தெளிவாக விளங்க ஆரம்பித்து விடுகிறது. ஆகவே, ஆன்மாவைப் பற்றிய பயமும் விலகிவிடுகிறது. ஏனெனில், அதற்கு பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை. ஆகவே, அது குறித்து பயப்படுவதற்கு என்ன இருக்கிறது? உடலினால்தான், இந்த பயம் ஏற்படுகிறது. மற்றும் ஆன்மா அதனுடன் ஒருங்கிணைந்து சம்மந்தப்பட்டு இருக்கிறது. அந்த பயம் ஏற்படுவதற்குக் காரணம், உங்களுடைய உள்குரல், ''நான் ஒருபோதும் இறப்பது இல்லை''

என்றும், உங்களுடைய வெளிக்குரல் ''நான் இறக்கப்போவது நிச்சயம்'' என்றும் கூறுவதுதான். இந்த மாறுபட்ட குரல்கள், உங்களைக் குழப்பம் அடையச்செய்கின்றன. இந்த இரண்டு குரல்களும் கலந்தே வருகின்றன என்பதை நாம் புரிந்துகொள்வது இல்லை. அவைகள் இரண்டும் ஒரே கருவியில் இருந்துதான் எழும்புகின்றன என்று தவறாக நினைத்து விடுகிறோம். இது நம்முடைய தவறுதான்.

நம்முடைய அறியாமையால், நம்மிடம் எப்பொழுதும் இறப்பைப் பற்றிய பயம் இருந்து கொண்டே இருக்கிறது. ஆனால், இறப்பே நிகழாததுபோல், நாம் வாழ்ந்து கொண்டு இருக்கிறோம். அறியாமையில் உள்ளவன் மட்டுமல்ல, அறிந்தவன் கூட, இறப்பே இல்லாதது போல் வாழ நினைக்கிறான். அவன் இரண்டு வித நிலைகளில் வாழ்ந்துகொண்டு இருக்கிறான். அவனுடைய வாழ்க்கை இரண்டு விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவனுடைய வாழ்வின் மேம்போக்கான வெளிச் சுற்றளவு, அதன் மையப்பகுதியிலிருந்து வேறுபட்டு நிற்கிறது. அதாவது அலைகள், கடலிலிருந்து வேறுபட்டு நிற்கிறது. உருவமற்றதிலிருந்து, உருவம் வேறுபட்டு இருக்கிறது. எப்படியிருந்தாலும், ஒருவன் இறப்பிலிருந்து தப்பிக்க முடியாது. நாம் ஒன்றை மாயை அல்லது பொய் என்று அறிந்துகொள்வதால் மட்டும், அது மறைந்துபோய்விடுவது இல்லை. நாம் அதை அறிந்து கொள்வதால், அதனால் ஏற்படப் போகும் வலி அல்லது துன்பம் மறைந்து போகலாம்.

ஒரு கயிறு, இருட்டில் பாம்பு போல் தோற்றம் அளிப்பதை, சங்கராச்சாரியார் எப்பொழுதும் ஒரு உவமையாகக் கையாளுவார். ஆனால், இந்த உபமானம் சரியில்லை. ஏனெனில், நீங்கள் அதன் அருகில் நெருங்கினால், அது கயிறுதான் என்று தெரிந்து கொள்வீர்கள். கயிறு என்று தெரிந்தபிறகு, நீங்கள் எவ்வளவுதூரம் சென்று பார்த்தாலும், அது உங்களுக்கு கயிறாகவே தோற்றம் அளிக்கும்; பாம்பாக அல்ல.

ஆனால், வாழ்வின் மாயத்தோற்றம் அப்படியில்லை. அது தண்ணீருக்குள் விட்ட க்ம்புபோல் காட்சி அளிக்கிறது. அது நீரில் இருக்கும்பொழுது, வளைந்து காணப்படும். அதை விட்டு வெளியே எடுத்தால், அது நேராக இருப்பது புரியும். அதை மீண்டும் நீரில் அமிழ்த்தினால், அது மறுபடியும் வளைந்தே காணப்படும். நீங்கள், அது நேராகவே இருக்கிறது என்று அறிந்து கொண்டாலும், அது நீரில்

வளைந்திருப்பதிலிருந்து மாற்றம் அடையாது. அது ஒரு மாயத் தோற்றம் என்று உங்களால் சுலபமாக நம்ப முடியாது.

நம்முடைய வாழ்வின் தோற்றம், கயிறு பாம்பாகக் காட்சி அளிப்பது போல் அல்ல. நேரான கம்பு, நீரில் வளைந்து காணப்படுவது போல் உள்ளது. கம்பு நேரானது என்றும், அது நீரில் வளைந்து காணப்படும் என்பதும் நமக்கு மிக நன்றாகத் தெரியும். பரிசோதனை செய்யும் விஞ்ஞானிகளுக்கும்; அது அப்படியேதான் காட்சி தரும். ஆனால் உண்மையில் அப்படி இல்லை என்பது அவர்களுக்கும் தெரியும். இப்படி வளைந்து தோற்றம் அளிப்பது நம்முடைய புலன்களின் வித்தியாசமான பார்வையால்தான். அதற்கும், நமது விஷய ஞானத்திற்கும் சம்மந்தம் இல்லை.

ஆகவே, நீங்கள் அந்தக் கம்பு வளைந்தது இல்லை; ஆனால் அப்படித் தோற்றம் அளிக்கிறது. அது இரண்டு விதமாகப் பிரிந்து காணப்படுகிறது. அதை அறிவைக் கொண்டு பார்க்கும் பொழுது, அது நேராகவே இருக்கிறது. ஆனால் கண்களைக் கொண்டு பார்க்கும் பொழுது அது நீரில் வளைந்து காணப்படுகிறது. இந்த இரண்டு நிலைகளிலும், மாயத் தோற்றம் என்று எதுவும் இல்லை என்று புரிந்து கொள்கிறீர்கள்.

அதைப் போல நம்முடைய வாழ்வும் இரண்டு விதத்தில் அமைந்திருக்கிறது. வெளியில் உடல் என்ற உருவம் காட்சி அளிக்கிறது. உள்ளே உள்ள உயிர்த்தன்மையில், ஆன்மா (SOUL) இருக்கிறது. உண்மையை அறிந்தவர்களுக்கு, இந்த உலகம் மறையவில்லை. உங்கள் கண்களுக்கு இந்த உலகம் எப்படி காட்சி அளிக்கிறதோ, அப்படியேதான் அவர்களுக்கும் காட்சி அளிக்கிறது. ஒருக்கால், அவர்களுக்கு அது இன்னும் கூட தெளிவாகத் தோற்றம் அளிக்கலாம். இந்த உயிருள்ள பொருள்களின் ஒவ்வொரு சிறிய செல்லும் (CELL) மிகத் தெளிவாக அவர்களுக்குத் தெரியலாம். எதையும் அவர்கள் தவறவிடுவது கிடையாது. அவர்கள் எந்த நிலையிலும் இருப்பது கிடையாது. புலன்களின் மூலமாகவே உருவங்கள் தோற்றம் அளிக்கின்றன என்பது அவர்களுக்கு மிக நன்றாகத் தெரியும். கம்பு எப்படி நீரில் வளைந்து தோற்றம் அளிக்கிறதோ, அதைப் போல, அவைகளும் மாறுபட்டு தோற்றம் அளிக்கிறது என்பது அவர்களுக்குப் புரியும். நீரில்

செல்லும்பொழுது, ஒளிக்கதிர்கள் சாய்ந்து செல்வதால், அந்தக் கம்பு வளைந்து காணப்படுகிறது. ஆனால், காற்றில், அந்த ஒளிக்கதிர்களுக்கு எந்த வளைவும் ஏற்படாததால், அந்த கம்பு நேராகவே தெரிகிறது.

இந்த உலகத்தில் உள்ள உயிர்ப் பொருள்கள் அனைத்தும், அப்படியேதான் இருக்கின்றன. ஆனால், அவைகள் நமது புலன்களின் வழியாகச் செல்லும்பொழுது, வளைந்து அல்லது மாறுபட்டு காணப்படுகின்றன. அறிந்தவைகள் என்ற வழிகளின் மூலமாக, அவைகள் செல்லும்பொழுது, விஷய ஞானம் என்ற கதிர்களால், அவைகளில் வளைவு அல்லது மாற்றம் ஏற்படுகின்றன. நான் நீலக் கண்ணாடியை அணிந்திருந்தால், பார்ப்பவை அனைத்தும் நீலமாகவே தெரியும். அதை அகற்றிவிட்டால், எல்லாம் வெளிர் நிறமாக இயல்பாக காட்சி தரும். மறுபடியும் அந்த நீல நிறக் கண்ணாடியை அணிந்தால், எல்லாமே மறுபடியும் நீலமாகவே தெரியும். இப்பொழுது நீலமாக எல்லாம் தெரிவதற்குக் காரணம், அந்த நீல நிறக் கண்ணாடியே என்று விளங்கிக் கொள்கிறோம். ஆகவே, இனிமேல் இந்தப் பொய்யான மாயையில் மாட்டிக் கொள்ள மாட்டோம். ஆனால், விளக்கம் பெற்றபிறகு, மறுபடியும் அந்த நீலநிறக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு, இந்த உலகத்துப் பொருள்களை மீண்டும் பார்க்கலாம். அதனால் நாம் மயக்கம் அடைவதில்லை. ஆகவே, இப்பொழுது ஆன்மா என்பது சாசுவதமானது என்றும், உடல் என்பது இறப்பை அடிப்படை யாகக் கொண்டது என்றும் தீர்க்கமாகப் புரிந்து கொள்கிறோம்.

. கடல் என்பது சாசுவதமானது என்று இப்பொழுது நாம் புரிந்து கொண்டாலும், அதில் எழும்பும் அலை ஒரு விளையாட்டு போல என்றும் அறிந்துகொள்கிறோம். அவைகள் அப்படித் தோன்று வதற்குக் காரணம், நம்முடைய கண்கள் என்ற கண்ணாடிதான் காரணம். அவைகள் வழியாகப் பார்ப்பது உண்மையை பிரதிபலிப்பதில்லை.

ஆகவேதான், புத்தர், மஹாவீரா, அல்லது ஜீசஸ் போன்ற வர்களது அறிக்கைகள், இரண்டு வித நிலைகளிலிருந்து ஏற்பட்டது. ஒன்று ஆத்மாவிலிருந்து, மற்றொன்று உடலிலிருந்து. இந்த இரண்டு மாறுபட்ட நிலைகள், நம்மிடம் ஒன்று சேர்ந்து இருப்பதால், நாம் குழப்பம் அடைகிறோம். அதைப் போல அவர்களது அறிக்கைகளும் குழப்பத்தை ஏற்படுத்துகிறது. சில சமயம், புத்தர், தான் உடல் என்ற

வகையில் பேசுகிறார். அவர், ''ஆனந்தா, எனக்குத் தாகமாக இருக்கிறது. கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா'' என்று கேட்கிறார். ஆனால், ஆத்மாவுக்கு தாகம் என்று எதுவும் கிடையாது. உடலுக்குத் தான் தாகம் என்ற உணர்வு உண்டு. இப்பொழுது ஆனந்தா, ''உடல் என்று எதுவும் இல்லை. அது வெறும் நாம, ரூபம்தான். அப்படியிருக்கும்பொழுது, நீர்க்குமிழியால் இருக்கும் உடலுக்கு எப்படி தாகம் எடுக்கும்?'' என்று நினைக்கக் கூடும்.

அடுத்த நாள், புத்தர், ''நான் பிறக்கவே இல்லை. அப்படி இருக்கும் பொழுது இறப்பு எப்படி எனக்கு ஏற்படும்?'' என்று சொல்லும் பொழுது, கேட்பவர் குழப்பம் அடைகிறார். அவர், விஷய ஞானத்தோடு, இந்த உயிர்த் தன்மையும் மாறுகிறது என்று நினைக்கிறார். உண்மையில், உயிர்த்தன்மையை அறிந்து கொண்டதால், மாற்றம் ஏதும் நிகழவில்லை. மாறாக, ஒருவரது வளரும் நிலைதான் மாறுகிறது.

புத்தர், தான் தாகத்தோடு இருப்பதாகச் சொன்னபொழுது, அவர் தன் உடல்தான் தாகமாக இருக்கிறது என்று குறிப்பிடுகிறார். நாமரூபம் உடைய நீர்க்குமிழி போல் உள்ள இந்த உடல்தான் தாக உணர்வு கொண்டுள்ளது. அதற்கு தண்ணீர் கொடுக்காவிட்டால், அது சீக்கிரம் வெடித்துவிடும். ஆனால், கேட்பவர் ஒரு குழப்பமான நிலையில் இருப்பதால், அந்த அறிக்கை எந்த நிலையிலிருந்து வருகிறது என்று அவர்களால் வித்தியாசம் காணமுடியவில்லை. ஆகவே, அவருடைய உண்மையான அர்த்தங்களைத் தவற விட்டு விடுகிறார்கள்.

'கிரேடஸ் ஆப் சிக்னிபிகன்ஸ்' (GRADES OF SIGNIFICANCE) என்ற புத்தகத்தை 'சிமோன் வியல்' (SIMONE WEIL) என்பவர் எழுதியிருக்கிறார். ஒரு மனிதன் மிகச் சிறந்த ஞானநிலையில் இருந்தால், அவர் ஒரே சமயத்தில் பலவித சிறந்த நிலைகளில் வசிக்க முடியும் என்று எழுதியிருக்கிறார். அவர்கள் அப்படித்தான் பலவித நிலைகளில் இருந்தாக வேண்டும். ஏனெனில், அவர்கள் பலவித மக்களை சிந்திக்க வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால், அவர்கள் பேசுவது அனைத்தும் அர்த்தமில்லாது போய்விடும். புத்தர், தன் உயர்ந்த ஆன்மீக நிலையிலிருந்து உங்களிடம் பேசினால், அதனால் எந்தப் பிரயோஜனம் ஏற்படாது. நீங்கள் அவரைப்பைத்தியம் என்றே கருதிவிடுவீர்கள்! அவரைப் போன்றவர்களுக்கு இதைப் போலத்தான் பொதுவாக

நடந்திருக்கிறது. அதற்கு முக்கிய காரணம், அவர்கள் பேசுவதை, ஒரு பைத்தியம் தான் பேசும் என்று மக்கள் பொதுவாகக் கருதத் தொடங்கினார்கள்!

அவர்கள் உங்கள் நிலையில் இருந்து பேச வேண்டுமானால், அவர்கள் முதலில் தங்களை உங்கள் நிலைக்கு இறக்கிக் கொள்ள வேண்டும். அந்த நிலையில் தான், நீங்கள் அவர்களைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியும். அப்பொழுது அவர்கள், உங்களுக்கு பைத்தியமாகத் தெரியாது. இப்படி மக்களுக்கு ஏற்றவாறு, தங்கள் நிலைகளை அவர்கள் மாற்றும் படியாகிறது. ஆகவே, அவர்கள் பலவித நிலைகளில் ஒரே சமயத்தில் வசிக்க வேண்டியுள்ளது.

புத்தாவைச் சிந்தித்துப் பேசும் அனேக மக்கள், கண்ணாடி நிலையில் வருகிறார்கள் என்று நாம் சொல்லலாம். இந்த பலவித கண்ணாடிகள், புத்தரைப்பற்றி தனித்தனியாக பல உருவங்களை, தங்கள் எண்ணங்களுக்கு ஏற்றபடி பிரதிபலிக்க வைத்திருக்கிறார்கள். அந்த கண்ணாடி களின் மேல்பாகம் எப்படி உண்மையாக இருக்கின்றனவோ, அதைப் போல அவர்களது பிரதிபலிப்பு உருவங்களும் அவர்களைப் பொறுத்த வரையில் உண்மைதான். உதாரணமாக, வெளிப்புறத்தில் மேல் நோக்கி உயர்ந்த (CONVEX) ஒரு கண்ணாடி, எப்படி ஒரு உருவத்தைப் பெரிதுபடுத்திக் காண்பிக்கிறதோ அல்லது உட்புறம் குவிந்த ஒரு கண்ணாடி (CONCAVE) எப்படி ஒரு உருவத்தை குறுக்கிக் காண்பிக்கிறதோ, அதைப் போலத்தான் புத்தரின் உருவ பிரதிபலிப்புகள் அவரவர்களுக்கு ஏற்ப வித்தியாசமாகவே இருக்கும். அப்படி பிரதிபலிக்காவிட்டால், அந்த கண்ணாடிகள் மாற்றப்படும் அல்லது உடைக்கப்படும்.

ஆகவேதான், புத்தர் போன்றவர்களின் அறிக்கைகள் பலவித வித்தியாசமான நிலைகளிலிருந்து வெளிவருகின்றன. சில சமயம், ஒரே அறிக்கை, பலவித நிலைகளிலிருந்து அறிவிக்கப்படுகின்றது. இது ஏனென்றால், புத்தர் போன்றவர்கள், தங்களுடைய பேச்சை ஆரம்பிக்கும் பொழுது, முதலில், தங்களுடைய சொந்த மேலான நிலையிலிருந்தே ஆரம்பிக்கிறார்கள். பிறகு அவர்கள் பேச்சை நிறுத்தும் பொழுது, உங்களுடைய நிலைக்கு கீழே இறங்கி வந்து விடுகிறார்கள். அநேகத் தடவைகள், ஒரே வாக்கியத்தை, மிக நீளமாக விளக்க வேண்டியுள்ளது.

ஏனென்றால், ஒரு வாக்கியத்தை ஆரம்பிக்கும்பொழுது, அவர் தன் நிலையிலிருந்தே ஆரம்பிக்கிறார். அப்படி ஆரம்பிக்கும் பொழுது, அவர் உங்களிடமிருந்து நிறைய எதிர்பார்க்கிறார். ஆனால், போகப் போக, அவர் தன் எதிர்ப்பார்ப்பை குறைத்துக் கொண்டு அறிக்கையை போற்றி வெளியிடுகிறார்.

அவருடைய நிலையும், உங்களுடைய நிலையும் மிக ஆழமான அளவில் வேறுபட்டு இருக்கின்றன. ஆனால் அவைகள், மிகவும் வித்தியாசப்பட்டு, வெகு தொலைவில் உள்ளன என்று அர்த்தம் செய்து கொள்ளாதீர்கள். அந்த வேறுபாடுகள் கடலும், அலையும் இருப்பது போலத்தான். [கடல் வேண்டுமானால் அலைகள் இல்லாமல் இருக்கலாம். ஆனால், அலைகள் கடல் இல்லாமல் ஒரு போதும் இருக்கமுடியாது. உருவமற்றது, உருவமில்லாது இருக்கலாம். ஆனால், உருவம், உருவமற்று ஒருக்காலும் இருக்கமுடியாது.]

நம்முடைய வார்த்தைகள் அனைத்தும் அப்படியேதான் உள்ளது. 'அஹிம்சை' என்ற வார்த்தையில் 'ஹிம்சை' என்ற வார்த்தை. அதாவது சொல்லாமையில், சொல்லுதல் என்பது முக்யத்துவம் பெறுகிறது. ஆனால் 'ஹிம்சை' என்ற வார்த்தையில் 'அஹிம்சை' என்ற வார்த்தைக்கு எந்த முக்யத்துவமும் கிடையாது. ஆகவே, வாழ்க்கையில், ஹிம்சை இருப்பதற்கு, அஹிம்சை தேவையாக இருக்கிறது. இது தவிர்க்க முடியாதது. ஆனால் ஹிம்சை இல்லாமல் அஹிம்சை இருக்க வழியுண்டு. நமது தேவைக்கு ஏற்ப, நாம் மொழிகளை ஏற்படுத்தி வைத்திருக்கிறோம். [நம்மைப் பொருத்த வரையில், இந்த உலகம் கடவுள் இல்லாமல் இருக்கலாம். ஆனால், இந்த உலகம் இல்லாமல், கடவுள் எப்படி இருக்க முடியும்?]

இவைகள் இரண்டும் வெவ்வேறானவைகள் அல்ல. ஆகவே, இந்த பேரியக்கப் பிரபஞ்சம் (MACROCOSMIC) அணுத்தன்மையில் உள்ள பிரபஞ்சம் (MICROCOSMIC) இல்லாமல் இருக்க முடியும். அலைகள் இல்லாமல் கடல் இருப்பதில் எந்த சங்கடமும் கிடையாது. ஆனால், கடல் இல்லாமல் அலைகள் எப்படி இருக்க முடியும்? அலை என்பது, கடலை ஒப்பிட்டால் மிக மிகச் சிறியது. அது எப்பொழுதும் கடலைச் சார்ந்தே இருக்கும். கடல், அவைகளை நாலா பக்கங்களிலிருந்தும் பாதுகாக்கிறது. அவைகளை எழும்பச் செய்கிறது.

இந்த இரண்டும் வெவ்வேறானவை அல்ல. ஆனால் அவைகள் வெவ்வேறானவை என்றே நான் கூறவேண்டியிருக்கிறது. ஏனென்றால், அலைகள் உருவமற்றது, சாசுவதமானது. மற்றும் தெய்வீகமானது என்று நீங்கள் தவறாக நினைத்துவிடக் கூடாது. ஆனால், அலைகள்,தான் வேறானவை என்று நினைக்கக்கூடிய மாயை உணர்வு ஏற்பட வழியுண்டு. ஆனால் , கடலும் அலையும் ஒன்றுதான் என்று கருதினால், இதைப் போன்ற மயக்க உணர்வு மறைய வழியுண்டு. ஆகவே ,அனுபவம் என்பது ஒன்றானால், அப்பொழுது அந்த அலைகள், ''நான் அங்கே இருக்கவில்லை. அங்கு இருப்பது வெறும் கடல்தான்'' என்று கூறிவிடும். இந்த முறையில்தான்,ஜீசஸ் திரும்பத்திரும்ப, ''நான் அங்கேயில்லை. அங்கே இருப்பது, அதாவது சொர்க்கத்தில் இருப்பது என் பிதாதான்''என்று கூறிக் கொண்டிருந்தார்.

ஆகவே,நாம் ஒரு சிறுகுழப்பத்தில் இருக்கிறோம். கடவுள் சொர்க்கத்தில் இருப்பதை நமக்குக் காட்டவேண்டும் என்று விரும்புகிறோம். அப்பொழுதுதான், நமக்கு அவர் யார், அவர் உண்மையில் எங்கே இருக்கிறார் என்பதை கண்டறிய முடியும்.அல்லது நாம் ஜீசஸை பைத்தியம் என்று அழைக்க வேண்டும். ஏனென்றால், அவர் சொல்வது நமக்கு விளங்கவில்லை! ஜீசஸ், ''நான் கடலாக இருக்கிறேன்; அலையாக அல்ல'' என்று சொல்கிறார். ஆனால், நாம் அலைகளைத்தவிர வேறு எதையும் பார்க்கவில்லை. கடல் என்பது வெறும் வார்த்தையாகவே படுகிறது. எது உண்மையானதோ, எது நிலையானதோ, அது நமக்கு வெறும் வார்த்தையையாகவே படுகிறது! ஆனால், எது மாயைத் தோற்றம் அளிக்கிறதோ, அது நமக்கு உண்மையாகப் படுகிறது.

நமக்கு ஆன்மாவைப் பற்றி எதுவும் தெரியாது. ஆனால், நாம் எப்பொழுதும் உடலைப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். ஆகவே, நாம் தினமும் பார்ப்பது மட்டுமே நமக்கு உண்மையாகப் படுகிறது. உடல் என்பது இறப்பை அடிப்படையாகக் கொண்டது என்றும், மற்றும் அது தினசரி இறந்துகொண்டே இருக்கிறது என்றும் நான் கூறுகிறேன். ஆனால், நம்முடைய ஆன்மா நிலையானது. அது இறப்பை அடிப்படையாகக் கொண்டது அல்ல. அந்த இறவாத நிலையில், இறப்பு என்ற உடல் நர்த்தனம் புரிகிறது!

கடலையும், அதன் அலைகளையும் நாம் புரிந்துகொள்வது கஷ்டம் இல்லை. ஏனெனில் அவைகளுக்கிடையில் எந்தப் பகை உணர்வும் கிடையாது. ஆனால், சாசுவதமானதையும், இறப்பையும் புரிந்து கொள்வது மிகவும் கஷ்டம்தான். ஏனெனில் அவைகள் இரண்டும் மாறுபட்டது அல்லது பகையானது என்று நம்பிக்கொண்டு இருக்கிறோம். இது வெறும் நம்பிக்கைத்தான். நான் கடலையும், அதன் அலைகளையும் பற்றிப் பேசும்பொழுது, அவைகள் உங்களிடம் எந்த எதிர்ப்பையும் உண்டாக்குவது இல்லை. ஏனெனில், அவைகள் இரண்டும் ஒன்றை ஒன்று தழுவியே வாழ்கின்றன. ஆனால், சாசுவதமானதும், இறப்பும் கடுமையான பகையாகவும், மாறுபட்டும் தோற்றம் அளிக்கிறது. அவைகள் இரண்டும் ஒருக்காலும் ஒன்றாக இருக்க முடியாது என்றே நமக்குத் தோன்றுகிறது. ஆனால், அவைகள் இரண்டும் ஒன்றுதான்! நீங்கள் இறப்பை, மிகவும் ஆழமாகவும், நெருங்கியும் நுண்மையாகவும் அறிந்துகொண்டால், இறப்பு என்பது அந்த சாசுவதத்தன்மையின், வேறு ஒரு மாற்றம்தான் என்பதைப் புரிந்து கொள்வீர்கள்.

அலைகள் என்பதும் கடலின் மாற்றம்தான். நீங்கள் சாசுவதத் தன்மையினுள், ஆழமாகச் சென்றால், அது தெய்வீகத்தன்மையேயன்றி வேறல்ல என்பதைப் புரிந்துகொள்வீர்கள். இந்த உலகத்தில் மாறுபட்டு இயங்கும் உயிர்ப்பொருள்கள் அனைத்தும், மாறுபட்ட தன்மையையே அடிப்படையாகக் கொண்டதுபோல் தோற்றம் அளிக்கிறது. அப்படி மாறுபட்டு தோற்றம் அளிப்பதால், அவைகளைப் புரிந்துகொள்வது நமக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஆகவேதான், நாம் சாசுவதத்தன்மைக்கும், இறப்புக்கும் ஒரு ஆழ்ந்த வேற்றுமையை உண்டாக்கி வைத்திருக்கிறோம். ஆனால், ஒன்றை மிக நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். அதாவது இறப்பற்றதன்மை இல்லாமல், இறப்பு ஒருக்காலும் இருக்காது. இறப்பு வாழ்வதற்கு, இறப்பற்ற தன்மையின் உதவி அதற்குத் தேவைப்படுகிறது.

அடுத்து, பொய் உயிர்வாழ்வதற்கு, அதற்கு உண்மையின் உதவி தேவைப்படுகிறது. அப்பொழுது பொய், மெய் என்று வேஷம் போடுகிறது! ஆனால், உண்மை ஒருக்காலும் தான் உண்மைதான் என்று அறிவித்துக்கொண்டு இருக்காது. ஆனால், பொய் அப்படியில்லை.

அதற்கு எப்பொழுதும் உண்மையின் உதவி தேவைப்படுகிறது. அதனுடைய உதவியில்லாமல், பொய் ஒரு அங்குலம் கூட நகரமுடியாது. அது மிக அகங்காரமாக, ''ஜாக்கிரதை, உண்மையாகிய நான், வந்துகொண்டு இருக்கிறேன்'' என்று அறிவிப்புக் கொடுக்கும். தான் உண்மைதான் என்று நிரூபிக்க, அது பல சான்றிதழ்களைப் பெற்றுவைத்திருக்கும்!

ஆனால், உண்மைக்கு எந்தச் சான்றிதழும் தேவையில்லை. மேலும், அதற்கு பொய்யின் உதவியும் தேவையில்லை. அப்படி அது பொய்யின் உதவியை நாடினால், அதற்குத்தான் துன்பம் ஏற்படும். மாறாக, பொய் உண்மையின் உதவியை நாடாவிட்டால், அதனால் அதற்குத் தீங்கு ஏற்படும்.

சாசுவதத்தன்மைக்கு, இறப்பின் உதவி தேவையில்லை. சாசுவதத்தன்மையின் கருத்தை வைத்துக்கொண்டுதான், இறப்பின் நியதியைப் புரிந்துகொள்ளவேண்டும். உண்மையான, சுத்தமான உயிர்தன்மைக்கு, மாறக்கூடிய எந்த இயல்பும் தேவையில்லை. ஆனால், மாறாத நிலையை வைத்துக்கொண்டுதான், மாறக்கூடியதை அறிந்து கொள்ள முடியும். ஒன்றுமட்டும் நிச்சயம். நாம் மாறக்கூடியதைத்தான் அறிந்து வைத்திருக்கிறோம். ஏனெனில், அதுதான் நம் கண்ணுக்குத் தெளிவாகப் புலப்படுகிறது. அப்பொழுது அதுவாகவே நாம் இருப்பதாக உணருகிறோம். ஆகவேதான், நாம் சாசுவதத்தன்மையை நினைக்கும் பொழுதெல்லாம், எது மாறக்கூடியதோ, அதை வைத்துதான் புரிந்துகொள்கிறோம். வேறு வழியும் இல்லை. இதுதான் சங்கடம்.

நம்முடைய நிலைமை எப்படியிருக்கிறது என்றால், நாம் இருட்டில் இருந்துகொண்டு, வெளிச்சம் எப்படியிருக்கும் என்று தீர்மானம் செய்கிறோம். வேறு வழியில்லை. இருட்டு என்பது மிக மங்கலான வெளிச்சம். வெளிச்சம் என்று ஒன்று இல்லாதபொழுது, இருட்டு என்பதற்கு அர்த்தம் இல்லை. வெளிச்சம் இருக்கலாம். ஆனால், அது உங்கள் கண்களின் சக்திக்கு அப்பாற்பட்டு இருக்கலாம். ஆகவே, அதை உங்கள் கண்களால் பார்க்கமுடியாது.

ஒன்றை நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள். நம்முடைய புலன்கள் அனைத்தும் ஒரு எல்லைக்குள்தான் செயல்படுகின்றன. அதாவது ஒரு

எல்லைக்குள் உட்பட்டதைத்தான், அதனால் கண்டுகொள்ளமுடியும், உணரமுடியும். உதாரணமாக, மிக சக்தி வாய்ந்த வெளிச்சம், நம் கண்களின் வழியாகச் சென்றால், அது நம் கண்களை குருடாக்கிவிடும். நாம் எக்ஸ்ரே (X-RAY) கதிர்களை அறியாதபொழுது, அது நம் உடலுக்குள் எளிதாகச் செல்லும் என்பதையும் அறியவில்லை. நம் உடலுக்குள்ளே உள்ள எலும்பின் தோற்றத்தை அக்கதிர்களின் மூலம் படம் பிடிக்கமுடியும் என்பதையும் நாம் அறிந்திருக்கவில்லை. அதைப்போல, இன்றைக்கு இல்லாவிட்டாலும், நாளை ஒருநாள், ஒரு ஒளிக்கதிர்மூலமாக, கருப்பையில் குழந்தை உண்டாகும் அந்த ஆரம்ப செல்லை (CELL) படம்பிடித்து, அந்தக் குழந்தை உருவாகி பிறந்தபிறகு, அது எத்தனை வருடங்கள் உயிர்வாழும் என்று முன்கூட்டியே சொல்லமுடிந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. இது நடக்கக்கூடிய சாத்யம் உண்டு.

நம்மைச் சுற்றி எத்தனையோ கதிர் அலைகள் பாய்ந்துகொண்டு இருக்கின்றன. ஆனால், அவைகளையெல்லாம் நம் கண்களால் பார்க்கமுடியாது. நாம் இருட்டு என்று சொல்வது எதையென்றால், நம் கண்களால் பார்க்க முடியாத ஒளிக்கதிரைத்தான். ஏனெனில், நம் கண்களால் சில ஒளிக்கதிர்களைப் பார்க்க முடியாது. அவைகள் நம் கண்களுக்கு இருட்டாகவே தெரியும். ஆகவே, ஒரு மனிதன் இருட்டில் நின்று கொண்டு, ஒளியைப்பற்றி ஏதாவது அபிப்ராயம் கூறினால், அது பெரும்பாலும் தவறாகவே இருக்கும். இருட்டு என்பது ஒளியின் வித்தியாசமான பகுதிதான். சாசுவதத்தன்மையின் மாற்றம்தான் இறப்பு என்றாலும், ஒருவன் இறப்பில் இருந்துகொண்டு, சாசுவதத் தன்மையைப்பற்றி அபிப்ராயம் கூறினால், அதுவும் தவறாகவே இருக்கும். நாம் சாசுவதத்தன்மை என்றால் என்ன என்று சரியாக அறிந்தாலொழிய, எதையும் சரியாகக் கணிக்க முடியாது, புரிந்து கொள்ள முடியாது.

இறப்பால் சூழப்பட்டிருக்கும் மக்கள், சாசுவதமானது என்றால், நாம் ஒருக்காலும் இறக்கமாட்டோம் என்ற அர்த்தம் பண்ணிக் கொள்வார்கள். ஆனால் அவர்கள் நினைப்பது தவறு. சாசுவதமானது என்றால் என்ன என்று சரியாகப் புரிந்துகொண்டவர்களால் மட்டுமே, அவர்கள் இதற்கு முன்பு இருந்தது இல்லை என்பதை தீர்க்கமாக அறிந்து

—

கொள்வார்கள். இந்த வித்தியாசம் மிகவும் ஆழமானது மற்றும் அடிப்படையானது. ஒருவன் இறப்பைக் காணும்பொழுது, ஆத்மா என்பது அழிவில்லாதது என்றால், அவன் இறக்கமுடியாது என்றே கருதுவான். அவனுடைய எண்ணங்கள் அனைத்தும் வருங்காலத்தைப் பற்றியதாகவே இருக்கும். அவன் எப்பொழுதும் வருங்காலத்திலேயே இருப்பான். ஆகவே, அவன் எப்பொழுதும் கவலையில்தான் இருப்பான். ஆகவே, அவனுடைய புரிந்துகொள்ளுதலும் வருங் காலத்தைப் பற்றியதாகவே இருக்கும். ஆனால், சாசுவதமானது என்றால் என்னவென்று சரியாகப் புரிந்துகொண்டவன், '' நான் இதற்கு முன்பு இருந்ததில்லை. ஏன், நான் பிறக்கவே இல்லை'' என்றுதான் எண்ணுவான். அவன் இறந்தகாலத்தை சார்ந்த வனாகவே இருப்பான்.

சகல விஞ்ஞான விஷய ஞானங்களும், இறப்பால் சூழப் பட்டிருப்பதால், விஞ்ஞானம் எப்பொழுதுமே வருங்காலத்தைப் பற்றியேதான் பேசும். அதற்கு மாறாக, எல்லா மதங்களும், சாசுவதமானவற்றால் சூழப்பட்டிருப்பதால், அது எப்பொழுதும் இறந்தகாலத்தைப் பற்றியே பேசும். அதாவது இந்த உலகத்தோற்றம் பற்றியே பேசும். அதன் முடிவைப்பற்றி அல்ல. அது எப்பொழுதும் ஆரம்ப நிலையைப் பற்றியே எண்ணியவாறு இருக்கும். இந்த உலகம் எப்படி வந்தது, நாம் மற்றும் இந்த ஆன்மா எங்கேயிருந்து உதித்தது என்றே மதம் கவலைப்படும். மதம் சொல்வது என்ன என்றால், நாம் எங்கிருந்து வந்தோம் என்பது முழுமையாக நமக்குத் தெரிந்தால், நாம் இறந்த பிறகு எங்கே செல்வோம் என்பது பற்றிக் கவலைப் படதேவையில்லை என்றும், நாம் உதித்த ஆரம்ப நிலையைத் தவிர்த்து, வேறு எங்கேயும் போக மாட்டோம் என்றும், நமது ஆரம்பம்தான், நமது முடிவு மற்றும் நமது தேடுதல் என்பதாகும். விஞ்ஞானத்தை ஆராய்ச்சி செய்பவர்கள், இறப்பை ஆதாரமாகக் கொண்டு இயங்குகிறார்கள். ஆனால் இறப்பின் அர்த்தமற்ற நிலையில், மதவாதிகள் தங்கள் எண்ணங்களை செலுத்துகிறார்கள்.

இறப்பு எப்பொழுதும் வருங்காலத்திலேயே இருக்கிறது. அதற்கும் இறந்தகாலத்துக்கும் எந்தவித சம்மந்தமும் இல்லை. இறந்தகாலத்தில், இறப்பு தன் முக்கியத்துவத்தை இழக்கிறது. இறப்பு நாளையில் இருக்கிறது. ஆனால் வாழ்வின் ஆரம்ப நிலை எப்பொழுதும்

முக்கிய நாளில் அல்லது முடிந்த நாளில் இருக்கிறது. கங்கையின் ஆரம்பநிலை கங்கோத்திரியாகும். ஆனால் அந்த கங்கை, தன்னை வெறுமையாக்கிக் கொள்வது கடலில்தான். அது நேற்று ஆரம்பமாகியது; நாளை அது முடிகிறது.

ஆகவே, ஒரு மனிதன் இறப்பால் சூழப்பட்டால், அவனுடைய முடிவுகள் அனைத்தும் இறப்பின் நிறம்கொண்டுதான் இருக்கும். மேல்நிலையில் உள்ள உண்மை என்பது, கீழ் நிலையில் வெறும் அனுமானமாகவே இருக்கும். இரண்டாவது நிலையின் உண்மைத் தன்மையை, அந்த நிலையில் ஏற்பட்ட அனுபவத்தாலேயே கணிக்க வேண்டும். ஆகவே இரண்டாவது நிலையை அடைந்து அதன் உண்மைநிலையை அறிந்தவர்களுக்கு, முதல் நிலையைப்பற்றியும் தெளிவாகத் தெரிந்திருக்கும். ஆனால், முதல் நிலையைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆகவேதான், நாம் புத்தா, கிருஷ்ண மற்றும் கிறிஸ்து போன்றவர்களை, மிகவும் புத்தி கூர்மை படைத்தவர்கள் என்றும் அறிவாளிகள் என்றும் வர்ணிக்கிறோம். அப்படிச்சொல்லுவதற்குத் தகுந்த காரணம் உண்டு. அவர்களுக்கு எல்லா நிலைகளும் நன்றாகத் தெரியும். ஆகவேதான், அவர்கள் சொல்வது அனைத்தும் மிகவும் அர்த்தமுடையதாகிறது. நாம் அறிந்தவைகள் அனைத்தையும், அவர்கள் கண்டிப்பாக அறிந்திருப்பார்கள். அவர்களுக்கு அது ஒன்றும் கஷ்டம் இல்லை. அவர்களுக்கு இறப்பைப் பற்றியும், மற்றும் கோபம், துன்பம், வன்முறை போன்றவைகள் பற்றியும் தெளிவாகத் தெரியும். இது, எல்லா நிலைகளிலும் ஏற்பட்ட அவர்களது அனுபவத்தால், தானே அறிந்துகொண்டது.

மேற்கத்திய நாடுகளில், சேகரிக்கப்பட்ட விஷய ஞானங்கள் அனைத்தும் ஒரே நிலையில் அமைந்துள்ளது. ஈன்ஸ்டின் (EINSTEIN) அறிந்த விஷய ஞானத்திற்கும், நாம் அறிந்தவற்றிற்கும் உள்ள ஒரே வேற்றுமை அளவில்தான். உதாரணமாக, நாம் இந்த மேஜையை அளக்க முடியும். ஆனால் அவர் இந்த முழு உலகத்தையுமே அளக்க முடியும். இதில் அளவில்தான் வித்தியாசமே தவிர, தரத்தில் அல்ல. அதாவது நாம் அறிந்தவற்றை விட வேறுவகையில், அவர் வித்தியாசமான முறையில் வேறு எதையும் அறியவில்லை. நீங்கள் குறைவாக அறிந்திருக்கலாம். ஆனால், அவர் அதிகமாக அறித்திருக்கிறார். உங்களிடம் ஒரு டாலர்

இருக்கிறது. ஆனால் அவரிடம் ஒரு மில்லியன் டாலர் இருக்கிறது. ஆனால் உங்களுடைய ஒரு டாலரும், அவருடைய ஒரு மில்லியன் டாலரும் அளவில்தான் வித்தியாசமே தவிர, தரத்தில் அல்ல.

நாம் புத்தரையும், மஹாவீரரையும் ஞானி அல்லது உண்மையை அறிந்தவர் என்று கூறும்பொழுது, நாம் வேறுவிதமாக அர்த்தம் செய்கிறோம். நம்முடைய நிலையில், நாம் அறிந்தததைவிட, அவர்கள் ஒருக்கால் குறைவாகத் தெரிந்திருக்கலாம். ஆனால் அவர்களை ஞானிகள் என்று நாம் அழைப்பதன் காரணம், அவர்கள் நாம் அறிந்திராத மேலான நிலையையும் அறிந்திருக்கிறார்கள்.

மஹாவீராவும், ஈன்ஸ்டினும் சந்தித்துக்கொண்டால், ஈன்ஸ் டினுக்குத் தெரிந்த விஷயஞானங்களை, மஹாவீரா அறியவில்லை என்றுகூட நிரூபிக்க முடியும். ஈன்ஸ்டினிடம் உள்ள அற்புத விஞ்ஞானக் கருத்துக்களை, மஹாவீரா அறிந்திருக்க முடியாதுதான். அப்பொழுது மஹாவீரா, ''நான் இந்த மேஜையை மட்டும்தான் அளக்க முடியும். ஆனால், நீங்களோ, இந்த முழு உலகத்தையுமே அளக்க முடியும். நீங்கள் இந்த பூமியிலிருந்து சந்திரன் மற்றும் நட்சத்திரங்களின் தூரத்தை அளவிடமுடியும். ஆனால் அது என்னால் முடியாது. நான் இந்த அறையை சரியாக அளந்தாலே, பெரிய விஷயம். இருந்தாலும், நீங்கள் என்னைவிட சிறப்பாக அறிந்தவர் என்று நான் ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனென்றால், நீங்கள் அறிந்தது உலக விஷய ஞானங்களில் சற்றுகூடுதலானது மட்டுமே; வித்தியாசமானது அல்ல. ஆகவே, அது சாதாரண தரத்தில்தான் உள்ளது'' என்பார்.

ஒரு அறையை அளக்கும்பொழுது, நட்சத்திர தூரத்தையும் அளவிடமுடியும். அதில் பெரிய மாற்றம் என்று எதுவும் கிடையாது. ஈன்ஸ்டினிடம் எந்த வித்தியாசமான மாற்றமும் நிகழவில்லை. அவர் வித்தியாசமான மனிதராக விளங்கவில்லை. அவரும், நாமும் ஒரே நிலையில்தான் இருக்கிறோம். வேண்டுமானால், அவர் கொஞ்சம் கூடுதலான அறிவுக்கூர்மைப் படைத்தவராக இருக்கலாம். ஒரே நிலையில், அவர் மிக அதிக வேகத்தில் செல்ல முடியும். நாம் மெதுவாகவே செல்ல முடியும். அவ்வளவுதான் வித்தியாசம். அதே நிலையில், ஈன்ஸ்டின் வெகுதூரம் செல்ல முடியும். ஆனால், ஈன்ஸ்டின் வேறு ஒரு வித்தியாசமான நிலைக்குச் செல்லவில்லை.

அந்த மேலான நிலையை அறிந்தவர்களின் பட்டியலில், புத்தர் அல்லது மஹாவீரா மற்றும் பிற ஞானிகளைச் சேர்க்கும் பொழுது, அவர்கள் இறப்பின் நிலையைத் தாண்டி, அந்த சாசுவதமானதை அறிந்து, அதைப் பற்றி அவர்கள் சொன்னது அனைத்தும் மேலான மதிப்பு உடையது என்று அறிகிறோம். அதை இப்படி நீங்கள் புரிந்து கொள்ளலாம். அதாவது, குடிப்பழக்கம் இல்லாதவன், அதைப்பற்றி ஒரு அறிக்கைவிட்டால், அதற்கு எந்த மதிப்பும் இருக்காது. ஆனால், ஒருவன் குடித்துப் பழக்கப்படுத்திக்கொண்டு பிறகு அதைப் பிரக்ஞையாகத் தாண்டிச் சென்று, அதைப் பற்றி அபிப்ராயம் சொன்னால், அதற்கு மதிப்பு உண்டு. இதை ஆழ்ந்து புரிந்து கொள்ளுங்கள்.

ஒருவன் குடிக்காமல் இருந்தால், அதைப் பொருத்தவரையில் அவன் குழந்தைதான். அவனுடைய அறிக்கையும் குழந்தைத்தன மாகவே இருக்கும். ஆகவேதான், குடிக்காதவன், குடித்தவனைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. குடித்தவன், '' நீங்கள் தெரிந்ததை, நாங்களும் தெரிந்துவைத்திருக்கிறோம். இப்பொழுது நீங்கள் அறிந்ததைவிட, மேலும் தெரிந்து கொண்டிருக்கிறோம்'' என்று கூறுகிறார்கள். ஆகவே, நீங்கள் குடித்தால், அதைப் பற்றி ஏதாவது சொல்ல முடியும். ஆனால் ஒருவன் குடிப்பழக்கத்துக்கு ஆளாகி, பிறகு அதை விட்டு விட்டு, அதைப் பற்றிச் சொன்னால், அது விரிவாக, அர்த்தமுள்ளதாக இருக்கும். அப்பொழுது குடிப்பழக்கம் உள்ளவர்கள் திருந்துவதற்கு வாய்ப்பு உண்டு.

ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும், குடித்து, பிறகு விட்டு விட்டவர்களுக்கான ((EX-ALCOHOLICS) சங்கங்கள் இருக்கின்றன. இதில், குடித்து பழக்கப்படுத்திக்கொண்டு, பிறகு முழுமையாக விட்டவர்கள் அங்கத்தினராக இருக்கிறார்கள். இவர்கள், குடிப்பழக்கம் உள்ளவர் களைத் திருத்த முயல்கிறார்கள். இதில் ஆச்சரியம் என்னவென்றால், இவர்கள் தங்கள் முதிர்ந்த அனுபவத்தை, குடிப்பழக்கம் உள்ளவர்களிடம் எடுத்துச்சொல்லும் பொழுது, அதன் பயன் வியக்கத்தக்கதாக இருக்கிறது. அதாவது, குடிப்பழக்கம் உள்ளவர்கள், அவர்களின் விளக்கங்களை விரைவில் மனதார ஏற்றுக் கொள்கிறார்கள். ஏனென்றால், அவர்களது விளக்கங்கள் அனைத்தும், அவர்களுடைய அனுபவத்திலிருந்து வந்தது. அவர்களும், தங்களைப் போல

குடிகாரர்களாக இருந்து, நினைவிழந்து அனுபவப்பட்டவர்கள் என்று புரிந்து கொள்கிறார்கள். ஆகவேதான், அவர்களது அனுபவத்திலிருந்த' வந்த அறிக்கைகளுக்கு மதிப்பு இருந்தது.

இதை ஒரு உதாரணம் மூலமாக உங்களுக்கு விளக்கியிருக்கிறேன். ஆனால், நீங்கள் குடித்தாலும், குடிக்கா விட்டாலும் அல்லது குடித்து விட்டிருந்தாலும், நீங்கள் இருக்கும் அந்த நிலையில், எந்த மாறுதலும் இல்லை. நீங்கள் இப்பொழுதும் அதே நிலையில்தான் இருக்கிறீர்கள். அடுத்த மேலான நிலைக்குச் செல்லவில்லை. அதில் உள்ள வித்தியாசம், ஒரு ஏணியில் உள்ள படிகளின் வித்தியாசத்தைப் போலத்தான். ஆனால், எப்பொழுது நீங்கள் இறவாமையை அனுபவப்பூர்வமாக உணருகிறீர்களோ, அப்பொழுது தான் நீங்கள் மேலான நிலைக்குச் செல்கிறீர்கள். புத்தர், மஹாவீரா மற்றும் கிருஸ்துவின் போதனைகள் நம்மிடம் பெரிய தாக்குதலை ஏற்படுத்தியிருக்கிறது. ஏனென்றால், நாம் சாதாரணமாக அறிந்தவைகளையும் அவர்கள் அறிந்து, அதற்கு மேலும் உள்ளவற்றையும் அறிந்ததுதான் காரணம். இந்த புதிய ஞானத்தால், நாம் அறிந்தவற்றில் உள்ள அடிப்படையான தவறுகளை அவர்கள் சுட்டிக்காட்ட முடிகிறது.

***''நீங்கள் மஹாவீரரைப் பற்றிப் பேசும்பொழுது, மஹாவீரர் சென்றபிறவியில் தன்னை முழுமையாக அறிந்து ஞான நிலையை அடைந்துவிட்டார். ஆனால், தான் அறிந்ததையும், உணர்ந்ததையும் பிறருக்கு எடுத்துச்சொல்ல வேண்டும் என்ற கருணையின் அடிப்படையில்தான், அவர் மறுபிறவி எடுத்தார் என்று கூறினீர்கள். அதைப்போல, பிறவியிலிருந்தே ஞானத்தன்மையில், கிருஷ்ணா இருந்ததாகச் சொன்னீர்கள்.***

***முன்பு ஒரு தடவை, உங்களை ஜபல்பூரில் சந்தித்து நான் பேசிக் கொண்டிருந்த பொழுது, நீங்கள் மஹாவீரா, கிருஷ்ணா போன்றவர்களைப் பற்றி சொன்னது, உங்களுக்கும் பொருந்தும் என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. நீங்கள்கூட, கருணையின் அடிப்படையில்தான் மறுபிறவி எடுத்து வந்திருக்கிறீர்களா? அப்படியாயின், உங்களுடைய ஆற்றலைப் பற்றியும், சாதனைகளைப்பற்றியும் கருணை கூர்ந்து விளக்க முடியுமா? அவைகள் ஆன்மிகத் தேடுதலில் உள்ளவர்களுக்கு பெரிதும்***

***பயன்படும் என்று நினைக்கிறேன். மேலும், உங்களுடைய முந்தைய பிறவிக்கும், இந்தப் பிறவிக்கும் உள்ள இடைவெளியைப் பற்றி கொஞ்சம் சொல்ல முடியுமா?''***

இவைகளைப் பற்றியெல்லாம், விளக்கும்பொழுது, நான் பல விஷயங்களை மனத்தில் வைக்க வேண்டியுள்ளது. முதலில், கிருஷ்ணா போன்றவர்கள் பிறப்பு எடுக்கும் பொழுது, அவர்களுடைய முற்பிறவியில், தன்னைத்தனே முழுமையாக அறிந்து கொண்டபிறகு, மறுபிறவி எடுக்கலாமா, வேண்டாமா என்பது அவர்களது சுதந்திரமான தீர்மானத்தில் அமைந்துள்ளது என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். அப்படி அவர்கள் பிறவி எடுத்தால், அதுஅவர்களுடைய முழு சுதந்திர அடிப்படையில்தான் அமைந்திருக்கும்.

தன்னை முழுமையாக அறிந்து கொள்வதற்கு முன், எடுக்கும் பிறவிகள் அனைத்தும் அவர்களது விருப்பப்படி சுதந்திரமாக அமையாது. அப்படிப்பட்டவர்கள் எடுக்கும் பிறவிகள் அவர்களது எண்ணப்படி ஒருக்காலும் இருக்காது. பொதுவாக, மறுபிறவிகள் என்பது நிறைவேறாத ஆசைகளின் உந்துதலால் மட்டுமே ஏற்படும். அதாவது நம்முடைய முந்தைய பிறவிகளின் செயல்பாட்டாலும், ஆசைகளினாலும் நாம் வருங்கால பிறவியை நோக்கித் தள்ளப்படுகிறோம் அல்லது இழுக்கப்படுகிறோம். ஆகவே, உதவியற்ற நிலையில் ஏற்படக் கூடிய நிகழ்ச்சிதான் உங்கள் பிறவிகள்.

முழுமையான பிரக்ஞையில் மற்றும் தன்னை முழுமையாக அறிந்து கொள்தல் மூலமாகவே, நீங்கள் உங்கள் பிறவியை உங்கள் விருப்பப்படி தேர்ந்து எடுக்க முடியும். மேற்கொண்டு அறிவதற்கு எதுவும் இல்லை என்ற நிலையில்தான், இது நடக்கக் கூடிய சாத்யம் ஏற்படும். அந்தக் கட்டம் ஒருவரிடம் எப்பொழுது ஏற்படும் என்றால், அவர், எனக்கு எந்த வருங்காலமும் இல்லை. ஏனென்றால், என்னிடம் எந்த ஆசையும் கிடையாது. ஆகவே அதை அடைய வேண்டிய அவசியம் இல்லை'' என்று உணர்வுப் பூர்வமாகச் சொல்லும் பொழுதுதான். இதைப் போன்ற நிலை நீங்கள் மிக உச்சத் தன்மையை அல்லது நிலையை அடையும் பொழுதுதான் ஏற்படும்.

ஒருவர் விடுதலை அடைய வேண்டும் என்று ஆசைப்பட்டால், அவருக்கு விடுதலை கிடைக்காது; அதைப் போல ஒருவரிடம் எந்த

ஆசையும் இல்லாமல் இருந்தால், அவர் விடுதலை அடைகிறார்! இது மிகவும் ஆச்சரியமான, வாழ்வின் பல புரியாத புதிர்களில் ஒன்று. யார் ஒருவர் இந்த இடத்தில், இந்த குறிப்பிட்ட குடும்பத்தில் தான் பிறக்க வேண்டும் என்று விரும்புகிறார்களோ, அவர்களால் அப்படி ஒரு பிறவி எடுக்க முடியாது. அதற்கு மாறாக, யார் ஒருவருக்கு எங்கு வேண்டுமானாலும் அவர் விருப்பப்படி பிறவி எடுக்க முடியும் என்ற சுதந்திரம் கிடைக்கிறதோ, அவர்கள் அந்த சுதந்திரத்தை பெரும்பாலும் பயன்படுத்துவதில்லை.

இந்த சுதந்திரமான மறுபிறவி எடுத்தல் என்பது ஒரே ஒரு தடவைதான் ஏற்படும். அதனால், அவர்கள் மேற்கொண்டு பிறவி எடுக்க முடியாது என்ற அர்த்தம் இல்லை. ஆனால், ஒரு மறு பிறவி எடுத்த பிறகு, மறுபடியும் சுதந்திரமாக இன்னொரு பிறவி எடுக்க வேண்டும் என்ற ஆசையை அவர்கள் இழந்து விடுகிறார்கள்.

சுதந்திரம் எப்பொழுதும் உங்களிடமே இருக்கிறது. இந்த வாழ்க்கையில், அந்த மேன்மையான ஆன்மிக அனுபவத்தை அடைந்து விட்டால், அந்த சுதந்திரம் பரிபூர்ணமாக உங்கள் விருப்பப்படி செயல்படுகிறது. ஆனால், அந்தப் பரிபூர்ண சுதந்திரத்தை அடைந்த பிறகு, சாதாரணமாக என்ன நேரிடுகிறது என்றால், அதை உபயோகிக்கக் கூடிய ஆசை உடனே போய்விடுவதில்லை. இந்த நிலை உபயோகமானதுதான்.

யார் ஒருவர் இந்த நிலையை மிகவும் ஆழமாகப் பார்க்கிறார்களோ, அவர்கள் இதுவும் ஒருவித விலங்குதான் (BONDAGE) என்று உணர்வார்கள். ஆகவேதான், இந்த வகையில், மிகவும் ஆழமாக தேடுதலில் ஈடுபட்ட ஜைனர்கள்-இந்த உலகத்தில் உள்ள மற்ற மதத்தினரைக் காட்டிலும்- இந்தக் கட்டுப்பாட்டை அல்லது விலங்கை ''தீர்த்தங்கரா கத்ராபந்த்'' (TEERTHAN KARA GATRA BANDH) என்று அழைக்கிறார்கள். அதாவது, மற்றவர்கள் ஞானநிலையை அடைய உதவி செய்ய, குருவாக இருக்க ஆசைப்பட்டு மறுபிறவி என்ற விலங்கை மாட்டிக் கொண்டவர்கள் என்று அர்த்தம். இதுதான் அவர்களுடைய கடைசி பந்தம். இந்த பந்தத்தில் அவர்கள் முழு சுதந்திரத்தில்தான் இருக்கிறார்கள்-இதுதான் அவர்களுடைய கடைசி ஆசை; அதை பயனுள்ளதாக ஆக்க நினைக்கிறார்கள்.

ஆனாலும் இதுவும் ஆசைதான். ஆகவேதான், ஞானம் அடைந்தவர்கள் அநேகம் பேர்கள் இருந்தாலும், அவர்கள் தீர்த்தங்கராவாகவில்லை. அப்படி தீர்த்தங்கராவதற்கு, மற்றும் அவர்களுடைய சுதந்திரத்தை உபயோகிப்பதற்கு, அவர்கள் ஒரு குறிப்பிட்ட பழைய செயல்களையே தொடர்ந்து செய்து வரவேண்டும். தாங்கள் ஒரு குருவாக வேண்டும் என்ற ஆசை தொடர்ந்து இருக்க வேண்டும். இந்தப் பற்று அல்லது ஆசை நிலையாக இருக்குமானால், அது மறுபிறவியை உண்டு பண்ணும். அப்பொழுது நீங்கள் அடைந்தவை அனைத்தையும், அறிந்தவை மற்றும் அனுபவப்பட்டவை அனைத்தையும் பிறருக்கு அளிக்கலாம், பகிர்ந்து கொள்ளலாம், விவரித்து கொள்ளலாம்.

ஆகவே, ஒருவர் தன் விளக்கம் பெற்ற பிறகு, மறுபிறவி எடுக்க வேண்டும் என்று அவசியம் இல்லை. சுமார் ஒரு மில்லியன் கணக்கில் தன்னை அறிந்தவர்களில், ஒருவர் தான் மறுபிறவி எடுக்க விரும்புவார். ஆகவேதான், ஒரு சிருஷ்டி-கல்ப (SRISTI-KALPA) காலத்தில், அதாவது ஒரு காலகட்ட கடவுளின் உற்பத்தியில், 24 தீர்த்தங்கரா மட்டுமே அவதரிக்க முடியும் என்று ஜைனர்கள் எல்லை வகுத்து வைத்திருக்கிறார்கள்.

இதுவும் மற்றைய சராசரிக் கணக்கு போலத்தான். உதாரணமாக, இன்றைக்கு, சராசரியாக பம்பாய் வீதியில் இவ்வளவு விபத்துகள் ஏற்படும் என்று நீங்கள் சொன்னால் எப்படியோ, அப்படித்தான். அப்பொழுது நீங்கள் பம்பாய் வீதியில் நடந்த 30 வருட விபத்துகளை கணக்கில் எடுத்துக் கொண்டு, அதன் சராசரியை, வகுத்து சொல்கிறீர்கள். இந்த உங்களுடைய முன்கூட்டிய அறிவிப்பு, கிட்டத்தட்ட சரியாகவே இருக்கும். அதைப் போலத்தான், இந்த 24 தீர்த்தங்கரா கணக்கும். இந்தக் கணக்கு, அநேகப் பிறவிகளின் ஞாபக எண்ணிக்கையின் தோராய சராசரி வகுத்தல்தான்.

தன்னை அறிந்த பிறகு, ஒவ்வொருவரும் மறுபிறவி எடுக்க வேண்டியது அவசியம் என்று நான் கருதுகிறேன். இந்தக் கால கட்டத்தில், ஒரு மில்லியன் அளவு ஞானம் அடைந்தவர்களில், ஒருவர் மட்டும் மறுபிறவி எடுப்பது என்பது மிகமிகக் குறைவுதான்.

அநேக உலகங்களின் தோற்றமும், அழிவும் ஞானிகளின் ஞாபகத்துக்கு வர, அவர்கள் ஒரு காலகட்டத்துக்குள் இவ்வளவு தீர்த்தங்கராக்கள் அவதரிப்பார்கள் என்று அறிவித்தார்கள். அது சராசரியாக 24 என்ற எண்ணிக்கையில் அமைந்தது. இவர்கள் மட்டும்தான் மறு அவதாரம் எடுத்து, மக்களுக்குப் போதிக்க வந்தார்கள் என்று கூறினார்கள். இப்பொழுது, பம்பாய் வீதிகளில் நடக்கும் சராசரி விபத்துக்களைப் பற்றி முன்சொன்னதை நாம் ஞாபகப் படுத்திக் கொள்வோம். அந்தக் கணக்கில், நாம் லண்டன் நகர வீதிகளில் நடக்கும் விபத்துக்களைப் பற்றியோ அல்லது மரின் ட்ரைவில் (MARIN DRIVE) நடக்கும் விபத்துக்களைப் பற்றியோ அல்லது பம்பாய் நகரில் ஒரு குறிப்பிட்ட வீதியில் நடக்கும் விபத்துக்களைப் பற்றியோ கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை.

ஜைனர்களின் கணக்கு, அவர்களுடைய நோக்கில் காட்டப்பட்ட கணக்காகும். அதில், ஜீசஸ், கிருஷ்ணா அல்லது புத்தாவினுடைய பாதைகளை எடுத்துக் கொள்ளவில்லை. ஜைனர்களைப்போல, ஹிந்துக்கள் தங்கள் பாதையை ஞாபகப்படுத்தி, கணக்குப் போட்டதில், அவர்களுக்கும் 24 எண்ணிக்கை வந்தது மிகவும் சுவாரசியமானதுதான்! அதைப் போல பௌத்தர்களுக்கும் வந்திருக்கிறது! ஆகவேதான், இந்த 24 அவதாரங்கள் என்பது மிகவும் புகழ்பெற்றுவிட்டது!

இதைப்போல, கிறிஸ்துவமும், இஸ்லாமும் மிகவும் ஆழமாகப் பின் நோக்கிச் செல்லவில்லை. ஆனால், இஸ்லாம், முகமது முதல் ஆன்மிக வாதியல்ல; அவரைப் போல பலபேர்கள் அவருக்கு முன் வந்திருக்கிறார்கள் என்று கூறுகிறது. முகமது கூட, தனக்கு முன், நான்கு பேர்கள் தான் தன்னைப் போல வந்திருக்கிறார்கள் என்று கூறுகிறார். ஆனால், அவர்களை மக்கள் சுலபமாகப் புரிந்து கொள்ளவில்லை. முகமதுவின் வழியின் தொடரை, (அவருக்கு முன் உள்ளது) கண்டுபிடிக்க முடியவில்லை. முகமதுவை வைத்தேதான் அது ஆரம்பமாகிறது போலத் தோற்றம் அளிக்கிறது. மஹாவீராவை வைத்து, அந்த ஆன்மிக வழியில் வந்த கடைசி 24வது தீர்த்தங்கரா அவர் என்று தெளிவாக அனுமானம் செய்ததுபோல, முகமதுவை வைத்து அவர் வழியை யாரும் தெளிவாகக் கூற முடியவில்லை. இங்கு மஹாவீராவுடன், அந்த வழியின் கடைசி நிலை முடிவடைகிறது.

ஆனால், முகமதுவும் தனக்கு பின்னே வருபவர்களை நினைத்திருக்க வேண்டும். ஆனால் அதைத் தெளிவாகச் சொல்வது கஷ்டமாக இருந்தது. ஜீசஸ் கூட தனக்கு முன்பு வந்தவர்களை கணக்கிட முயன்றார். ஆனால் அவருடைய கணக்கு தெளிவாக இல்லை. ஏனென்றால், ஜீசஸின் வழி புதிரானது. அதனுடைய ஆரம்பமே ஜீசஸிடமிருந்துதான் தோன்றியது. புத்தரும் ஜீசஸைப் போல சங்கடப்பட்டார். அவராலும் தெளிவாக விளக்க முடியவில்லை. ஆனால் அந்த வழியை மறைமுகமாக சுற்றி வளைத்துதான் வெளியிட்டிருக்கிறார்.

ஆகவே தான், 24 புத்தர்களை எண்ணும் பொழுது, புத்தருக்கு முன் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. இந்த வகையில், ஜைனர்கள் மிக ஆழமாகச் சென்று தேடியிருக்கிறார்கள. ஆகவே, அவர்களுடைய கூற்று வலுவாகவே இருக்கிறது என்று சொல்லலாம். அவர்கள், அந்த 24 தீர்த்தங்கராவின் பெயர், விலாசம் போன்றவற்றை தெளிவாகக் கூறியிருக்கிறார்கள். இப்படி, ஒவ்வொருவருடைய வழியிலும் 24 பேர்கள் இருக்கிறார்கள் என்று தீர்மானித்துக் கொள்ளலாம். இவர்கள், தன்னையறிந்த பிறகு, அடுத்து ஒரு பிறவியை எடுக்கலாம். அந்தப் பிறவி, நான் முன்பு சொன்னது போல, கருணையின் அடிப்படையில் தான் இருக்கும்.

இந்த உலகத்தில், காரணமின்றி எதுவும் நடப்பதில்லை. அடுத்த பிறவியை எடுப்பதற்கு இரண்டு காரணங்களில் ஒன்றுதான் இருக்க வேண்டும். அவைகளில் ஒன்று ஆசை, இரண்டாவது கருணை. இதைத் தவிர மூன்றாவது காரணம் என்று எதுவும் இல்லை. நான் உங்கள் வீட்டுக்கு வருவது ஒன்று, ஏதாவதை எடுப்பதற்காக இருக்க வேண்டும் அல்லது ஏதாவதை கொடுப்பதற்காக இருக்க வேண்டும். இதைத் தவிர மூன்றாவது காரணம் என்று எதுவும் கிடையாது. நான் உங்கள் வீட்டுக்கு, எடுப்பதற்காக வந்தால், அது ஆசை. கொடுப்பதற்காக வந்தால், அது கருணை. இதைத் தவிர மூன்றாவது காரணம் எதுவும் இல்லை.

ஆசையால் ஏற்பட்ட எல்லா பிறப்புகளும், மற்றொன்றை சார்ந்தே இருக்கும். அவைகள் சுதந்திரமாக இயங்க முடியாது. நீங்கள் பிச்சை எடுப்பதிலும் மற்றும் பிறர் உதவியை நாடுவதிலும் என்ன சுதந்திரம் இருக்கப் போகிறது? எப்படி ஒரு பிச்சைக்காரன் சுதந்திரமாக இயங்க முடியும்?.

ஒரு பிச்சைக்காரன் ஒருக்காலும் சுதந்திரமாக இருக்கமுடியாது. ஏனெனில், அந்த சுதந்திரம் அனைத்தும் கொடுப்பவரிடம் போய்ச் சேருகிறது. அவர் சுதந்திரமாக இயங்க முடியும். நீங்கள் எடுத்துக் கொள்ளாவிட்டாலும், கொடுப்பவர் கொடுத்துக்கொண்டுதான் இருப்பார். ஆனால், நீங்கள் கொடுக்காவிட்டால், ஒரு பிச்சைக்காரன் தானாக எதையும் எடுத்துக்கொள்ள முடியாது. மஹாவீரா மற்றும் புத்தர் கொடுத்தது அனைத்தையும், நாம் எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. ஆனால், அவர்கள் கொடுப்பது என்பது சர்வ நிச்சயம்.

நீங்கள் அதை எடுத்துக் கொள்வது என்பது நிச்சயமில்லை. ஆனால் கொடுப்பது என்பதை அவர்களால் தவிர்க்கமுடியாது. தாங்கள் அடைந்ததை, உணர்ந்ததை, அறிந்ததை பிறருக்கு பகிர்ந்து அளிப்பது என்பது இயல்பானது. அந்த ஆசைதான் அவர்களுடைய கடைசி ஆசையாக இருக்கும். ஆகவேதான், அதையும் ஒரு பந்தம் (BONDAGE) என்று கூற வேண்டியுள்ளது. உண்மையை அறிந்தவர்கள் அதை செயல்பாட்டின் பந்தம் என்றே கூறுகிறார்கள். ஆகவேதான், நான் உங்கள் வீட்டுக்கு வரவேண்டியுள்ளது. நான் எடுப்பதற்காகவோ அல்லது கொடுப்பதற்காகவோ, அங்கே வரலாம். ஆனால் நான் அங்கு வந்துதான் ஆகவேண்டும்.

ஆனால் அதில் ஒரு பெரிய சங்கடம் உள்ளது. சாதாரணமாக, ஒருவர் உங்கள் வீட்டுக்கு வருகிறார் என்றால், அவர் உங்களிடமிருந்து ஏதாவது பெறுவதற்காகவே இருக்கும். அதைப்போல நீங்கள் ஒருவரது வீட்டுக்கு ஏதாவது பெறுவதற்காகவே செல்வீர்கள். ஆனால், ஒருவர் கொடுப்பதற்காக உங்கள் வீட்டுக்கு வருவதை உங்களால் புரிந்து கொள்வது மிகவும் கஷ்டம்.

இதனால், உங்களால் மிகவும் புரிந்துகொள்ளமுடியாத ஒன்று. இப்பொழுது சொல்கிறேன். கொடுப்பது எதை என்பதை உங்களால் புரிந்துகொள்ளமுடியாதபொழுது, கொடுக்க வருபவர், ஏதோ உங்களிடமிருந்து பெறுவதற்காக வந்ததைப்போல நடிக்க வேண்டியுள்ளது! இது அநேகம் பேர்களுக்கு, அநேக தடவை நடந்திருக்கிறது. ஆனால், இந்த அளவுக்கு கருணையுள்ளவர்கள், உங்களிடம் உணவை கேட்பார்கள் என்று உங்களால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது.

ஆகவேதான், எல்லா மஹாவீரரின் மத பிரசங்களுக்குமுன், அவர் உணவு உண்டபின்பே அவைகள் நிகழ்த்தப்படுகின்றன. அந்த பிரசங்கங்கள் ஒரு நன்றி செலுத்துதல்போல அமைகிறது. அதாவது நீங்கள் அவருக்குக் கொடுத்த உணவுக்கு, அவர் நன்றி செலுத்துகிறார்!

மஹாவீரா உங்களிடம் உணவுக்காக பிச்சை எடுக்கவந்தால், நீங்கள் அதை உடனே புரிந்துகொள்ளுங்கள். அப்பொழுது அவர், நன்றிக்கடனாக சில வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அவர் சென்றுவிடலாம். நீங்களும் இரண்டு ரொட்டித்துண்டுகளைக் கொடுத்து பெரிய சாதனை படைத்ததாக நினைத்துக்கொண்டு மகிழலாம்! ஆனால், அந்தக் கருணையுள்ளம் கொண்டவர்கள், அவர்கள் கொடுப்பதை நீங்கள் ஏற்றுக்கொள்ளும் தகுதி படைத்தவரா என்று பார்ப்பதை உங்களால் அறியமுடியாது. ஆனால் நீங்கள் கொடுப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் அளிக்காதபொழுது, உங்களுடைய அகங்காரம் அதை ஏற்க கண்டிப்பாக மறுக்கும்.

ஆகவேதான், காரணமில்லாமல் மஹாவீரரும், புத்தரும் பிச்சை எடுக்கச்சென்று உங்களிடமிருந்து உணவைப்பெற்றுக் கொள்வ தில்லை. ஏனென்றால் எப்பொழுதும் உங்களுக்கு கொடுத்துக் கொண்டே இருப்பவரை, உங்களால் ஏற்றுக்கொள்ள முடியாது. அது உங்களுடைய அகங்காரத்துக்கு வேதனையைக் கொடுக்கும். ஏன், நீங்கள் அவருடைய பகைவனாகக்கூட மாறலாம். உங்களுக்குக் கொடுத்துக்கொண்டே இருப்பவரிடம் மற்றும் உங்களிடம் எதையும் பெறாமல் இருப்பவரிடம், நீங்கள் விரோதியாக மாறுவது என்பது மிகவும் வித்தியாசமாகவும், நம்பமுடியாததாகவும் இருக்கிறதே என்று நீங்கள் நினைக்கக்கூடும். அவர் உங்களிடமிருந்து எதுவும் பெறாமல் இருந்தால், அது உங்களுக்கும், அவருக்கும் இடையில் ஒரு தடுப்பை ஏற்படுத்திவிடும்.

ஆகவேதான், இதைப்போன்றவர்கள் ஏதாவது சிறிய பொருள்களை உங்களிடமிருந்து பெற்றுக்கொள்வார்கள். அவர்கள் சில சமயம் சாப்பாட்டைக் கேட்பார்கள். சிலசமயம் உடைகளைக் கேட்பார்கள் மற்றும் சிலசமயம் தங்குவதற்கு இடம் கேட்பார்கள். இப்படி அவர்கள் உங்களிடமிருந்து ஏதாவது பெற்றுக்கொண்டு, உங்களுடைய இறுக்கத்தைக் குறைப்பார்கள். அப்பொழுது நீங்கள் ஒரே

நிலையில் இருப்பதாக உணருவீர்கள். ஏனென்றால், அவர் சொன்ன சில வார்த்தைகளுக்காக, நீங்கள் அவருக்கு உணவு கொடுத்திருக்கிறீர்கள். இப்பொழுது நீங்கள், அவரைவிட உயர்ந்தவராகக்கூட நினைத்துக் கொள்ளலாம்! நீங்கள் அவருக்கு இருப்பிடம், ஆடைகள் அல்லது பணம் கொடுத்திருக்கலாம். இதற்காக அவர் என்ன பெரிதாகக் கொடுத்திருக்கிறார்? அதற்குப் பதிலாக அவர் சிலகதைகளை அல்லது சில அறிவுரைகளை சொல்லியிருக்கலாம்.

ஆகவேதான், புத்தர் தன் சந்நியாசிகளை 'பிக்குகள்' (BHIKKUS) என்று அழைத்தார். அவர் அவர்களை பிச்சை எடுக்க அனுப்புவார். அப்பொழுதுதான் அவர்கள் மக்களுக்கு ஏதாவது கொடுக்கமுடியும். அவர்கள் பிச்சைக்கார வேடத்தில்சென்று, மக்களிடம் ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தி, அவர்கள் மக்களுக்கு சுலபமாக தங்கள் ஆன்மிகக் கருத்துக்களை வழங்கமுடியும் என்று புத்தர் கருதினார்.

ஆகவே கருணையும் பல சங்கடங்களை தோற்றுவிக்கின்றது! ஒரு மனிதன் அந்த நிலையில் இருக்கும்பொழுது, பல பெரிய தொல்லை களுக்கு ஆளாகிறான். அவர்களை நம்மால் புரிந்துகொள்ள முடியாதுதான். அவர்களுடைய மொழியை அல்லது கருத்துக்களைப் புரிந்துகொள்ளமுடியாத மக்களுடன் கூடவே அவர்கள் வசிக்க வேண்டியுள்ளது. மக்கள் அவர்களைதவறாகவே புரிந்து கொள் வார்கள். அவர்கள் இதைப்பற்றிக் கவலைப்படாவிட்டாலும், அதை அவர்களால் தவிர்க்கமுடியாது. நீங்கள் அவரைத் தவறாகப் புரிந்துகொண்டால் எந்த பாதகமும் இல்லை. ஏனெனில், நீங்கள் உங்கள் நிலையிலிருந்து அவரைத் தவறாகவேப் புரிந்துகொள்வது இயல்புதான் என்று அவருக்குத் தெரியும். ஆகவே, தன்னை உணர்ந்த அந்த ஞானிகள், முற்பிறவியில் பிறருக்கு எப்படிப் போதிப்பது என்ற தகுதியை வளர்த்துக்கொள்ளாவிட்டால், அவர்கள் தன்னை அறிந்த பிறகு உடனே மறைந்துவிடவேண்டியதுதான். இப்படிப்பட்டவர்கள் மறுபிறவி எடுக்கமாட்டார்கள்.

இப்பொழுது, மஹாவீராவும், புத்தாவும் ஏன் ஒரு அரசகுடும்பத்தில் அவதரித்தார்கள் என்பது அர்த்தமுடையது என்பதை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ளலாம். ஒரு தீர்த்தங்கரா என்பவர், ஒரு அரசகுடும்பத்தில்தான் அவதரிக்கவேண்டும் என்று ஜைனர்கள்

தீர்மானமாக நம்புகிறார்கள். மஹாவீரரைப்பற்றி ஒரு கதை நிலவுவதை நான் ஒரு சமயம் சொல்லியிருக்கிறேன். அதாவது, மஹாவீரரின் ஆன்மா முதலில் ஒரு பிராமணப்பெண்ணின் கருப்பையில் நுழைந்துவிட்டது. பிறகு கடவுள் அந்தக் கருவை ஒரு 'சத்திரிய' (CHATRIYA) பெண்ணின் கருப்பையில் மாற்றிவிட்டாராம். ஏனெனில், ஒரு தீர்த்தங்கரா, ஒரு அரசகுடும்பத்தில்தான் பிறக்கவேண்டுமாம். ஏன்? ஏனென்றால், ஒரு அரசகுடும்பத்தில் பிறவி எடுத்தபிறகு, ஒருவர் தன் நோக்கப்படி பிச்சைக்காரரானால் அவர் மிகவும் தீவிரமாகவும் மற்றும் மக்களால் முழுமையாக அங்கீகரிக்கப்பட்டவராகவும் இருப்பார். அவரை மக்கள் நன்றாகப் புரிந்துகொள்வார்கள். ஏனென்றால், மக்கள் எப்பொழுதுமே எதையாவது அரசனிடமிருந்து கேட்கும் அல்லது எடுத்துக்கொள்ளும் பழக்கம் உள்ளவர்கள். இந்தப் பழக்கத்தால், அவர் என்ன கொடுத்தாலும், மக்கள் எளிதாக ஒருக்கால் எடுத்துக் கொள்ளக்கூடும்.

ஒரு அரசன் எப்பொழுதுமே நம்மைவிட மேலான நிலையில் இருப்பதால், நமக்கு அவனிடமிருந்து எதையாவது எதிர்பார்க்கும் குணம் இயல்பாக அமைந்திருக்கிறது. அவர் ஒரு பிச்சைக்காரராக மாறி, வீதியில் பிச்சை எடுத்தாலும், அவர் மக்களைப் பொருத்தவரையில் மேலான நிலையில்தான் இருக்கிறார். மக்களிடம் உள்ள இந்தப் பழைய வழக்கம், அவருக்கு உதவுகிறது. ஆகவே கொடுப்பதற்கு சுலபமான வழி இதுவென்றே கருதப்படுகிறது. இப்படி, ஒரு அரசகுடும்பத்தில், எப்பொழுதோ ஒருதடவை ஒரு தீர்த்தங்கரா உதிக்கிறார். ஆனால் தங்கள் இஷ்டப்படி ஒரு அரசகுடும்பத்தில் இப்படி அவதரிப்பதற்கு அவர்களுக்கு கஷ்டம் எதுவும் கிடையாது. ஏனெனில் அவர்கள் எங்கே பிறக்கவேண்டும் என்று அவர்களால் சுலபமாகத் தீர்மானிக்கமுடியும்.

புத்தா மற்றும் மஹாவீரா போன்றவர்கள் முற்பிறவியிலேயே தன்னை அறிந்துகொண்டவர்கள். அப்பொழுது தாங்கள் அடைந்ததை யெல்லாம் பங்கிட்டு அளித்தார்கள். அவர்கள் முற்பிறவியில் அடைந்துவிட்டார்கள் என்றால், எதற்காக இந்தப் பிறவியில் மஹாவீரா, புத்தா போன்றவர்கள் அதை மறுபடியும் அடைய ஏன் இவ்வளவு கஷ்டப்படவேண்டும் என்று நீங்கள் கேட்கலாம்.

இந்த கேள்விக்குப் பதில் கிடையாது! இதனால், பல குழப்பங்கள் ஏற்பட்டிருக்கின்றன. எதற்காக மஹாவீராவும் புத்தாவும் இவ்வளவு

சாதனை செய்யவேண்டும்? கிருஷ்ணா இவ்வளவு சாதனை செய்ததில்லை. ஆனால் மஹாவீராவும், புத்தாவும் இவ்வளவு கஷ்டமான சாதனை செய்தது உண்மையை அடைவதற்காக அல்ல. உண்மை அவர்களுக்கு ஏற்கனவே தெரியும். ஆனால் அதைப் பிறருக்கு எடுத்துச்சொல்வது என்பது அவ்வளவு சுலபமல்ல. பார்க்கப்போனால், அதுமிகவும் கஷ்டம். உண்மையாகச் சொல்லப் போனால், உண்மையை அடைந்ததைவிட, அதை பிறருக்கு எடுத்துச் சொல்லுவது என்பது அவ்வளவு கஷ்டம்!

உதாரணமாக, கிருஷ்ணாவின் உண்மை தனிப்பட்டு விளங்கவில்லை. ஆகவேதான், கிருஷ்ணா தான் இருந்தநிலையிலேயே, தன் முயற்சியில் வெற்றிகண்டார். ஆனால், மஹாவீராவும், புத்தாவும் போதித்த உண்மை தனிப்பட்டு விளங்கியது. அவர்கள் காட்டிய வழிகளும் தனிப்பட்டு இருந்தது. இந்தவகையில், அவர்கள் இருவரும் தனித்தே விளங்கினார்கள். உதாரணமாக, மஹாவீரா ஒருசிலரிடம் சென்று, நீங்கள் 30 நாட்கள் உபவாசம் இருங்கள் என்று சொன்னால், அந்த நிலையில் மஹாவீரா எந்த உபவாசமும் இருந்ததில்லை என்று அவர்களுக்குத் தெரிந்தால், அவர்கள் எப்படி மஹாவீராவின் பேச்சைக் கேட்கக்கூடும்?

மஹாவீரர் 12 வருடங்கள் பட்டினி இருந்தார். எதற்காக? தான் போதிப்பவர்களுக்காக அப்படிக் கஷ்டப்பட்டார். இல்லாவிட்டால், உபவாசம் பற்றி அவர் மக்களுக்கு எடுத்துச் சொல்ல முடியாது. அப்பொழுது மஹாவீரா மௌனமாக 12 வருடங்கள் இருக்க வேண்டியுள்ளது. எதற்காக? தான் போதிப்பவர்கள் குறைந்தது 12 நாட்களாவது மௌனமாக இருக்க வேண்டும் என்பதற்காகவே. இல்லாவிட்டால், அவர்கள் மஹாவீரரை கேட்க மாட்டார்கள்.

புத்தாவைப்பற்றி, இன்று சுவாரஸ்யமான கதையொன்று இருக்கிறது. புத்தா ஒரு புதிய தியானமுறையை அறிமுகப்படுத்தினார். ஆனால் மஹாவீரா எந்த புதிய தியானமுறையையும் கையாளவில்லை. ஆன்மிகத்தைப் பொருத்தவரையில், ஒரு முழுமையான நிலையை அவர் ஏற்கனவே அறிந்து வைத்திருந்தார். அந்தப் பழைய முறையில், அவர் முதலாவதாக இல்லை; அவர்தான் கடைசி ஆள். அவருக்குப் பின்னால், பல புகழ்பெற்ற போதனையாளர்கள் இருந்திருக்கிறார்கள். அந்த

ஆன்மிக சங்கிலித்தொடர் அறுபடாமல் அப்படியே இருந்தது. ஆகவே, அந்த பழைய போதனையாளர்களின் கருத்துகள் அனைத்தும் அப்படியே மஹாவீராவிடம் படிந்துவிட்டது. ஆகவே, அவர் எதையும் புதிதாகச் செய்யத் தேவையில்லை.

மஹாவீராவின் காலகட்டத்தில், ஆன்மீக விளக்கங்கள் அனைத்தும் தொடர்ந்து வந்துகொண்டே இருந்தது. ஆகவே, மஹாவீரா உண்மையைப் பற்றி எதையும் புதிதாகச் சொல்லத் தேவையில்லாமல் போய்விட்டது. தொடர்ந்து வந்த உண்மையின் விளக்கம், பலகாலமாக அடிப்படையில் வலுவாக இருந்த காரணத்தால், அவர் அதற்கு சற்று உரம் ஏற்றினால் போதும் என்ற நிலையில்தான் இருந்தது. ஆனால், மஹாவீராவும் சிற்சில புதிய சிந்தனைகளை தனக்கே உரித்தான வகையில் அவ்வப்பொழுது வெளியிட்ட காரணத்தால், மக்கள் அவரை ஆவலுடன் ஏற்றுக் கொண்டார்கள். இப்பொழுது நீங்கள் ஒன்றை சுவாரசியமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். அதாவது மஹாவீரர் வந்தபிறகு, ஜைனர்கள் முந்தைய 23 தீர்த்தங்கராக்களை மறந்தே போய்விட்டார்கள்! வேறுவிதமாகச் சொன்னால், மஹாவீரா, அவர்களது அத்தனை இடங்களையும் பிடித்துக் கொண்டுவிட்டார்! சுருக்கமாகச் சொன்னால், ஜைனர்களின் மனத்தை மஹாவீரா முழுமையாக ஆக்ரமித்துவிட்டார். ஒருக்கால், அந்த ஆன்மிக விளக்கம் பெற்றவர்களின் வரிசையில், மஹாவீரா கடைசி ஆளாக இருப்பதால், அந்த நிலை ஏற்பட்டிருக்குமோ? அவர் அந்த பழைய மரபை தோற்றுவித்தவரோ அல்லது முதலில் வந்தவரோ அல்லது எந்த முற்றிலும் புதுமையான உண்மை விளக்கங்களைச் சொன்னவரோ அல்ல. ஏற்கனவே சொன்ன உண்மை விளக்கங்களை, வேறுவிதமாக அவர் எடுத்துச்சொல்லி யிருக்கிறார். அதற்கு ஒரு புதுமைப் பொலிவை ஏற்படுத்தினார். அவ்வளவுதான். ஆனால் அவர் மட்டும் ஜைனர்களின் மனத்தை முற்றிலும் ஆக்ரமித்து, முந்தைய 23 தீர்த்தங்கராக்களும் ஏதோ கற்பனையானது போல ஆகிவிட்டது. இதுதான் ஆச்சரியம்!

மஹாவீரா மட்டும் பிறந்திருக்காவிட்டால், நமக்கு முந்தைய 23 தீர்த்தங்கராக்களின் பெயர்கள் கூட தெரிந்திருக்காது. இதற்கு மிக ஆழமான காரணம் என்னவென்றால், மஹாவீரா தன் தனித்தன்மையை நிலைநாட்ட, 12 வருடங்கள் எடுத்துக் கொண்டார். ஆனால் முந்தைய

தீர்த்தங்கராக்கள் இப்படி எதுவும் செய்யவில்லை. அவர்கள் பெரும்பாலும் தங்கள் சாதனாவிலேயே மூழ்கி இருந்தார்கள். மேலும் மஹாவீராவிடம் ஒரு ஒழுங்குபடுத்தப்பட்ட அமைப்பு இருந்தது. சாதனாவில் எந்த ஒழுங்கு முறையும் கிடையாது. ஆனால் மஹாவீராவைப் பொருத்தவரையில், சாதனாவும் ஒரு வகை ஆன்மிகச் செயலாகக் கருதி, அதை மிகவும் விளக்கமாக நடைமுறைப் படுத்தினார்.

ஆகவேதான், அந்த 23 தீர்த்தங்கராவின் கருத்துக்கள் மறைய, மஹாவீராவின் கருத்துக்கள் தெளிவாகவும், கூர்மையாகவும் மக்களை அடைந்தன. அவர்கள் எல்லாம் மயக்கம் அடைந்து மறைந்ததுபோல ஆகிவிட்டார்கள். மஹாவீராவின் திட்டங்கள் அனைத்தும் ஒழுங்காக அமைந்து இருந்தன. அவருடைய உருவம், தேர்ந்த கலைஞரால் மிகவும் நேர்த்தியாகத் தீட்டப்பட்டதுபோல் மக்களின் மனத்தில் பதிந்து விட்டது. எல்லாவற்றையும் எதிர்கொள்ளும் நிலையில், தன்னையும், தன் முறைகளையும் நல்ல முறையில் திட்டம் தீட்டி செயல்படுத்தினார்.

ஒரு புதிய சாதனா முறையை அமல்படுத்தியதில், புத்தர் முதலில் நிற்கிறார். அதற்காக, புத்தர் பலவழிகளில் சென்று ஆராய வேண்டியிருந்தது. ஆகவே, புத்தர் சாதனாவழிகளிலேயே தன்னை ஈடுபடுத்திக் கொண்டார் என்ற தவறான அபிப்ராயம் உருவாகியது. உண்மையில், புத்தாவும் சென்ற பிறவியில், தான் முற்பிறவியில் விதைத்ததின் அறுவடையை பல பேர்களுக்கு வழங்கவே வந்தார். ஆனால்,புத்தருக்கு முன், எந்த ஒழுங்குபடைத்த அமைப்போ அல்லது விளக்கம் பெற்றவர்களோ கிடையாது. புத்தாவின் தேடுதல் அனைத்தும் அவரையே சார்ந்தது. அவர் ஒரு புதிய பாதையை தானே உண்டாக்கினார். ஒரே மலைக்கு பலவழிகள் இருந்தாலும், தானும் ஒரு புதிய வழியை அவர் ஏற்படுத்தினார்.

மஹாவீரா, ஏற்கனவே போடப்பட்ட ராஜபாட்டையில் நடந்துசென்றார். அப்பொழுது மனது வயப்பட்ட மக்களுக்கு, மீண்டும் அதே கருத்துக்களை, தன் புதிய பாணியில் எடுத்துரைத்தார். ஆனால், அந்தப் பாதை ஏற்கனவே போடப்பட்டு இருந்தது. ஆனால், புத்தா, நிலத்தை சீரமைத்து, தன் வாழ்க்கையில் ஒரு புதிய பாதையைத்தானே ஏற்படுத்தினார். அதற்காக,அவர் முதலில் பல சாதனா முறைகளில்

சென்று பார்த்தார். அப்படி ஒவ்வொன்றையும் பார்த்து, இது உபயோகமில்லை, இதனால் எதையும் அடைய முடியாது என்று ஒவ்வொன்றையும் ஒதுக்கினார். முடிவில், தான் ஏற்படுத்திய பாதையை அறிவித்தார். அப்பொழுது அவர், அந்த பாதையில் தான் சென்று அடைந்ததாகவும், ஆகவே நீங்களும் அந்த வழியில் சென்று அதை அடையலாம் என எல்லோரையும் அழைத்தார்.

இது நன்றாக முறைப்படுத்திய செயல்திட்டம் என்று ஒருவர் கூறக்கூடும்! யார் ஒருவர் ஒரு புதிய முறையை அறிமுகப்படுத்து கிறாரோ, அவர் முன்பு இருந்த பழைய முறைகள் அனைத்தும் தவறு என்று சுட்டிக்காட்ட வேண்டும். ஆனால் முந்தைய முறைகள் அனைத்தும் தவறு என்று அவைகளை அனுபவப்பூர்வமாக உணர்ந்து சொல்லாவிட்டால், அதாவது கிருஷ்ண மூர்த்தியைப் போல, அந்த அறிவிப்புக்கு எந்த மதிப்பும் இருக்காது. ஒருவர், ஒன்றை அனுபவப் பூர்வமாக உணராமல், அது தவறு என்று சொல்லுவதற்கு எந்த தார்மீக உரிமையும் கிடையாது.

சமீபத்தில், ஒருவர் என்னிடம் வந்து, பிறகு கிருஷ்ண மூர்த்தியிடம் சென்று குண்டலினியைப் பற்றிக் கேட்டிருக்கிறார். கிருஷ்ணமூர்த்தி அதெல்லாம் உபயோகமற்றது என்று சொல்லி யிருக்கிறார். அப்படிச் சொன்னவரிடம், பிறகு நான் இதை அனுபவப்பூர்வமாகச் சொல்கிறீர்களா-அதாவது குண்டலினியை பரிசோதித்து விட்டு அப்படி சொல்கிறீர்களா அல்லது கற்றதை வைத்து சொல்கிறீர்களா என்று நான் கேட்டேன். முயன்று பரிட்சித்து அப்படி கேட்டால், அது உபயோகமற்றதுதான். அப்படி பரிட்சித்து கேள்வி கேட்கும்பொழுது, இன்னொரு கேள்வியையும் கேட்கவேண்டியுள்ளது. அதாவது அந்த முயற்சியில் அவர் நிச்சயமாக வெற்றி கண்டாரா அல்லது தோல்வி அடைந்தாரா என்பதுதான் அது.

அவர் அதில் வெற்றியடைந்திருந்தால், அது உபயோகமற்றது என்று சொல்வது அர்த்தமில்லாதது. மாறாக தோல்வியடைந்திருந்தால், மற்றவர்களும் தோல்வி யடைவார்கள் என்று எப்படி அவர் கூறலாம்? ஆகவேதான், புத்தா எல்லா சாதனாவையும் முழுமையாக செய்து பார்த்து, இந்த செயல்பாடு தவறு, அதைக்கடைப் பிடித்தால், எதையும் அடைய முடியாது என்று அனுபவ அடிப்படையில் கூறினார். பிறகு அவர், "நான் இந்த

முறையைப் பின்பற்றி அதை அடைந்தேன். இதை என் அனுபவப்பூர்வமாகச் சொல்கிறேன்'' என்று சொல்லலாம். இதற்கு மதிப்பு அதிகம்.

ஆனால், மஹாவீராவும் இந்த பலவித முறைகளையெல்லாம் கடைப்பிடித்துப் பார்த்துவிட்டு, அவைகள் எல்லாம் பழங்காலத்திலே இருந்து வந்தவைகள். ஆகவே அவைகள் உபயோகமானதுதான் என்று பொதுவாக அறிவித்துச் சென்றுவிட்டார். ஆனால் புத்தா அப்படிச் செய்யவில்லை. அவர் ஒவ்வொன்றிலும் மிக ஆழமாகச் சென்றுதான், அவைகள் உபயோகமற்றது என்று அறிவித்து, பிறகு ஒரு புதிய பாதையை தானே உண்டாக்கினார். ஆனால், இருவருமே முற்பிறவியில் ஞானம் அடைந்தவர்கள் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை.

கிருஷ்ணாவும் முற்பிறவியில் தன்னை அறிந்தவர்தான். ஆனால் பிறர், தன்னை அறிய எந்த புது முறையையும், அவர் உண்டாக்கவில்லை. ஆனால், வாழ்வை முழுமையாக வாழ, ஒரு சில வழிகளை கோடிட்டுக் காட்டிச் சென்றார். ஆகவே, அவரைப் பொருத்த வரையில், ஒருவர் தியானத்தையோ அல்லது வேறு ஆன்மிக முறைகளையோ கடைப்பிடிக்கத் தேவையில்லை. ஏனெனில், அவைகள் அனைத்தும் ஆன்மிக முன்னேற்றத்துக்கு தடங்கலாகவே அமையும்.

நீங்கள் உங்கள் கடையில் வெறுமனே உட்கார்ந்திருந்தாலே, உங்களால் மோட்சத்தை அடைய முடியும் என்று மஹாவீரா சொன்னால், மஹாவீரா, தன்னுடைய தனித்தன்மையை நிரூபணம் செய்யச் செய்த முயற்சிகள் அனைத்தும் வீண் தான். பிறகு மக்கள், மஹாவீராவிடம், ''அப்படியென்றால், எதற்காக எல்லாவற்றையும் விட்டுவிட்டு வந்தீர்கள்?'' என்று கேட்கலாம். கிருஷ்ணா, தியானம் செய்ய காட்டுக்குச் சென்று, பிறகு படைக்களத்தில் நின்றுகொண்டு, படைக்களத்தில் ஒருவர் நிற்கும்பொழுதும் ஞானம் அடையலாம் என்று சொன்னால், யாரும் அவரைக் கேட்க மாட்டார்கள். அப்பொழுது அர்ஜுனனே கூட, எதற்காக என்னை ஏமாற்றுகிறீர்கள் என்று அவரை கேட்கலாம். கிருஷ்ணாவே காட்டுக்குச் சென்றிருந்தால், அப்படி அர்ஜுனன் செய்ததை ஏன் அவர் தடுக்க வேண்டும்?

ஆகவே, இவையெல்லாம் போதிப்பவரைப் பொருத்தது. அவருக்கு எப்படி, எதை எங்கு சொல்வது என்பது நன்றாகத் தெரியும்.

பிறகு அவர் சரியான முயற்சியை, உயிரோட்டமுள்ளதாக சரியான நேரத்தில் எடுப்பார். பொதுவாக இந்த முழுமையான செயற்கைத் தன்மை நிரம்பிய வாழ்வில், ஒருவர் அடிக்கடி ஏதாவது செய்து கொண்டேதான் இருக்க வேண்டும். ஆனால், அவர் கொடுக்க வேண்டியதை கொடுத்தேதான் ஆகவேண்டும். அது தவிர்க்க முடியாதது.

இப்பொழுது, நீங்கள் என்னைப் பற்றி கேட்ட கேள்விக்கு, விடை அளிப்பது என்பது சிறிது சிரமம்தான். நீங்கள் மஹாவீரா, அல்லது புத்தா அல்லது கிருஷ்ணாவைப் பற்றிக் கேட்டால், நான் பதில் சொல்வது சுலபம்தான்! இருந்தாலும், ஒன்று இரண்டை உங்களுடைய பார்வைக்கு வைக்கிறனே். முதலில், என்னுடைய முற்பிறவி 700 வருடங்களுக்கு முன் நிகழ்ந்தது! இதனால், பல சங்கடங்கள் எழுந்துள்ளன.

மஹாவீராவின் முன்பிறவி அடுத்த பிறவிக்கு சுமார் 250 வருடங்களுக்கு முன்பு ஏற்பட்டது. புத்தருடைய முன்பிறவி, புத்தாவாக அவதரிப்பதற்கு முன்பு சுமார் 78 வருடங்களுக்கு முன்பு நிகழ்ந்தது. புத்தாவைப் பொருத்த வரையில், அவருடைய முற்பிறவிக்கு சாட்சியாக, சில மக்கள் அப்பொழுது வாழ்ந்து கொண்டு இருந்தார்கள். ஏன், மஹாவீராவின் வாழ்வில் கூட, சில பேர்களால், அவருடைய முன்பிறவியில்; தாம் அவரைச் சந்தித்ததை நினைவு கூற முடிந்தது. கிருஷ்ணாவின் முற்பிறவி, கிருஷ்ணாவாகப் பிறப்பதற்கு முன் சுமார் 2000 வருடங்களுக்கு முன் நிகழ்ந்தது. ஆகவே, கிருஷ்ணா வெளியிட்ட பழைய ஞானம் பெற்ற ரிஷிகளின் பெயர்கள் மிகவும் தொன்மையானது. அவைகளை சரித்திரப் பூர்வமாகக் கூட ஞாபகப்படுத்திப் பார்க்க முடியாது.

என்னைப் பொருத்தவரையில், 700 வருடம் என்பது மிக நீண்ட இடைவெளிதான். ஆனால், ஒருவர் உடலால் கட்டுப்படுத்தப்படாது இருக்கும்பொழுது, ஒரு விநாடியும், 700 வருடமும் ஒன்றுதான். அதில் எந்த வித்தியாசமும் இல்லை. உடல் இருந்தால்தான், கால அளவுக்கு மதிப்பு உண்டு. உடலுக்கு அப்பால், 700 வருடத்திற்கும், 7000 வருடத்திற்கும் எந்த வேறுபாடும் கிடையாது. உடலை எடுத்த பிறகுதான், இந்த வித்தியாசங்கள் ஏற்படுகின்றன.

அடுத்து, முற்பிறவியில் நடந்த இறப்புக்கும், இந்தப் பிறவியில் ஏற்பட்ட இறப்புக்கும் இடையில் ஏற்பட்ட கால அளவை கணக்கிடும் முறை மிகவும் சுவாரசியமானது. என்னையே எடுத்துக் கொண்டால், நான் 700 வருடங்களாக இங்கு இல்லை என்பதை எப்படி நான் அறிந்துகொண்டேன்? இதை நேரடியாகக் கணக்கிடுவது என்பது மிகவும் சிரமமான காரியம். ஆனால், இந்த கால இடைவெளியில் எத்தனை மக்கள் மறுபிறவி எடுத்திருக்கிறார்கள் என்பதை கணக்கிட்டு, என் பிறவியின் காலகட்டத்தைக் கணக்கிட முடியும்.

உதாரணமாக, எனக்கு ஒருவரை 700 வருடங்களுக்குமுன் தெரிந்திருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். இந்த 700 வருட இடைவெளியில், அவர் 10 பிறவிகளை எடுத்திருக்கலாம். இருந்தும், அவரிடம் அந்த 10 பிறவிகளின் ஞாபகம் அவரது அடிமனத்தில் இருந்து கொண்டே இருக்கும். அந்த ஞாபகத்தை, நான் கண்டுபிடித்து, நான் எத்தனை வருடங்களுக்குமுன்பு, உடலில் இருந்தேன் என்பதைக் கணக்கிடமுடியும். வேறுவகையில், இதைக் கணக்கிடுவது மிகவும் கஷ்டம். ஏனென்றால் உடலோடு இருக்கும்பொழுது கணக்கிடும் கால அளவுக்கும், உடல் இல்லாமல் இயங்கும் நிலையில் உள்ள கால அளவுக்கும் பெருத்த வித்தியாசம் உண்டு.

இதை இன்னொரு உதாரணம் மூலமாக விளக்குகிறேன். நான் படுக்கையில் படுத்துத் தூங்கும்பொழுது, ஒரு கனவு காண்கிறேன். அந்தக் கனவில் பல வருடங்களின் நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து செல்கின்றன. சில கணங்கள் கழித்து, நீங்கள் என்னை எழுப்பி அரைத்தூக்கத்தில் புரண்டு புரண்டு படுத்ததாகக் கூறுகிறீர்கள். அப்பொழுது நான் உங்களிடம், அப்படி எத்தனை நாழி அரைத்தூக்கத்தில் இருந்திருப்பேன் என்று கேட்க, நீங்கள் 'அது ஒரு கணம் கூட இருக்காது' என்று பதில் அளிக்கிறீர்கள். அதற்கு நான், ''அப்படி எப்படி முடியும்?'' நான் பல வருட நிகழ்ச்சிகளை அடுத்தடுத்து கனவில் கண்டேனே'' என்று கூறுகிறேன்.

ஆகவே, கனவில், பல வருட அனுபவங்களை ஒரு விநாடியில் பார்த்துவிடலாம். அதற்கு முக்கியக் காரணம் ஒரு கனவின் கால அளவு என்பது இந்த உலக வாழ்க்கையின் கால அளவுக்கு மாறுபட்டது,

வித்தியாசமானது. அதைப் போல, ஒரு கனவு காண்பவர், கனவிலிருந்து விழித்தபிறகு, தான் எப்பொழுது தூங்கினோம் என்று சொல்வது கூட கடினம்தான். ஆகவே, எவ்வளவு நேரம் தூங்கினோம் என்று சொல்வதும் சுலபம் அல்ல. இதை ஒரு கடிகாரத்தின் மூலமாக சுலபமாக அறியலாம். ஆகவே, மேற்சொல்லிய படிதான், என் முற்பிறவி 700 வருடங்களுக்கு முன் நடந்தது என்று கணக்கிட்டுச் சொன்னேன்.

அடுத்து, நான், என்னை முழுமையாக அறிந்த பிறகே மறுபிறவி எடுத்தேனா என்று நீங்கள் கேட்கிறீர்கள் இதைப் பொருத்த வரையில், சில முக்கிய விஷயங்களை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

நான் கிட்டத்தட்ட (Near about) என்னை முழுமையாக அறிந்த நிலையில் தான், நான் மறுபிறவி எடுத்தேன். நான் கிட்டத்தட்ட என்று சொன்ன காரணம், நான் ஆன்மிகத்தில் சில படிகளை வேண்டுமென்றே விட்டுவைத்திருந்தேன். அதைப் போல விருப்பப்படி விடமுடியும்.

இந்த வகையில் கூட, ஜைனர்களின் எண்ணம் மிகவும் விஞ்ஞானப்பூர்வமானது. அவர்கள் விஷய ஞானத்தை 14 படிகளாக வகுத்திருக்கிறார்கள். அதில் 13 படிகள் இந்த உலகத்தைச் சார்ந்தது. அடுத்துள்ள 14 வது படி இந்த உலகத்தைத் தாண்டியது. இந்த 13 குணஸ்தானா (GUNASTHANA) அல்லது படிகளில், சிலவற்றை தம் விருப்பப்படி விட்டுவிட முடியும். அவைகளின் வழியாக ஒருவர் கட்டாயமாகக் கடந்து செல்ல வேண்டும் என்று அவசியம் இல்லை. அப்படி ஒருவர் சிலபடிகளைத் தாண்டிச் சென்றால், தீர்த்தங்காரத் தன்மையை முழுமையாக அடைந்ததாகச் சொல்ல முடியாது.

ஆனால், எவைகளையெல்லாம் தன் விருப்பப்படி, தள்ளி வைத்துவிட்டு, மேலே சென்றாரோ, அவைகளையெல்லாம் அவர் தெரிந்தே வைத்திருக்க வேண்டும். ஒரு ஆசிரியர், அந்த ஒதுக்கப்பட்ட பாடங்களையும் அறிந்திருக்க வேண்டும். அதைப் போல ஒரு மாணவனும் அதைத் தெரிந்தே வைத்திருக்க வேண்டும். அப்பொழுது தான் பரிட்சையை தைரியமாகச் சந்திக்க முடியும்.

ஆகவே, தன்னை அறிந்து கொள்தலில் உள்ள இந்த 13 படிக்கட்டுகளில், சிலவற்றை நீங்கள் தேர்ந்து எடுத்து ஒதுக்கிவிடலாம். அவைகள், நீங்கள் ஞானம் அடைவதற்கு ஒருபோதும் தடையாக

இருக்கப் போவதில்லை. ஒருவர் அவைகளைத் தாண்டி நேரடியாக மோட்சத்தை அடையலாம். ஆனால் ஒரு ஆசிரியருக்கு சகலமும் தெரிந்திருக்க வேண்டும்.

இன்னொரு விஷயம் கவனத்தில் கொள்ள வேண்டியது என்னவென்றால், ஒரு சில படிக்கட்டுகளைத் தாண்டியபிறகு, உதாரணமாக, 12 படிக்கட்டுகளை அடைந்த பிறகு, மற்றைய படிக்கட்டுகளை தாண்டும் காலத்தை உங்கள் இஷ்டப்படி நீட்டிக்கலாம். அவைகளையெல்லாம் ஒரே பிறவியிலும் தாண்டலாம் அல்லது இரண்டு அல்லது மூன்று பிறவிகளிலும் தாண்டலாம். இப்படித் தள்ளிப் போடுவதால், பல உபயோகங்கள் உண்டு.

ஏற்கனவே நான் சொன்னது போல, தன்னை ஒருவர் முழுமையாக அறிந்த பிறகு,ஒரு மறுபிறவியைத் தவிர மேலும் பிறவி எடுக்க எந்த சாத்யக்கூறும் இல்லை. இவர்கள் அடுத்த பிறவிகள் எடுக்கச் சம்மதிக்க மாட்டார்கள். அப்படியே எடுத்தாலும் அதனால் யாருக்கும் எந்த பிரயோஜனமும் இல்லை. ஆனால் ஒருவர் 12 படிக்கட்டுகளைத் தாண்டியபிறகு, அடுத்த 2 தட்டுகளை ஒதுக்கிவிட்டு மேலே செல்லும்பொழுது, அவர்கள் பல பிறவிகளை எடுத்துப் பல பயனுள்ள காரியங்களை ஆற்றலாம்.

12 படிக்கட்டுகளை அடைந்த பிறகு, அந்த ஆன்மிக யாத்திரை கிட்டத்தட்ட ஒரு முடிவுக்கு வந்து விட்டது என்றே கூறலாம். நான் 'கிட்டத்தட்ட' என்று சொல்வதை கவனத்தில் கொள்ள வேண்டும். இதன் அர்த்தம், எல்லா சுவர்களும் இடிந்து விட்டன; இருப்பது வெறும் கண்ணாடித்திரைதான். அதன் மூலம் எல்லாவற்றையும் நீங்கள் பார்க்கலாம். அந்தக் கண்ணாடித் திரை, உங்களை ஒரு போதும் தடுக்காது. அதைச் சற்று தூக்கினாலே போதும். நீங்கள் அவைகளை சுலபமாகத் தாண்டிச் செல்லலாம். அவைகளைத் தாண்டிச் சென்ற பிறகு, நீங்கள் சாதாரணமாக எவைகளையெல்லாம் பார்க்கிறீர்களோ, அப்படியே, அவைகளைத் தாண்டிச் சென்ற பிறகும் பார்க்கலாம். அதில் எந்த வேற்றுமையையும் காண முடியாது.

ஆகவேதான், நான் 'கிட்டத்தட்ட' என்று கூறினேன். இன்னும் ஒரு அடிவைத்தால், ஒருவர் அந்தத் திரையைத் தாண்டிச் செல்ல முடியும்.

அப்பொழுது மீண்டும் ஒரு மறுபிறவி எடுக்கச் சாத்யக் கூறு உண்டு. ஆனால், ஒருவர் அந்தத் திரைக்குப் பக்கத்தில் இருந்தால், அவரால் எத்தனை பிறவிகள் வேண்டுமானாலும் எடுக்கலாம். அப்படி ஒருவர் அந்த எல்லைக்கு அப்பால் தாண்டிய பிறகு, மீண்டும் அந்தத் திரைக்குப் பக்கத்தில் ஒரு தடவைக்கு மேல் வரமுடியாது.

இது பற்றி மஹாவீரா மற்றும் புத்தாவுக்குத் தெரியுமா என்று நீங்கள் கேட்கலாம். ஆமாம், நிச்சயம் அவர்களுக்குத் தெரியும். மேலும் அவர்கள் அதை மக்களுக்காக உபயோகித்துக் கொண்டார்கள். ஆனால் அடிப்படை சூழ்நிலையில் வித்தியாசங்கள் இருந்தன.

அதாவது, தன்னை முழுமையாக அறிந்த நிலையில், அதை மிகுந்த தேர்ந்த நிலையில் உள்ள மாணவர்களுக்கு அல்லது சீடர்களுக்குத்தான் போதிக்க இயலும். எல்லோருக்கும் அல்ல. மஹாவீராவும், புத்தாவும் பல பிறவிகளாக போதித்து வந்த மக்களுக்கு மற்றும் அவர்களோடு பல உருவங்களில் பல பிறவிகளில் ஒன்றாக நடந்து வந்தவர்களுக்கும், முடிவாக போதிக்க, மேற்கொண்டு ஒரு பிறவி போதும். சிலசமயம், இந்த ஒரு மறுபிறவி கூடத் தேவையிருக்காது. ஒருவர் இந்தப் பிறவியில், தன்னுடைய 20 வயதில், தன்னை முழுமையாக அறிந்துகொண்டால், அவருடைய வாழ்நாள் 60 வருடம் என்று இருந்தால், இடைப்பட்ட 40 வருடகாலத்தில், தன் வேலையை முடித்துக் கொண்டு விட்டால், தான் வந்த வேலை முடிந்துவிட்டது. மீண்டும் ஒரு தடவை இங்கு வரவேண்டிய அவசியம் இல்லை.

ஆனால், இப்பொழுது உள்ள சூழ்நிலை மிகவும் வித்தியாசமாக உள்ளது. யார் சாதனாவை நிகழ்த்துகிறார்களோ, அவைகளில் எந்த உயிரோட்டமும் கிடையாது. அவைகளை உண்மையாக நிகழ்த்துவதற்கு, வருங்கால போதனையாளர்கள், அனேக பிறவிகளில் வேலை செய்ய வேண்டும். அப்பொழுதுதான் அந்த வேலை பூர்த்தியடையும். வேறு வழியில்லை.

மஹாவீரா அல்லது புத்தாவைப் பொருத்தவரையில், அப்பொழுது உள்ள சூழ்நிலை வேறுவிதமாக இருந்தது. அவர்கள் தங்கள் பிறவியின் கடைசி கட்டத்தில், அவரைச் சுற்றியுள்ள ஒரு சிலரிடம், மேற்கொண்டு செய்ய வேண்டிய வேலையை நம்பிக்கையுடன்

கொடுத்துவிட்டுச் செல்ல முடியும். அந்த சூழ்நிலை இப்பொழுது கிடையாது.

இன்றைக்கு, மனிதன் முழுமையாக வெளித்தன்மையிலேயே (EXTROVERT) இயங்குகிறான். ஆகவேதான், போதனையாளர்கள் கஷ்டப்படுகிறார்கள். இப்படிப்பட்ட சூழ்நிலை அப்பொழுது கிடையாது. அப்பொழுது, அவர்கள் மிகுந்த எண்ணிக்கையில் சாதாரண நிலையில் உள்ள மக்களோடு மிகவும் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டியிருந்தது. அத்துடன், தங்கள் உழைப்பு எங்கே வீணாகிவிடுமோ என்ற பயம் இருந்தது. பிறகு வந்தவர்கள், தங்களுக்குப் பின் சரியான நபரைத் தேர்ந்து எடுத்து, மேற்கொண்டு செய்ய வேண்டிய வேலையை ஒப்படைக்க முடியவில்லை. இதுபோல சீக்கியர்களின் குருவான குருநானக்குக்கு ஏற்பட்டது.

கோவிந்த் சிங் வரை, அதாவது 10வது சீக்கிய குரு வரை, அடுத்தவரை நியமிப்பது சுலபமாகவே இருந்தது. ஆனால், கோவிந்த் சிங், இதை நிறுத்தும்படியாகி விட்டது. கோவிந்த் சிங், 11வது ஆளைத் தேர்ந்தெடுத்து, அந்த குருஸ்தான சங்கிலித் தொடர் அறுபடாமல் இருக்க, எவ்வளவோ முயன்றார். ஆனால், அவருக்குச் சரியான ஆள் கிடைக்கவில்லை. அவர் தன் தேடுதலை நிறுத்தும்படியாகி விட்டது. அத்துடன் அந்த ஆன்மிக சங்கிலி நின்றுவிட்டது. இப்பொழுது 11வது ஆள் என்று யாரும் கிடையாது. ஏனெனில், அந்தத் தொடர், மிகவும் அந்நியோன்யமான நிலையில் ஏற்படுவது. அதில் ஏதாவது சிறு இடைவெளியோ அல்லது விரிசலோ ஏற்பட்டால், எதைக் கொடுக்க வேண்டுமோ, அது நடைபெறாமல் போய்விடும்.

புத்தாவின் விளக்கம் பெற்ற மாணாக்கர்களில் ஒருவரான போதிதர்மா, இந்தியாவிலிருந்து, சைனாவுக்குச் செல்ல நேர்ந்தது. ஏனெனில், அங்குதான், தன்னுடைய ஆன்மீக ஞானத்தைப் பெற்றுக் கொள்ளக் கூடிய ஒருவர் இருந்தார். இதனால் பௌத்த கலாச்சாரம், இந்தியாவை விட்டு வெளியேறியது. இதனால், சில புத்த சந்நியாசிகள், சைனாவுக்குச் சென்று புத்தமதத்தைப் பரப்ப முயன்றார்கள் என்று மக்கள் கருதினார்கள். இந்தக் கருத்து தவறானது. இது, சரித்திரத்தை மிகவும் மேலோட்டமாகப் பார்க்கும் தன்மைப் படைத்தவர்கள் புரிந்து கொண்டது எனலாம்.

ஹிகி (HUI KE) என்ற பெயருடைய சைனாக்காரரிடம்தான், அவர் தன் ஞானக்கருத்துக்களை அளிக்க வேண்டும். அந்த சைனாக்காரர் இந்தியாவுக்கு வர விருப்பம் இல்லை என்பதுதான் சுவாரசியமான விஷயம்! அது எதனால் என்றால், அவருக்கு தன் சக்தியின் மேலேயே நம்பிக்கையில்லை. ஆகவேதான், போதிதர்மா கஷ்டப்பட்டு சைனாவுக்கு செல்ல வேண்டியதாகி விட்டது. பிறகு ஒரு காலகட்டத்தில் அதை ஜப்பானில் உள்ள ஒருவருக்கு மாற்ற, அந்த புத்த ஆன்மிக இரகசியம், ஜப்பானுக்குச் செல்ல வேண்டியதாகி விட்டது.

இந்த 700 வருட இடைவெளி, எனக்குப் பலவித சங்கடங்களை ஏற்படுத்தி விட்டது. அவைகள் என்னவென்றால், முதலில் மறுபிறவி எடுப்பது என்பது போகப் போக மிகவும் கஷ்டமாகி விட்டது. ஆன்மிகத்தில் ஒரு நிலையை அடைந்தவர்களுக்கு, மறுபிறவி எடுக்க சரியான தாய் தகப்பனார் கிடைப்பது கஷ்டம். ஆனால், மஹாவீரா மற்றும் புத்தர் காலத்தில், அவ்வளவு கஷ்டம் இல்லை. தினமும், அப்படிப்பட்ட உயர்ந்த ஆன்மிக நிலையை அடைந்தவர்களுக்கு, சரியான கர்ப்பப்பை கிடைப்பது சுலபம்தான்.

மஹாவீரா காலத்தில், அவருடைய நிலையில் உள்ள தம்பதியர்கள் 80 பேர்கள் பீஹாரில் இருந்தார்கள். அவர்கள் 8 வித வழிகளில் ஆன்மிகத்தில் மேன்மையை அடைய முயன்று கொண்டிருந்தார்கள். கிட்டத்தட்ட அந்த நிலையை அடைந்தவர்கள் மட்டும் ஆயிரக்கணக்கில் இருந்தார்கள். அவர்களிடம் சுலபமாக தன் ஆன்மிக ரக்சியத்தை வெளியிட்டு, அவர்களை மேலான நிலைக்கு சுலபமாக உயர்த்திவிடலாம்.

ஆனால், இந்தக் காலத்தில், அப்படிப்பட்ட உயர்ந்த ஆத்மா, மறுபிறவி எடுக்க வேண்டுமானால், அது, ஆயிரக்கணக்கான வருடங்கள் காத்திருக்க வேண்டும். இவ்வளவு நீண்ட இடைவெளியில், அவர் செய்ய வேண்டிய காரியத்தின் முக்யத்துவம் இழக்கப்பட்டு விடும். அப்பொழுது, யாரை வைத்து அந்த ஆன்மிக வேலையை செய்ய வேண்டுமோ, அவர் 10 பிறவிகளாவது எடுத்திருப்பார். பிறகு, அந்த 10 பிறவிகளின் திரைகளை ஒன்றன்பின் ஒன்றாக எடுப்பது என்பது அவ்வளவு சுலபமல்ல.

இந்தக் காலத்தில், கடைசித் திரையை விலக்கிவிட்டு, மேலே தாண்டிச் செல்லுவதற்கு, எந்த குருவுக்கும் நீண்ட காலம் தேவைப்படுகிறது. ஏனெனில், அவர் அதற்கு முன் அநேக திரைகளை நீக்க வேண்டியுள்ளது. அந்தக் கடைசித் திரையை, ஒரு சமயம் தாண்டிவிட்டால், பிறகு அவர் மறுபிறவி எடுக்க விரும்பமாட்டார். ஆனால், ஒரு மறுபிறவிக்கு மேல் எடுக்கலாமா, வேண்டாமா என்பது அவருடைய தீர்மானத்தில் தான் இருக்கிறது. பெரும்பாலும் ஒரு மறுபிறவிக்கு மேல் எடுப்பது என்பது வீண்தான் என்றே கருதுவார்கள். அதற்குத் தகுந்த காரணமும் இருக்கிறது. அவர் யாருக்காக இன்னொரு பிறவி எடுக்க வேண்டும்? ஒரு பிறவியிலேயே, தன் விருப்பப்படி அதிகமாகச் செய்ய முடியவில்லையே.

உதாரணமாக, நான் இந்த அறைக்கு வந்து, என் வேலையை ஒரு மணி நேரத்தில் முடிக்க முடியும் என்றால், அப்படி வருவதில் அர்த்தம் உண்டு. அப்படி முடிக்க முடியவில்லை என்றால், அதனால் என்ன பிரயோஜனம்? இங்கு, கருணை என்பது இரண்டு விதத்தில் உபயோகப்படுகிறது. முதலில், அது உங்களுக்கு ஏதாவது கொடுக்க விரும்புகிறது. இரண்டாவதாக, அது உங்களிடமிருந்து ஏதாவது எடுத்துக் கொண்டு, பதிலுக்கு எதுவும் கொடுக்காமல் இருந்தால், நீங்கள் மிகுந்த ஆபத்தில் இருப்பீர்கள் என்பது அதற்கு நன்றாகவே தெரியும். உங்களுடைய கஷ்டம் அதனால் குறையாது; மாறாக அதிகரிக்கவே செய்யும். நான் ஏதாவது உங்களுக்குக் காட்டினால், அது மிகவும் நல்லது. ஆனால், என்னால் எதுவும் காட்ட முடியவில்லை என்றால், மற்றும் நீங்கள் ஏற்கெனவே பார்த்தவைகளில், குருட்டுத்தன்மையில் இருந்தால், அதாவது எதையும் புதிதாகப் பார்க்க முடியாத நிலையில் இருந்தால், பிறகு அந்த சூழ்நிலை மிகவும் கஷ்டமாகிவிடும்.

இந்த 700 வருட இடைவெளியைப் பொருத்த வரையில், இன்னும் சில விஷயங்களை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். முதலில், இதைப் பற்றி பேச்சு வரும் என்று நான் நினைக்கவே இல்லை! சில நாட்களுக்கு முன், பூனாவில் திடீரென்று, இந்த விஷயம் மேலே வந்தது. என்னுடைய தாயார் அங்கு வந்தார். ராம்லால் புங்காலியா (RAMLAL PUNGALIA) என்பவர், என்

தாயாரிடம், என்னுடைய இளமைக்கால குறிப்பிடும்படியான நிகழ்ச்சிகளை ஞாபகப்படுத்தி, சொல்ல முடியுமா என்று கேட்டிருக்கிறார்.

இதைப் போல ஒரு சூழ்நிலை உருவாகும் என்று நான் நினைக்கவே இல்லை. மேலும், அவர்கள் இருவரும் என்ன பேசினார்கள் என்பதும் எனக்குத் தெரியாது. சமீபத்தில், அவர் ஒரு பொது மேடையில், நான் பிறந்து மூன்று நாட்களுக்கு அழவே இல்லை என்று என் தாயார் சொன்னதாக வெளியிட்டார். மேலும், அந்த மூன்று நாட்களுக்கு, நான் பால் கூட அருந்தவில்லையாம்! இது, என் தாயாருக்கு, என்னைப் பற்றி முதலில் எழுந்த ஞாபகம்.

ஆமாம். இது உண்மைதான். 700 வருடங்களுக்கு முன், என்னுடைய முற்பிறவியில், அப்பொழுது 21 நாள் விஷேசமான ஆன்மிகத் தியானத்தில் இருந்தேன். அது இறப்புக்கு முன் செய்யக் கூடியது. அதாவது 21 நாள் உபவாசம் மற்றும் ஆழந்த தியானத்தில் இருந்து, நான் என் உடலை விட்டு நீங்க வேண்டும். அதற்குப் பல காரணங்கள் உண்டு. ஆனால், என்னால் 21 நாட்களை முடிக்க முடியவில்லை. அதற்கு பாக்கி இன்னும் 3 நாட்கள் இருந்தன. அந்த மூன்று நாட்களின் உபவாசத்தை இந்தப் பிறவியில் முடிக்க வேண்டியிருந்தது. இந்த வாழ்க்கை, அதன் தொடர்ச்சிதான். இந்த 700 வருட இடைவெளிக்கும், இதற்கும் சம்மந்தம் இல்லை. மூன்று நாட்கள் பாக்கி இருந்ததற்குக் காரணம், நான் அப்பொழுது கொல்லப்பட்டேன். அதாவது 21 நாட்கள் முடிவு பெறுவதற்கு, 3 நாட்களுக்கு முன்பே, நான் கொல்லப்பட்டேன்.

அந்த மூன்று நாட்களை, இந்தப் பிறவியில் பூர்த்தி செய்ய வேண்டியிருந்தது. அப்படி அந்த 21 நாட்களை அந்தப் பிறவியிலேயே பூர்த்தி செய்து இருந்தால், நான் அடுத்தப் பிறவி எடுக்க வேண்டியிருந்திருக்காது. இப்பொழுது, இதைப் பொருத்த வரையில், நீங்கள் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

அந்த மெல்லிய திரைக்கு முன்னால் நின்று கொண்டு, அதைத் தாண்டுவது என்பது மிகவும் கஷ்டம். மேலும், அந்தத்திரை எப்பொழுது விலகும் என்னும் விழிப்போடு பார்த்துக் கொண்டு, காத்திருப்பது என்பது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. ஏன், அது முடியாத காரியம் என்றே கூட வைத்துக் கொள்ளலாம். ஆனால்,

என்னுடைய உபவாசத்தை 3 நாட்கள் கழித்து வெற்றிகரமாக முடிந்திருந்தால், அது நிகழ்ந்திருக்கும். ஆனால் அதற்குள் நான் கொல்லப்பட்டேன்.

ஜுடாஸுக்கு (JUDAS), ஜீசஸுடன் பகை இல்லாவிட்டாலும், அவன் எப்படி அவரை பலமுறை கொல்ல முயன்றானோ, அதைப் போல என்னைக் கொன்ற ஆளுக்கும், எனக்கும் எந்தப் பகையும் கிடையாது. இருந்தாலும், அவன் தனக்குள் பகை உணர்வை வளர்த்து வந்திருக்கிறான். இதை என் பிரசங்கத்தில், பல முறை சொல்லியிருக்கிறேன்.

ஆனால், அவன் என்னைக் கொன்றது, மிகவும் மதிப்பு வாய்ந்தது தான். நான் இறக்கும்பொழுது, 3 நாள் உபவாசம் பாக்கி இருந்தது. நான் ஞானம் அடைவதற்கு, சென்ற பிறவியில் 21 வருடங்கள் கழித்து பயன் கொடுத்தது! அதை சென்ற பிறவியிலேயே பாக்கியுள்ள, 3 நாட்களில் அடைந்திருப்பேன். அந்த மூன்று நாட்களில் உள்ள ஒவ்வொரு நாளுக்கும் ஈடாக, இந்தப் பிறவியில் 7 வருடங்களை செலவழிக்க வேண்டியதாகி விட்டது! ஆகவேதான், நான் சென்ற பிறவியில் முழுமையாக ஞானம் அடைந்து, இந்தப் பிறவியை எடுத்தேன் என்று என்னால் சொல்ல முடியவில்லை. ஆகவேதான், நான் 'கிட்டத்தட்ட' ஞானம் அடைந்த நிலையில், இந்தப் பிறவியை எடுத்தேன் என்று கூறுகிறேன். அந்தத் திரையை அப்பொழுதே தூக்கியிருந்தால், என் விருப்பப்படி ஒரே ஒரு பிறவியை எடுத்திருக்கலாம். ஆனால், அந்த மூன்று நாள் உபவாசம் முடியாத வேளையில், நான் கட்டாயமாக மறுபிறவி எடுக்க நேர்ந்தது.

இப்பொழுது, என்னால் இன்னும் ஒரு பிறவி எடுக்க முடியும். அது உண்மையிலேயே உபயோகமாக இருந்தால், நான் அதைச் செய்வேன். இந்தப் பிறவியின் முழுவாழ்க்கையில், அடுத்த ஒரு பிறவி எடுப்பது உண்மையிலேயே உபயோகமாக இருக்குமா என்று துருவித் துருவி ஆராய்வேன். அப்படி அது உபயோக இருக்கும் என்று நான் கருதினால், நான் மீண்டும் மறுபிறவி எடுப்பேன். இது என் விருப்பத்தில் நடைபெறும். அப்படியில்லாவிட்டால், இந்த விஷயம் முடிவு பெற்றது என்று நினைத்துக் கொள்ளுங்கள். ஆகவே, நான் முற்பிறவியில் கொல்லப்பட்டது, ஒரு வகையில் மக்களுக்குப் பயனுள்ளதாகவே அமைந்து விட்டது என்றே நான் கருதுகிறேன்.

நான் ஏற்கனவே கூறியது போல, உடலோடு இருக்கும் பொழுது உள்ள கால அளவுக்கும், மற்றைய பிரக்ஞை நிலையில் உள்ள அமைப்புக்கும், உள்ள கால அளவுக்கும் பெருத்த வித்தியாசம் உள்ளது. பிறக்கும்பொழுது, காலம் மிக மெதுவாகச் செல்கிறது. ஆனால், இறக்கும்பொழுது, காலம் மிக வேகமாகச் செல்கிறது. ஆனால், காலத்தின் ஓட்டத்தை நம்மால் புரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால், காலத்திற்கு விரைவு என்று எதுவும் கிடையாது என்றே நாம் புரிந்து வைத்திருக்கிறோம். காலம் அப்படியே இருக்க, மற்றவைகள் தான் நகர்ந்து கொண்டிருக்கின்றன என்று நினைத்துக் கொண்டு இருக்கிறோம்.

இன்றைக்கு வரை, காலத்திற்கு விரைவு (VELOCITY) உண்டு என்ற எண்ணம் சிறந்த விஞ்ஞானிகளுக்கே கிடையாது! இதற்குக் காரணம் என்னவென்றால், நாம் காலத்தின் விரைவை தீர்மானித்துக் கொண்டால், மற்றவற்றின் விரைவைத் தீர்மானிப்பது அல்லது அளப்பது மிகவும் கடினம். ஆகவேதான், காலத்தை ஒழுங்குபடுத்தி சீராக அல்லது நிலையாக வைத்திருக்கிறோம். ஒரு மனிதன், ஒரு மணி நேரத்தில் மூன்று மைல் தூரம் நடந்தால், அந்த நேரமும் மூன்று மைல் தூரம் நடக்கிறது என்று வைத்துக் கொண்டால், அது பல பிரச்சினைகளுக்கு வழிவகுத்துவிடும். ஆகவே தான், மணியை அல்லது காலத்தை நிலையாக வைத்திருக்கிறோம். ஆனால், காலம் நிலையாக இருப்பதில்லை என்பதுதான் சுவாரசியமான விஷயம். அது மற்றவற்றை விட, மிக வேகமாக நகரக் கூடியது. காலம் என்றாலே மாறக்கூடியது என்றுதான் அர்த்தம். ஆனால் அதை ஆணி அடித்து வைத்து விட்டோம். அப்பொழுதுதான் மற்றைய அசைவுகளைக் கணக்கிட முடியும். இந்தக் கால விரைவு கிட்டத்தட்ட ஒருவருடைய மனத்தைப் பொருத்து அமைகிறது.

ஒரு குழந்தையின் கால விரைவு மெதுவானது. ஆனால், ஒரு வயோதிகனின் கால விரைவு மிக வேகமானது, அடர்த்தியானது. குறைந்த இடைவெளியில், கால விரைவு அவர்களிடம் மிக வேகமாகச் செயல்படும். அதற்கு மாறாக, குழந்தையிடம், ஒரு பரந்த இடைவெளியில், அது மிக மெதுவாகவே செல்லும். ஏன், ஒவ்வொரு மிருகத்திடம் கூட இந்தக் கால விரைவு வித்தியாசப்படுகிறது. ஒரு

நாய்க்குட்டி சில மாதங்களில் வளரும் வளர்ச்சியானது, ஒரு மனிதக் குழந்தையின் 14 வயது வளர்ச்சிக்கு சமம் என்று கூறலாம். சில விலங்குகளின் குழந்தையின் வளர்ச்சி இன்னும் வேகமாக இருக்கும்.

சில மிருகங்கள், குட்டியிலேயே நன்றாக வளர்ந்தே பிறக்கின்றன. அவைகள் இந்த பூமியில் தன் காலடியை வைக்கும் பொழுதே, அவைகளுக்கும், வளர்ந்த மிருகங்களுக்கும் எந்த வித்தியாசமும் கிடையாது. ஆகவேதான், மிருகங்களுக்கு கால அளவு உணர்வு கிடையாது. அவைகளுடைய வளர்ச்சி மிக வேகமானது. அவைகள் பிறந்த சிறிது நேரத்திலேயே நடக்க ஆரம்பித்து விடுகின்றன. அவ்வளவு வேகம். அவைகள் பிறப்பதற்கும் பிறந்து நடப்பதற்கும் எந்த இடைவெளியும் இல்லையென்றே கூறலாம்.

மனிதக் குழந்தை இந்த இடைவெளியை ஏற்படுத்திக் கொள்கின்றன. ஆகவே, காலத்தால் தொந்திரவுக்கு' உள்ளாவது மனித விலங்குகள்தான்! காலம் அவனைத் தொடர்ந்து துரத்திக் கொண்டே இருக்கிறது. ஆகவே, அவன் எப்பொழுதும் இறுக்க நிலையிலேயே இருக்கிறான்.

என்னுடைய முந்தையப் பிறவியின், கடைசி காலக்கட்டத்தில், என்னுடைய பாக்கி வேலைகள் முடிய இன்னும் மூன்று நாட்களே இருந்தன. ஏனென்றால், காலம் அவ்வளவு அடர்த்தியாக, நெருக்கமாக இருந்தது. அப்பொழுது என் வயது 106. காலம் வெகுவேகமாகச் சென்று கொண்டிருந்தது. அந்த பாக்கி மூன்று நாட்களின் கதை,இந்தப் பிறவியின் இளமையில் தொடர்ச்சியாக வந்துள்ளது. என்னுடைய முந்தைய பிறவியில், என் வேலை கிட்டத்தட்ட முடியும் தறுவாயில் இருந்தது. ஆனால், இந்தப் பிறவியில், அதை முடிக்க எனக்கு 21 வருடங்கள் ஆகியது.

அநேக தடவைகள், இந்த சந்தர்ப்பம் நழுவினால், ஒவ்வொரு நாளுக்கும், 7 வருட வீதம் அடுத்த பிறவியில் நான் செலவழிக்க வேண்டியிருக்கும். ஆகவே, இந்தப் பிறவியில், நான் முழுமையாக என்னை அறிந்து வரவில்லை. ஆனால், கிட்டத்தட்ட அதை அடைந்தே வந்திருக்கிறேன் என்று கூறலாம். ஆனால் இப்பொழுது நான் என் திட்டத்தை வேறு வகையில் நடத்தி முடிக்கவேண்டும்.

நான் ஏற்கனவே சொன்னது போல, மஹாவீரா ஒரு குருவின் துணைகொண்டு ஒரு முறையை ஏற்படுத்தி, அதன் மூலம் தன் ஆன்மிகக் கருத்துகளை மக்களுக்கு வழங்கினார். ஆனால், புத்தா சகல பழைய முறைகளும் தவறு என்று ஒன்றன் பின் ஒன்றாக கழித்துவிட்டு, தன்னுடைய புதிய முறையை அறிமுகப்படுத்தினார். ஆனால் மஹாவீராவும், புத்தாவும் செய்யாது விட்டதை, நான் செய்து முடிக்க வேண்டியுள்ளது. இந்த உலகத்தில் உள்ள எல்லாவற்றையும், காரணம் ஏதுமின்றி, படிக்க வேண்டியிருந்தது. இவைகள் அனைத்தும் பிரயோஜனப்படாது என்று எனக்கு நன்றாகவேத் தெரியும். ஆனால், இந்த நவீன காலத்தில், ஒருவர் உபவாசம் மேற்கொண்டோ அல்லது கண்களை வெறுமனே மூடிக்கொண்டு உட்கார்ந்தோ, எந்த ஆன்மிகக் கருத்துகளையும் பரப்ப முடியாது. யாராவது கடுமையான முறைகளைக் கையாண்டு அதை அடையலாம். ஆனால், அவைகள், தினசரி பெருகிக் கொண்டே இருக்கும் இந்த உலக விஷய ஞானத்தை நான் அறிந்து செரித்து, சேகரித்து வைத்த அந்த அறிவு மூட்டையின் வழியாகத்தான் சென்று, அதை அடைய வேண்டும்.

ஆகவேதான், என் முழு வாழ்க்கையையே புத்தகம் படிப்பதில் அர்ப்பணித்தேன். இந்த வகையில், மஹாவீரா கூட, தன்னுடைய உபவாசத்தால் அவ்வளவு கஷ்டப்பட்டிருக்க முடியாது. ஆனால், நான் எதற்கும் பயன்படாத விஷய ஞானத்தை பல புத்தகங்களின் வாயிலாகப் படித்து அறிய, பல தொல்லைகளை அனுபவிக்க நேர்ந்தது. அப்பொழுதுதான் நான் சொல்ல வேண்டியதை, அறிவுப் பூர்வமாக வித்தியாசமான முறையில் இந்த உலகத்துக்கு எடுத்துச் சொல்ல முடிந்தது. இதற்காகா நான் பட்ட கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல. இல்லா விட்டால், எல்லோருக்கும் புரியும் வகையில், என்னால் எளிமையாக அதைப்பற்றி சொல்ல முடியாமல் கஷ்டப்பட்டிருப்பேன். இந்த நவீன காலத்து விஞ்ஞானக் கருத்துக்களை, அதனுடைய மொழியிலேதான் புரிந்து கொள்ள முடியும்.

நீங்கள் இவைகளையெல்லாம் தெளிவாகப் புரிந்துகொண்டால், நீங்களும் உங்களுடைய முற்பிறவியைப் பற்றி ஓரளவு தெரிந்து கொள்ளலாம். நீங்கள் அவைகளைப் பற்றிப் புரிந்துகொள்ள நான் விரைவில் உங்களுக்கு உதவிசெய்வேன். ஏனென்றால், அப்படி நீங்கள்

புரிந்து கொண்டால், உங்களுடைய காலமும், சக்தியும் மிகுந்த அளவில் வீணாக விரயமாவதைத் தடுக்கலாம். சாதாரணமாக, நீங்கள் உங்கள் பிறவியை, முற்பிறவியின் தொடர்ச்சியாக ஆரம்பிப்பது இல்லை. ஆனால், ஒவ்வொரு பிறவியிலும், நீங்கள் கிட்டத்தட்ட ABC என்பதிலிருந்தே ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் உங்களுடைய முற் பிறவியைத் தெரிந்து கொண்டால், அல்லது ஞாபகப்படுத்திக் கொண்டால், நீங்கள் இந்தப் பிறவியை சாதாரணமாக ABCயிலிருந்து ஆரம்பிக்கத் தேவையில்லை. மாறாக, முற்பிறவியில் எங்கே விட்டீர்களோ, அங்கேயிருந்து ஆரம்பிக்கலாம். அப்பொழுதுதான், உங்களால் ஆன்மிகத்தில் விரைவாக முன்னேற முடியும். இல்லாவிட்டால் முடியாது.

இதை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். விலங்குகளால் முன்னேறவே முடியவில்லை. விலங்குகள் தன்னை உயர்த்திக் கொள்ளாமல், காலங்காலமாக அப்படியே தங்களை விருத்தி செய்து வருகின்றன. இது விஞ்ஞானிகளுக்கு பெரும் குழப்பமாக உள்ளது. மனிதனைவிட, குரங்குகளுக்கு சிறிது குறைந்த அளவில் தான் மூளை வளர்ச்சி இருக்கிறது. ஆனால் பரிணாம வளர்ச்சியில், மூளையின் வளர்ச்சியை விட பெருத்த வித்தியாசம் காணப்படுகிறது. இதற்கு காரணம் என்ன? எங்கே தடங்கல் இருக்கிறது? ஏன் குரங்குகள், தங்களுடைய அதே இனவிருத்தியை விட மேன்மையான நிலைக்கு வரமுடியவில்லை. அவைகள் மில்லியன் வருடங்களுக்கு முன் எப்படி இருந்தனவோ அப்படியே தான் இப்பொழுதும் இருக்கின்றன.

பரிணாம வளர்ச்சியின் முன்னேற்றம் எங்கும் நடைபெற்றுக் கொண்டிருப்பதாக, நாம் நினைத்துக் கொண்டு இருக்கிறோம். ஆனால், இதற்கு சரியான ஆதாரம் கிடையாது. இந்த வகையில் டார்வினுடைய அனுமானம் மிகவும் குழப்பம் உடையதாக அமைந்துள்ளது. ஏனென்றால், பல்லாயிரக்கணக்கான வருடங்களாக, குரங்குகள் எப்படியிருந்தனவோ, அப்படியே தான் இப்பொழுதும் இருக்கின்றன. அவைகளில் எந்த மாற்றமும் இல்லை. ஒரு அணில் எப்படி இருந்ததோ, அப்படியே தான் இப்பொழுதும் இருக்கின்றது. அவைகளில் எந்த மாற்றமும் இல்லை. அதைப் போல பசுவும் அப்படியே இருக்கின்றது.

ஆகவே, முன்னேற்றம் என்பது இயல்பாக நடைபெறவில்லை. வேறு ஏதோ ஒன்றுதான் அந்த மாற்றத்துக்குக் காரணமாக இருக்க வேண்டும்.

எங்கே தன் தகப்பனார் ஆரம்பித்தாரோ அங்கே இருந்து தான் ஒவ்வொரு குரங்கும் மறுபடியும் ஆரம்பிக்க வேண்டும். தகப்பனார் எங்கே விட்டாரோ, அங்கேயிருந்து மகன் ஆரம்பிக்க முடியாது. அதற்கு அந்தத் தகப்பனாரும் உதவி செய்ய முடியாது. அப்படியிருக்கும் பொழுது, மாற்றம் எப்படி ஏற்படும்? ஒவ்வொரு பிறவியிலும், தகப்பனார் ஆரம்பித்த இடத்திலிருந்தே, மகன் ஆரம்பிக்க வேண்டும்.

இதைப் போலத் தான் ஆன்மாவுக்கும் நேரிடுகிறது. நீங்கள் இந்த வாழ்க்கையை, முற்பிறவியில் எங்கே ஆரம்பிக்கிறீர்களோ, அங்கே இருந்துதான் மறுபடியும் ஆரம்பிக்க வேண்டும். நீங்களாக முன்னேற முடியாது. ஆன்மிக வளர்ச்சியிலும், உங்களிடம் எந்தப் பரிணாம வளர்ச்சியும் ஏற்படாது. ஏனெனில், உங்களுடைய மறுபிறவியின் ஆரம்பம், முற்பிறவியின் ஆரம்ப நிலையிலிருந்தே தொடங்குகிறது. அந்த நிலையில், எந்த முன்னேற்றமும் காண வழியில்லை.

பரிணாம வளர்ச்சி அல்லது முன்னேற்றம் என்றால், முற்பிறவியின் முடிவு, இப்பிறவியின் ஆரம்பமாக இருக்க வேண்டும். மனிதன், ஒருவருக்கொருவர் தொடர்புகொள்ள மொழியைக் கண்டுபிடித்தான். ஆகவே, அவன் முன்னேற முடியும். தகப்பனாருக்கு என்ன தெரிந்திருக்கிறதோ, அதை அவர் தன் மகனுக்குச் சொல்லிக் கொடுக்கலாம். படிப்பு என்றால், ஒரு தகப்பனார், தன் மூதாதையர் வழியாக என்ன கற்றாரோ அல்லது என்ன தெரிந்து கொண்டாரோ, அதைத் தன் மகன் வழியாக அடுத்த சந்ததிக்கு வழங்கலாம்.

ஆனால், தகப்பனார் எங்கே ஆரம்பித்தாரோ, அங்கே இருந்து மகன் ஆரம்பிக்கத் தேவையில்லை. அப்படி தகப்பனார் விட்ட இடத்திலிருந்து, மகன் ஆரம்பித்தால், முன்னேற்றத்துக்கு வழியுண்டு. அப்பொழுது அதனுடைய செயல்பாடு ஒரு வட்டத்தில் இருக்காது; மாறாக திருகுபோல சுற்றி சுற்றி இருக்கும். அப்பொழுது ஒரு குழந்தை வட்டத்தில் செயல்படத் தேவையில்லை. அது சுழன்று சுழன்று மேலே ஏற முடியும். பொதுவாக, மனித பரிணாம வளர்ச்சி என்பதில் என்ன உண்மை இருக்கிறதோ, அதுவேதான், தனி மனித ஆன்மிக வளர்ச்சிக்கும் பொருத்தமாகும்.

உங்களுடைய இந்தப் பிறவிக்கும், முற்பிறவிக்கும் எந்தத் தொடர்பும் இல்லையென்றால், நீங்கள் முற்பிறவியைப் பற்றி எதுவும் விசாரிக்கத் தேவையில்லை. ஆனால், இரண்டுக்கும் தொடர்பு இருப்பதால் நீங்கள் முற்பிறவியில் எங்கே விட்டீர்கள் என்று தெரிந்து அங்கேயிருந்து ஆரம்பிக்க முயலலாம். ஆனால், முற்பிறவியில் எப்படி அஸ்திவாரம் போட்டு உங்கள் வாழ்க்கையை ஆரம்பித்தீர்களோ, அப்படியே தான் மறுபடியும் அஸ்திவாரம் போட்டு, அந்த மாளிகையை எழுப்ப வேண்டும். அப்படியென்றால், நீங்கள் எப்பொழுது கட்டிடத்தை முடிக்க இயலும்?

ஆகவே, நான் என்னுடைய முற்பிறவியைப் பற்றி சொன்ன சில விஷயங்கள், உங்களுக்கு ஏதாவது பயனைக் கொடுக்கும் என்ற கருதியோ அல்லது நீங்கள் என்னைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற உந்துதலால், அவைகள் வெளியிடப்படவில்லை. அது உங்களிடம் ஒரு பிரதிபலிப்பை ஏற்படுத்தி, நீங்களும் உங்களுடைய முற்பிறவியைப் பற்றித் தெரிந்துகொள்ள முடியும் என்பதற்காகவே, நான் அவைகளைச் சொன்னேன். நீங்கள் எப்பொழுது உங்களுடைய முற்பிறவியை அறிந்து கொள்கிறீர்களோ, அப்பொழுதே உங்களிடம் ஒரு ஆன்மிக மறுமலர்ச்சி ஏற்படும். அப்பொழுது முற்பிறவியில், நீங்கள் விட்ட இடத்திலிருந்து, இப்பொழுது தொடங்க முடியும். இல்லாவிட்டால், இந்த முடிவற்ற பிறப்பு - இறப்பு சுழலில் சிக்கி, உங்களையே இழந்து, எதையுமே அடையாமல் நிற்பீர்கள். அப்பொழுது வெறும் திரும்பத்திரும்ப அதையே செய்தல் தான் நிகழும்.

ஆகவே, இந்தப் பிறவிக்கும், முற்பிறவிக்கும் ஒரு இணைப்பு எப்பொழுதுமே உண்டு. அப்பொழுது நீங்கள் முற்பிறவியில் என்ன சாதித்தீர்களோ, அது உங்களுக்குத் தெரிய வர, அதிலிருந்து மேற்கொண்டு முன்னேறும் தன்மை அல்லது தகுதி தானாக உண்டாகும். ஆகவேதான் புத்தாவும், மஹாவீராவும் தங்களுடைய முற்பிறவியைப் பற்றி, விரிவாகப் பேசியிருக்கிறார்கள். இதைப் போல முன்பு தோன்றிய குருமார்கள், தங்களுடைய முற்பிறவியைப் பற்றி சொன்னதில்லை.

வேதத்தையும், உபநிஷத்தையும் அளித்த ரிஷிகள் அந்த மேன்மையான ஞானத்தைப் பற்றியும், கடவுள் தன்மையைப் பற்றியும்

விளக்கமாகச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் அதை, முற்பிறவியை அறியும் கலையோடு சம்மந்தப்படுத்தவில்லை. மஹாவீரா பிறக்கும் காலத்தில், அதனுடைய அவசியத்தை தெளிவாக உணர்ந்தார்கள். நீங்கள் என்னவாக ஆக வேண்டும் என்று சொல்வது மட்டும் போதாது என்று அப்பொழுது உணர்ந்தார்கள். நீங்கள் என்னவாக இருந்தீர்கள் என்பதையும் அவசியம் அறிய வேண்டும். ஏனென்றால், அந்த முற்பிறவியின் உதவியில்லாமல், உங்களுடைய ஆன்மிக சக்தி விரைவாக மலர வாய்ப்பில்லை என்றும், நீங்கள் அதுவாக மாற முடியாது என்றும் உணர்ந்தார்கள்.

ஆகவேதான், மஹாவீரா மற்றும் புத்தாவின் முதல் 40 வருட வாழ்வை, மக்கள் தங்கள் முற்பிறவியை அறிந்து கொள்ளும் முறைக்காக செலவழித்தார்கள். ஒரு மனிதனால், தன்னுடைய முற்பிறவியைப் பற்றி அறிந்து கொள்ள முடியாத பொழுது, அவன் மேற்கொண்டு ஆன்மிக முன்னேற்றத்தைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட வேண்டாம் என்று சொல்லப்பட்டார்கள். அவன், தான் இதுவரை நடந்து வந்த பாதையை தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் தீர்மானமாக அடுத்த அடியை வைக்க முடியும். அப்படியில்லாவிட்டால், அவன் முன்னும், பின்பும், அதே வீதியில் மீண்டும் மீண்டும் ஓடி, கடைசியில் எதையும் அடைய முடியாத நிலை ஏற்படும். ஆகவேதான், முற்பிறவியைப் பற்றி ஞாபகப்படுத்திக் கொள்வது என்பது தவிர்க்க முடியாத முதல் காரியமாகிறது.

இந்தக் காலத்தில் உள்ள சங்கடம் என்னவென்றால், உங்களை, உங்களுடைய முற்பிறவியைப் பற்றி ஞாபகப்படுத்திக் கொள்ள ஏற்பாடு செய்வது என்பது ஒரு பெரிய காரியம் அல்ல; ஆனால், முக்கியமாக நீங்கள் அதை எதிர்கொள்ளும் தைரியத்தை இழந்து நிற்கிறீர்கள். நீங்கள் அதை ஞாபகப்படுத்திக் கொள்ளும் பொழுது, இடையில் பயந்து உங்கள் மனம் அலைக்கழிக்காமல் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அந்த ஞாபகம் கோர்வையாக வரும். இல்லாவிட்டால், அது முழுமையாக மேலே வராது.

இந்தப் பிறவியைப் பற்றி ஞாபகப்படுத்திக் கொள்வது என்பது அவ்வளவு கஷ்டம் இல்லை. ஆனால், முற்பிறவியின் ஞாபகத்தை

மேலே கொண்டு வரும பொழுது, அது சிதற வாய்ப்புண்டு. ஆகவேதான் அது மிகவும் கஷ்டம் என்று கூறுகிறேன். இந்த வாழ்க்கையின் ஞாபகம் பகுதி பகுதியாக வரலாம். ஆனால், முற்பிறவியின் ஞாபகம் மொத்தமாக ஒரே தடவையில் ஏற்படும்.

இந்த வாழ்க்கையில், இன்றுபட்ட கஷ்டம், நாளை மறக்கப்பட்டு விடும். அதைப் போல நாளை படும் கஷ்டத்தை அதற்கு மறுநாள் மறந்து விடுவீர்கள். ஆனால், உங்களுடைய முற்பிறவியின் ஞாபகங்கள் ஒரே தடவையாக முழுமையாக தன்னை வெளிப்படுத்தும். அப்பொழுது அதை தாங்கக்கூடிய தைரியம் உங்களுக்கு உண்டா? அத்தகுதி அல்லது தைரியம் உங்களுக்கு எப்பொழுது ஏற்படும் என்றால், நீங்கள் வாழ்வின் துன்பங்களையும், துயரங்களையும் பொறுமையாகத் தாங்கி அனுபவித்தவராக இருக்க வேண்டும். வாழ்வில் எது நடந்தாலும், அது உங்களைப் பாதிக்கக்கூடாது. அது உங்களிடம் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தக் கூடாது.

அப்படி இந்த வாழ்க்கை, உங்களிடம் எந்த இறுக்கத்தையும் உண்டு பண்ணவில்லை என்றால், அப்பொழுதுதான் உங்களுடைய முற்பிறவியின் ஞாபகத்தை எதிர்கொள்ளும் தைரியம் ஏற்படும். இல்லாவிட்டால், அந்த ஞாபகங்கள் உங்களிடம் ஒரு பெரிய அதிர்ச்சியை உண்டு பண்ணி விடும். உங்களுக்கு அதை எதிர்கொள்ளும்அளவு தைரியம் இல்லாவிட்டால், அதன் கதவு திறந்துகொள்ளாது.





3. பாதைகள் பல; பயணிகளோ சிலர்
(PATHS ARE MANY, THE TRAVELLERS ARE FEW)

*"நீங்கள் முற்பிறவியில் நடத்திய 21 நாள் விஷேச தியானச் சடங்கானது, ஏதாவது குறிப்பிட்ட பழைய தியான முறையையும் மற்றும் சுய அனுபவத்தையும் கொண்டதா?*

*ஏனென்றால், உங்கள் பேச்சிலிருந்து, நீங்கள் பழைய ஞானிகள் அல்லது தீர்த்தங்கராக்களின் முறைகளை நிச்சயமாகப் பின்பற்றுவது போல் தோன்றுகிறது. ஆகவே, இதன் அடிப்படையில், நீங்கள் ஒரு ஆன்மிகச் சங்கிலித் தொடரை அந்தப் பழைய ஞானிகளோடு சம்பந்தப்படுத்தி உண்டாக்க விரும்புகிறவர்கள் என்று நான் தைரியமாக கேட்க ஆசைப்படுகிறேன் அல்லது புத்தாவைப் போல, அதே மலையில் ஒரு புதிய பாதையை ஏற்படுத்த விரும்புகிறீர்களா?"*

பழமையான (TRADITIONAL) எண்ணங்கள், எப்பொழுதும் பழமையானதாகவே இருக்கும். புத்தாவின் வழிகூட இப்பொழுது புதியது அல்ல. நீண்ட நாட்களாக நடந்து வந்த பாதை, பிறகு பழைய பாதையாக மாறிவிடுகிறது. அந்தப் பழமையை உடைத்தெறிந்து, புதிய பாதையை ஏற்படுத்துதலும், புதியதாகவே இருப்பதில்லை. அதன் மீது, பல பேர்கள் நடந்து கொண்டிருக்கிறார்கள்.

புத்தா ஒரு புதியப் பாதையை உண்டு பண்ணினார். மஹாவீரா, ஏற்கெனவே ஏற்படுத்திய பாதையில் தான் நடந்து காண்பித்தார். ஆனால் மஹாவீராவின் ஆன்மிக சங்கிலித் தொடரில், முதலில் வந்த மனிதன், ஒரு புதிய பாதையைத்தான் ஏற்படுத்தியிருக்க வேண்டும். மஹாவீராவின் பாதையும் மிகவும் பழமையானது அல்ல. புத்தாவைப் போல, முதல் தீர்த்தங்கராவும் அதே போன்ற வேலையைத்தான் செய்திருக்கிறார். ஆகவே, ஒரு புதிய பாதையை ஏற்படுத்துதல் என்பது புதியது அல்ல. இல்லாவிட்டால், பழமை என்பது ஒருக்காலும் பிறக்காது. இப்பொழுது, இந்த சூழ்நிலையில், இந்த இரண்டு வழிக்கும் மாறுபட்டதாக ஏதாவது செய்ய வேண்டிய கட்டாயத்தில் நாம் இருக்கிறோம். ஏனென்றால், இப்பொழுது இந்த இரண்டு வித முறைகளில், மக்கள் நிறைந்து காணப்படுகிறார்கள்.

ஜியார்ஜ் குருட்ஜீவை (GEORGE GURDJIEFF) உற்று நோக்கினால், மஹாவீராப் போல, அவர் ஒரு பழைய பாதையைப் புதுப்பிக்க

முயற்சிக்கிறார் என்றே தோன்றுகிறது. அதைப் போல, ஜெ. கிருஷ்ணமூர்த்தியை கவனிக்கும் பொழுது, அவர் புத்தாவைப் போல, ஒரு புதிய பாதையை மறுபடியும் உண்டாக்குவதாகவே தோன்றுகிறது. ஆனால், இரண்டு வழிகளும், பழைய பாதையையே அடிப்படையாகக் கொண்டுள்ளது.

இந்த முயற்சியில், பல பழைய முறைகள் உடைக்கப்பட்டு, பல புதியவைகள் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. இப்பொழுது உள்ள புதிய முறை, நாளை பழைய முறையாகி விடும். இன்றைய சூழ்நிலையில், மஹாவீராவும் அல்லது புத்தாவும் மக்களிடம் நிலையான ஆக்ரமிப்பை ஏற்படுத்தவில்லை. ஏனென்றால், மக்கள் பழமையில் அலுப்படைந்து விட்டார்கள். மேலும், புதிதாக ஏற்படுத்தப்பட்ட சூழ்நிலையிலும், மக்கள் சோர்வடைந்து கொண்டே வருகிறார்கள். புதியவைகள், எப்பொழுதும் பழமைக்கு மாறுபட்டே இயங்குகின்றன என்று நினைக்கிறார்கள். ஆனால், இப்பொழுது ஒரு சட்டத்தில் இருந்து கொண்டு, புதியவை என்று கருதப்படுபவைகள் அனைத்தும் பழமையின் ஆரம்பம்தான் என்று தீர்க்கமாகப் பார்க்க முடிகிறது. புதியது என்பது பழமையை நோக்கிச் செல்கிறது. நான் ஒன்றை, புதியது என்று விளக்கும் பொழுதே, அவைகள் பழமையை அடைந்துகொண்டு தான் இருக்கின்றன. இப்பொழுது புதியதில் எந்த கவர்ச்சியும் இல்லை. நாம் எப்பொழுதும் பழமையை நோக்கித்தான் செல்கிறோம்.

பழமைக்கு ஒரு கவர்ச்சி இருந்தது. ஒரு காலத்தில் அந்தக் கவர்ச்சி மிகவும் ஆழமாகவும் இருந்தது. எவ்வளவக்கவ்வளவு, அது பழமையாக இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு, அதில் கவர்ச்சியும் இருந்தது. அந்தப் பழமையின் கருத்து, அனுபவ வாயிலாகவும் மற்றும் நன்றாகப் பரிசோதனை செய்த பிறகும் வந்திருந்தால், அதைப் பின்பற்றுவதில் எந்தத் தவறும் மற்றும் பயமும் கிடையாது என்று கருதினார்கள். அப்பொழுது மக்கள் அவைகளில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டார்கள். ஆகவே, அனேக மக்கள் அந்த வழியில் நடந்து சென்றார்கள். அதில் பல பேர்கள், அதன் முடிவை அடைந்தார்கள். புதிதாக அதில் நடப்பவர்கள் கூட, நம்பிக்கையுடன் தன் கண்களை மூடிக்கொண்டு நடப்பார்கள். குருடர்களுக்குக்கூட ஒரு தனி வழி உண்டு. அதில், அதிகமாகச் சந்தேகப்படுவதற்கு எந்தத் தேவையும்

இல்லை. மேலும், அதில் அதிகமாகச் சிந்தனை செய்வதற்கோ அல்லது முடிவு செய்வதற்கோ எதுவும் இல்லை.

(தெரியாததைப் பற்றி முடிவு செய்வது மிகவும் கஷ்டம்.) ஆனால் நீங்கள் அதில் எவ்வளவுதான் சந்தேகப்பட்டாலும், முடிவில் நம்பிக்கையின் மூலமாகத்தான் அந்த அறியாததில் குதிக்க வேண்டும். ஏனெனில், சந்தேகம் என்பது கடைசியில் நம்பிக்கையில்தான் முடியும். ஆனால், அந்தப் பழமையில் உள்ள மோகம் இழக்கப்பட்டுவிடும். அதற்கு பல காரணங்கள் உண்டு.

முதல் காரணம் என்னவென்றால், ஒருவன் ஒரு பழைய வழியை மட்டும் தெரிந்து வைத்திருந்தால், எந்தக் கஷ்டமும் கிடையாது. ஆனால், அவனுக்கு பல வழிகள் தெரிந்திருந்தால், சிக்கல்கள் எழும்புகின்றன. ஒரு காலத்தில், ஒரு ஹிந்து குடும்பத்தில், ஒருவன் பிறந்து விட்டால், அவனை ஹிந்து சூழ்நிலையில், ஒரு ஹிந்து கோவிலுக்கு அருகில் வளர்க்கப்படுவான். அந்த ஹிந்து கோவிலிலிருந்து எழும்பும் மணி ஓசை, அவனுடைய தாயாருடைய பாலோடு கலந்து அவனுள் செல்கிறது. அப்படி, அந்த இரண்டும் அவனுடைய இரத்தத்தில் கலந்து விடுகிறது. மற்றும் அந்தக் கோவிலில் உள்ள சிலைக்கு நடத்தும் வழிபாடுகள், அவனுடைய எலும்பு, இரத்தம், சதை எல்லாவற்றிலும் கலந்து விடுகிறது. எப்படி காற்றும், நீரும், அருகில் உள்ள மலையோடு கலந்து விடுகின்றனவோ, அதைப் போல, அவன் அந்தக் கோவிலோடு ஐக்கியமாகி விடுகிறான்.

அவனுடைய வழிபாட்டுக்கு, எதிரி என்று எதுவும் கிடையாது. அப்பொழுது எந்த சர்ச்சோ அல்லது மசூதியோ அருகில் கிடையாது. வேறு எந்தப் பழமையான வழிகளின் சப்தங்கள் அவனுடைய காதுகளையோ அல்லது மனத்தையோ ஆக்ரமிக்க வழியில்லை. அந்த பழமையான வழி, மறுகேள்வி இல்லாமல் ஒவ்வொரு ஹிந்துவின் இரத்தத்திலும் கலந்து விடுகிறது. அது அவனுக்கு முன்பே நன்றாக வேறூன்றி இருந்தது. ஆகவே, அவன் அதனோடு உள்ளும், புறமும் வளருகிறான். பிறகு மெல்ல, மெல்ல அந்தக் கோவிலுக்கு அருகில் ஒரு மசூதியோ அல்லது ஒரு சர்ச்சோ அல்லது ஒரு குருத்வாராவோ எழும்புகிறது.

ஒரு காலத்தில், பழமை என்பது ஒவ்வொருவரையும் தாக்கியிருக்கிறது. ஆனால், இப்பொழுது அதனால் குழப்பம் தான் அதிகரிக்கும்! எதையும் சந்தேகப்படாமல், ஏற்றுக் கொள்ளப்படுவது இல்லை. ஏனெனில் முரண்பாடான எண்ணங்கள் பக்கத்தில் பக்கத்திலேயே இருக்கின்றன. ஒரு கோவில் மணி உங்களை அழைத்தால், பக்கத்தில் உள்ள மசூதியிலிருந்து வரும் பிரார்த்தனையின் சப்தம் அதே நேரத்தில் ஒலித்து, கோவிலுக்குச் செல்லும் தவறை செய்யாதீர்கள் என்று சொல்லாமல் சொல்லும்! அப்பொழுது இந்த இரண்டு மாறுபட்ட கருத்துக்கள் உங்கள் மனதை அதே நேரத்தில் தாக்குகிறது.

இந்த உலகத்தில் மிகப் பரவலாக இருக்கும் சந்தேகத்தின் அடிப்படைக் காரணத்திற்கும், மனிதனின் அறிவின் விசாலத் தன்மைக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. முன்பு எப்போதும் இல்லாத அளவுக்கு அவனுடைய அறிவு வளர்ந்திருப்பது என்பது உண்மைதான். அவனுடைய சந்தேகத்தின் அடிப்படைக் காரணம் என்னவென்றால், பல பழைய மதங்களின் கருத்துகள், ஒன்றன் மீது மற்றொன்று படிந்து, அவனுடைய அறிவை ஒரே நேரத்தில் பாதிக்கிறது - முக்கியமாக மாறுபட்ட, முரணான கருத்துக்கள்.

ஒவ்வொரு வழியும் , மற்றென்றை தவறு என்று கூறுகிறது. அது இயலாமையின் வெளிப்பாடுதான். அடுத்த வழி தவறு என்பதால் அல்ல. ஆனால், அப்படி தவறு என்று தான் சொல்ல வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால், தங்களுடைய வழி, சரி என்று வாதாடுவதில் உள்ள வலிமை இழக்கப்படுகிறது. உண்மையில், ஒருவன் தன்னுடைய வழி, சரி என்று சொல்லும்பொழுது, மற்றைய வழிகள் தவறு என்றாகி விடுகிறது. இது தவிர்க்க முடியாததுதான்.

ஆகவே, ஒவ்வொரு பழைய கலாச்சாரத்திற்கும், அதற்கென்று ஒரு தனி வழி உண்டு. இவைகள் அனைத்தும், ஒன்றை ஒன்று குறுக்கே பாய்ந்து சந்திப்பது இல்லை. மாறாக, அவைகள் சரிசமமாகவே செல்கின்றன. அவைகள் அனைத்தும் தங்கள் வழியிலேயே செல்கின்றன. இந்த சூழ்நிலையில், பலகாலமாக நிலவி வரும் இந்தப் பழைய கருத்துக்களுக்கு மிக ஆழமான கவர்ச்சி ஏற்படுகிறது. அப்பொழுது மஹாவீரா போன்றவர்கள் மிகவும் உதவியாக இருக்கிறார்கள். ஆனால்,

அந்த பழமைக் கருத்துகள் மாறுபட்டு அதிகரிக்கும் பொழுது, ஒன்றை ஒன்று விரோதியாக எண்ணும்பொழுது, பழமைகள் தங்கள் வலிமையை இழந்துவிடுகின்றன. மாறாக, புதியவைகளின் மதிப்பு கூடுகிறது. மேலும், அந்த புதியவைகள் மாறுபட்டு இயங்குகின்றன. அடுத்து, பழைய கலாச்சாரத்தின் முரண்பட்ட விவாதங்கள், எதையும் தீர்மானமாக அறிவிக்காதபொழுது, அவைகள் பெரும்பாலும் மனத்தைக் குழப்புவதாகவே இருக்கின்றன. ஆகவே, பழைய கலாச்சாரக் கருத்துக்களை எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக, புதியவற்றிலிருந்து தேர்ந்து எடுத்துக் கொள்வது என்பது எளிதாக இருக்கிறது.

இந்தப் புதிய கலாச்சாரம் ஏற்படுவதற்கு பலகாரணங்கள் உள்ளன. முதலில், பழைய மதங்களையும், கலாச்சாரங்களையும் உண்டாக்கிய கடவுளின் தூதுவர்கள் மற்றும் தீர்த்தங்கராக்கள் பிறந்தது பல ஆயிரம் வருடங்களுக்கு முன்பு. ஆகவே, அவர்களது குரல்கள் இப்பொழுது மிக மெதுவாகவே கேட்கின்றன. ஆனால், புதிய மரபை உண்டாக்கியவர்கள், உங்களுடனேயே இருக்கிறார்கள். ஆகவே, அவர்களது குரல்கள் மிகவும் ஆழமாகவும், சக்தி வாய்ந்ததாகவும் இருக்கின்றன. பழைய மதங்கள் உண்டான அக்காலத்திய மொழிகளிலேயே, இப்பொழுதும் அவைகள் பேசிக் கொண்டு இருக்கின்றன. ஆனால், புதிதாக வந்த தீர்த்தங்கரா மற்றும் புத்தாக்கள் இப்பொழுது நடைமுறையில் உள்ள மொழிகளிலேயே பேசுகிறார்கள். பழைய மொழிகளின் வார்த்தைகளின் அமைப்பு மற்றும் சொல்லும் முறை அனைத்தும் மாற்றப்பட்டு விட்டன. இப்பொழுது ஏற்படுத்திய புதிய வார்த்தைகள் அனைத்தும் புதுமையாக இருக்க,அதை ஒருவர் சுலபமாகப் புரிந்து கொள்ள முடியும்.

இப்படியாக, புதிய கருத்துக்களில் உள்ள கவர்ச்சி மெல்ல மெல்ல அதிகரிக்கிறது. நாம், இப்பொழுது எல்லா வீதிகளும் சந்திக்கின்ற அல்லது முடிவடைகின்ற ஒரு கூட்டு அமைப்பில் வாழ ஆரம்பித்திருக்கிறோம்.

ஆனால், இப்பொழுது அந்தப் புதியவற்றிலும் உள்ள கவர்ச்சி அவ்வளவாக இல்லை. ஏனென்றால், எல்லா புதியவைகளும், விரைவில் பழமையாகிவிடும் என்பது நமக்கு மிக நன்றாகவேத்தெரியும். மற்றும் எல்லா பழமைகளும் ஒரு காலத்தில் புதியவையாகவே இருந்தன.

மற்றும் புதியவைகளுக்கும், பழையவற்றிற்கும் உள்ள வித்தியாசம் வெறும் வார்த்தைகளில் மட்டும்தான் என்பதும் எல்லோருக்கும் புரியும். இரண்டுக்கும் உள்ள ஒரே வித்தியாசம், புதியவற்றில் வேகம் அதிகம். சுமார்300 வருடங்களுக்குள், அந்த பழைய கலாச்சாரம் அடைந்த நிலையைத்தான், இந்தப் புதியதும் அடையும்.

ஒரு காலத்தில், அந்த பழையவற்றிற்கு தனித்தன்மை என்ற சான்றிதழ் இருந்தது. ஆனால், இப்பொழுது ஏற்படும் புதியவைகள், அது புதியவைதான் என்று நிரூபித்தால் போதும் நம்புவதற்கு அதுவே சான்றிதழ். எப்படி அந்தக்காலத்தில், அவைகள் எல்லாம் பழமையானது என்று மக்கள் கருதினார்களே, அதைப்போல, இந்த காலத்தில், பழமையானது என்று சொன்னாலே, அதை இகழ்வதாக அர்த்தம்.

ஆகவே, எல்லா பழைய கலாச்சாரங்களும், தங்களைப் புதுப்பித்துக்கொள்ளவே முனைகின்றன. அந்தப் பழைய பாதைகள் அப்படியே இருக்க, புதியவைகளில் மக்கள் நடந்துசெல்லுவதை நாம் காண்கிறோம். ஆனால், இந்தப் புதியவைகளில் உள்ள கவர்ச்சி அதிகரிக்க அதிகரிக்க, ஒரு வித்தியாசமான தன்மை வெளிப்படுகிறது.

ஒரு காலத்தில், அந்த பழைய கலாச்சாரம் தாங்கள்தான் சரி என்று நிரூபிக்க, எல்லா மதங்களும் அவைகள் தான் மிகவும் பழமை வாய்ந்தது என்று நம்பச் செய்ய முனைந்தன. நீங்கள் ஒரு ஜைனனைக் கேட்டால், அவர்களது மதம் தான் மிகவும் பழமை வாய்ந்தது என்றும் வேதங்களெல்லாம் அப்புறம்தான் தோன்றின என்றும் கூறுவான். மாறாக, நீங்கள் ஒரு வேதாந்தியைக் கேட்டால், அவன், அவர்களது வேதம்தான் மிகவும் பழமையானது என்றும் மற்றும் அதனுடைய தோற்றத்தை நிரூபிக்க எவ்வளவு பின்நோக்கிச் செல்ல முடியுமோ, அவ்வளவு பின் நோக்கிச் செல்வான். ஏனென்றால், அது எவ்வளவுக்கெவ்வளவு பழமையானதாக இருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அதன் மதிப்பும் அதிகம்.

அதைப்போல, புதியது அரசாங்க அங்கீகாரம் பெற்றால், அது எவ்வளவு நாளைக்கு என்ற கேள்வி எழுகிறது. சுமார்50 வருடங்களுக்கு முன், அமெரிக்காவில் புதிய கலாச்சாரத்தில் உள்ள மோகம் உச்சத்தில் இருந்தது. ஏனென்றால் அப்பொழுது அமெரிக்க நாகரிகமும் மற்றும்

சமூகச் சூழ்நிலையும் மிகவும் புதியதன்மையில் இயங்கியது. அப்பொழுது மக்களிடம் இரண்டு பாகுபாடு ஏற்பட்டது. ஒன்று வயோதிகர்களைக் கொண்டது. மற்றொன்று இளைஞர்களைக் கொண்டது.

ஆனால், இப்பொழுது மிகவும் வித்தியாசமான விதத்தில் அங்கு நடந்துகொண்டு இருக்கிறது. இப்பொழுது அங்கு இரண்டு பாகுபாடு மாத்திரம் அல்ல. அங்கு, 40 வயது, 30 வயது, 20 வயது மற்றும் 15 வயதினர்களுக்கு, தனித்தனியான அமைப்புகள் இருக்கின்றன! 30 வயது உடையவர்கள் ''30 வயதைத் தாண்டியவர்களை நம்பாதீர்கள்'' என்று கூறுகிறார்கள். இப்பொழுது 25 வயது உடையவர்கள்கூட பிரயோஜனம் இல்லை. உயர்நிலைப் பள்ளிமாணவர்கள், 25 வயதுடைய கல்லூரி மாணவர்களை, வயதானவர்கள் என்றே அழைக்கிறார்கள். ஒரு 50 வருட காலத்தில் இவ்வளவு பாகுபாடுகள், இதற்கு முன்பு ஏற்பட்டதில்லை. இளைஞர்களிடையே இவ்வளவு பாகுபாடுகள் ஏற்படும் என்று யாரும் கற்பனை பண்ணிக்கூடப் பார்த்திருக்க மாட்டார்கள். 20 வயதுடைய இளைஞர்கள், 25 வயதுடையவர்களை காலத்தோடு ஒட்டாதவர்கள் என்று முத்திரைகுத்தி, இறந்தவர்களுக்குச் சமமாகக் கருதுகிறார்கள்!

புதியவைகள் வேகமாக நகரும்பொழுது, அதன்மேல் ஏற்பட்ட கவர்ச்சி இழக்கப்பட்டு வருகிறது. அதாவது, எவ்வளவு சீக்கிரம் அதன்மேல் கவர்ச்சி உண்டாகிறதோ, அவ்வளவு சீக்கிரம் அது பழமையை அடைந்து விடுகிறது. ஒரு மதம் என்பது ஒரு புதிய பொழுதுபோக்கு அல்ல, அல்லது ஒவ்வொரு 6 மாதத்துக்கு ஒரு முறை மாற்றக்கூடிய புதிய உடையும் அல்ல. அல்லது பருவ காலத்தில் மலரும் பூக்களின் விதையை, விதைத்து 4 மாதங்களுக்குப் பிறகு, அதை பிடுங்கி எறிவதைப் போல மதங்களை எண்ணாதீர்கள். மதம் என்பது ஆலமரம் போன்றது. அதை முழுமையாக உணர, சில ஆயிரம் ஆண்டுகள் ஆகலாம். ஒவ்வொரு 4 அல்லது 5 ஆண்டுகளுக்கு ஒருமுறை, அந்த மரங்களை மாற்றினால், அவைகள் ஆலமரமாக இருக்கமுடியாது. அவைகள், பருவகாலத்தில் மலரும் பூக்களுடைய மரங்களையே சாரும்.

ஆகவே, புதியவற்றில் உள்ள கவர்ச்சிகூட கிட்டத்தட்ட முடிந்துவிட்டது. நான் இதையெல்லாம் எதற்கு விளக்குகிறேன் என்றால், என்னுடைய வழி மூன்றாவது வழி என்பதைத் தெளிவுபடுத்தத்தான்.

நான், மஹாவீராவின் பழைய கருத்துகளோ அல்லது புதிதாக மலர்ந்த புதுமைக் கருத்துகளோ ஏதாவது பயனைக் கொடுக்கும் என்று நான் நம்பவில்லை. இரண்டுமே தேவையில்லாதது. ஆனால், அவைகள் அழுத்தமாகச் சொல்லும் ''இறைத்தன்மை என்பது சாசுவதமானது'' என்பதில் அர்த்தம் இருக்கிறது. எது நிலையாக இருக்கிறதோ அது அர்த்த முள்ளதுதான்; அது புதிதாக இருந்தாலும் சரி, பழமையாக இருந்தாலும் சரி.

இறைத்தன்மை என்பது புதியதும் அல்ல, பழையதும் அல்ல. புதியது, பழையது என்பது காலத்துக் கட்டுப்பட்டது. இதனால், மதம் அடைந்த தொல்லைகள் மிக அதிகம். இதில் புதியதிற்கும், பழைய திற்கும் எந்த வித்தியாசமும் இல்லை. மதத்துக்குத் தொல்லை கொடுப்பதில் இரண்டுமே இணைந்து செயல்படுகின்றன.

கிருஷ்ணமூர்த்தி புதியவற்றைத்தான் ஆதரிக்கிறார். அதற்குக் காரணம் என்னவென்றால், அவர் தீவிரமாக அறிந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் 1915 இருந்து 1920 க்குள் இருந்தது. அந்தக் காலகட்டத்தில், இந்த உலகத்தில் புதியவற்றின் மதிப்பு அதிகம் இருந்தது. இப்பொழுதும் கூட அதைத்தான் அவர் தொடர்ந்து பிரச்சாரம் செய்து வருகிறார்.

இப்பொழுது, இந்த உலகத்தில் ஒரே ஒரு சாத்தியக்கூறுதான் உள்ளது. எல்லாப் பழைய முறைகளும் இப்பொழுது நெருங்கி வந்த நிலையில், ஒரு பழையமுறை மட்டும், தான்தான் சரியானது என்று அறிவித்தால், அது உடனே சந்தேகத்தை ஏற்படுத்துகிறது. ஒரு கால கட்டத்தில், ஒரு முறை, தான் சரியானது, சார்பு அற்றது, உண்மையானது என்று முழுமையாகத் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டால், அதை ஒருவர் நம்ப இயலும். ஆனால், இப்பொழுதோ, அதைப் போன்ற அறிக்கை, சந்தேகத்தை ஏற்படுத்தும். ஏன், அதை பைத்தியத்தன்மையின் அறிகுறி என்று கூட நினைக்கலாம்! அப்படி வெளியிட்ட மனிதன், மிகுந்த புத்திசாலி என்றோ மற்றும், ஆழமாக சிந்திப்பவன் என்றோ மக்கள் கருதமாட்டார்கள். மாறாக, அவனை ஒரு மதவெறியன் என்றே கருதத் தொடங்குவார்கள்.

பெட்ராண்ட் ரஸ்ஸல், ஒரு தீர்மானமாக, முழுமையாகப் பேசும் புத்திசாலி மனிதனை, தான் இதுவரை கண்டதில்லை என்று எங்கேயோ

எழுதியிருக்கிறார். யார் ஒருவன் அறிவாளியாக இருக்கிறானோ, அவன் இப்படித் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளத் தயங்குவான். ஒரு முட்டாள்தான், இப்படி எதையாவது தீர்மானமாகச் சொல்வான். அந்த அறியாதவன்தான். 'இதுதான் முழுமையான உண்மை' என்று எதையாவதை சொல்ல முயற்சிப்பான் என்று ரஸ்ஸல் சொல்கிறார்.

ஆனால், பகுத்தறிவு விசாலமாக விசாலமாக, இப்படிப்பட்ட தீர்மானமான அறிக்கைகளை வெளியிட முடியாது. இந்தக் காலத்தில், யாராவது இந்தப் பழைய முறைதான், சரியானது என்று தீர்மானமாகச் சொன்னால், அவன் அந்த முறைக்குத் தீங்கு செய்கிறான் என்றே அர்த்தம். அதைப்போல, இன்னொருவன், ''நான் சொல்வதுதான் முழுமையான புதுமை என்று அறிவித்தாலும், அதுவும் முட்டாள் தனமானதுதான்.

அனேகக் கருத்துகளை, புதுமை என்று அறிவிக்கிறார்கள். ஆனால், அவைகளை ஆழமாக அலசிப்பார்த்தால், அதில் எந்த புதுமையும் கிடையாது என்பது புரியும். ஒரே கருத்தை பலவிதமாக வெளியிட முடியும். அந்தப் பலவித வெளித்தோற்றத்தை அல்லது மேல் தோலை நீக்கிவிட்டுப் பார்த்தால், உள்ளேயிருப்பது அந்தப் பழைய கருத்தே என்பது விளங்கும். ஆகவே, இந்தக் காலத்தில், பழமையையோ அல்லது புதுமையையோ ஆதரித்து வெளியிடும் அறிக்கைகள் அனைத்தும் அர்த்தமற்றது.

எந்த வகையில் பார்த்தாலும், மக்களைக் கவர்ந்த, மக்களால் பின்பற்றிக்கூடிய மற்றும் மதிக்கக்கூடிய வருங்கால மதம், சாசுவத மானதாகவே இருக்கும். அது புதுமையாகவோ மற்றும் பழமை யாகவோ இருக்காது. அதையாரும் புதுமைப்படுத்தமுடியாது; மற்றும் அது பழமையாகவும் மாறாது. அப்படியொரு நிலையில் இயங்கும்.

ஒருமதம் பழமையானது என்று சொல்லும்பொழுது, அவர்கள் பழமையான வார்த்தைகளையே உபயோகிக்கிறார்கள். அதைப்போல, அது புதுமையானது என்று சொல்லும்பொழுது, புதுமையான வார்த்தைகளையே உபயோகிக்கிறார்கள். ஆகவே, இப்பொழுது இப்படிப்பட்ட வார்த்தை ஜாலங்களில், நாம் சிக்க வேண்டாம். ஆகவேதான், நான் பலகாலகட்ட கலாச்சாரங்களின் வார்த்தைகளை மாற்றிமாற்றி உபயோகிக்கிறேன். எந்த வார்த்தையாக இருந்தாலும்,

அதன் அர்த்தத்தை நம்மால் புரிந்துகொள்ள முடியும். சிலசமயம், நான் பழைய சிந்தனைகளைப் பற்றிப் பேசுகிறேன். ஏனென்றால், சில பேர்கள் அதன் வழியாக ஒருக்கால் புரிந்து கொள்ளமுடியும். மற்றும் சிலர் புரிந்துகொள்ள, நான் புதிய முறை சிந்தனைகளைக் கூறுகிறேன். அதேசமயம்,உண்மை என்பது புதியதும் அல்ல மற்றும் பழையதும் அல்ல என்று உங்களுக்கு ஞாபகமூட்டுகிறேன்.

உண்மை என்பது ஆகாயம் போல, சாசுவதமானது. அதில் மரங்கள் வளர்ந்து, மலர்களைக்கொடுத்து பிறகு அதிலேயே இறக்கின்றன. மரங்களுக்கும் குழந்தைப் பருவம், வாலிபப்பருவம் மற்றும் வயோதிகப் பருவம் என்று உண்டு. எல்லாமே இந்த ஆகாயத்தில்தான் நடைபெறுகின்றன. நாம் விதைகளை விதைக்கிறோம். அதுபிறகு முளைக்கிறது. அந்த முளை புதுமையானதுதான். ஆனால், அது முளைக்கும் அந்த ஆகாயம் சாசுவதமானது. அதைப்போல, ஒரு மரமும் வளர்ந்து வயதாகி, பிறகு அந்த ஆகாயத்திலேயே இறக்கிறது. ஆனால், மாற்றம் அடையும் நிலை, அந்த ஆகாயத்துக்கு இருக்கிறதா? அது எப்பொழுதாவது பழமையை அடையமுடியுமா? அநேக மரங்கள் வளர்ந்து, இறந்துகொண்டே இருக்கின்றன. ஆனால், அந்த ஆகாயம், கைபடாமல், எந்த விதப் பாதிப்பும் இல்லாமல், எப்பொழுதும் சாசுவாதமாகவே இருக்கிறது. அதைப் போல, உண்மை என்பதும் சாசுவதமானதுதான். அது விவரிக்கும் வார்த்தைகள் மரங்களைப் போன்றது. அவைகள் புதிதாகமுளைவிடுகின்றன, பிறகு கிளைகளை விட்டு,இலைகள், மலர்கள், கனிகள் என் பலவாறாக மாறி, முடிவில் இறந்து விடுகிறது. ஆனால், அந்த ஆகாயம் எப்பொழுதும் போலவே இருக்கிறது.

பழையதும், புதியதும் வார்த்தைகளுக்குதான் முக்யத்வம் கொடுக்கின்றன. ஆனால் நான் வார்த்தைகளுக்கு முக்யத்வம் கொடுக்க விரும்பவில்லை. மாறாக, வார்த்தைகள் என்ற மலர் மலர்ந்து விரிவடைந்து பிறகு இறந்து மறைந்துவிடுவதற்குக் காரணமான அந்த சாசுவதமான ஆகாயத்திற்குத்தான் நான் முக்யத்வம் கொடுக்கிறேன். ஆகவே, என்னைப் பொருத்தவரையில், உண்மை என்பது எல்லை யற்றது, சாசுவதமானது மற்றும் அது புதியது, பழையது என்பவைகளைத் தாண்டிய நிலையில் இருக்கிறது.

நாம் சொன்னவைகள், எண்ணியவைகள், உருவாக்கியவைகள் அனைத்தும் வரும், போகும். ஆனால், உண்மை எப்பொழுதும் அப்படியேதான் இருந்தது, இருக்கிறது மேலும் இருக்கும். அதற்கு அழிவே கிடையாது. ஆகவே, உண்மை பழமையானது என்று சொல்பவர்கள் அறியாமையில்தான் இருக்கிறார்கள். ஏனென்றால் சாசுவதமான ஒன்று எப்படி பழமையில் இருக்கமுடியும்? அதைப்போல, ஒருவன் ''என்னிடம் உள்ள உண்மை புதுமையானது. அதுதான் அசல். மற்றவையெல்லாம் போலி'' என்று சொன்னால், அவனும் அறியாமையில்தான் இருக்கிறான். உண்மைக்கு அசல் என்றும் போலி என்றும், பழமை என்றும் புதுமை என்றும் எதுவும் கிடையாது. அந்தப் பரந்த ஆகாயம்போல, உண்மை அப்படியேதான் இருக்கிறது.

நான் இந்த மூன்றாவது பாதையை, சாசுவதமான பாதை என்றும் மற்றும் வருங்காலப் பாதை என்றும் அறிவிக்கிறேன். ஏன்? ஏனென்றால், இந்த சாதசுவதமான அறிவிப்பு, பல மதங்களும், கலாச்சாரங்களும் ஏற்படுத்திய குழப்பமான ஆன்மிக வலையை வெட்டி எறிந்துவிடும். பிறகு, நாம், ''ஆமாம். அந்த மரங்கள் ஆகாயத்தை நோக்கித்தான் வளர்ந்தது; அதைப்போல இந்த மரங்களும் ஆகாயத்தை நோக்கித்தான் வளர்ந்துகொண்டு இருக்கின்றன'' என்று கூறலாம். இந்த மரங்கள் எவ்வளவு தூரம் வளர்ந்து சென்றாலும், அந்த ஆகாயம் ஒருக்காலும் பாதிக்கப்படுவதே இல்லை. ஏனென்றால், அது எல்லையற்றது. நமது மரங்கள் அதை நிரப்பவும் முடியாது அல்லது அதை காலி செய்யவும் முடியாது. ஆகவே, எந்த ஒரு மரமும், அந்த பரந்த ஆகாயத்தை நிரப்ப முடியும் என்று தவறாக நினைத்து விடாதீர்கள்.

இப்படியாக, நம்முடைய எந்த வார்த்தைகளும், எண்ணங்களும், கொள்கைகளும், உண்மை என்ற அந்த ஆகாயத்தை நிரப்ப முடியாது. அது அவ்வளவு பரந்தது, எல்லையில்லாதது. ஆகவே, மில்லியன் கணக்கில் மஹாவீராவும், புத்தாவும் பிறந்தாலும், அதில் எந்த வித்தியாசத்தையும் காணமுடியாது. அந்த ஆலமரங்கள் எவ்வளவு அடர்த்தியாக இருந்தாலும், அந்த ஆகாயத்தில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்திவிட முடியாது. அந்த ஆலமரத்தின் அளவைக் கொண்டு, ஆகாயத்தின் அளவை ஒருக்காலும் அளக்க முடியாது. அதைப்போல, ஆலமரத்தின் அடி நிழலில் வளரும் புல்லின் இலைகளுக்கு, அந்த

ஆகாயத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. அவைகளுக்கு அந்த ஆலமரம் மட்டும்தான் தெரியும். அவைகளைப் பொருத்தவரையில், அந்த ஆலமரம் மிகவும் பரந்தது. அதை விட பரந்தது வேறு எதுவும் இருக்கும் என்றுகூட அவைகளால் கற்பனை பண்ணிக்கூட பார்க்க முடியாது.

இப்படிப்பட்ட கஷ்டமான சூழ்நிலையில்தான், எல்லா மதங்களும் நம் முன்னே நின்று, நம்முடைய மனங்களை பலதிசைகளிலும் இழுக்கின்றன. அவைகளில் பழைய மற்றும் புதிய எண்ணங்கள் இருக்கலாம். ஆனால், ஒவ்வொரு நாளும் புதியவைகள் பிறப்பதற்கு வழியில்லை. எல்லாம், மக்களை, தங்கள் வழிக்கே இழுக்க முயலுகின்றன. இப்படி எல்லாம், ஒரே சமயத்தில் இழுக்கும் காரணத்தால், மனிதனுடைய நிலை பரிதாபத்துக்குரியதாகிவிடுகிறது. அவனுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. அவனால் ஓரளவு எழுந்து நிற்க முடிகிறது. ஆனால், எந்த ஒரு பாதையிலும் நடக்க தைரியம் இல்லை! அவன் எல்லாவற்றையும் சந்தேகப்படுகிறான். அவனுக்கு எதிலும் நம்பிக்கை இல்லை. யார், அவனிடம் நம்பிக்கையை ஏற்படுத்தினார்களோ, அவர்களே நம்பிக்கையற்ற தன்மையையும் அவனிடம் உண்டாக்கி விடுகிறார்கள்.

அந்தக் காலத்தில், எப்படி நம்பிக்கையை ஏற்படுத்தினார்களோ, அதே முறையில்தான், இப்பொழுதும் நம்பிக்கையை ஏற்படுத்து கிறார்கள். குரான், தொடர்ந்து தான்தான் சரியானது என்று சொல்லிக் கொண்டு இருக்கிறது. அதைப் போல, தம்மபதா கூறுகிறது. ஆகவே, ஒன்று தான்தான் தவறு என்று ஆகிவிடுகிறது. இப்படி ஒவ்வொன்றும் கூறிக்கொள்கின்றன. ஒருவன் இரண்டையும் கேட்கும்பொழுது, மற்றவை அனைத்தும் தவறு என்றே நினைப்பான். ஏன்? ஏனென்றால், ஒன்று தான்தான் சரியானது என்று சொல்லும்பொழுது, அதற்கு ஆதரவாக அதுமட்டுமே இருக்கிறது. ஆனால், அதைத் தவறு என்று சொல்லும் பொழுது, கிட்டத்தட்ட 50 மாறுபட்ட மதங்கள் அதற்கு ஆதரவாக நிற்கின்றன. ஆகவே, தவறு என்று சொல்வதற்கு வலிமை கூடுகிறது. இந்த கூட்டு வலிமை நிறைந்த குரல்களின் மத்தியில், அந்த ஒரு குரல் அமுங்கி விடுகிறது.

இந்த 50 பேர்களில், ஒவ்வொருடைய நிலைமையும் ஒன்றே. அதாவது ஒவ்வொருவரும் தாங்கள்தான் சரி என்ற கொள்கை

உடையவர்களாக இருக்கிறார்கள். இப்பொழுது இந்த 50 பேர்களும் ஒன்று சேர்ந்து, அடுத்தவரை தவறு என்று சொல்லும்பொழுது, அந்த அடுத்தவர் தான்தான் சரி என்று வாதிடும்பொழுது , முட்டாள்தனமானது என்றே நினைப்பார்கள்.

இதைப்போல ஒரே நேரத்தில் நம்பிக்கையை ஏற்படுத்த முயற்சித்தால் குழப்பம்தான் மிஞ்சும். இதை ஒரே ஒரு வழியில் தான் மாற்றமுடியும். அதாவது, இந்த உலகத்தில், யாரும் தாங்கள்தான் சரி, மற்றவர்களது கொள்கை தவறானது என்று சொல்லக்கூடாது என்று உலகலாவிய ஒரு போராட்டம் நடத்த வேண்டும். அதற்குமாறாக, ஒவ்வொருவரும் செயல்பாடற்று இருப்பதை உணர வேண்டும். இதற்கு பரந்த மனப்பான்மை அவசியம். அப்பொழுதுதான் ஒருவர், தாங்கள் விரும்பியபடி ஒரு பாதையைச் சரியாகத் தேர்ந்து எடுத்து, அதன் வழியே இயல்பாகச் செல்ல முடியும். ஆனால், இது நடைமுறையில் மிகவும் கஷ்டம். ஒரு முகமதியனாகவோ அல்லது கிருஸ்துவனாகவோ அல்லது ஒரு ஜைனனாகவோ இருப்பது சுலபம். ஏனெனில், ஏற்கனவே அவைகளுக்கு ஒரு தனி வழிகாட்டுதல் உண்டு. ஆகவே, இவைகளில் ஏதாவது ஒன்றை தேர்ந்துஎடுத்து செல்வது என்பது சுலபம்தான்.

8 நாட்களுக்கு முன்பு, ஒரு இளைஞன் என்னிடம் வந்தான். அவன்,தான் ஒரு முகமதியன் என்றும், தான் இங்கு சந்நியாசியாக விரும்புவதாகவும் சொன்னான். நானும் அதற்கு சம்மதித்தேன். ஆனால், அவன், தான் இங்கு சந்நியாசியானது அவனது கூட்டத்துக்குத் தெரிந்தால், அவர்கள் தன்னை கொலை கூட செய்து விடுவார்கள் என்று அஞ்சினான். அதற்கு நான், ''நீ இங்கு சந்நியாசியாகிவிடு. அதற்காக நீ முகமதியன் இல்லை என்று அர்த்தம் இல்லை. நீ முகமதியனாக இருந்துகொண்டே, இங்கும் சந்நியாசம் எடுத்துக் கொள்ளலாம்'' என்று கூறினேன். அவன், ''என்ன! அதன் பிறகு நான் என்னுடைய மசூதிக்குச் சென்று 'நமாஸ்' (பிரார்த்தனை) செய்ய முடியுமா?- அதாவது இந்த சந்நியாச உடையோடு'' என்று கேட்டான். நான், ''அதனாலென்ன? நீ அப்படியே சென்று நமாஸ் செய்யலாம்'' என்றேன்.

அவன், ''நான் உங்களைக் கேட்டபிறகு, நமாஸ் செய்வதையே விட்டுவிட்டேன். மாறாக, தியானம்தான் செய்து வருகிறேன். ஒரு வருடமாக, நான் மசூதிக்கே செல்லவில்லை. ஆனால், நான் மிகவும்

மகிழ்ச்சியாகவே இருக்கிறேன். மசூதிக்கு செல்ல நான் விரும்பவே யில்லை'' என்றான்.

நான், ''தியானத்திற்கும், நமாஸுக்கும் உனக்கு வித்தியாசம் தெரியாத பொழுது, தியானம் என்றால் என்ன என்பதே உனக்குத் தெரியவில்லை என்று அர்த்தமாகிறது'' என்றேன்.

இவர்களைப் போன்றவர்களை, நமாஸ் செய்ய மசூதிக்கு அனுப்பவேண்டும். இவர்களை மசூதியிலிருந்து பிரிப்பதும் ஆபத்தானது. ஏனென்றால், ஒருவரை வலுக்கட்டாயமாக மசூதி யிலிருந்து பிரித்து, ஒரு கோவிலில் ஒட்டவைப்பது என்பது முடியாத காரியம். அப்படிச்செய்தால், அது அவன் மனத்தை ஊனப்படுத்தும். அவனால், முழுமையாக கோவிலில் ஒட்ட முடியாது. ஆகவே, நாம் கோவிலுக்கிடையே போட்டியை ஏற்படுத்தவும் கூடாது. மற்றும் புதிதாகக் கோவிலை உண்டாக்கவும் கூடாது. ஒருவன் எங்கு செல்ல விரும்பினாலும், அவன் சுதந்திரமாகச் செல்ல அனுமதிக்க வேண்டும். அவன் ஒன்றிலேயே நிற்கக்கூடாது. அவன் சென்றுகொண்டே இருக்கவேண்டும்.

என்முன்னே உள்ள முடிவான திட்டங்கள் என்னவென்றால், ஒவ்வாருவரும், தங்கள் விருப்பப்படி, தங்களுடைய தகுதிக்கு ஏற்ப, மேலே சென்றுகொண்டே இருக்கவேண்டும். இவைகள் அனைத்தும், அவனுடைய இரத்தத்தோடு சம்மந்தப்பட்டவைகள். அப்பொழுது, ஒன்றை அடைவது என்பது அவனுக்கு சுலபமாகவே இருக்கும். ஆகவேதான், எனக்கென்று எந்த வழியையும் உண்டாக்கவில்லை. ஏனென்றால், இந்த காலத்தில் ஒரு குறிப்பிட்ட ஆன்மிக வழி அல்லது மதம் என்பது எடுபடாது. அதற்கு வருங்காலம் எதுவும் இல்லை.

, இப்பொழுது, எந்தக்குறிப்பிட்ட பாதையையும் காட்டாத ஒரு மதம்தான் தேவை. அது, எல்லா மதங்களின் கூட்டுப்பாதையாகவும், எல்லாப் பாதைகளும் அதற்கு உரியது என்றும் மற்றும் எல்லோரும் தாங்கள் தேர்ந்து எடுத்த எந்தப் பாதையின் வழியாகவும் செல்லலாம் என்றும் பொதுப்படையாகக் கூற வேண்டும். அதாவது எல்லா வழிகளும் அல்லது மதங்களும் சமம் என்று இயங்க வேண்டும். நீங்கள் எந்த வழியில் நடந்து சென்றாலும், அதே முடிவைத்தான் அடைவீர்கள்

என்று அது தீர்மானமாகக்கூறவேண்டும். அதாவது எல்லாப் பாதைகளும் ஒன்றை நோக்கியே செல்கின்றன. நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம் அவர்களை ஒரே இடத்தில் நிற்க விடாமல், மேலே மேலே செல்லும்படி ஊக்கப்படுத்த வேண்டும். அவ்வளவுதான். பாதைகளைப் பற்றி கவலைகொள்ள வேண்டாம்.

ஆகவே, நான் ஒரே மலையில், புதிபாதையை அமைக்க விரும்பவில்லை. அதைப்போல எந்த புதிய தத்துவத்தையோ அல்லது மதத்தையோ உண்டாக்க விரும்பவில்லை. அவைகள் இந்த காலகட்டத்துக்கு தேவையில்லாதது. நம்மிடம் ஏகப்பட்ட பாதைகள் இருக்கின்றன. ஆனால், அவைகளில் நடந்து செல்பவர்கள்தான் யாரும் இல்லை! பாதைகள் அனேகம்; பார்த்து நடப்பவர்கள் மிகக்குறைவு. அந்தப் பாதைகள் பலவருடங்களாக உபயோகமற்று இருக்கின்றன. அதில் நடப்பவர்கள் யாரும் இல்லை. ஏனெனில், அதில் நடந்து, அந்த மலை உச்சியை அடைவது என்பது குறித்து மக்கள் சந்தேகத்திலேயே இருக்கிறார்கள். அந்த மலையடிவாரத்தில், ஏகப்பட்ட சந்தேகங்கள், மாறுபட்ட வாக்குவாதங்கள் நடந்து கொண்டே இருக்கின்றன. இதன் முடிவு என்னவென்றால், சோர்வும், பயமும் தனிமனிதனை ஆக்ரமித்து, அவனை அப்படியே நகராமல் நிற்க வைத்து விடுகிறது. இந்தக் குழப்பத்தில், யாராலேயும் மேற்கொண்டு நடக்கமுடியாது.

இங்கு, நீங்கள் ஒன்றைக் கவனிக்க வேண்டும். நான், பலவற்றிலிருந்து தேர்ந்து எடுத்து, என்னை மகிழ்விப்பதை உங்களுக்கு வெளிப்படுத்துபவன் அல்ல. என்னுடைய எண்ணங்கள் காந்தியின் எண்ணங்கள் போல அல்ல. அவரைப்போல, நான் குரானிலிருந்து நாலு வாக்கியங்களைத் தேர்ந்து எடுத்து மற்றும் கீதையிலிருந்து நான்கை தேர்ந்து எடுத்து, எல்லா இடங்களிலும், அதையே சொல்லிப் பரப்புபவன் அல்ல. இந்த இரண்டு பழைய மதஏடுகளும், சொன்னவைகள் வித்தியாசமானவைகளே. அவைகள் இரண்டும் ஒரே முறையில் கூறுவதுஇல்லை. ஆகவேதான், நான் எல்லாப் பாதைகளும், ஒரே இலக்கை நோக்கியே செல்கின்னறன என்று வலியுறுத்திக் கூறுகிறேன். ஆனால், எல்லா பாதைகளும் வெவ்வேறானவைதான் ஒன்றுபோல் மற்றது இருப்பது கிடையாது. இதையும் மனத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

யாராவது, குரானும், கீதையும் ஒன்றையேதான் சொல்கின்றன என்று கூறினால், அது வெறும் தந்திரம்தான். ஒரு சுவாரசியமான விஷயம். காந்தி, குரானையும், கீதையையும் படித்துவிட்டு, கீதையிலிருந்து மாறுபடாத சிலவற்றை குரானிலிருந்து எடுத்துக் கொண்டு மற்றதை விட்டுவிட்டார். பிறகு அந்தவிடப்பட்ட பகுதிக்கு என்னவாயிற்று? எவையெல்லாம் தன் நம்பிக்கைக்கு ஒத்துவர வில்லையோ, அவைகளையெல்லாம் காந்தி விட்டு விட்டார். அவர் கீதையை முழுமையாக ஏற்றுக்கொண்ட அளவுக்கு, குரானை முழுமை யாக ஏற்றுக்கொள்ளவில்லை. ஆகவேதான், நான் அவரை ஒரு தேர்ந்து எடுப்பவர் என்று குறிப்பிடுகிறேன். கீதையில் உள்ளது, குரானில் உள்ள தோடு ஒத்துப் போனால் மட்டுமே, அவைகள் ஏற்றுக்கொள்ளப்படும். இது ஒன்றும் பெரிய காரியமில்லை. யார் வேண்டுமானாலும் ஒத்துப் பார்த்துச் செய்யலாம். யாரும் இதை ஏற்றுக் கொள்ளலாம்.

குரான், கீதையின் அராபிய மொழிபெயர்ப்பு என்று நான் முழுமையாக ஒத்துக் கொள்கிறேன். அந்த அளவுக்கு குரானை நம்புவர்கள் கூட ஒத்துக்கொள்ளலாம். ஆனால், குரானை நம்புவர்களிடம், கீதைக்கு ஒத்துவருமாறு குரானில் உள்ளவற்றை தனியாகத் தொகுத்துத் தாருங்கள் என்று கேட்பது ஒரு சுவாரசியமான பரிசோதனையாகவே இருக்கும். அப்பொழுது காந்திஜி தேர்ந்து எடுக்காததை, அவர்கள் தேர்ந்து எடுத்திருப்பதைக் கண்டு, நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். அவர்கள் மிகவும் வித்தியாசமானவற்றை தேர்ந்து எடுத்து இருப்பார்கள்.

இதைத்தான் நான் தேர்ந்தெடுத்தல் என்று கூறுகிறேன். இது முழுமையாக ஒத்துக் கொள்வது இல்லை. இது, தேர்ந்து எடுத்தல் என்பது ஒருவரது உரிமை என்று சொல்வது போல் இருக்கிறது. அப்பொழுது அவர்கள், ''நீங்கள் அந்த தேர்ந்தெடுத்ததோடு ஒத்துப் போனால், நீங்களும் சரிதான். இல்லாவிட்டால், நாங்கள் மட்டும்தான் சரி. நீங்கள் எந்த அளவுக்கு எங்களோடு ஒத்து வருகிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் சரியே. அந்த அளவு சகிப்புத்தன்மையை, நாங்கள் காட்டுகிறோம்'' என்று கூறலாம்.

இதனால் எந்தப் பெரும்பலனும் கிட்டாது.. முழுமையாக ஏற்றுக்கொள்தலே, இதற்குத் தேவை. சகிப்புத் தன்மை எந்தப்

பயனையும் ஏற்படுத்தாது. ஒரு ஹிந்து ஒரு முகமதியனையோ அல்லது ஒரு கிறிஸ்துவன், ஒரு ஜைனனையோ சகித்துக் கொள்வது என்பது சரியான வழியல்ல. சகித்துக் கொள்வது என்பது இயலாமையின் ஒரு பகுதிதான். அது ஒரு கட்டத்தில், வன்முறையை ஏற்படுத்திவிடும்.

குரானும், கீதையும் ஒன்றையே சொல்கிறது என்று நான் கூறமாட்டேன். குரான் முழுமையாக வித்தியாசமான தன்மையில் கூறுகிறது. அதற்கென்று ஒருதனிக் குரல், தனி முக்யத்வம் உண்டு. கீதை சொல்வதை, அப்படியே குரான் சொன்னால், குரானுக்கு என்ன முக்யத்வம் இருக்கப் போகிறது? குரானோ அல்லது கீதையோ சொல்லாததை பைபிள் வித்தியாசமாகவே கூறுகிறது. ஒவ்வொன்றிற்கும் ஒரு தனித்தன்மை உண்டு. புத்தா சொல்வதையே, மஹாவீரா சொல்வது இல்லை. அவர்கள் இருவரும் மிகவும் வித்தியாசமாகவே கூறுகிறார்கள்.

ஆனால், இந்த பலவித முறைகளினால், ஒருவன் முடிவில் அடைவது அதே இலக்குதான். ஆகவேதான், நான் அந்த முடிவை அடைவதுதான் முக்கியம் என்றும் அதை அடையச் செல்லும் பாதைகள் முக்கியமல்ல என்றும் வலியுறுத்துகிறேன். அந்த பாதைகள் முடிவாக அடையும் இடத்தில் எந்த வேறுபாடும் இல்லை.

ஆனால், ஒவ்வொரு பாதையும் மிகவும் வித்தியாசமானது தான். அப்படியில்லாவிட்டால், ஒருவன் எந்தப் பாதையில் வேண்டுமானாலும் நடந்து செல்லலாம். எல்லா படகுகளும் ஆற்றின் அடுத்தக்கரையை அடையவே செய்யும். ஆனால், ஒருவன் இரண்டு படகுகளில் ஒரே சமயத்தில் சவாரி செய்யும் தவறை செய்யக் கூடாது. அப்படி செய்தால், படகுகள் வேண்டுமானால் அக்கரையை அடையலாம். ஆனால், அவைகளில் சவாரி செய்தவன், அக்கரையை அடைய முடியாது போகும்! வழியிலேயே, அவன் தலைகுப்புற ஆற்றில் விழுந்து முழுகக் கூடும்.

எல்லாப் படகுகளும், படகுகள் தான். அவைகளைப் பற்றி ஒருவன் கரையில் நின்றகொண்டு பேசலாம். அதனால் எந்தப் பாதகமும் இல்லை. ஆனால், அதில் ஏறி சவாரி செய்வதற்கு முன், அவன் ஒன்றைச் சோதித்து தேர்ந்து எடுக்க வேண்டும். அதைப் போல எல்லா மதங்களும், பலவித படகுபோல இருக்கின்றன. அவைகளில் ஒன்றை தேர்ந்து எடுத்து, ஒருவன் முன்னேற வேண்டும்.

ஆனால், அவ்வளவு சுலபமாக ஒன்றைத் தேர்ந்தெடுக்க முடியாது. ஏனெனில், ஒன்றை ஒன்று மறுத்துக் கொண்டே இருக்கின்றன. ஒருபக்கம், மஹாவீரா நின்றுகொண்டு, ஒரு எறும்பைக் கூட கொல்லக்கூடாது என்கிறார். அவர் பூமியில் தன் கால்களை மிகவும் ஜாக்கிரதையாக வைக்கிறார். மறுபக்கம் முகமது, தன்கையில் வாளோடு நிற்கிறார்! இந்த நிலையில், ஒருவன், முகமதுவும், மஹாவீராவும் ஒன்றையே சொல்கிறார்கள் என்றால், அவன் சொல்வது மிகவும் தவறானது. இவர்கள் இருவரும் ஒரே மொழியில், அதாவது ஒரே கருத்தில் பேச முடியாது. அவர்கள் இருவரும் மிகவும் வித்தியாசமாகவே பேசுவார்கள்.

அவர்கள் இருவரும் ஒரே கருத்தையுடையவர்கள் என்று சொல்ல முயற்சித்தால், நாம் அவர்களுக்குப் பெரும் அநீதி செய்தவர்களாக ஆவோம். ஒன்று முகமதுவின் கத்தியை மறைக்க வேண்டும் அல்லது மஹாவீரா, எறும்புகளைக் காப்பாற்ற, தன் காலடியை ஜாக்கிரதையாக பூமியில் வைப்பதை மறைக்கவேண்டும். முகமதுவிடம் நம்பிக்கை வைத்து, ஒருவன் அவரைத் தேர்ந்தெடுத்தால், கத்திக்கு மாறாக, மஹாவீரா சொன்னவைகள் அனைத்தையும், அவன் ஒதுக்க வேண்டும். மாறாக, மஹாவீராவிடம் நம்பிக்கை வைத்து, அவரை ஒருவன் தேர்ந்தெடுத்தால், அவன் முகமதுவிடமிருந்து கத்தியை அப்புறப்படுத்த வேண்டும். அல்லது அஹிம்சைக்கு ஏற்றவாறு சிலவற்றை அவன் தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஆனால், இது அநீதியாகும். ஆகவே, காந்தியைப் போல நான் பலவற்றை ஒன்றுசேர்ப்பவன் அல்ல. மதங்களை ஒன்று சேர்ப்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. என்னைப் பொருத்தவரையில், எல்லா மதங்களையும், அவைகளின் தனித்தன்மையோடு அங்கீகரிக்கவே விரும்புகிறேன். ஒவ்வொரு மதமும், தன்னுடைய தனித்தன்மையில் இருப்பதால், அவைகளின் வழியே சென்று, முடிவான அதே இலக்கை அடையமுடியும் என்று நான் உறுதியாகச் சொல்கிறேன்.

எல்லா மதங்களும், தங்களுக்கென்ற, தனிப் பாதையை ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றன. ஆனால், அந்தப் பாதைகள் ஒன்றுக்கு ஒன்று சம்மந்தமில்லாததுதான். அது எப்படியென்றால், என்னுடைய பாதைகளில் மரங்கள் இருக்கின்றன. உங்களுடைய

பாதையில் கற்களாக இருக்கின்றன. உங்களுடைய பாதையில் ஏறி, அந்த மலை உச்சியை அடையும் பொழுது, நீங்கள் ஏகப்பட்ட கற்களைக் கடந்து செல்ல வேண்டும். ஆனால் நானோ, அதை அடையும் பொழுது, பல மரங்களைக் கடந்து செல்வேன். ஒரு பாதையின் வழியே செல்வது மிகவும் கடினம் மற்றும் களைப்பைக் கொடுக்கக் கூடியது. இன்னொரு பாதை அந்த மலையைச் சுற்றி சுற்றி மெல்ல செல்கிறது. பின்னால் சொல்லிய பாதை மிக நீளமானதுதான். ஆனால், அது ஏறுபவனுக்கு களைப்பைக் கொடுக்காது.

ஆகவே, ஒவ்வொருவரும், தாங்கள் ஏறிச்சென்ற பாதையை வித்தியாசமாகவே வர்ணிப்பார்கள். மேலும், அந்தப் பாதையின் வழியாக செல்லும்பொழுது, அடைந்த துன்பங்களையும், அதைத் தீர்ப்பதற்காக எடுத்துக் கொண்ட முயற்சிகளையும், வித்தியாசமாகவே சொல்வார்கள். இப்படி வித்தியாசமாக வர்ணிப்பதை நாம் கேட்கும்பொழுது, நாம் அவைகளில் எந்த ஒற்றுமையையும் பார்க்க முடியாது. அந்த ஒற்றுமையான அறிக்கையை, யார் ஒருவர் அந்த மலை உச்சியை அடைந்தாரோ, அவரிடமிருந்துதான் எதிர்ப்பார்க்கலாம். அதுவும், அந்த அறிக்கைகள் அனைத்தும் அந்தப் பாதைகள் சம்மந்தமாக இருக்காது.

அந்த மலை உச்சியை அடைந்தவர்களின் அறிக்கைகள் ஒன்றாக இருந்தாலும், அவர்கள் சொல்லும் முறையில் வித்தியாசம் இருக்கவே செய்யும். அதாவது அவர்களுடைய மொழிகள் வேறாகவே இருக்கும். அவர்களடைய அறிக்கைகள், அராபியிலேயோ, பாலி, பிராகிருத் (PRAKRIT) அல்லது சமஸ்கிருத மொழியிலேயோ இருக்கலாம். அந்த மலை உச்சியை அடைந்த பிறகு, அவர்கள் வெளியிட்ட அறிக்கைகள் கிட்டத்தட்ட ஒன்றாகவே இருக்கலாம். ஆனால், அதை அடைவதற்கு முன்பு வெளியிட்ட அறிக்கைகள் நிச்சயம் வித்தியாசமாகவே இருக்கும். அந்த வித்தியாசங்களை மறக்க வேண்டிய அவசியம் இல்லை.

ஆகவே, நான் எந்தப் புதிய பாதையையும் போட விரும்பவில்லை. அதைப் போல, ஒரு பாதைதான் சரி, மற்றவை அனைத்தும் தவறு என்று குற்றம் காணவும் விரும்பவில்லை. அந்த பாதைகளில் எவ்வளவு வித்தியாசம் இருந்தாலும், எல்லாப் பாதைகளும் சரியே என்று கூறவே நான் விரும்புகிறேன்.

மஹாவீராவின் பாதைக்கும், முகமதுவின் பாதைக்கும் வித்தியாசங்கள் இருப்பது ஆச்சரியப்படுவதற்கு இல்லை. அவைகளில் வித்தியாசம் இல்லாமல் இருந்தால் தான் அதிசயம்! அவைகள் ஒன்றுபோல இருந்தால், அது செயற்கைத் தன்மையுடையதாகவே இருக்கும். மஹாவீராவின் சூழ்நிலை, முகமதுவின் சூழ்நிலைக்கு முற்றிலும் மாறுபட்டது. முகமதுவோடு வேலை செய்த மனிதர்கள், மஹாவீராவோடு வேலை செய்த மனிதர்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டவர்கள். அவர்களுடைய கால கட்டமும், சூழ்நிலையும் முற்றிலும் மாறுபட்டது. ஆகவே, மஹாவீராவும், முகமதுவும் ஒரே பாதையை ஏற்படுத்த முடியாது. இப்பொழுது கூட, அந்தச் சூழ்நிலை வித்தியாசமாக தொடர்ந்து வந்துகொண்டுதான் இருக்கிறது. அந்த வித்தியாசங்களை மனத்தில் வைத்துக் கொண்டுதான், நாம் அவர்களை அணுக வேண்டும்.

ஆகவே, நான் எந்தப் புதிய பாதையையும் ஏற்படுத்த விரும்பவில்லை அல்லது எந்த ஒரு பழைய பாதையும் சரி என்றும், மற்றைய அனைத்தும் தவறு என்று அறிவிக்கவும் விரும்பவில்லை. எல்லாப் பாதைகளும் சரியே. அதாவது இதுவரை ஏற்படுத்திய பாதைகளும், இன்றைக்கு ஏற்படுத்திக் கொண்டிருக்கும் பாதைகளும் மற்றும் நாளை ஏற்படப் போகும் பாதைகள் அனைத்தும் என்னைப் பொருத்தவரையில் சரியே.

ஆனால், மனிதன் ஏதாவது ஒரு பாதையில் நடந்துகொண்டே இருக்க' வேண்டும்; அவன் தீர்மானமில்லாமல் ஒரே இடத்திலேயே நிற்கக்கூடாது. அப்படிச் செய்தால் அவனால் அந்த மலை உச்சியை அடைய முடியாது; அது சரியான பாதையாக இருந்தாலும் சரி. ஆனால், ஒருவன் தவறான பாதையைத் தேர்ந்தெடுத்து அதில் மேலே மேலே நடந்து சென்றால், அவனால் அதன் உச்சியை நிச்சயம் அடைய முடியும். இன்றைக்கு இல்லாவிட்டாலும், நாளைக்காவது. இதில் முக்கியமாக கவனிக்க வேண்டியது, அவன் தொடர்ந்து நடந்துகொண்டே இருப்பதுதான். அப்படி அவன் தொடர்ந்து நடந்து கொண்டே இருந்தால், அவனால் சரியான பாதைக்குத் தன்னை மாற்றிக் கொள்ளவும் முடியும்.

ஆனால், அவன் இடையில் நின்றுவிட்டால், அவனால், தான் தேர்ந்தெடுத்தது சரியான பாதையா அல்லது தவறான பாதையா என்று

கண்டுபிடிக்க இயலாது. அவன் தொடர்ந்து நடந்துகொண்டே இருந்தால்தான், அது சாத்யம். நீங்கள் ஒரு கொள்கையில் நம்பிக்கையோடு இருந்து, மற்றவற்றைப் பற்றி அலட்சியமாக இருந்தால், நீங்கள் நம்பிக் கொண்டிருக்கும் கொள்கை சரியா, தவறா என்று உங்களால் புரிந்து கொள்ள முடியாது. நீங்கள் உங்கள் கொள்கையைச் செயல்படுத்தி, பரிசோதனை செய்தால்தான், அது சரியா, அல்லது தவறா என்று உங்களால் உடனே அறிந்து கொள்ள முடியும். ஒரு கொள்கையைச் செயல்படுத்தித்தான், அதை உறுதி செய்ய முடியும். வேறு வகையில் முடியாது. ஆகவேதான் நான் உங்களை நடந்துகொண்டே இருங்கள் என்று சொல்கிறேன். அப்படி அவர்களுடைய பாதையில் நடக்கும்பொழுது, ஒவ்வொருவருக்கும் உதவி செய்ய நான் காத்திருக்கிறேன்.

ஆனால், மஹாவீரா போன்றவர்களுக்கு இது சுலபமில்லை. ஆனால், இன்றைய காலகட்டத்தில் இது சுலபம்தான். வருங்காலத்தில், இது இன்னும் சுலபமாகிவிடும். ஏனென்றால், இப்பொழுது ஒருவன், தன்னுடைய முந்தைய 2 அல்லது 4 அல்லது 6 பிறவிகளில், 2 அல்லது 4 அல்லது 6 மதங்களில் பிறக்காதவனை காணுதல் அரிது. இந்த 700 வருட காலத்தில் தொடர்பு சாதனங்கள் மிகவேகமாக அதிகரித்து இருப்பதால், இந்த உலகம் மிகவும் நெருங்கி வந்து கொண்டு இருக்கிறது. ஆகவே, ஒரு ஆன்மா இந்த உலகத்தில் பல மதங்களை மற்றும் சாதிகளை சுலபமாக மாற்றிக் கொள்ளக்கூடும். இது இயற்கைதான்.

உதாரணமாக, 2000ம் வருடங்களுக்கு முன், ஒரு பிராமணன் இறந்தால், 100க்கு 99 சதம், அவன் சூத்திர குலத்தில் பிறக்க மாட்டான். அவனுடைய மனம், அந்தப் பிறவில் ஏற்பட்ட வாழ்க்கை ஒழுக்கக் கட்டுப்பாடுகளால் நிரப்பப்படுவதால், அவனுடைய ஆன்மா மறுபிறவி எடுக்கும் பொழுது, அதே ஜாதியில் உள்ள கருப்பையில் நுழையும் படியாக கட்டுப்படுத்தப்படுகிறது. சூத்திர ஜாதி என்பது அப்பொழுது தீண்டத்தகாததாக இருந்தது. மற்றைய ஜாதியினரின் நிழல்கூட, ஒரு பிராமணன் மேல் படக்கூடாது! அப்படி அவனுடைய நிழல்பட்டால், அந்தப் பிராமணன் உடனே குளிக்க வேண்டும்.

ஆகவே, ஒரு பிராமணனும், ஒரு சூத்திரனும் பரந்த அளவில் வேறுபடுத்தப்பட்டார்கள். அது ஒரு முடிவில்லாத பள்ளத்தாக்கு போல.

இறந்தபிறகு, ஒரு பிராமணனது ஆன்மா, ஒரு சூத்திரா குடும்பத்தில் மறுபிறவி எடுக்கும் என்பதை நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. ஏனென்றால், மனமும் அதன் ஆசைகளுமே, ஒருவனுடைய மறுபிறவியை நிர்ணயிக்கிறது. ஆகவே, முற்றிலும் மாறுபட்ட ஒரு சூத்திரா குடும்பத்தில் ஒரு பிராமணனது ஆன்மா ஒருக்காலும் மறுபிறவி எடுக்காது. ஆகவே, 2000ம் வருடங்களுக்கு முன்பு, ஜாதியை மாற்றுவது மறுபிறவியில் கூட நடக்காது! மஹாவீராவின் காலம்வரை, ஒருவன் வேறு ஒரு மதத்தில் பிறப்பது என்பது மிகவும் அரிதான செயல். அப்பொழுது, ஒரு மதத்தின் கலாச்சாரம் என்பது திட்டவட்டமாக வரையறுக்கப்பட்டுள்ளது. ஆகவே, அது, அதே ஆற்றில்தான் நேரடியாகச் சென்று பாயும். இந்தப் பிறவியில் மட்டுமல்ல, முற்பிறவியிலும் ஒருவன் அதே மதத்தில்தான் சுழன்று சுழன்று வரவேண்டும்.

ஆனால், இந்த 20வது நூற்றாண்டில், இது நடக்கக்கூடிய காரியமில்லை. இந்தக் காலத்தில், மக்களுடைய வெளிப்பழக்க வழக்கங்கள் மாத்திரம் சுதந்திரத்தன்மையிலும், தொலைநோக்குப் பார்வையிலும் செயல்படவில்லை; அவர்களுடைய மனமும் மிகவும் பரந்த தன்மையிலும், சுதந்திரமாகவே இயங்குகிறது. எல்லாமே மனத்தைப் பொருத்த விஷயம்தான். இந்தக் காலத்தில், ஒரு பிராமணன், ஒரு முகமதியனின் பக்கத்தில் உட்காரக் கூச்சப்படமாட்டான். ஏன், அவனோடு சேர்ந்து உணவு உட்கொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை. வருங்காலத்தில் இருக்கும் கொஞ்சநஞ்ச வேற்றுமை உணர்வும் முழுமையாக மறைந்துவிடும்.

ஒருவனிடம் இப்படிப்பட்ட சங்கடம் குறையவில்லையென்றால், அவன் இந்தக் காலத்து மனிதனல்ல. அவனுடைய மனம் 500 வருடங்களுக்கு முந்தியது என்றே கருத வேண்டும். நவீன காலத்து மனிதனுக்கு, இப்படிப்பட்ட சங்கடம் ஏதும் இருக்காது. இப்பொழுது, இதைப்பற்றி நினைப்பதே முட்டாள்தனமானது. ஆகவே, ஒரு ஆன்மா வேறு ஒரு மதத்தையோ அல்லது ஜாதியையோ மாற்றிக்கொள்வது என்பது மிகவும் பரவலாக இருக்கிறது. அந்த பலவகைப்பட்ட கதவுகள் திறந்தே இருக்கின்றன.

சுமார் 500 வருடங்களுக்க முன்பு இருந்தே, அந்தக்கதவுகள் மேலும் மேலும் அகலமாகத் திறந்து கொண்டேதான் இருக்கின்றன. இதனால், இப்பொழுது நான் சிலவற்றைக் கூற வேண்டும். என்னுடைய முற்பிறவிகளில், நான் பலவகைப் பாதைகளில் நடந்து வந்ததால், இப்பொழுது அவைகளைப் பற்றிப் பேசுவது என்பது எனக்கு சுலபமாகவே இருக்கிறது. திபெத்திலிருந்து வந்த தேடுபவர்கள் (SEEKERS) ஏதாவது பற்றி என்னிடம் கேள்வி கேட்டால், என்னால் அவர்களுக்குப் பதில் கூறி, வழி நடத்த முடியும். அதற்கு நான், என்னுடைய தொடர் முற்பிறவிகளில் ஏதாவது ஒன்றில் நான் திபெத்தில் பிறந்து, அங்குள்ள முறைகளை அனுபவப்பூர்வமாக அறிந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் முடியாது. அனுபவம் இல்லாமல், நான் சொல்வது அனைத்தும் மிகவும் மேம்போக்காகவே இருக்கும். அதில் எந்த ஆழமும் இருக்காது. ஒன்றில், நான் மிக ஆழமாகச் சென்றாலொழிய அதைப்பற்றி ஆழமாக என்னால் விளக்க முடியாது.

நான் ஒரு மசூதிக்குச் சென்று, ஏதும் பிரார்த்தனை செய்யாவிட்டால், நான் நமாஸைப் பற்றிப் பேசுவதில் எந்த ஆழமும் இருக்காது. அதனால் எந்தப் பிராயோ ஜனமும் இல்லை. ஆனால், நான் நமாஸ் செய்திருந்தால், ஒருவன் ஹிந்து பிரார்த்தனை மூலமாக எதை முடிவாக அடைய முடியுமோ, அதை நமாஸின் வழியாகவும் அடையலாம் என்று என்னால் தெரிந்து கொள்ள முடியும். அப்பொழுது நான் ஒரு தேர்ந்து எடுப்பவனாக இருக்க மாட்டேன். அதற்காக, நமாஸுக்கும், பிரார்த்தனைக்கும் எந்த வேறுபாடும் இல்லை என்று நான் சொல்லவில்லை. ஆகவே, ஹிந்துக்களும், முஸ்லீம்களும் ஒன்றாகக் கூடுவார்கள் என்று நான் நம்புகிறேன். நான் அதற்குக் கூறும் காரணம் வித்தியாசமாக இருக்கலாம். அவர்களுடைய முறைகள் வெவ்வேறாக இருந்தாலும். அவர்களுடைய இலக்கு ஒன்றுதான் என்பது எனக்குத் தெரியும்.

இப்படி, இந்தக் காலகட்டத்தில், சூழ்நிலை மாறிக் கொண்டே இருக்கிறது. வருங்கால 100 வருடங்களில், ஆன்மா, மிகவும் வேறுபட்டு மறுபிறவிகளை எடுக்கும். வெளிக்கட்டுப்பாடுகள் உடைவது போல, அதே அளவில் உள்கட்டுப்பாடுகளும் உடையவே செய்யும்.

வெளிப் பழக்க வழக்கங்களிலும், முறைகளிலும் கறாராக சட்டதிட்டங்களை ஏற்படுத்தி உங்களிடம் திணிப்பது கூட, அது அவர்களுடைய உள் மாற்றத்துக்கு உதவி செய்யும் என்ற காரணத்திற்காகவே என்பதை நீங்கள் அறிந்தால், ஆச்சரியப்படுவீர்கள். ஆனால், இந்தக் காரணத்திற்காக, இந்த நாட்டில் உள்ள ஜாதிமுறைகளை விஞ்ஞான முறையில் விளக்கவோ அல்லது புரிந்து கொள்ளவோ முடியாது. ஒரு பக்கம் உபநிஷத்தை எழுதிய அதே பழைய பிராமணர்கள், மறுபக்கம், கீழ் ஜாதியாகக் கருதப்படும் சூத்திரர்களுக்கு எந்த அளவுக்கு அநீதி செய்திருக்கிறார்கள் என்று இப்பொழுது நாம் அறிந்து வேதனைப்படுகிறோம். இவைகள் இரண்டும் முரண்பாடாகவே இருக்கிறது. ஒன்று உபநிஷத்து தவறாக இருக்க வேண்டும். அல்லது சூத்திரர்களுக்கென்று தனிச்சட்டதிட்டங்களையும், பாகுபாடுகளையும் ஏற்படுத்திய அதே பிராமணர்களால், அதை எழுதியிருக்க முடியாது. அப்படி இருவரும் ஒரே பிராமணர்கள் தான் என்றால், தவறு வேறு எங்கேயோ இருக்கிறது.

ஆனால், உண்மை என்னவென்றால், இந்த ஏற்பாடுகள் அதே பிராமணர்களால்தான் உண்டாக்கப்பட்டது. மனு-ஸ்மிருதி (MANU-SMRITI) என்ற ஹிந்து சமூக நல சட்டத்தை, ஜாதிப்பிரிவினையை அடிப்படையாக வைத்து வழங்கிய மனு என்பவர், மனிதன் தெய்வமாகலாம் என்று பெருமிதமாகப் பேசுவார் என்பதை உங்களால் கற்பனை பண்ணிக்கூடப் பார்க்க முடியாது.

இந்த உலகத்தில் மனுவை விட சிறந்த அறிவாளி இதுவரை பிறக்கவில்லை என்று நீட்ஷே (NIETZSCHE) கூறுகிறார். ஆனால், அவருடைய ஜாதி முறைகளை சூத்திரா என்ற அடிப்படையில் வைத்து அறிவித்ததை நாம் பார்க்கும் பொழுது, யாருமே அதுவரை ஏற்படுத்தியிராத முறையில், ஒரு ஜாதிக்கும் , இன்னொரு ஜாதிக்கும் அசைக்க முடியாத வேற்றுமையை உண்டாக்கியிருப்பது வியக்க வைக்கிறது. 5000 வருடங்களுக்கு முன் தனி ஆளாக ஏற்படுத்திய இந்த முறையை, நம்மால் அசைக்கக் கூட முடியவில்லை! இன்றைக்கும் கூட இந்தப் பிரிவினை மிகவும் மேலான நிலையில் தான் இயங்கிக் கொண்டு இருக்கிறது.

இன்றைக்கு இந்தியாவில் இருக்கும் எல்லாச் சட்டங்களும், எல்லா அதிகார வர்க்கங்களும், அறிவு கூர்மை யுடையவர்கள் மற்றும் அரசியல் அனைத்தும், 5000 வருடங்களுக்கு முன் இறந்த இந்த மனு என்ற அறிவாளியை எதிர்த்துப் போராடுகிறார்கள். ஆனால், அவர் ஏற்படுத்திய முறையை அப்புறப்படுத்துவது என்பது மிகவும் கடினம் என்பது நிரூபணமாகிறது. ராஜா ராம் மோகன் ராய் முதல் காந்திஜி வரை, 150 வருடங்களாக இந்தியாவில் உள்ள அதிபுத்திசாலிகள் அனைவரும், இந்த மனுவுக்கு எதிராகச் சண்டை போட்டுக் கொண்டு தான் இருக்கிறார்கள். இந்த மனிதன் உண்மையிலேயே மிகச்சிறந்த அறிவாளிதான். சந்தேகமே இல்லை. அவனுக்கு முன்னால், காந்திஜி மற்றும் ராஜா ராம் மோகன் ராய் போன்றவர்கள் குழந்தைகள் போல் காட்சியளிக்கிறார்கள்! மனுவின் காலத்து சூழ்நிலை இப்பொழுது மாறிவிட்டது. ஆனாலும், அவனை இந்த சமூகத்திலிருந்து முழுமையாக அப்புறப்படுத்த முடியவில்லை. அதற்கு முக்கியக் காரணம், அவனுடைய முறை, மிக ஆழமாக ஒவ்வொருவரிடமும் இயங்கிக் கொண்டு இருக்கிறது.

அவருடைய அடிப்படை கொள்கை என்னவென்றால், ஒருவன் இந்தப் பிறவியில் நமாஸ் செய்தால், அவன் மறுபிறவியில், ஒரு முகமதியன் குடும்பத்தில் பிறந்து மீண்டும் நமாஸ் செய்ய வேண்டும். மாறாக, அவனுடைய கலாச்சாரம் அல்லது மதம் மறுபிறவிகளில் மாறினால், அவன் மூன்று பிறவிகளில், அதே மதத்தில் பிறந்து முடிக்க வேண்டிய வேலையை, 30 பிறவிகளில் முடிக்க வேண்டிவரும். ஒவ்வொரு பிறவியிலும், அவனுடைய கலாச்சாரம் மாறினால், பழைய சங்கிலி அறுபட்டு விடுகிறது. ஒவ்வொரு சமயத்திலும், ஒருவன் தன் பாதையை மாற்றினால் அவன் மீண்டும் ஆரம்பத்திலிருந்தே, அதாவது ABC யில் இருந்தே, அதை ஆரம்பிக்க வேண்டும். பழைய கலாச்சாரத்தில் அவன் தொடர்ந்து செயல்பட முடியாது. உதாரணமாக, ஒருவன் முற்பிறவியில், முகமதியன் குடும்பத்தில் பிறந்திருந்து, இந்தப் பிறவியில், அவன் ஒரு ஹிந்து குடும்பத்தில் பிறந்தால், அவன் ஆரம்பத்திலிருந்து, அதாவது ABC யிலிருந்து ஆரம்பிக்க வேண்டி வரும். சென்ற பிறவியில் செய்த வேலையால், இப்பொழுது எந்த பிரயோஜனமும் இல்லை.

இது எப்படியிருக்கிறது என்றால், ஒரு பள்ளியில் முதல் வகுப்பில் படிக்கும் ஒரு பையன், 6 மாதத்திற்குப் பிறகு, அந்தப் பள்ளியை விட்டு நீங்கி, வேறு ஒரு பள்ளியில் சேர்ந்தால், எப்படி அவன் ஆரம்பத்தி லிருந்தே தொடங்க வேண்டுமோ, மற்றும் அவன், அதைப் பாதியில் விட்டு விட்டு மூன்றாவது பள்ளியில் சேர்ந்தால், எப்படி அவன் ஆரம்பத்திலிருந்து மறுபடியும் தொடங்க வேண்டுமோ, அதைப் போலத்தான் இந்த பிறவிகளின் சமாச்சாரமும். அப்படி அவன் மாறிக் கொண்டே இருந்தால், அவனுடைய படிப்பு எப்பொழுது முடியும்? அவன் அதே முதல் வகுப்பில்தான் இருக்க வேண்டும்.

ஆகவே, ஒரு மனிதன் மீண்டும், மீண்டும் அதே கலாச்சாரத்தில் பிறந்தால், அவன் எதில் முன்பு விட்டானோ, அதிலிருந்து சுலபமாக அடுத்த பிறவிகளில் மீண்டும் தொடங்கி, அதை முடிப்பது சுலபமாக இருக்கும் என்ற மனுவின் கொள்கை அர்த்தமுடையதுதான். ஆனால் அந்த முறையில், எந்தவித தப்பித்துக் கொள்வதற்கு வழியில்லாமல், மிகவும் ஒழுங்குப்படுத்தப்பட்டு, வரம்புகளை மீறமுடியாமல் இருந்தாலொழிய, இது நடைபெறாது. ஆனால், கீழ்கண்ட விதிவிலக்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறது. அதாவது ஒரு பிராமணன், சூத்திரா குலத்தில் உள்ள பெண்ணை மணப்பதற்கு தடையேதும் இல்லை. இதில் மனுவினுடைய அபிப்ராயம் என்னவென்றால், இப்படி ஒரு பிராமணனும், ஒரு சூத்திரப் பெண்ணும் மணந்து, பிறக்கும் குழந்தை பிராமணத் தொடரைத்தான் கடைப்பிடிக்கும் என்பதாகும். ஆனால், அந்தக் குழந்தை மீண்டும் ஒரு சூத்திரப் பெண்ணுக்கும், ஆணுக்கும் பிறக்காது என்பதற்கு என்ன உத்தரவாதம்? இதற்கு எந்த தர்க்க ரீதியான விளக்கமும் கிடையாது.

ஆகவே, இதைப் போன்ற பிறப்புகளை ஒருவனிடம் தடுக்கும்பொழுது, அதைப் போன்ற பிறப்புகளை அவனால் உண்டாகாமலும் தடுக்க வேண்டும். ஆகவே தான், திருமணத்தில் மிகவும் கடுமையாக, அந்தக் காலத்தில் நடந்து கொண்டார்கள். அதில் சிறிதளவு விட்டுக் கொடுத்தாலும், அதுவரை கட்டிக்காத்த ஒரு முறை, மிகவும் சீர்குலைந்து விடும்.

ஆனால் இப்பொழுது அது சீர்குலைந்து வெகு நாளாகிறது! இக்காலத்தில் அதை ஒழுங்குபடுத்துவது என்பது நடக்காத காரியம்.

ஏன், நிச்சயம் முடியாது என்றே கூறலாம். இப்பொழுது வேறு நல்ல முறைகளைக் கண்டுபிடிக்க வேண்டும். அது மனு கண்டு பிடித்ததை விட, மிக ஆழமாக மக்களிடம் வேலை செய்ய வேண்டும். இதனால் மனுவின் அறிவை, குறைவாக எடை போடக் கூடாது. அவர் மிகச் சிறந்த அறிவாளிதான். ஆனால், அவருடைய ஜாதிமுறை துல்லியமில்லாதது. இதனால் ஒருவனுக்குத் தீங்கைத்தான் உண்டு பண்ண முடியும். இந்த சமூகக் கட்டுப்பாடு, மிகவும் வெளித்தன்மையில் இயங்கக்கூடியது. ஆனால், அவைகளின் உள்நோக்கம் என்னவென்றால், ஒருவருடைய உள்ளத்தைச் சீர்படுத்துவதுதான். இப்பொழுது, இந்த முறை எடுபடாது. அதாவது அது வேலை செய்யாது. அது இப்பொழுது இல்லாவிட்டாலும், வருங்காலத்தில் அது மிகுந்த தொல்லையைக் கொடுக்கும்.

இப்பொழுது, மிகவும் நுண்ணிய மனநிலையில், நாம் பரிசோதனை செய்து பார்க்க வேண்டும். அதாவது, நாம் நமாஸையும், பிரார்த்தனையையும் இந்தப் பிறவியில் மிகவும் ஈடுபாட்டுடன் செய்ய வேண்டும். அப்பொழுது, சென்ற பிறவியில் நமாஸை விட்டிருந்தால், அவன், (இந்தப் பிறவியில்) நமாஸை விட்ட இடத்திலிருந்து, பிரார்த்தனையாகத் தொடர முடியும். அதாவது, நமாஸும், பிரார்த்தனையும் ஒன்றை ஒன்று மாற்றக் கூடியதாக அமைய வேண்டும். ஒருவனுடைய காதுகள் கோவில் மணி ஓசையை மட்டும் கேட்கும் படியாக ஒழுங்குபடுத்தப்படக்கூடாது. அவனுடைய காதுகளுக்கு, மசூதிகளிலிருந்து வரும் காலைப் பிரார்த்தனை (அஜன்-AJAN) அந்நியமாக தெரியக்கூடாது. ஹிந்து கோவிலின் மணிஓசைக்கும், மசூதிகளிலிருந்து வரும் அஜன் ஓசைக்கும், அவனிடத்தில் ஒரு லயம் அல்லது ஒருங்கிணைப்பு (HORMONY) ஏற்பட வேண்டும்.

இது ஒன்றும் கஷ்டம் இல்லை. வருங்காலத்துக்குத் தேவை ஒரு புதிய மதம் அல்ல; மாறாக ஒரு புதிய மதத்தன்மைதான். மனுவினுடைய மொத்தக் கொள்கையும் தகர்ந்து விட்டது. அது மாத்திரமல்ல, புத்தா மற்றும் மஹாவீராவின் கலாச்சாரமும் அழிந்துவிட்டது. இக்காலத்தில், அதே கலாச்சாரச் சங்கிலித் தொடரில், அந்தப் பரிசோதனை தோல்வியடைய நேரிடும். குருட்ஜீவ், தன்னால் முடிந்த அளவு முயன்றார். கிருஷ்ண மூர்த்தியும், சென்ற 40 வருட காலமாக கஷ்டப்பட்டார். எந்தப் பயனும் ஏற்படவில்லை.

இப்பொழுது சூழ்நிலையே மாறிவிட்டது. இந்தப் புதிய சூழ்நிலைக்கு ஏற்றவாறு, ஒரு முழுமையான முற்றிலும் புதிதான கொள்கை தேவையாக இருக்கிறது. இந்தப் புதிய கொள்கையை இதுவரை பரிசோதித்துப் பார்க்கவில்லை. இந்தப் புதிய மதத்தன்மையில், எல்லா மதங்களும், அவைகள் இருக்கும் நிலையில், மிகச் சரியே என்பதாகும். நம்முடைய கண்கள், அவைகளின் இலக்கிலேயே இருக்க வேண்டும். அடுத்து, ஒருவர் அந்தப் பாதையில் தொடர்ந்து நடந்தவாறு இருக்க வேண்டும் என்று வலியுறுத்த வேண்டும். ஒருவர் எந்தப் பாதையில் வேண்டுமானாலும் நடக்கலாம். ஆனால், அவர் எந்தப் பாதையில் வேண்டுமானாலும் சுலபமாக மாறிக் கொள்ளலாம் என்ற வகையில் அவைகள் அமைந்திருக்க வேண்டும். அந்த அளவுக்கு, அவைகளுக்கிடையே உள்ள இடைவெளி அதிகமாக இருக்கக்கூடாது. அப்பொழுதுதான் ஒருவர் சுலபமாக வேறு ஒரு பாதைக்கு மாறக் கூடும். ஒரு பாதைக்கும், மற்றொரு பாதைக்கும் குறுக்குப் பாதை என்று ஒன்று இருக்க வேண்டும்.

அந்த முடிவின் எல்லையில் எல்லாப் பாதைகளும் வந்து ஒன்று சேர வேண்டும். அந்த எல்லையை, ஏதாவது ஒரு பாதையின் வழியாகச் சென்று அடைய கஷ்டப்படத் தேவையில்லை. ஆனால், இப்பொழுது ஒரு பாதையை மட்டும் தேர்ந்தெடுத்து, ஒருவர் அதன் வழியே நடந்து சென்று உச்சியை அடைவது அவ்வளவு சுலபமல்ல. ஏனெனில், இப்பொழுது உள்ள வாழ்க்கை, உள்ளும், புறமும் சஞ்சலமிக்கதாக இருக்கிறது.

ஒரு ஹிந்து குடும்பத்தில் பிறந்து வளர்ந்த ஒருவன் தன்னுடைய வாழ்க்கையின் எஞ்சிய நாட்களை, ஐரோப்பாவில் கழிக்க நேரிடும். இன்னொருவன் அமெரிக்காவில் பிறந்து, பிற்பாடு தன் வாழ்க்கையை ஒரு இந்திய நாட்டில் வசிக்க நேரிடலாம். லண்டனில் வளர்ந்த ஒருவன், பிற்பாடு தன் வாழ்நாளை வியட்நாமில் கழிக்க நேரிடலாம். இது இப்பொழுது திரும்பத்திரும்ப சாதாரணமாக நடந்து கொண்டுதான் இருக்கிறது. தினமும் பொருளாதார ரீதியிலும் மற்றம் மனநல ரீதியிலும், இந்த சூழ்நிலை தினமும் மாறிக் கொண்டே தான் இருக்கிறது. இந்த மாற்றங்கள் மிக வேகமாக நடந்துகொண்டே தான் இருக்கின்றன. ஆகவே, அந்த நேரான பாதையை இணைக்கும் குறுக்குப் பாதைகளை ஏற்படுத்திக் கொண்டே இருக்க வேண்டியதாகிறது.

குரானும், கீதையும் ஒன்றல்ல, ஆனால் இரண்டையும் இணைக்கக்கூடிய விதத்தில் ஒரு குறுக்குப் பாதையை ஏற்படுத்தலாம். ஆகவே, என்னுடைய சந்நியாசிகளை இந்த உலகம் முழுவதும் பரவச் செய்து, இந்த உலகத்தில் ஒரு ஆன்மீகத் தொடர்பை பொதுப்படையாக ஏற்படுத்த விரும்புகிறேன். இந்த சந்நியாசிகள் மசூதிகளில் நமாஸ் செய்வார்கள், சர்ச்சில் பிரார்த்தனை நடத்துவார்கள் மற்றும் கோவில்களில் 'கிர்தான்' (KIRTAN) கூட செய்வார்கள். அவர்கள் மஹாவீராவின் பாதையில் செல்வார்கள், புத்தர் செய்தது போல தியானம் செய்வார்கள் மற்றும் சீக்கிய மதத்தில் கூட பரிசோதனை செய்து பார்ப்பார்கள். இப்படியாக ஒன்றை ஒன்று இணைக்கும் பாலமாகத் திகழ்வார்கள். அதாவது மனிதர்களை இணைக்கும் ஒரு உயிருள்ள மனிதச் சங்கிலியாக. இப்படியாக, எல்லோரிடமும் ஒரே மதத்தன்மையின் உணர்வு மேலோங்கி இருக்கும். அதாவது எல்லா மதங்களும் வெவ்வேறாக இருந்தாலும், உணர்வில் ஒன்றுபடுகின்றன. அந்த மேலோன இலக்கை அடைய, அவைகள் அனைத்தும் ஒரே உள்ளுணர்வோடு நடைபோடுகின்றன. இப்படி அவைகள் ஒற்றுமையாக, உங்களை அந்த கடவுள் தன்மை என்ற இலக்கை நோக்கி அழைத்துச் செல்கின்றன.

ஆகவே, என்னுடைய வேலை, மூன்றாவதாக அமைந்திருக்கிறது எனலாம். இந்த முறையை, இதற்கு முன் யாரும் பின்பற்றவில்லை. ஆனால், இதற்காக பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன; கடைசியில் எல்லாம் தோல்வியைத்தான் தழுவின. ராமகிருஷ்ணா, ஒரு சிறிய அளவில் இதை முயற்சி செய்து பார்த்தார். ஆனால், அந்தப் பரிசோதனை கூட அவ்வளவு பழமையானது இல்லை. சுமார் 200 வருடங்களுக்கு முன் அவர் இந்த வழியில் முதன் முதலாக முயற்சி செய்து பார்த்தார். ஆனால் அவருடைய முயற்சி தோல்வியைத்தான் தழுவியது. பிறகு விவேகானந்தா அந்த முயற்சிக்கு, முற்றிலும் 'ஹிந்து' வர்ணத்தைப் பூசினார்.

இதைப் போல, 500 வருடங்களுக்கு முன், நானக் முயற்சி செய்து பார்த்தார். அதுவும் வெற்றியைத் தரவில்லை. ஹிந்து மற்றும் முகமதிய ஞானிகளின் அறிவுரைகளை ஒன்றுதிரட்டி அவர் தன்னுடைய 'குரு கிரந்தா' (GURU GRANTHA) வில் வழங்கினார். நானக் இவைகளை பாடலாகப் பாட, மர்தானா (MARDANA) தம்பூராவை மீட்டி,

அவைகளுக்கு மெருகு ஏற்றினார். ஒரு ஹிந்து பாடிக்கொண்டு இருக்கும்பொழுது, அதற்கு ஏற்றார் போல ஒரு முகமதியன் தம்பூராவை மீட்டினால், சிலசமயம் அந்தப் பாடலும், தம்பூராவின் இசையும் ஒன்றாகக் கலக்க நேரிடும் என்று அவர் ஒருசமயம் சொன்னார்.

நானக், மெக்காவுக்குச் சென்று, அங்குள்ள மசூதியில் பிரார்த்னை செய்தார். ஆனால், இந்த இரண்டு மதங்களை இணைக்கும் அவரது முயற்சி, தோல்வியையே கண்டது. அவர், தன்னுடைய குரு கிரந்தாவில் சொல்லியபடி, சீக்கிய மதத்தின் வேறு ஒரு பிரிவாக 'பந்தா' (PANTHA) என்ற புதிய மதத்தை நிறுவினார். அதற்கு உடந்தையாக, இரண்டு சுப ஞானிகளும் முயற்சி செய்தார்கள். ஆனால், எல்லா முயற்சிகளும் ஆரம்ப கட்டத்தைத் தாண்டிச் செல்லவில்லை!

அதற்குப் பல காரணங்கள் உண்டு. அந்தக் காலம் வரை, சூழ்நிலையும், மக்களும் நன்றாக முதிர்ச்சியடையவில்லை. ஆனால், இப்பொழுது அந்த சூழ்நிலையும், காலமும் கனிந்து வந்திருக்கிறது. ஆகவே, பெரும் அள்வில், முயற்சி செய்தால் வெற்றி கிடைப்பது உறுதி.

ஆகவே, என்னுடைய இந்த வழி, மூன்றாவது என்று அழைக்கிறேன். நான் பழமையில் மாற்றம் செய்யவோ அல்லது திருத்தம் செய்யவோ விரும்பவில்லை. அதைப் போல, எதையும் புதிதாக உண்டாக்கவும் விரும்பவில்லை. ஆனால் என்னுடைய உறுதியான அனுசரிப்பு என்ன என்றால் நீங்கள் நிற்காமல் நடந்துகொண்டே இருக்க வேண்டும் என்பதே. இதில் பழமை அல்லது புதுமை என்று வேறுபாடு காட்ட வேண்டாம்.

நீங்கள் உங்களுடைய முழு சுதந்திரத்தில் எதில் வேண்டு மானாலும் நடக்கலாம்.

***''இந்தக் கால சூழ்நிலையிலும் மற்றும் கட்டுப்பாட்டிலும், நீங்கள் கூறிக்கொண்டிருக்கும் தெய்வீகத்தன்மை மற்றும் சாசுவத மானதை, அனுபவபூர்வமாக உணர முடியுமா?''***

தெய்வீக அனுபவம் என்பது எப்பொழுதும், எல்லோரிடமும் இருக்கிறது. அந்த அனுபவத்தை உணருவது என்பது அவ்வளவு கஷ்டமான காரியம் அல்ல. கஷ்டமான விஷயம் எதுவென்றால், அந்த அனுபவத்தை மற்றவரிடம் விவரிப்பதுதான்! புத்தாவுக்கு அந்த தெய்வீக

அனுபவம் உண்டு. ஆனால் மஹாவீரர் அதைப் பழைய மொழியிலேயே விவரித்தார். புத்தரோ, புதிய மொழியில் எடுத்துச் சொன்னார். ஆனால் நான் அதை அந்த தெய்வீக மொழியிலேயே வெளிப்படுத்த விரும்புகிறேன்!

700 வருடங்களுக்கு முன்பு எனக்கு அந்த அனுபவம் உண்டா என்று நீங்கள் கேட்க விரும்புகிறீர்கள். ஆமாம். எனக்கு கிட்டத்தட்ட அந்த அனுபவம் கிட்டியது. ஆனால், அதைப்பற்றி இன்றைக்குத்தான் வெளியிடுகிறேன். 700 வருடங்களுக்கு முன்பு அறிந்ததை, இப்பொழுது வெளியிட முயற்சி செய்யும்பொழுது, அந்த அறிந்தவற்றில் எந்த வித்தியாசமும் கிடையாது. ஆனால், அதை வெளியிடுவதில் மிகப் பெரிய வித்தியாசம் உண்டு. 700 வருடங்களுக்கு முன்பு, இப்பொழுது சொல்வது போல, சொல்ல வேண்டியது இல்லை. அதற்கு அவசியமும் இல்லை.

அந்த சூழ்நிலை எப்படியிருக்கிறது என்றால், மழைக்காலத்தில் வானவில் தோன்றுவது போல இருக்கிறது. இது ஒரு மிகவும் வித்தியாசமான நிகழ்ச்சிதான். நீங்கள் நிற்கும் இடத்திலிருந்தே, அந்த வானவில்லை நீங்கள் பார்க்கலாம். அந்த வானவில் மூன்று விதத்தன்மையை பொருத்து காட்சி அளிக்கிறது. அந்த மழைக் காலத்தில், காற்றில் நீர் திவலைகளோடு, நீராவியும் இருக்க வேண்டும். அடுத்து, ஒரு குறிப்பிட்ட கோணத்தில், சூரிய ஒளிக்கதிர்கள், அவைகளின் இடையே பாயவேண்டும். கடைசியாக, நீங்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் நின்றுகொண்டு அதைக் கவனிக்க வேண்டும். நீங்கள் அந்த குறிப்பிட்ட இடத்திலிருந்து, வேறு இடத்துக்கு மாறி விட்டால், அதைக் காணமுடியாது. அந்த வானவில்லுக்கு சூரிய ஒளியும், நீரும் மாத்திரம் முக்கியமல்ல; ஒரு குறிப்பிட்ட கோணத்தில் பார்க்கும் உங்கள் கண்களும் முக்கியம். அந்த மூன்று முக்கிய அம்சங்களில் நீங்களும் அடக்கம்தான். இந்த மூன்றில் ஏதாவது ஒன்று தவறினால், அந்த வானவில்லை இழக்க நேரிடும்.

அதைப் போல, உண்மை தன்னை வெளிக்காட்டும்பொழுது, மூன்று நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. முதலில், அந்த உண்மையின் அனுபவம் அங்கே இருக்கிறது. அந்த அனுபவம் அங்கே இல்லை யென்றால், அதை வெளியே எடுத்துச் சொல்ல முடியாது. நீங்கள் எங்கே

நின்றாலும், அந்த மழைத் துளிகள் எப்படியிருந்தாலும், சூரியன் எழும்பாவிட்டால், எந்த வானவில்லும் உண்டாகாது. ஆகவே, எப்படி சூரியனின் வெளிப்பாடு, வானவில்லுக்கு முக்கியமோ, அதைப் போல உண்மையின் அனுபவம் என்பது இங்கு முக்கியமாகிறது. இரண்டாவதாக, எங்கே அந்த உண்மையின் அனுபவம் இருக்கிறதோ, அதைப் போல, அதைக் கேட்பவர்களும் அங்கே முக்கியமாக இருக்க வேண்டும். ஆனால், அதைச் சொல்பவர், சரியான கோணத்தில் நிற்காவிட்டால், பிறகு எதையும் வெளிப்படுத்த முடியாது.

இதைப் போல, மெஹர் பாபாவுக்கு (MEHAR BABA) நேர்ந்தது. அதை வெளிப்படுத்தும் பொழுது, மெஹர் பாபாவினால் சரியான கோணத்தில் நிற்க முடியவில்லை. அதனால், அவருடைய அனுபவத்துக்கும், கேட்பவர்களிடத்தும் ஒரு வானவில்லை ஏற்படுத்த முடியவில்லை. அதைப் போல, அநேக ஞானிகள் அமைதியாகி விட்டார்கள். அதற்குக் காரணமும் உண்டு. முக்கியமாக, அதை வெளிப்படுத்த, அவர்கள் சரியான குறிப்பிட்ட கோணத்தில், குறிப்பிட்ட இடத்தில் நிற்கவில்லை. இல்லாவிட்டால், சொல்பவர் சரியான கோணத்தில், சரியான இடத்தில் நிற்காமல் இருந்தால், உண்மையின் அனுபவம் ஒருபக்கம் இருக்க, அதைக் கேட்பவர் வேறு ஒரு பக்கத்தில் நின்று கொண்டு இருப்பார். ஆனால், சொல்பவர் சரியான இடத்தில் நின்றுகொண்டு, சரியாகப் பேசினாலும், அதைக் கேட்பவர் என்று யாரும் இல்லாவிட்டால், அப்பொழுதும் எதையும் வெளிப்படுத்த முடியாது. ஆகவே, இங்கு கேட்பவரும் முக்கியமாகிறார்.

700 வருடங்களுக்கு முன், நான் யாரைப் பற்றிப் பேசினாலும், அதில் நான் பேச வேண்டியதும் கலந்தே இருக்கும். ஆனால், இப்பொழுது உங்களிடம் பேசும்பொழுது, 700 வருடங்களுக்கு முன்பு, என்னைக் கேட்பவருக்காகப் பேசியதை இப்பொழுது அப்படியே உங்களிடம் பேச முடியாது. மேலும், எனக்கு முன்னால், நீங்கள் உட்காராமல், வேறு ஒருவர் இருந்தால் கூட, நான் அப்படியே பேசமுடியாது. ஏனென்றால், நான் பேசுவதற்கு எப்படி நான் பொறுப்பாகிறேனோ, அப்படி நான் பேசுவதற்கு நீங்களும் அடிப்படைக் காரணமாகிறீர்கள். நீங்கள் இல்லாமல், என்னால் அதைப் பேசமுடியாது. இப்படியாக, இந்த மூன்று அம்சங்களும் ஒரே

அலைவரிசையில் இயங்கினாலொழிய, உண்மையை வெளிப் படுத்துதல் என்பது முடியாத காரியம்.

இந்த மூன்றில் ஏதாவது ஒன்று தவறினாலும், அந்த வானவில்லைப் பார்க்க முடியாது. அப்பொழுது அந்த சூரியனோ அல்லது நீர்த்திவலைகளோ, இந்த ஆகாயத்தில் எதையும் ஏற்படுத்த முடியாது.

உண்மையை வெளிப்படுத்துவது என்பது ஆகாயத்தில் வானவில் தோன்றுவது போலவே அமைகிறது. ஒவ்வொரு கணமும், அது மறைய் வாய்ப்பிருக்கிறது. மூன்றில், ஏதாவது ஒன்றில் சிறிய மாற்றம் ஏற்பட்டாலும், அதனுடைய மறைவுக்கு, மற்ற இரண்டும் காரணமாகி விடுகிறது. கேட்பவர் இடம் மாறினாலே, அந்த வானவில் மறைந்து விடும். அதைப் போல கேட்பவர் நகர்ந்து சென்றாலும், பேசுவது பிரயோஜனம் இல்லை.

ஆகவே, நான் இன்று பேசுவதுபோல, 7 நாட்களுக்கு முன்பு பேசியது, இப்படியே இருக்காது. அதைப் போல, நான் இன்று பேசுவதை, 7 நாட்களுக்குப் பிறகு, அப்படியே என்னால் பேசமுடியாது. ஏனென்றால், அதற்குள் எல்லாமே மாறிவிடும்.

இந்தச் சூரியன் அப்படியேதான் இருக்கும். அது வெளிச்சத்தை வழங்கிக் கொண்டேதான் இருக்கும். அதை 'உண்மை' என்று வைத்துக்கொண்டால், அடுத்த இரண்டு அம்சங்களாகிய, பேசுபவர் மற்றும் கேட்பவர், எப்பொழுதும் மாறிக் கொண்டே யிருக்கும் தன்மையுடையவர்கள்தான்.

ஆகவே, அந்த அனுபவம் என்பது 700 வருடங்களுக்கு முன்பு நடந்தது. அதை வெளிப்படுத்துதல் என்பது இன்றுதான் நடக்கிறது. அதை 'இன்றைக்கு' என்று சொல்வது கூட சரியில்லை. இந்தக் 'கணம்' என்ற சொல்வது தான் சரியாக இருக்கும். நாளை கூட, இதுவே அதுவாக இருக்க முடியாது. ஒவ்வொரு கணமும், அதை வெளிப்படுத்துதல் என்பது மாறிக் கொண்டே இருக்கிறது.

***'இறந்த பிறகு, ஆன்மாவுக்கு என்ன நேருகிறது என்று நீங்கள் தயவு செய்து விளக்க முடியுமா? அதாவது, அது எங்கே நகர்ந்து கொண்டு இருக்கிறது, அது என்ன செய்கிறது, அது ஒரு உடலிருந்து***

***வெளிப்பட்டு, மறு உடம்பை எடுப்பதற்கு இடையில் உள்ள கால கட்டத்தில், அதனுடைய நிலை என்ன?***

***இதைப் பொருத்த வரையில், ஒரு ஆன்மா, எப்பொழுது விருப்பப்படுகிறதோ, அப்பொழுது அது சுதந்திரமாக மறுபிறவி எடுக்க முடியும் என்று நீங்கள் ஏற்கெனவே கூறியிருக்கிறீர்கள்.***

***அதைப் போல, ஒரு ஆன்மா, தன் விருப்பப்படி ஒரு உடலை விட்டு நீங்க முடியுமா அல்லது நீங்காமல் தொடர்ந்து அதிலேயே இருக்க முடியுமா. இவைகளை தயவு செய்து எங்களுக்கு விளக்கும் படி கேட்டு கொள்கிறேன்.''***

ஒரு ஆத்மா, ஒரு உடலை விட்ட பிறகு, மறு உடலை எடுக்கும் இடைவெளியைப் பற்றி இரண்டு அல்லது மூன்று விஷயங்களை அறிந்து கொள்வது என்பது மிகவும் அவசியம். முதலில், அந்த உண்மை என்னவென்றால், அந்த இடைவெளியில் ஏற்படும் அனுபவம் கனவுகள் போன்றவைதான். ஒருவர் எப்பொழுதாவது எதையாவது அனுபவித்தால், அந்த சமயத்தில், அந்த அனுபவம் என்பது உண்மை நிகழ்ச்சியாகவே தோன்றும். ஆனால், அவர் அதைத் திரும்பவும் ஞாபகத்துக்குக் கொண்டு வரும்பொழுது, அது கனவு போலத் தோற்றம் அளிக்கும். அங்கே புலன்களுக்கு வேலை இல்லாததால், அது கனவு போலத்தான் தோற்றம் அளிக்கும். உங்கள் உடலில் உள்ள புலன்களின் வழியாக, அந்த நிகழ்ச்சி வரும்பொழுது தான், அது உண்மை என்ற உணர்வு ஏற்படும்.

நான் உங்களைப் பார்த்துக் கொண்டு இருப்பதாக உணர்ந்து பிறகு உங்களைத் தொட முயன்றால், உங்களைத் தொட முடியவில்லை என்று அறிகிறேன். அப்போது நான், உங்களை வெறும் மாயத் தோற்றம் (MIRAGE) என்று கூறுகிறேன். நீங்கள் உண்மையாக இங்கு இல்லை. நான் இந்த மேஜையை தொட முயன்று, என்கைகள் எதையும் தொடாமல் வெறுமனே அப்பால் சென்றால், அப்பொழுது நான், இந்த மேஜை உண்மையல்ல என்ற கூறுவேன். அல்லது நான் ஒரு மயக்கத்தில் அல்லது ஒரு பிரமையில் இருந்தேன் என்றும் கூறலாம். நம்முடைய புலன்கள் கொடுக்கும் அத்தாட்சிப் பத்திரத்தில்தான், உண்மை என்பது அடங்கியிருக்கிறது.

ஆனால், ஒரு உடலைவிட்ட பிறகு, அடுத்த உடலை எடுப்பதற்கு முன், நம்மிடம் புலன்கள் கிடையாது. உடலே அங்கு இல்லாத பொழுது, நீங்கள் அடையும் அனுபவம் எல்லாம், ஒரு கனவு போலத்தான் இருக்கும்; அதாவது நீங்கள் ஒரு கனவைக் காண்பது போலவே, உங்களுக்குத் தென்படும். நாம் கனவுகளைக் காணும்பொழுது, நாம் அவைகளில் உண்மை நிலை பற்றிச் சந்தேகப்படுவது இல்லை. இது மிகவும் சுவாரசியமானதுதான். அவைகளைக் கண்ட சிறிது நேரத்துக்குப் பிறகுதான், அதனுடைய உண்மை நிலையைப் பற்றி நமக்குச் சந்தேகம் ஏற்படுகிறது. ஆனால், நாம் அந்தக் கனவில் லயித்து இருக்கும்பொழுது, அதைப் பற்றி எந்த சந்தேகமும் வராது. அந்தக் கனவு, உண்மை போலவே இருக்கும். ஆனால், உண்மையிலேயே ஒன்றைப் பார்க்கும்பொழுது, நாம் காண்பது உண்மையிலே உண்மையானதா அல்லது இல்லையா என்ற சந்தேகம் சிலசமயம் நமக்கு ஏற்படக் கூடும். ஆனால், ஒரு கனவில், அப்படிப்பட்ட சந்தேகம் ஒருக்காலும் ஏற்படாது. ஏன்? ஏனென்றால், ஒரு சிறிய சந்தேகத்தைக் கூட, அந்தக் கனவு ஏற்றுக் கொள்ளாது. அப்படி ஏதும் சந்தேகம் ஏற்பட்டால், அந்தக் கனவு உடனே கலைந்து விடும்.

கனவு என்பது மிகவும் மென்மையானது. அதைக் கொல்வதற்கு, ஒரு சிறிய சந்தேகம் கூடப் போதும். அது வெறும் கனவுதான் என்ற உணர்வு கூட, அதைக் கொன்றுவிடும். பிறகு நீங்கள் உடனே விழித்து எழுந்துவிடுவீர்கள். ஒரு கனவு தொடருவதற்கு, ஒரு சிறிய சந்தேகம் கூட இல்லாமல் இருப்பது மிகவும் அவசியம். மிக ஆழமான கனவு கூட, ஒரு சிறிய சந்தேகத்தில் உடைக்கப்பட்டுவிடும். கனவில் காண்பது அனைத்தும்; உண்மையிலேயே நடப்பது போலவே தோற்றம் அளிக்கும். பார்க்கப் போனால், உண்மையில் நடப்பதை விட, கனவில் நடப்பது மிகவும் உண்மையான தோற்றத்தை உங்களிடம் ஏற்படுத்தும்! 'உண்மை' உண்மையிலேயே உண்மையாகத் தோற்றம் அளிக்காது. ஏனெனில், அதில் ஒரு சிறிய அளவில் சந்தேகம் இருந்து கொண்டே இருக்கும். ஆனால், கனவு காணும்பொழுது, அது மிகவும் உண்மையாகவே தோன்றும்.

ஒரு கனவில், சில நிகழ்ச்சிகள் நடக்காது என்று தெரிந்தும், அது அந்த அளவுக்கு தோற்றம் அளிக்காது. உதாரணமாக, ஒரு கனவில், ஒருவன் நடந்து சென்று கொண்டிருக்கிறான். திடீரென்று அவன் நாயாக

மாறுகிறான். ''இது எப்படி நடக்கும்'' என்று நீங்கள் அப்பொழுது நினைக்க மாட்டீர்கள். அது நடந்திருக்கிறது; அது நடக்கக்கூடியதுதான். அதில் சந்தேகம் எதுவுமில்லை. நீங்கள் விழித்த பிறகு, ''இது என்ன முட்டாள்தனம்?'' என்று நீங்கள் நினைக்கக்கூடும். ஆனால், அந்தக் கனவிலிருந்து வெளியே வருவதற்கு முன்பு, அப்படி நினைக்க மாட்டீர்கள். கனவில், எல்லாமே சாத்யம்தான், எந்த முரண்பாடும் கிடையாது என்றே தோன்றும்.

உங்கள் நண்பர்களில் ஒருவர் திடீரென்று தன் கைத் துப்பாக்கியை எடுத்து, உங்களைக் குறிவைக்கிறார். ''எப்படி ஒரு நண்பர் இப்படிச் செய்ய முடியும்?'' என்று உங்கள் மனத்தில் தோன்றாது. ஒரு கனவில், நடக்க முடியாதவைகள் அனைத்தும், நடக்கக் கூடும். பிறகு தூக்கத்திலிருந்து எழுந்தபிறகு, இப்பொழுது தான் அதாவது சுமார் ஒரு மணி நேரமாக அந்த கனவு நிகழ்ந்தது போல, நீங்கள் ஞாபகப்படுத்தக் கூடும். ஆனால், சாதாரணமாக ஒரு கனவு, 5லிருந்து 7 நிமிடத்துக்குள் முடிந்துவிடும். ஆனால் கற்பனைத்திறம் மிக்கவர்கள், அந்தக் கனவு சுமார் ஒரு மணி நேரமாக நடந்ததுபோல ஞாபகப்படுத்திக் கொள்வார்கள். இல்லாவிட்டால், நமக்கு ஏகப்பட்ட கனவுகளின் ஞாபகம் வந்து, நம்மால் வாழவே முடியாது என்ற நிலைக்குத் தள்ளப்படுவோம். ஒரு மணி நேரத்துக்குள், கனவு மயக்கத்திலிருந்து, மனம் விடுதலை அடைந்துவிடும்.

இரண்டு உடல்களுக்கு இடையே உள்ள இடைவெளி மேற்கண்டவாறுதான் இருக்கும். அந்த இடைவெளியில் நடப்பவை அனைத்தும் மிகவும் உண்மையாகவேத் தோற்றம் அளிக்கும். அதைப் போன்ற உண்மை நிலையை, நம்முடைய கண்களோ மற்றும் வேறு புலன்களோ, அவ்வளவு தத்ரூபமாக நமக்கு உணர்த்தியிருக்க முடியாது. ஆகவேதான் கடவுள்களின் சந்தோஷத்துக்கு முடிவே இல்லை போலும்! அந்த மோட்சத்தின் அனுபவத்தை ஒருவர் உணரும்பொழுது, அவ்வளவு உண்மையாகத் தோன்றும் நம்முடைய புலன்கள் அவ்வளவு அழகிய பெண்ணை ஒருக்காலும் பார்த்திருக்க முடியாது, பார்க்கவும் முடியாது. ஆகவேதான், ஆன்மிகத்தின் புரியாத புதிர்களுக்கு (MISERIES), முடிவே கிடையாது என்று கூறுகிறேன். அவர்கள், தங்களுடைய உண்மையான வாழ்வில் அனுபவிக்காத அளவில், அந்த புரியாத புதிர்கள் அவ்வளவு தத்ரூபமாக இருக்கும்.

ஆகவே, நாம் சொர்க்கம், மற்றும் நரகம் என்று சொல்லுவது இந்த ஆழ்ந்த கனவுநிலை வாழ்வைத்தான். நரகத்தில் எரியும் நெருப்பின் வெப்பத்தைப் போல, உண்மையான வாழ்க்கையில் பார்க்க முடியாது. மத ஏடுகளில், நரகத்தில் உள்ள நெருப்பைப் பற்றி விரிவாக சொல்லப்பட்டிருக்கிறது. அதில், நம்மைத் தூக்கிப் போடுவார்களாம்; ஆனால் அதில் நீங்கள் எரிய மாட்டீர்கள்! இந்த முரண்பாட்டை ஒருவரால் ஒருக்காலும் அறிந்து கொள்ள முடியாது. உங்களை அந்த வெப்பம் மிகுந்த நெருப்பில் போட்டால், உங்களால் அந்த வெப்பத்தைத் தாங்கிக் கொள்ள முடியாது; ஆனால் நீங்க்ள் எரியமாட்டீர்கள். அப்பொழுது, நீங்கள், ''நான் அந்த நெருப்பில் எரிக்கப்பட்டேன்'' என்றும், அந்த நெருப்பு மிகவும் பயங்கரமானது, அதனால் ஏற்பட்ட என் உடல் எரிச்சலை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை; ''இருந்தும் நான் எரியவில்லை'' என்று கூறுவீர்கள். இந்தக் கனவு போன்ற அனுபவத்திலிருந்து, ஒருவர் வெளியே வரும்பொழுதுதான், இந்த முரண்பாடான அறிக்கை வெளிவருகிறது.

இரண்டு உடல்களுக்கு இடையே உள்ள இடைவெளியில், இரண்டு விதமான ஆன்மாக்கள் இருக்கின்றன. ஒன்று, பாபங்கள் செய்த கெட்ட ஆன்மாக்கள். இவைகள் மறுபிறவி எடுக்க, தகுந்த கர்ப்பப்பை கிடைப்பது கஷ்டம். நான் இந்த கெட்ட ஆவிகளை 'பிரீதாஸ்' (PRETAS) என்று அழைக்கிறேன். அடுத்து நல்ல ஆத்மாக்கள். அவைகளை, நான் 'தேவாஸ்' (DEVAS) என்று அழைக்கிறேன். இந்த ஆவிகள் கூட மறுபிறவி எடுக்க தகுந்த கர்ப்பப்பையைக் காண்பது அவ்வளவு சுலபமல்ல.

இந்த இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையில், அடிப்படை வித்தியாசமில்லாமல், பெரும்பாலான ஆன்மாக்கள் இருக்கின்றன. அவைகளில் உள்ள ஒரே வித்தியாசம் நடத்தை, தனித்தன்மை மற்றும் மனத்தின் செயல்பாடுகளில் காணப்படும் வித்தியாசங்கள்தான். அவைகள் எல்லாம் ஒரே இனமாமகவேக் கருதப்படும். ஆனால், அவைகளின் அனுபவத்தில்தான் வித்தியாசங்கள் உள்ளன.

அந்த கெட்ட ஆன்மாக்கள், மிகவும் துன்பமான அனுபவத்தோடு, இந்த உலகத்தில் மறுபிறவி எடுக்கின்றன. அதை மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்வது என்பதே ஒரு நரகம்தான். யாரால் அந்த அனுபவங்களை மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்ள முடிகிறதோ,

அவர்கள் அந்த நரகச் சூழ்நிலையை விவரிக்க முடியும். அது ஒரு கனவு உலகம் போன்றதுதான். அதைப்போல ஒரு நரகம் எங்குமே உண்மையில் கிடையாது. ஆனால் ஒருவர் அந்தக் கனவு உலகத்திலிருந்து, திரும்பிவந்து அவைகளைத் திரும்ப ஞாபகப்படுத்திக்கொள்ளும் பொழுது, அங்குள்ள நெருப்பு வெப்பத்தை, இந்த உலகத்தில் எங்குமே காணமுடியாது என்றும், அங்கே காண்பிக்கும் வெறுப்பு மற்றும் துன்புறுத்தலுக்கு ஈடாக, இங்கே எதையும் சொல்ல முடியாது என்றே கூறுவார்கள். அதைப்போல சொர்க்கத்தின் அனுபவமும் அப்படித்தான். அவைகளில் உள்ள ஒரே வித்தியாசம், ஒன்று துன்பமயமான கனவு மற்றொன்று ஆனந்தமயமான கனவு. அவ்வளவுதான். ஆகவே, இந்த இடைவெளி, முழுக்க முழுக்க கனவு சம்மந்தப்பட்ட காலம்.

இவைகள் மிகவும் தத்துவார்த்தமாகவே தோன்றும். ஆனால் உண்மை. இவைகள் வெறும் கனவு போலத்தான். கனவுகள் என்றால் என்ன என்று நம்மால் புரிந்துகொள்ளமுடியும். ஏனெனில், நாம் அவைகளை தினமும் காண்கிறோம். [உங்களுடைய புலன்களின் உணர்வுகள் மங்கும்பொழுது, நீங்கள் கனவு காண்கிறீர்கள். அதாவது, புலன்களோடு உள்ள உங்கள் உறவு அறுபடும்பொழுது, நீங்கள் கனவு வாழ்க்கையில் அமிழ்ந்துவிடுகிறீர்கள்.] கனவுகள் கூட நரகமாகவோ அல்லது சொர்க்கமாகவோ அல்லது இரண்டும் கலந்தேகூட இருக்கலாம். சிலபேர்கள் வெறும் நரகக்கனவுகளையும் மற்றும் சிலர் சொர்க்கக் கனவுகளையும் காணுவார்கள்.

ஒரு இரவில், சுமார் 8 மணி நேரம் நீங்கள் கனவு கண்டதாக நினைக்கலாம். ஆனால் இந்தக் காலத்தை, 8 வருடமாக நீடித்தாலும், உங்களால் அதை அறிந்துகொள்ள முடியாது. ஏனென்றால், கனவில் காலத்தின் பிரக்ஞையே உங்களிடம் இருக்காது. அதைத் தீர்மானமாக ஞாபகப்படுத்திச் சொல்லமுடியாது. ஆனால் பழைய உடலில் ஏற்பட்ட ஞாபகங்களுக்கும், இப்பொழுது உள்ள உடலில் ஏற்படும் ஞாபகங்களுக்கும் இடையே உள்ள இடைவெளியில் ஏற்படும் மாற்றங்களைக் கொண்டு அதன் கால அளவை அளக்க முடியும்.

ஆனால், இது வெறும் யூகமாகவே தோன்றலாம். ஏனெனில், அந்த இடைப்பட்ட காலத்தில், அந்தக்கால அளவைப்பற்றி சரியான பிரக்ஞை உணர்வு ஏற்படுவது மிகவும் கடினம். ஆகவேதான்,

கிருஸ்துவம், நரகம்தான் எப்பொழுதுமே இருக்கிறது என்று கூறுகிறது. இது, ஒருவர் கண்ட நீண்ட கனவின் ஞாபக அடிப்படையில் அமைந்தது. அந்தக்கனவு நீண்டதாகவே இருக்கும். அப்பொழுது ஒருவர் அதிலிருந்து திரும்பும்பொழுது, இந்த உடலுக்கும், முற்பிறவி உடலுக்கும் உள்ள உறவைப்பற்றி எந்த ஞாபகமும் இருக்காது. ஆகவேதான், அவர்கள் நரகம் என்பதுதான் சாசுவதமானது என்றும், அதிலிருந்து வெளியே வருவது மிகவும் கஷ்டம் என்றும் கூறுகிறார்கள். நல்ல ஆன்மாக்கள், இன்பமான கனவுகளையும், கெட்ட ஆன்மாக்கள், துன்பமான கனவுகளையும் காண்கின்றன. அந்தக் கனவுகளால் மாத்திரமே, அவர்கள் துன்பமும், துயரமும் அடைகிறார்கள்.

சமீபத்தில், ஒருவர் மரணப்படுக்கையில் இருக்கும்பொழுது, சில செய்திகளை அவரிடம் அறிவிக்கிறார்கள். அவரிடம் ஒரு கனவு தொடர்பை உண்டாக்கவேண்டும் என்பதற்காக, இது நடைபெறுகிறது. ஒரு மனிதன் இறந்துகொண்டு இருக்கும்பொழுது, ஒருவர் மெல்ல அறிவிக்க, அதன்படி அந்த மனிதன் தன் மனத்தைக்கொண்டு பார்க்க முயல்கிறான். இப்படியாக, அவனுக்கு ஒரு புதிய சூழ்நிலையையும், புதிய எண்ணங்களையும் உண்டாக்குகிறார்கள்.

இது மிகவும் வித்தியாசமானதுதான்; ஆனால் விஞ்ஞானப் பூர்வமானது. ஒரு கனவை, வெளியிலிருந்தே உண்டாக்கலாம். நீங்கள் இரவில் தூங்கும்பொழுது, உங்களுடைய பாதங்களில் ஈரத்துணியை சுற்றிப் போர்த்தினால், நீங்கள் ஒரு குறிப்பிட்ட கனவைக் காணலாம். அப்பொழுது நீங்கள் மழைபோலவும் அல்லது பனிக்கட்டியில் நடப்பதுபோலவும் கனவு காண்பீர்கள். மாறாக, உங்கள் கால்களில் சூடு ஒற்றினால் நீங்கள் பாலைவனத்தில் நடப்பது போலவும் மற்றும் சுட்டெறிக்கும் வெயிலில், நீங்கள் வேர்வையால் நனைவது போலவும் கனவு காண்பீர்கள்.

இப்படியாக, வெளியிலிருந்து, நீங்கள் காணக்கூடிய கனவுகளை நிர்ணயிக்கலாம். இப்படி வெளித்தூண்டுதலின்பேரில், அநேக கனவுகளை உங்களிடம் ஏற்படுத்த முடியும். உங்கள் மார்பில், உங்கள் கை அழுத்தமாக இருந்தால் அது உங்கள் கையாக இருந்தும் யாரோ ஒருவர் உங்கள் மார்பின்மேல் கால்வைத்து ஓடுவதாக கனவு காண்பீர்கள்.

ஒருவன் இறக்கும்பொழுது - ஒரு நீண்ட கனவு வாழ்வை எதிர்நோக்கி; அதன்பிறகு அவனுடைய ஆத்மா, ஒரு புதிய உடலை எடுக்கலாம் அல்லது எடுக்காமலும் இருக்கலாம். அவனிடம் ஒரு தொடர் கனவுநிலையை ஏற்படுத்த, சமீபத்தில் திபெத்தில் ஒரு முறையை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவர்கள் இதை 'போர்டோ (BORDO) என்று அழைக்கிறார்கள். இது ஒரு இயக்கம் (PROCESS). இதன்மூலம், ஒரு மனிதனை இறப்பின் அனுபவத்திற்கும், இறந்த பிறகு ஏற்படும் நல்வாழ்வுக்கும், திபெத்தியர்கள் தகுந்த முறையில் தயார்ப்படுத்துகிறார்கள். அதுமாத்திரமல்ல, இப்படி ஒருவனை அவனது வாழ்வு முழுவதும் தயார்ப் படுத்திக் கொண்டே இருக்கிறார்கள்.

நீங்கள் தூக்கத்திலிருந்து எழுந்தபிறகு, சுமார் ஒரு மணி நேரம், அந்தக்கனவின் ஞாபகம் உங்களுக்கு இருக்கும் என ஏற்கனவே கூறியிருக்கிறேன். அதைப்போல, நீங்கள் ஒரு புதிய பிறவியை எடுக்கும்பொழுது, நீங்கள் குழந்தையாகப் பிறந்த 6 மாதம் வரை, கிட்டத்தட்ட எல்லாக் கனவு அனுபவங்களையும் அந்தக் குழந்தையால் ஞாபகப்படுத்திப் பார்க்கமுடியும். பிறகு அவைகள் மெல்ல மெல்ல அகன்றுவிடும். அந்தக்குழந்தை கொஞ்சம் கற்பனை மிகுந்ததாக இருந்தாலும் அல்லது உணர்வு மிகுந்து இருந்தாலும், அதனால் அதற்குமேலும் சில மாதங்கள் வரை, அவைகளை ஞாபகப்பத்திக் கொள்ளமுடியும். ஆனால் முற்பிறவியில், பிரக்ஞையோடு செயல் பட்டவர்கள் மற்றும் அதற்காக முயற்சி செய்தவர்கள், அந்த அனுபவங்களை நீண்ட நாட்களுக்கு நினைவுகூறமுடியும்.

எப்படி காலையில், விழித்தபிறகு சுமார் ஒரு மணிநேரம் அந்தக்கனவு என்ற பாம்பு உங்களைச் சுற்றிக்கொண்டு இருக்கிறதோ, அதைப்போல இரவில் தூங்குவதற்கு ஒரு மணி நேரத்துக்குமுன்பு, அந்தக்கனவின் நிழல் உங்களைமெல்ல ஆக்கிரமிக்க ஆரம்பிக்கும்.

அதைப்போல, நீங்கள் இறப்பதற்கு 6 மாதங்களுக்கு முன்பே, அதன் நிழல் உங்கள் மேல் விழ ஆரம்பிக்கும். ஆகவே நீங்கள் இறப்பதற்கு 6 மாதங்களுக்கு முன்பே அதை நீங்கள் தீர்மானிக்க முடியும். அப்படி இறப்பதற்கு 6 மாதங்களுக்குமுன்பே அது உங்களை சூழும்பொழுது அது உங்கள் உடலை இறப்பதற்குத் தயார் செய்கிறது.

நீங்கள் தூங்குவதற்கு, ஒரு மணி நேரத்துக்குமுன்பு, வரும் கனவின் நிழல் உங்கள்மேல் படறும்பொழுது அந்த நேரத்தில் நீங்கள் ஏதாவது கட்டளை இடலாம். வேறு எந்த நேரமும், அவ்வளவு தகுதியாக இருக்காது. ஏனெனில் அந்தச் சமயத்தில், நீங்கள் விழித்திருக்கிறீர்களா அல்லது தூக்கம் உங்களை ஆக்ரமிக்கிறதா என்ற சந்தேகத்தில் இருக்கிறீர்கள். ஆகவேதான் உலகத்தில் உள்ள எல்லா மதங்களும், இரவில் தூங்குவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பும், காலையில் விழித்தபிறகு, ஒருமணி நேரத்துக்கு பின்பும் பிரார்த்தனைக்காக ஒதுக்குங்கள் என்று சொல்கின்றன. இதற்கு சந்தியாகல் (SANDYAKAL) என்று பெயர்.

சூர்ய மறைவையும் மற்றும் சூர்ய உதயத்தையும் 'சந்தியாகல் என்று குறிப்பிடவில்லை. அது விழிப்பு நிலையிலிருந்து, தூக்கநிலைக்கு நீங்கள் செல்லும் நேரத்தையும் மற்றும் தூக்கத்திலிருந்து, விழிப்பு நிலைக்கு வரும் நேரத்தையும் தான் குறிப்பிடுகிறது. சூரியனுக்கும், இதற்கும் சம்மந்தம் இல்லை. ஆனால், ஓரளவு அது சூரியனோடு சம்மந்தப்பட்டிருக்கிறது எனலாம். சூரிய மறைவு என்பது தூக்கத்துக்கு செல்லும் நேரத்தையும், சூர்ய உதயத்தை, தூக்கத்திலிருந்து விழிப்புநிலைக்கு வருவதையும் குறிக்கிறது. ஆனால், இப்பொழுது இந்த சம்பந்தத்துக்கு அர்த்தமே இல்லை! ஏனெனில், சூரியன் மறையும்பொழுது யாருமே தூங்கச் செல்வது இல்லை; அதைப்போல சூரியன் உதிக்கும் பொழுது யாருமே எழுந்திருப்பதும் இல்லை! உண்மையாகச் சொல்வது என்றால், சந்தியாகல் என்பது தூங்குவதற்கு ஒருமணி நேரம் முன்பு உள்ள நேரத்தையும் மற்றும் காலையில் விழித்த பிறகு ஒரு மணி நேரம் பின்பு உள்ள நேரத்தையும் குறிப்பிடுகிறது எனலாம்.

கபிலர், இதைத் தன்மொழியில், ''சந்தியா-பாஸா (SANDYA BHASHA) என்று அழைக்கிறார். நாம் தூக்கத்தில் இருப்பதுபோல பேசுவது இல்லை, விழித்துக்கொண்டு இருப்பது போலவும் பேசுவது இல்லை என்று அவர் சொல்கிறார். நாம் நடுவில் நின்றுகொண்டு அதன் விளிம்பிலிருந்து, நம் கண்களால் பார்க்கமுடிந்ததை, நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம் மற்றும் பார்க்க முடியாததை, பார்க்க முடியாமல் இருக்கிறோம். அதாவது நாம் ஒரு நுழைவாயிலில் இருக்கிறோம்.

அங்கிருந்து நாம் பேசுவதும், இதுவரை பேசாததும் மற்றும் மேலும் பேசக்கூடியதும் அடக்கம்தான். ஆகவேதான், நாம் பேசுவது, அந்திமாலைப் பொழுதும், காலை விடிதலும் கூடிய மொழியாகவே இருக்கிறது. அதனுடைய அர்த்தத்தை நாம் ஜாக்கிரதையைப் புரிந்துகொள்ளவேண்டும்.

ஆகவே காலை விழித்த பிறகு ஒரு மணி நேரமும், இரவு தூங்குவதற்கு முன் ஒருமணி நேரமும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. அதைப்போல, பிறந்த பிறகு 6 மாதகாலமும், இறப்புக்கு முன் 6 மாத காலமும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஆனால் இந்தக்காலை மற்றும் இரவு ஒரு மணி நேரம் கால அளவின் முக்கியத்துவத்தை புரிந்துகொள்ளாதவர்கள், இந்த இரு 6 மாத கால அளவின் முக்கியத்து வத்தையும் புரிந்துகொள்ளமுடியாது.

நாகரிகம் முதிர்ந்த அக்காலத்தில், இதைப்பற்றிய அறிவு பரவலாக இருந்ததால், பிறந்த பிறகு முதல் 6 மாதத்தின் முக்கியத்து வத்தை அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆகவே வாழ்க்கையில் எவை யெல்லாம் முக்கியமாக உள்ளனவோ, அவையெல்லாம் அந்த முதல் 6 மாதத்தில் அக்குழந்தைக்குப் புகட்டப்படுகின்றன. அப்பொழுது அது நாம் சொல்வதை ஏற்றுக்கொள்ளும் தன்மையில் தான் இருக்கிறது. அதனுடைய வாழ்க்கையில் இது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஆரம்பகாலம். அதற்குப்பிறகு, இதுமுடியாத காரியம்; மிகவும் கடினம்.

ஆனால் நாம் அதனிடம் பேசுவதன்மூலம், அதற்கு புரிய வைக்கமுடியாது. ஆனால் நமக்கு பேசுவதைத்தவிர, வேறு எந்த முறையும் தெரியாததால், நமக்கும் அதற்கும் உள்ள தொடர்பில் சிக்கல்கள் ஏற்படுகின்றன. அதைப்போல, இறப்பதற்கு 6 மாதத்துக்கு முன்பு உள்ள காலமும் முக்கியத்துவம் வாய்ந்தது. குழந்தையின், முதல் 6 மாதத்தில், நம்முடைய பேச்சை அதற்குப் புரியவைக்க முடியாது. அதைப்போல ஒருவன் இறப்பதற்கு முன்பு உள்ள 6 மாத காலத்தையும், நம்மால் புரிந்துகொள்ளமுடியாது. ஆகவே இந்த இரண்டு அரிய சந்தர்ப்பங்களையும் நாம் இழந்துவிடுகிறோம்.

ஆனால், ஒருவன் தான் இரவில் தூங்குவதற்கு முன்பு உள்ள அந்த ஒரு மணி நேரத்தையும், காலையில் எழுந்தபிறகு உள்ள ஒரு மணி நேரத்தையும் சரியாகப் பயன்படுத்திக்கொண்டால், இறப்பதற்கு 6

மாதத்துக்கு முன்பே, அதை எளிதாக அறிந்து கொள்ளமுடியும். ஒருவன் தான் தூங்குவதற்கு முன்பு உள்ள அந்த ஒரு மணி நேரத்தை தியானத்திலும், பிரார்த்தனையிலும் செலவழித்தால், தன்னுடைய இறப்பின் நிகழ்வை முன்கூட்டியே தீர்மானமாக அறிந்துகொள்ள முடியும். அது தூங்குவதுபோலவோ அல்லது விழித்திருப்பது போலவோ அல்லாமல், ஒரு வித மென்மையான மற்றும் ஆழமான அனுபவமாகவே இருக்கும். அந்த மென்மையான மற்றும் வித்தியாசமான அனுபவத்தை ஒருவன் சரியாகப் புரிந்துகொண்டால், அவன் இறப்பதற்கு 6 மாதத்துக்கு முன்பே அதன் ஆரம்பநிலையை அறிந்து கொள்ளமுடியும். ஏனெனில், அந்த மென்மையான ஒளி அனுபவம், அன்றைய நாள் முழுவதும் நிலைத்திருக்கும். முன்பு தூங்குவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன் உள்ள அந்த மென்மையான அனுபவமும், உணர்வும் இறப்பதற்கு 6 மாதத்துக்கு முன்பே தொடர்ந்து ஒரேதன்மையில் இருக்கும்.

ஆகவேதான் இறப்பதற்கு 6 மாதத்துக்கு முன்பு உள்ள அந்த காலத்தை 'சாதனா செய்வதில் முற்றிலும் ஒருவர் ஈடுபடவேண்டும். அந்த 6 மாதத்தை திபெத்தியர்கள் 'போர்டோ செய்வதில் கழிப்பார்கள். அதை நீங்கள் இறந்த பிறகு செய்யக்கூடிய ஒரு வித்தியாசமான கனவுப் பயிற்சி என்று கூறலாம். அந்தப் பயிற்சியை நீங்கள் இறக்கும் தருவாயில் கொடுக்க முடியாது. அதற்கு முன்பே ஏற்பாடு செய்யவேண்டும். அதற்கு, ஒருவன் இறப்பதற்கு 6 மாதத்துக்கு முன்பே தயார்நிலையில் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் மறுபிறப்பு எடுத்த 6 மாதங்களுக்கு, அந்தப் பயிற்சியைத் தொடர மேற்கொண்டு முயற்சி செய்ய முடியும். இல்லாவிட்டால், அந்தப்பயிற்சியை தொடரமுடியாது. ஒருவர் இறப்பதற்கு 6 மாதத்துக்கு முன்பு கொடுக்கப்பட்ட அந்த பயிற்சியே, மறுபிறப்பு எடுத்தபிறகு முதல் 6 மாதத்துக்கு கொடுக்க வேண்டிய பயிற்சிக்கு அடித்தளமாகிறது.

இவைகள் அனைத்திற்கும், விஞ்ஞானப்பூர்வமான ஆதாரங்களும் மற்றும் ரகசிய கொள்கைகளும் உள்ளன. இவைகள் ஒவ்வொன்றையும் பரிசோதனை பண்ணிப்பார்க்கலாம். இந்தப் பயிற்சியில் தேர்ந்த ஒருவன், தன்னுடைய இரு பிறவிகளுக்கிடையே உள்ள அந்த இடைப்பட்ட கனவுக் காலத்தில் என்ன நடந்தது என்று

ஞாபகப்படுத்திக்கொள்ள முடியும். ஆனால், இந்த ஞாபகம் கனவின் ஞாபகமாகவே இருக்கும். அது உண்மை அல்ல.

ஆகவே சொர்க்கம், நரகம் என்பது இந்தக் கனவுக் காலத்தின் ஞாபகமே தவிர வேறல்ல. அவைகளை ஒருவன் விவரிக்கமுடியும். இந்த விளக்கங்களின் அடிப்படையில்தான், எல்லா மதங்களும் சொர்க்கம் மற்றும் நரகத்ததைப்பற்றிய கொள்கைகளை உருவாக்கியிருக்கின்றன. அந்த விளக்கங்கள், இடவித்தியாசத்தால், மாறுபடவில்லை. அந்த அனுபவ வித்தியாசம் ஒருவனின் மன ஞாபகத்திற்கும், அடுத்தவன் ஞாபகத்திற்கும் உள்ள வித்தியாசத்தால் ஏற்படுவது. ஆகவேதான், சொர்க்கத்தைப் பற்றி கிருஸ்தவம் சொல்வதற்கும், இந்துயிசம் சொல்வதற்கும் வித்தியாசங்கள் உண்டாகின்றன. இது பிரக்ஞைத் தன்மையின் வித்தியாசத்தால் மாறுபடுகின்றது. இதன் காரணமாகவே, பௌத்தர்களும், ஜைனர்களும் கூட அவைகளை வித்தியாசமாகவே விவரிக்கிறார்கள்.

உண்மையில், ஒவ்வொருவரும் வித்தியாசமாகவே ஞாபகப் படுத்திக் கொள்கிறார்கள். உதாரணமாக, நாம் எல்லோரும் ஒரே அறையில் படுத்துத்தூங்கிய பிறகு, விழித்து, தங்கள் தங்கள் கனவுகளை விவரிப்பது போலவே, அவைகள் அனைத்தும் கிட்டத்தட்ட அப்படியே இருக்கும். நாம் எல்லோரும் ஒரே அறையில்தான் படுத்துத் தூங்கினோம் மற்றும் அதே இடத்தில்தான் இருக்கிறோம். ஆனால் நம்முடைய கனவுகள் வித்தியாசமாகவே இருக்கின்றன. எல்லாமே ஒரு தனிப்பட்ட மனிதனின் மனத்தைப் பொருத்தது.

ஆகவே சொர்க்கம் மற்றும் நரகம் என்ற அனுபவங்கள் தனிப்பட்ட மனிதன் சம்மந்தப்பட்டது. ஆனால் அவைகளில் ஒரு விரிவான ஒற்றுமையைக் காண முடியும். அதாவது சொர்க்கத்தில் மகிழ்ச்சியும், நரகத்தில் துன்பமும். இந்த உருவ அமைப்புகள் துன்பங்களுக்கும் மற்றும் இந்த உருவ அமைப்புகள் இன்பங்களுக்கும் காரணமாகின்றன என்று விவரிக்கலாம். இப்படிப்பட்ட எல்லா விளக்கங்களும், ஒரு வகையில், பல வித்தியாசமான பிரக்ஞைத்தன்மையின் உண்மையான வெளிப்பாடு என்றுதான் கூறவேண்டும்.

''ஒருவன் தன் பிறப்பைத் தேர்ந்து எடுக்கலாம் என்று சொல்லும்பொழுது அவனால் தன் இறப்பையும் தேர்ந்து எடுக்கலாமா? என்று நீங்கள் கேள்விகேட்கிறீர்கள். இங்கும் நீங்கள் இரண்டு அல்லது மூன்று விஷயங்களைத் தெரிந்துகொள்ளவேண்டும். சுதந்திரமாக ஒருவன் தன் பிறப்பைத் தேர்ந்து எடுக்கலாம் என்பதன் அர்த்தம் என்னவென்றால், அவன் விருப்பப்படி அதைத் தேர்ந்து எடுத்தல் என்பதாகும். அந்த மேலான தெய்வீக அறிவைப் பெற்றவனின் முதல் சுதந்திரம் என்று இதை அழைக்கலாம். அவன் விரும்பினால், மறுபிறப்பை எடுக்கலாம். எப்பொழுது அந்த ஆசை எழும்புகிறதோ அப்பொழுதே அந்த ஆசையின் மூலம் அந்த அடிமைத்தனம் ஆரம்பமாகிறது.

நான் ஒரு கட்டிடத்துக்கு வெளியே நின்றுகொண்டு இருக்கிறேன். நான் விரும்பினால், அந்தக் கட்டிடத்துக்குள்ளே சுதந்திரமாகச் செல்ல முடியும். ஆனால், நான் கட்டிடத்துக்குள்ளே நுழைந்த உடனேயே, அந்தக் கட்டிடம் என்னுடைய அசைவுகளைக் கட்டுப்படுத்துகிறது. ஆகவே, ஒருவன் சுதந்திரமாக தன் பிறப்பைத் தேர்ந்தெடுத்து எடுப்பதில் உள்ள பெருமை, அவன் தன் இறப்பை சுதந்திரமாகத் தேர்ந்தெடுப்பதில் இல்லை.

ஒரு சாதாரண மனிதனுக்கு, தன் இறப்பை சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்க சுதந்திரம் கிடையாது. ஏனென்றால், அவனால் தன் பிறப்பைக்கூடத் தேர்ந்தெடுக்க முடியாது. ஆனால், தன்னை அறிந்தவன், தன்னால் சுதந்திரமாக தன் பிறப்பைத் தேர்ந்தெடுத்தல் என்பது முழுமையானது. மற்றும் அவன் விரும்பினால், தன் பிறப்பை மறுக்கவும் கூடும். இந்த வகையில் அது பெருமை உடையதுதான். ஆனால் பிறப்பை எடுக்க அவன் தீர்மானித்தால், ஏராளமான விலங்குகள் அல்லது கட்டுப்பாடுகள், அவனைச் சூழ்ந்துகொள்ளும்- ஏனென்றால், அவன் கட்டுப்பாட்டைத் தேர்ந்தெடுக்கிறான். ஒரு எல்லையில்லாத பரந்த இடத்தை விட்டு, அவன் ஒரு குறுகிய வழியை தேர்ந்தெடுக்கிறான். அந்த குறுகிய வழி, அதற்கே உரித்தான கட்டுப்பாட்டை, அவன் மேல் திணிக்கிறது.

இப்பொழுது அவன் ஒரு கர்ப்பப்பையைத் தேர்ந்தெடுக்கிறான். சாதாரணமாக, ஒருவனால் கர்ப்பப்பையை தன் இஷ்டம் போல்

தேர்ந்தெடுக்க முடியாது. ஆனால், தன்னையறிந்தவன் அதைத் தேர்ந் தெடுக்க முடியும். ஆனால், தன்னையறிந்தவன் அதைத் தேர்ந் தெடுக்கும்பொழுது, அவன் பல்லாயிரக்கணக்கான கர்ப்பப்பைகளில், ஒன்றை நன்றாகக் கவனித்துத் தேர்ந்தெடுக்க வேண்டும். அப்படி அவன் அதைத் தேர்ந்து எடுத்து, அதற்குள் நுழைந்துவிட்டால், அவன் கட்டுப்பாடு நிறைந்த இந்த உலகத்தில் நுழைந்துவிட்டான் என்று அர்த்தம். எல்லாக் கர்ப்பப்பைகளுக்கும், அதற்கென்று எல்லைகள் அல்லது கட்டுப்பாடுகள் உண்டு. அவன் ஒரு தாயையும், ஒரு தகப்பனையும் தேர்ந்தெடுக்கிறான். அந்தப் பெற்றோர்களுக்கு, ஒரு கர்ப்பம் அடைந்த முட்டையாகி எவ்வளவு நாட்கள் அங்கு இருக்க வேண்டுமோ, அவ்வளவு நாட்கள் அங்கு இருந்து தன் உடலை அவன் வளர்க்கிறான். இப்பொழுது தன் இஷ்டப்படி ஒரு கர்ப்பப்பையை தேர்ந்து, உடலை வளர்த்து இனிமேல் அதை அவன் உபயோகப்படுத்த வேண்டும்.

நீங்கள் ஒரு சந்தைக்குச் சென்று, 10 வருட உத்திரவாதம் உள்ள ஒரு இயந்திரத்தை வாங்கினால், அதனுடைய எல்லை அல்லது வேலைத்திறன் நிர்ணயிக்கப்பட்டுவிட்டது. அந்த இயந்திரத்தின் தன்மை தெரிந்தே வாங்கப்பட்டது. ஆகவே, அங்கு எந்த அடிமைத் தனமும் கிடையாது. நீங்கள், ''நான் இந்த இயந்திரத்தை வாங்கி விட்டேன். இப்பொழுது அதனால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளேன். ஏனெனில், அது 10 வருடம் தான் வேலை செய்யும்'' என்று சொல்ல முடியாது. நீங்கள் நன்றாகத் தெரிந்தே அதை வாங்கியிருக்கிறீர்கள். அத்துடன் விஷயம் முடிந்து விட்டது. அதற்காக வருத்தப்படுவதற்கோ, அல்லது துன்பப்படுவதற்கோ எதுவுமில்லை.

யார் ஒருவர், தன் பிறப்பை பிரக்ஞையாக தேர்ந்தெடுக்கும் பொழுது, தன் உடல் எப்பொழுது இறக்கும் என்பதையும் அவரால் அறிய முடியும். ஆகவே, இறப்பை அடிப்படையாகக் கொண்ட இந்த உடலைப் பற்றிய பிரக்ஞை உணர்வு அவருக்கு இருந்தே தீரும். இவர்களைப் போன்று பிரக்ஞை உணர்வு கொண்டவர்களிடம், சாதாரண மனிதர்களிடம் காணப்படாத, ஒருவித பரபரப்பு அல்லது பொறுமை இன்மை காணப்படும். நாம், ஜீசஸின் கதையைப்படித்ததால்,அவர் மிகவும் பரபரப்பாகக் காணப்பட்டதாக உணர்வோம். அதாவது,

இன்னும் சில கணங்களில், ஏதோ ஒன்று நேரப்போவது போன்ற ஒரு உணர்வு அவர்களிடம் ஏற்படும். ஆனால், அவர்களைக் கேட்பவர்களுக்கு, அவர்களுடைய கஷ்டம் என்ன என்பது புரியாது. ஏனென்றால், அவர்களிடம், தன் இறப்பைப் பற்றிய பிரக்ஞை உணர்வு மேலோங்கி இருக்காது. ஆனால், ஜீசஸுக்கு, இறப்பு தன் முன்னால் நிற்பது நன்றாகத் தெரியும். தனக்கு என்ன நேரிடப்போகிறது என்பது அவருக்குத் தெரியும்.

ஆகவே, ஜீசஸ் உங்களிடம் இந்த வேலையை இன்றே செய்து முடியுங்கள் என்பார். ஆனால், நீங்களோ அதை நாளை செய்கிறேன் என்று சொல்வீர்கள். இப்பொழுது ஜீசஸ் சங்கடத்துடன் இருப்பார். ஏனெனில், நாளை தான் இருப்போமா என்பதில் அவருக்குச் சந்தேகம் ஏற்படும். ஆகவே, மஹாவீரா அல்லது புத்தா அல்லது ஜீசஸ் என்று யாராக இருந்தாலும், அவர்கள் வேகமாகச் செயல்படவே துடிப்பார்கள். அவர்கள் மிக வேகமாக ஓடிக்கொண்டு இருக்கிறார்கள். ஏனென்றால், ஏராளமான இறந்த மக்களின் மத்தியில், அவர்கள் மாத்திரம் எல்லாம் அறிந்தவர்களாக, பிரக்ஞைத் தன்மையுடன் செயல்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள். ஆகவே, இப்படிப்பட்டவர்கள் அப்படித் தான் இயங்குவார்கள். இப்படிப்பட்ட தன்னை அறிந்தவர்கள், 100 அல்லது 200 வயது வரை வாழ்ந்தாலும், அது அவர்களிடம் எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. ஏனென்றால், இவ்வுலகத்தில் நீண்ட நாட்கள் என்பது, அவர்களைப் பொருத்த வரையில் குறுகியது தான். நமக்கு, அது எப்பொழுது முடியும் என்று தெரியாததால், நாம் அதை குறுகியதாக உணர முடியாது. ஏன், அதற்கு ஒரு முடிவு உண்டு என்பதையே நாம் மறந்திருப்போம்.

ஒருவன், தன் பிறப்பைச் சுதந்திரமாகத் தேர்ந்தெடுப்பது என்பது ஒரு மிகப்பெரிய விஷயம். ஆனால், பிறப்பு என்பதே ஒரு சிறைச்சாலைக்குள் நுழைவது போலத்தான். அந்த சிறைச்சாலைக்கே உரித்தான கட்டுப்பாடுகளை நாம் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஆனால், இப்படித் தேர்ந்து வந்தவர்கள், அந்தக் கட்டுப்பாடுகளையும் ஏற்றுக்கொள்ளத்தான் செய்வார்கள். அந்தச் சிறைச்சாலைக்கு, தானே இஷ்டப்பட்டுத்தான் வந்திருக்கிறார்கள். ஆகவே, விலங்கை மாட்ட, தன் கைகளைத் தானே நீட்டுவார்கள். இந்த விலங்கு அவர்களுக்கு

வலிக்காது. அவர்கள் எந்தக் கஷ்டமும் இல்லாமல், அந்த இருட்டுச் சுவர்கள் அடங்கிய இடத்தில் சுகமாகவே தூங்குவார்கள். ஏனென்றால், அந்தச் சிறைச் சாலை அவர்களே தேர்ந்தெடுத்துக் கொண்டது. அவர்கள், வெற்று ஆகாயத்தின் கீழ் தங்கி இருக்க முடியும். ஆனால் தன் விருப்பப்படி, இந்த சிறைச்சாலையைத் தேர்ந்தெடுத்து விட்டார்கள்.

அடிமைத்தனம் எப்பொழுது ஒருவரது விருப்பப்படி அமைகிறதோ, அப்பொழுது அது சுதந்திரமாகாது. ஆனால், சுதந்திரம், ஒருவரது விருப்பம் இல்லாமல் அவரிடம் திணிக்கப்பட்டால், அது அடிமைத்தனமாகிறது. சுதந்திரமும், அடிமைத் தனமும் முற்றிலும் வேறு தன்மையில் தெளிவாக அமைந்துள்ளது. ஒருவர் பிரக்ஞையாக மறுபிறப்பு எடுக்கும்பொழுது, எல்லாவற்றையும் அவரால் தெளிவாகப் பார்க்க முடிகிறது. ஆகவே, அவரால் எந்தத் தீர்மானத்தையும் பரபரப்பில்லாமல், ஓய்வாக எடுக்க முடிகிறது. தான் 75 வயது வரை இருப்போம் என்பதை அவரால் தெரிந்து கொள்ள முடிகிறது. ஆகவே, அந்தக் காலகட்டத்துக்குள், அவர் என்ன செய்ய வேண்டும் என்பதை தெளிவாகச் சிந்திக்கிறார். அவர் வருங்காலத்தில் பரந்த அளவில் தன்னுடைய வலையை வீசவில்லை. நாளைக்கு என்ன செய்து முடிக்க முடியுமோ அதை மட்டும் அவர் செய்வார்- அதை முடித்தும் விடுவார். ஆகவேதான், அவரால் எந்தப் பரபரப்பும் இல்லாமல் ஓய்வாக இருக்க முடிகிறது.

அவர் வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுதே, அவர் இறப்பதற்கும் தயாராகிக் கொண்டு வருகிறார். ஒரு வகையில், அவர் மிகவும் பரபரப்பாக இருக்கிறார்; வேகமாக இயங்க முயற்சி செய்கிறார்- அதாவது அடுத்தவர்களைப் பொறுத்தவரையில். ஆனால், அவரைப் பொருத்தவரையில், அவர் எந்த வேகத்தையும் காட்டுவதில்லை. அவரைப் பெருத்தவரையில், மேற்கொண்டு செய்வதற்கு முக்கியமானது என்று எதுவுமில்லை. தான் எப்படி இறக்க வேண்டும் என்பதையும் அவரால் தீர்மானித்துக் கொள்ள முடியும். அவர், தன்னுடைய 70 ஆவது வயதில் இறக்க வேண்டும் என்று இருந்தால், எப்படித் தன் உடலை விட்டுச் செல்வது என்பதை அவரால் தீர்மானித்துக் கொள்ள முடியும்-அதாவது, எப்பொழுது, எப்படி மற்றும் எந்த முறையில், தான் இறக்க வேண்டும் என்பதை அவரால் தீர்மானிக்க முடியும்.

ஒரு ஜென் கன்னியாஸ்திரி (NUN), தான் 6 மாதத்துக்குப் பிறகு இறக்கப் போவதாக மக்களுக்கு அறிவித்தாள். தன் உடலை எரிக்க வேண்டிய ஏற்பாடுகளை அவளே செய்தாள். அந்தக் குறிப்பிட்ட நாளில், அவள் அந்த சிதைமேல் ஏறி நின்றாள்; பிறகு கூட்டத்தினரைப் பார்த்து வணங்கினாள். பிறகு, அவளுடைய நண்பர்கள், அந்தச் சிதைக்குத் தீ மூட்டினார்கள். அந்த நெருப்பு அவளை நெருங்கும்பொழுது, கூட்டத்தில் உள்ள ஒருவர், ''உனக்கு அந்த சூடு உறைக்க வில்லையா?'' என்று அவளைப் பார்த்துக் கேட்டார்!

அதற்கு அந்த பெண் சிரித்துக் கொண்டே, ''என்ன முட்டாள் நீ? என்னுடைய இந்தக் கடைசி நேரத்தில் கூட, இப்படிப்பட்ட முட்டாள் தனமான கேள்வியை கேட்கிறாயே?? நீ, வேறு ஏதாவது முக்கியமான உபயோகமுள்ள கேள்வியைக் கேட்டிருக்கலாம். நெருப்பு ஜுவாலைக்குள் உட்கார்ந்தால், அது சுடும் என்பதை நீயும் அறிவாய், அதைப் போல நானும் அறிவேன்'' என்றாள்.

ஆனால், அது அவளுடைய விருப்பம்தான். ஆகவே, அவள் எரிந்து கொண்டு இருக்கும்பொழுது, அவளால் சிரிக்க முடிந்தது. அவளுடைய இறப்பு, எப்பொழுது, எப்படி ஏற்பட வேண்டும் என்று அவளே தீர்மானித்தாள். இறந்து கொண்டே சிரிக்கலாம் என்பதை, தன்னைச் சுற்றியுள்ளள சிலருக்கு உணர்த்தவே, அவள் விரும்பினாள். சிரித்துக்கொண்டு வாழத் தெரியாதவர்களுக்குக் கூட ஒருவர் இறக்கும் பொழுதும் சிரிக்கலாம் என்ற செய்தி மிக முக்கியமானது.

ஆகவே, இறப்பையும் நாம் தீர்மானிக்க முடியும். ஆனால், அப்படித் தேர்ந்தெடுப்பது என்பது, அதைத் தீர்மானிப்பவரைப் பொருத்த விஷயமாகிறது. எப்படியிருந்தாலும், இவைகளெல்லாம் ஒரு எல்லைக்குள் உட்பட்டதுதான். நான் இந்த அறைக்குள் உட்கார வேண்டும் என்றால், நான் எந்த மூலையில் உட்கார வேண்டும் என்பதை நானே தீர்மானித்துக் கொள்ளலாம்- அடுத்து, இடதுபக்கம் படுத்துத் தூங்குவதா அல்லது வலது பக்கம் படுத்துத் தூங்குவதா என்பது என்னுடைய விருப்பம்தான். இந்த அள்வுக்குத்தான், எனக்குச் சுதந்திரம் இருக்கிறது. இப்படிப்பட்டவர்களால், தன் இறப்பையும், மற்றும் வாழ்க்கையில் உள்ள அனைத்தையும் அவர்கள் விருப்பப்படி உபயோகப்படுத்திக் கொள்ள முடியும். சில சமயம், அந்த உபயோகம்

வெளியே தெரியும்; சிலசமயம் தெரியாது. உண்மையில், அப்படிப்பட்டவர்கள் பிறப்பு எடுப்பதே, பிறருக்கு நன்மை செய்யவே. தனக்காகச் செய்து கொள்ள எந்தத் தேவையும் அவர்களுக்குக் கிடையாது. ஆனால், அவர்களுடைய செயல்பாட்டின் உட்கருத்தை, நாம் அறிந்துகொள்வது மிகவும் கடினம். சாதாரணமாக, அவர்களை நம்மால் புரிந்து கொள்ள முடியாது. பொதுவாக, அவர்களுடைய செயல்கள், நம்முடைய அறிவுக்கு எட்டாததாகவே இருக்கும்.

இப்பொழுது, புத்தாவைப் போன்றவர்கள், ''நான் நாளைக்கு இறப்பேன்'' என்று ஒருக்காலும் சொல்லமாட்டார்கள். நாளைக்கு அவர் நிச்சயமாக இறப்பது உறுதி என்றால், இன்றைக்கு அதை வெளியிடுவதால் என்ன பிரயோஜனம்? அப்படிச்செய்தால், இன்றைக்கு நடைபெறவேண்டிய வேலைகள் கூட, முழுமையாக நடைபெறாது. பிறகு மக்கள் இன்றிலிருந்தே, கதறி அழ ஆரம்பித்துவிடுவார்கள். ஆகவே, பாக்கியுள்ள 4 மணி நேரத்தையும் உபயோகமாகச் செலவழிக்க முடியாது. ஆகவே, இப்படி அறிந்தவர்கள் சில நேரம் மௌனமாகவே இருந்து விடுவார்கள். பிறகு, அவர்கள் தங்கள் இறப்பை அறிவிக்கலாம். இது சூழ்நிலையைப் பொறுத்து அமையும்.'

ஆகவே, தன்னையறிந்த ஒருவர் பிறவி எடுத்தால், அது கருப்பையிலிருந்து கல்லறை வரை எடுக்கும் ஒரு பயிற்சியாகவே இருக்கும். ஆனால், இந்தப் பயிற்சி, அந்த ஞானமடைந்தவர்களின் நலனுக்காக அல்ல. இது ஒரு கட்டுப்பாடான முறைதான். ஆனால், அவர்களின் நலனுக்காக அல்ல. இந்த ஒழுக்க விதிகளை அடிக்கடி மாற்றியாக வேண்டும். ஏனென்றால், எல்லா விதிகளும் பழமையானவைகள், சுமைநிறைந்தவைகள். அவைகளை இப்பொழுது உள்ள மக்கள் புரிந்து கொள்வது கடினம்.

உதாரணமாக, குருட்ஜீவ்: உங்களுடைய கேள்விக்கு, அவர் பதில் சொல்வதற்கு முன், நீங்கள் 100 டாலரை அவருக்குச் செலுத்த வேண்டும். ஆனால், மஹாவீரா பணத்தைத் தொடக் கூட மாட்டார். குருட்ஜீவ் தன் பதிலை, ஓரிரண்டு வரிகளில் முடித்துவிடுவார். கேள்வி கேட்பவர், வேறு ஒரு கேள்வியைக் கேட்க விரும்பினால், அதற்கு அவர் மேலும் 100 டாலர்கள் செலுத்த வேண்டும். பல தடவைகள், அந்தப் பணத்தைக் கொண்டு அவர் என்ன செய்கிறார் என்று மக்கள் அவரிடம்

கேட்டிருக்கிறார்கள். ஆனால் அவரை அறிந்தவர்கள், அவர் சில்சமயம் பணத்தை தன்னிடமே வைத்துக் கொள்ளவதையும், பல-சமயம் அதை பிறருக்குத் தானமாக அளிப்பதையும் பார்த்துக் குழம்பியிருக்கிறார்கள். எதற்காக, அவர் இப்படி 100 டாலர்கள் வாங்க வேண்டும்?

குருட்ஜீவ், வாழ்க்கையில் பணம் தான் முக்கியம் என்று எண்ணுபவர்களிடம், பணம் வாங்காமல் கடவுளைப் பற்றிச் சொல்வதில் எந்தப் பிரயோஜனமும் இல்லை என்று கூறுவார். இவர்கள், பணம் கொடுக்காமல் எதைப் பெற்றாலும், அதை மதிக்க மாட்டார்கள். குருட்ஜீவ், என்ன அர்த்தம் பண்ணினார் என்றால், ஒருவர் மதிப்புமிக்க ஒன்றைப் பெறும்பொழுது மதிப்புமிக்க ஒன்றை அவர் கொடுத்தாக வேண்டும். ஒருவர் கொடுப்பதற்கு தயாராக இல்லாதபொழுது, பெறுவதற்கும் அவருக்குத் தகுதியில்லை.

ஆனால், குருட்ஜீவுக்கு பணத்தின் மேல் மிகவும் ஆசை அதிகம் என்றே மக்கள் நினைத்தார்கள். ஏனெனில், அவர் பணம் வாங்காமல், பதில் ஏதும் சொல்வதில்லை. மேற்கே அவர் வாழ்ந்த இடத்தை நான் பார்த்தபொழுது, அங்குள்ள மக்கள் பணத்திற்கு மிகவும் மதிப்புக் கொடுப்பது எனக்குப் புரிந்தது. இந்த மாதிரி சூழ்நிலையில், அப்படிப் பட்ட போதனையாளர்கள் செய்தது சரிதான். அப்பொழுதுதான் இந்தப் போதனைக்கு மதிப்பு இருக்கும். நீங்கள் அவரது ஒவ்வொரு வார்த்தைக்கும் பணம் கொடுக்கத் தயாராக இருந்தால், உங்களுக்கு அந்த வார்த்தைகளின் மதிப்பு தெரிந்திருக்கிறது என்பது அவருக்கு மிக நன்றாகவேத் தெரியும். நீங்கள் எதையும் இனாமாகப் பெறாமல், நீங்கள் எதற்காகப் பணம் கொடுத்தீர்களோ, அதை மட்டும் தான் உங்கள் வீட்டுக்கு எடுத்துச் செல்வீர்கள்.

உங்களுக்குப் பிடிக்காதவைகளையே, குருட்ஜீவ் பெரும்பாலும் செய்வார். அவருடைய சீடர்களுக்கு இது சங்கடத்தையே கொடுக்கும். அவர் இதைப் போன்ற செய்கைகளைத் தவிர்த்தால், மிகவும் நன்றாக இருக்கும் என்று அவர்கள், அவரிடம் எவ்வளவோ எடுத்துச் சொல்வார்கள். ஆனால், குருட்ஜீவ் தெரிந்தே, வேண்டுமென்றே அப்படிப்பட்ட காரியங்களைச் செய்வார்! அவர் உட்கார்ந்திருக்கும் பொழுது, நீங்கள் அவரிடம் சென்று, அவரைப் பார்க்க விரும்பினால், அவர் தன் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொள்வார். அப்பொழுது,

அவரை யாரும் ஒரு சந்நியாசி என்று கூறமாட்டார்கள். அவர் சூஃபி முறையில் பலகாலம் பயின்று, பல சோதனைகள் செய்து வந்ததால், அவர் தன் கண்களை திடீரென்று இடுக்கிக்கொண்டு, வஞ்சகமாகப் பார்ப்பார்!

இந்த மாறுபட்ட கண்களின் கோணத்தால், அவருடைய முழுத்தன்மையே மாறிவிடும். கண்களின் மாறுதல்களைத் தவிர ஒரு ஞானிக்கும் மற்றும் ஒரு தீய எண்ணம் உடைவனுக்கும் (VILLAN) வேறு எந்த வகையிலும் பெருத்த வித்தியாசம் தெரியாது. அந்தக் கண்களின் கோணம் மாறிய உடனேயே, ஒரு ஞானி, ஒரு எதிரி போலவும் அல்லது ஒரு எதிரி, ஞானி போலவும் காணப்படுவார்கள்.

குருட்ஜீவின் கண்கள், கண நேரத்தில் மாறக்கூடியவை. அவருக்குப் பின்னால் உட்கார்ந்திருப்பவர்களால் கூட, அவர் புதிதாக வந்தவர்களைத் தன் கண்களால் பயமுறுத்துவதை, புரிந்து கொள்ள முடியாது. அந்தப் புதியவர், தலை தெரிக்க ஓடும் அளவுக்கு, அவரை பயமுறுத்தி விடுவார்! குருட்ஜீவின் நண்பர்களுக்கு இது தெரிந்தும், அவர்கள் அவரிடம் வந்து, ஏன் இப்படிச் செய்தீர்கள் என்று கேட்பார்கள்.

பிறகு குருட்ஜீவ், தான் ஒரு ஞானியாக இருந்தாலும், வந்த புதியவன், தன்னை ஒரு எதிரியாகப் பார்க்கவே வந்திருப்பது தனக்குத் தெரியும் என்றும், ஆனால் அதற்கு அவனுக்கு சில காலம் தேவைப்படும் என்றும் விளக்கம் அளிப்பார். தான் அவனுடைய நேரத்தை வீணடிக்க விரும்பவில்லை. ஆகவேதான், ஆரம்பத்திலேயே அவன் எதிர்பார்த்ததை காண்பித்துவிட்டு, அவனைத் திரும்பிச் செல்லும்படி தூண்டினார். ஏனென்றால், அவன், தான் அவரிடம் எதிர்பார்த்ததை உறுதி செய்து கொள்ள குறைந்தது 3 அல்லது 4 தடவையாவது வரவேண்டியிருக்கும். இது அவனுக்குத் தேவையில்லாதது என்று நீண்ட விளக்கம் அளிப்பார்.

ஆனால், அவருடைய இந்தப் பயமுறுத்தலைக் கண்டு அசையாது இருக்கும் புதியவனிடம் மாத்திரம், குருட்ஜீவ் அவனுடைய ஆன்மிக மாறுதலுக்காக ஏதாவது செய்வார். ஆகவே, ஒருவன் உண்மையை அறிய உண்மையாக வந்திருந்தால் மட்டுமே, அவன் திடீரென்று ஒரு முடிவுக்கு வராமல், பொறுமையைக் கடைப்பிடிப்பான்.

ஆகவே, எப்படிப் போதிப்பது என்பது ஒரு போதிப்பவரைப் பொருத்தது. சிலசமயம், அவருடைய நோக்கம் என்ன என்பதை அறிந்து கொள்ள, ஒருவர் தன் முழு வாழ்நாளையும் செலவழித்தால் கூட முடியாது. ஆனால், ஒரு போதனையாளர் தன் பிறப்பிலிருந்து இறப்புவரை, ஒவ்வொரு கணத்தையும் பிறருடைய நன்மைக்காகவே செலவிடுவார். அவர் ஒரு சிறு கணத்தைக் கூட, தேவையில்லாமல் செலவழிக்க மாட்டார். அவருடைய ஒவ்வொரு கணமும், மிகவும் அர்த்தமுள்ளது. அவைகள் அனைத்தும் ஒரு பெரிய காரணத்தின் பகுதியாகவே அமைந்து, அந்த தெய்வீக இலக்கை நோக்கி உங்களைச் செலுத்தும்.





## 4. திருப்புமுனைக்கான நேரம் இதுவே......
## (THIS IS A TIME OF CRISIS)

***''இரண்டு பிறவிகளுக்கு இடையேயுள்ள காலமற்ற இடைவெளியில், இந்த ஆன்மாவுக்கு என்ன நேரிடுகிறது என்று நீங்கள் கூறினீர்கள். ஆனால், உடலற்ற அந்த ஆன்மாவைப் பற்றி, இன்னும் சில சந்தேகங்கள் தீர்க்கப்படாமல் இருக்கின்றன. அதாவது அந்த உடலற்ற நிலையில், அந்த ஆன்மா நிலையாக இருக்கிறதா அல்லது அங்கும் இங்கும் அலைந்து கொண்டு இருக்கிறதா? எப்படி அது மற்ற ஆன்மாக்களை அறிந்து கொள்ளும்? அந்த நிலையில் ஒரு ஆன்மா, மற்றைய ஆன்மாவோடு உறவாட அல்லதுபேசிக்கொள்ளச் சாத்யம் ஏதும் உண்டா?''***

இந்த வகையில், இரண்டு அல்லது மூன்று விஷயங்களை நாம் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். முதலில், அந்த உடலற்ற ஆன்மா நிலையாகவும் இல்லை மற்றும் அங்கும் இங்கும் அலைந்து கொண்டும் இல்லை. ஆகவேதான், அதை அறிந்து கொள்வதில் மிகவும் சிரமம் ஏற்படுகிறது. ஒன்று அது நிலையாக இருந்தாலோ அல்லது நிலையற்று அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தாலோ, அதைப் புரிந்து கொள்வது மிகவும் சுலபம். நாம் புரிந்துகொண்ட அளவில், ஒவ்வொன்றும் இந்த இரண்டு வகையில் தான் இருக்க முடியும் என்று எண்ணுகிறோம். அது, ஒன்றில் இல்லாவிட்டால், அடுத்ததில் தான் இருக்க வேண்டும் என்று கருதுகிறோம். மேலும், இந்த இரண்டு நிலைகளும்; ஒன்றுக்கொன்று எதிரானது என்றும் நினைக்கிறோம்.

ஆகவே, முதலில் நாம் புரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால், நிலையாக இருப்பதும், நிலையற்று இருப்பதும் எதிரான தன்மைகள் இல்லை என்றும், அவைகள் ஒன்றின் வித்தியாசமான நிலைகள் தான் என்றும் அறிந்து கொள்ள வேண்டும். ஒன்றின் அசைவுகளை, நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை என்றோ அல்லது பார்க்க முடியவில்லை என்றோ என்ற ஒரு நிலையில் இருந்தால், அதை நாம் நிலையாக இருக்கிறது என்று கருதிக் கொள்கிறோம். ஆகவே, ஒன்றின் அசைவும் அல்லது அசைவற்ற தன்மையும் நம் புலன்களைப் பொருத்து அமைகிறது. ஒன்று மிக வேகமாக இயங்கினால், அது நிலையாக இருப்பதுபோல நம் கண்களுக்கு தெரிகிறது.

ஒரு மின் விசிறி, மிக வேகமாகச் சுற்றினால், அதனுடைய இறக்கைகள் நிலையாக இருப்பதுபோலத் தோற்றம் அளிக்கும். அந்த வேகத்தில், அந்த மின்விசிறிக்கு எத்தனை இறக்கைகள் இருக்கின்றன என்பதைக் கூடக் கண்டறிய முடியாது. ஏனெனில், அந்த மூன்று இறக்கைகளுக்கிடையே உள்ள வெற்றிடத்தை, நாம் பிறப்பதற்கு முன்பே, அது, அவைகளால் நிரப்பப்பட்டு விடுகிறது. பொருள்கள் மிக வேகமாக இயங்கும் பொழுது, நீங்கள் அவைகளை உங்கள் கைகளினால் தொட்டால் கூட, அவைகள் நகர்ந்து கொண்டு இருக்கும் உணர்வே, உங்களுக்கு ஏற்படாது. ஆகவேதான், வேகமாக நகர்ந்து கொண்டு செயல் வடிவத்தில் இருக்கும் பொருள்கள் அனைத்தும், நிலையாக இருப்பது போலவே தோற்றம் அளிக்கும் என்று விஞ்ஞானமும் கூறுகிறது. ஏனெனில், அவைகளுடைய வேகம், நம்புலன்களுக்கு அப்பாற்பட்டது. ஆகவே, நிலையாக மற்றும் நிலையற்று இருப்பதும், இரண்டு வெவ்வேறு தன்மைகள் அல்ல. அவைகள், ஒரு பெருளின் இரண்டு வித்தியாசமான தன்மைகள் தான். அவைகளின் வேகத்தில் தான் வித்தியாசம்.

உடல் என்ற கருப்பொருள் இல்லாத ஒரு சூழ்நிலையில், மேற்சொன்ன அந்த இரண்டு நிலைகளும் இருக்காது. ஏனென்றால், உடல் என்று எதுவும் இல்லாத பொழுது, அங்கு காலம் மற்றும் இடம் என்று எதுவும் அதற்கு இருக்க முடியாது. ஆனால், நாம் அறிந்த வரையில், ஒரு சூழ்நிலை, காலம் மற்றும் இடம் அற்று இருக்க முடியும் என்று நம்மால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. ஏனெனில், அவைகளுக்கு அப்பால், காலமற்று மற்றும் இடமற்று ஒன்று இருக்க முடியும் என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை.

இந்த வித்தியாசமான நிலையை, நாம் எப்படி அழைப்பது? அதற்கு எந்த வார்த்தையும் கிடையாது. ஆனால், ஒருவருடைய மதத்தன்மையின் அனுபவத்தின் போது, முதன் முதலில் இதைப் போன்ற நிலையைப் பற்றி அவருக்குத் தெரிய வந்தது. ஆனால், அதை வெளியிடுவதில், கஷ்டங்கள் ஏற்பட்டன. இந்த இரண்டும் கெட்டான் நிலைக்கு என்ன பெயரிடுவது? புதிதாக ஒன்றைக் கண்டு பிடிக்கும் பொழுது, அதற்கு என்ன பெயர் வைப்பது என்பது விஞ்ஞானிகளுக்கும்,

இதைப்போல ஒரு தர்மசங்கடமான அனுபவமாகவே இருக்கும். நம்முடைய அறிவுக்கு எட்டாத வகையில், இப்படி வித்தியாசமான அனுபவம் ஏற்பட்டால், இதை வார்த்தைகளால் எதிர்கொள்வது என்பது மிகவும் கடினம்தான்.

உதாரணமாக, சில வருடங்களுக்கு முன், விஞ்ஞானிகள் எலெக்ட்ரானை (ELECTRON) முதன் முதலில் கண்டுபிடித்தபொழுது, அதை ஒரு மிகச்சிறிய பொருள் (PARTICLE) என்று கூறுவதா அல்லது அலை (WAVE) என்று கூறுவதா என்ற கேள்வி எழுந்தது. அதை ஒரு பொருள் என்று கூற முடியாது. ஏனெனில், பொருள் என்றால் அது எப்பொழுதும் நிலையாக இருக்க வேண்டும். அலை என்று அழைத்தால், அது எடை எதுவும் இல்லாமல், எப்பொழுதும் நகர்ந்து கொண்டே இருக்க வேண்டும். ஆனால், எலெக்ட்ரான், எப்பொழுதும் இந்த இரு வேறு தன்மையில் இருக்கிறது! இங்குதான் சங்கடமே ஆரம்பமாகிறது. ஏனென்றால், நாம் அறிந்த வரையில், ஒரு பொருள் ஏதாவது ஒரு நிலையில் தான் இருக்க முடியும்; ஒரே நேரத்தில், அது இரண்டு நிலைகளிலும் இருக்க முடியாது. ஆனால், எலெக்ட்ரானை சில சமயம் ஒரு மிகச் சிறிய பொருளாகவும், மற்றும் சில சமயங்களில் அலையாகவும் தீர்மானித்துக் கொள்கிறோம். இப்படிப்பட்ட நிலையை எடுத்துச் சொல்ல, இந்த உலகத்தில் எந்த மொழியிலும், எந்த வார்த்தையும் கிடையாது.

எலெக்ட்ரானின், இந்த வித்தியாசமான நிலையை முதன் முதலில் அறிந்த விஞ்ஞானிகளால், இதை நம்பவே முடியவில்லை. இது ஒரு புரியாத புதிராகவே விளங்கியது. இதைப் பற்றி விளக்கிய ஈன்ஸ்ட்டீனிடம், மக்கள் கேட்கும் பொழுது, அவருடைய விளக்கம் தர்க்கத்துக்குப் புறம்பாகவும் மற்றும் புரியாத புதிராகவும் இருப்பதை உணர்ந்து குழம்பினார்கள். தங்களுடைய சந்தேகத்தை அவர்கள், அவரிடம் தெரிவிக்கும் பொழுது, அவர், தான், தர்க்கத்தை நம்புவதா அல்லது உண்மையை நம்புவதா என்று பதிலுக்குக் கேட்டார். உண்மை என்னவென்றால், எலெக்ட்ரான் ஒரே சமயத்தில், ஒரு நிலையில் தான் இருக்கும் என்று தர்க்கம் கூறுகிறது. ஒரு மனிதன் ஒன்று நின்றுகொண்டு இருக்க வேண்டும்; அல்லது நடந்துகொண்டு இருக்க வேண்டும்.

ஒருவன், இரண்டு செயலிலும் ஒரே சமயத்தில் இருக்க முடியாது என்று தர்க்க சாஸ்திரம் கூறுகிறது. ஆனால், விஞ்ஞானிகளின் அனுபவம், எலெக்ட்ரானைப் பொருத்தவரையில், தர்க்கத்துக்கு இடம் தராமல், உண்மை நிலையை மட்டும் எடுத்துக்கொண்டு என்று கூறுகிறது. ஆகவே, உண்மை நிலைவேறு, தர்க்கம் வேறு என்றாகிறது. இதற்கு உதாரணம் எலெக்ட்ரான் தான்.

மதத்தன்மையின் அனுபவம் பெற்றவர்கள், ஒரு ஆன்மா ஒரு உடலிருந்து பிரிந்து, மறு உடலை எடுக்கும் இடைவெளியில், அது நிலையாகவும் இல்லை மற்றும் அசைந்து கொண்டும் இல்லை என்றே கூறுகிறார்கள். இது நம் பகுத்தறிவுக்கு எட்டாதது. ஆகவேதான், சில மதங்கள், அந்த உடலற்ற ஆன்மா நிலையாக இருக்கிறது என்றும், மற்றும் சில மதங்கள் அது எப்பொழுதும் அலைந்து கொண்டே இருக்கிறது என்றும் கூறுகிறார்கள். ஆனால், அந்த உண்மைநிலையை விளக்க, சரியான வார்த்தை கிடைக்காததே அதற்குக் காரணம். ஏனென்றால், இடம் மற்றும் கால அளவின் எல்லைகள் அங்கு இல்லாததால், நிலையான தன்மையையும், நிலையற்ற தன்மையையும் நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்த இரண்டு செயல்களுக்கும், காலம் மற்றும் இடம் தேவைப்படுகிறது. அடுத்து இந்த இரண்டு செயல்களுக்கும், ஒரு உடல் அல்லது பொருள் தேவைப்படுகிறது. உடலில்லாமல், அசைவோ அல்லது அசைவற்ற தன்மையோ நடைபெறாது.

உதாரணமாக, இது என்னுடைய கை. இதை நான், என் விருப்பப்படி அசையாது வைத்திருக்கலாம் அல்லது அசைக்கச் செய்யலாம். என்னிடம், என் உடலின் ஒரு பகுதியாகிய கையே இல்லாதபொழுது, என்னுடைய ஆன்மா அசைந்து கொண்டு இருக்கிறதா அல்லது அசையாமல் இருக்கிறதா என்று என்னிடம் ஒருவர் கேட்கலாம். ஆனால், இந்தக் கேள்வியே அர்த்தமற்றது. ஏனென்றால், இந்த கையில்லாமல், ஆன்மா நகரவோ அல்லது நகராமல் நிலையாக இருக்கவோ முடியாது. அசைவதும், அசையாது இருப்பதும் ஒரு உடலின் இருவேறு தன்மைகள் தான். உடலுக்கு அப்பால், அசைதல் மற்றும் அசையாது இருத்தல் போன்ற வார்த்தைகளுக்கு அர்த்தம் கிடையாது.

சகல இரண்டு மாறுபட்ட தன்மைகளுக்கும், இந்த விதி பொருந்தும். உதாரணமாக, பேசுதலும் மற்றும் வெறுமனே அமைதியாக இருத்தலும், ஒரு உடல் இல்லாமல் இயங்க முடியாது. சாதாரணமாக, உடலில்லாமல் பேச முடியாது என்பது நமக்கு புரியும். ஆனால், உடம்பில்லாமல் அமைதியாகவும் இருக்க முடியாது என்பதை புரிந்து கொள்வது கடினம். எதன் மூலமாகப் பேசுகிறாயோ, அதன் மூலமாகவே அமைதியாகவும் இருக்க முடியும். அமைதியாக இருத்தலே, பேசுவதற்கான நிலையை ஏற்படுத்துகிறது. அதாவது அமைதியாக இருத்தல் என்பது பேசாமல் இருப்பது மாத்திரமல்ல; அது பேசுவதற்கும் காரணமாகிறது.

உதாரணமாக, ஒருவன் குருடனாக இருக்கிறான். அவனால் இருட்டை மட்டும்தான் பார்க்க முடியும் என்று ஒருவன் கருதலாம். இது ஒரு அனுமானம்தான். ஆனால், இருட்டைப் பார்ப்பதற்கும் கண்கள் தேவை! கண்கள் இல்லாமல், இருட்டை அறிந்து கொள்ள முடியாது. நீங்கள் உங்கள் கண்களை மூடிக்கொள்ளும் பொழுது. இருட்டைத்தான் உணர்வீர்கள். ஆகவே, கண்கள் இல்லாமலே இருட்டைப் பார்க்க முடியும் என்று நீங்கள் நினைத்தால், நீங்கள் தவறு செய்கிறீர்கள். நீங்கள் உங்கள் கண்களை மூடிக்கொண்ட பொழுது, உங்கள் கண்கள் அங்கு இல்லாமல் இல்லை. உங்கள் கண்கள் குருட்டுத் தன்மையில் இல்லை. உங்களுக்குக் கண்கள் இருந்து, பிறகு அது குருடாகி விட்டால், அப்பொழுது இருட்டு என்றால் என்ன என்பது தெரியும். ஆனால், ஒரு பிறவிக் குருடனுக்கு, இருட்டு என்றால் என்ன என்பதே தெரியாது. ஏனென்றால், இருட்டு என்பது கூட, கண்களின் ஒருவித அனுபவமே. வெளிச்சத்தைப் பார்க்கும் புலன்களின் மூலமாகவே, இருட்டையும் பார்க்கிறீர்கள். ஆகவேதான், ஒரு பிறவிக் குருடனுக்கு இருட்டு என்றால் என்ன என்பது தெரியாது.

நீங்கள் உங்களுடைய காதுகளின் வழியாகக் கேட்கிறீர்கள். நாம் ஏதாவது ஒரு மொழியைக் கொண்டு பேசும்பொழுது ஒருவருக்கு காதுகள் இல்லாவிட்டால், அவரால் எதையும் கேட்க முடியாது என்று கூறுகிறோம். ஆனால், ஒருவன் பிறவிச் செவிடனாக இருந்தால், அவனாலேயும் எதையும் கேட்க முடியாது. ஆனால் அதை அவனால்

தெரிந்து கொள்ள முடியாது. தனக்குக் காது கேட்கவில்லை என்று அறிவதற்கும் காதுகள் தேவைப்படுகிறது. எப்படி, இருட்டு என்ன என்பதை அறிய கண்கள் தேவையாக இருக்கிறதோ அதைப்போல சப்தத்தை உணருவதற்குக் காதுகள் தேவைதான். அசைவு என்றால் என்ன என்று அறியும் புலன்மூலமாகத்தான், அசைவற்ற தன்மையையும் அறிய முடியும். உடலற்ற நிலையில், ஆன்மா பேசுவது இல்லை. அதனிடம் பேசுவதற்கோ அல்லது அமைதியாக இருப்பதற்கோ எந்தக் கருவியும் கிடையாது. எல்லா அனுபவங்களும், உடல் மற்றும் புலன்கள் என்ற கருவிகளையே சார்ந்து இருக்கின்றன.

ஆனால், இந்த உடலற்ற ஆன்மா விடுதலையடைந்து விட்டது என்று இதற்கு அர்த்தமில்லை. விடுதலை அடைந்த ஆன்மாவைப் பற்றிய விளக்கமும், இப்பிறப்புக்கும், மறுபிறப்புக்கும் இடையே உள்ள இடைவெளியில் இருக்கும் ஆன்மாவைப் பற்றிய விளக்கமும் ஒன்று போலவே இருக்கும். பிறகு இந்த இரண்டுக்கும் உள்ள வித்தியாசம்தான் என்ன? அந்த ஆன்மாக்களின் இருத்தலில் (EXISTENCE) உள்ள உள்ளார்ந்த ஆற்றலில்தான் வித்தியாசம் இருக்கிறது.

அந்த உடலற்ற ஆன்மாவின் இருத்தலில், அதாவது இரண்டு உடல்களுக்கு இடையே உள்ள இடைவெளியில், முற்பிறவிகளில் ஏற்பட்ட அனுபவங்களும், கருத்துகளும் அந்த ஆன்மாவில் விதை வடிவத்தில் அப்படியே இருக்கின்றன. அந்த ஆன்மா உடலை எடுக்கும் பொழுது, அவைகள் அனைத்தும் மறுபடியும் செயல் புரிய ஆரம்பிக்கின்றன. உதாரணமாக, நாம் ஒருவனது காலை வெட்டினால், அவனுடைய ஓடும் அனுபவம் அல்லது ஆசை அவனிடமிருந்து மறைந்து விடாது. கால்கள் இல்லாமல் அவனால் ஓடவும் முடியாது, நடக்கவும் முடியாது. ஆனால், அவனுக்கு மீண்டும் கால்கள் ஏற்பட்டால், அவனுடைய ஓடும் அனுபவமும் மற்றும் அதன் கருத்துக்களும் மறுபடியும் புத்துயிர் பெறுகின்றன. இப்பொழுது அவன் விரும்பினால், அவனால் ஓடவும் முடியும்.

காரை எப்பொழுதும் ஓட்டிக்கொண்டு இருப்பவனிடமிருந்து, அந்தக் காரை அப்புறப்படுத்திவிட்டால் எப்படியோ அப்படித்தான்

மேற்கண்டதும் இருக்கும். இப்பொழுது அவனால் காரை ஓட்ட முடியாது. ஏனெனில் அவனிடம் கார் எதுவும் இல்லை. ஆகவே, அவனால் காரின் வேகத்தைக் குறைக்கவோ அல்லது கூட்டவோ முடியாது. இப்பொழுது அவனிடம் கார் இல்லாவிட்டாலும், அந்தக் கார் ஓட்டும் தன்மை, அவனுள்ளே விதை வடிவத்தில் இருக்கத் தான் செய்யும். அந்த அனுபவம் அவனைவிட்டு அகலாது. சில வருடங்களுக்குப் பிறகு, அவனுக்கு மீண்டும் கார் கிடைத்தால், அவனால் காரை எளிதாக ஓட்ட முடியும்.

ஒரு விடுதலையடைந்த ஆன்மா, மேற்சொல்லியது போல, பல அனுபவங்களிலிருந்தும் விடுதலை பெற்று விடுகிறது. ஆனால் ஒரு சாதாரண ஆத்மா, ஒரு உடலுக்கும், மறு உடலுக்கும் இடைப்பட்ட இடைவெளியில் புலன்கள் அல்லது கருவிகளிடமிருந்தே தற்காலிகமாக விடுதலை அடைகிறது. முழுமையான விடுதலையில், எல்லா அனுபவங்களும், கருத்துகளும் மற்றும் ஆசைகளும் அழிந்து விடுகின்றன. இந்த இரண்டு நிலைகளில் உள்ள ஆன்மாக்களிடம் ஒரே ஒரு ஒற்றுமைதான் உண்டு. அதாவது, இரண்டிற்கும் உடல் கிடையாது. இரண்டிற்கும் ஒரே ஒரு வேற்றுமைதான் உண்டு. முழுவிடுதலையில், உடல் மாத்திரமல்ல, உடல்ரீதியான பல தொடர் அனுபவங்களும் அழிந்து விடுகின்றன. இருபிறவிகளுக்கு இடையே, உடல் இல்லாவிட்டாலும், அந்த ஆன்மாவோடு உடல் சம்பந்தமான பல அனுபவங்கள் விதை வடிவத்தில் அதில் இருந்து கொண்டேதான் இருக்கின்றன. அது மறு உடல் எடுத்தவுடனேயே, அந்த அனுபவங்கள் மறுபடியும் பரிணமிக்க ஆரம்பிக்கின்றன.

ஆகவே, அந்த இடைப்பட்ட இடைவெளியில், ஒரு ஆன்மா அடையும் அனுபவங்கள் அனைத்தும், உடலில்லாமல் அடையும், அனுபவமில்லாமல் அடையும் அனுபவத்திற்கு நிகரானதுதான். நான் சொல்லியது போல, அப்பொழுது தியான அனுபவங்களும் ஏற்படக் கூடும். ஆனால் இது ஒரு சிலருக்கே, அதாவது மில்லியன் மக்களில் ஒருவருக்குத்தான் அந்த அனுபவம் கிட்டும்? அவர்களுடைய அனுபவம் எல்லாம் கனவு வாழ்க்கையைப் போலத்தான். அங்கே எந்தப் புலன்களுக்கும் வேலை கிடையாது.

ஒருவன் ஆழ்ந்த கனவில் இருந்தால், அப்பொழுது நீங்கள் அவன் கால்களை வெட்டிவிட்டால், அவனுடைய கனவு கலையாது. ஆனால், அவனுடைய தூக்கம் அறுபடும். நீங்கள் அவனுடைய தூக்கத்தைக் கெடுக்காமல், அவனுடைய கால்களை வெட்ட முடிந்தால், அவனுடைய கனவு தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டே இருக்கும். ஏனென்றால், கனவுக்கு, கால்கள் தேவையில்லை. அதாவது உடல் இயக்கம், கனவுக்குத் தேவையில்லை. உடலே இல்லாமல் கூட, அந்தக் கனவு தொடரும். உண்மையில், உங்களுடைய இந்தகால அனுபவங்கள் எல்லாம் உங்களிடம் கனவு நிலையில்தான் இப்பொழுது இருக்கின்றன.

நீங்கள் கனவு காணும் பொழுது, நீங்கள் நிலையாக இருந்தீர்களா அல்லது அசைந்தவாறே இருந்தீர்களா என்று உங்களிடம் யாராவது கேட்டால், உங்களால் சரியாகப் பதில் சொல்ல முடியாது. நீங்கள் கனவிலிருந்து விழித்த பிறகு, நீங்கள் அதே இடத்தில்தான் படுத்திருந்ததாக உணருவீர்கள்; ஆனால் கனவில் இருந்தீர்கள் என்றுதான் சொல்வீர்கள். விழித்த பிறகு, கனவில் மிக ஆழமான, நீண்ட அனுபவங்கள் நேர்ந்தன என்று கூறுவீர்கள். ஆனால் நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்; அதில் எந்த அசைவும் கிடையாது.

நீங்கள் சரியாகப் புரிந்து கொண்டால், நீங்கள் அந்தக் கனவிலேயே சம்மந்தப்படவில்லை என்பதை அறிவீர்கள்! ஆழமாக அதை ஆராய்ந்தால், நீங்கள் வெறும் சாட்சியாக அங்கு இருப்பது புலப்படும். ஆகவேதான், கனவில் நீங்கள் இறப்பதுபோல கனவு காண்கிறீர்கள். அப்பொழுது தன் உடல் இறந்து கிடப்பதை உங்களால் பார்க்கக் கூட முடியும். கனவில், நீங்கள் நடப்பதுபோல உணர்ந்தால், அப்பொழுதும் நீங்கள் ஒரு சாட்சியாகவே இருக்கிறீர்கள்.

ஒருவன் இந்த உலகத்தை, கனவு போலப் பார்த்தால், அவனிடம் மேலான ஆன்மிக அனுபவம் கிட்டும் என்று மதங்கள் பல கொள்கைகளை வகுத்திருக்கின்றன. இதை வைத்துக் கொண்டுதான், இந்த உலகம் 'மாயை' (MAYA), அதாவது ஒரு தோற்றம் அல்லது கனவு-என்ற கருத்தை மதத்தத்துவங்கள் ஏற்படுத்தின. இதனுடைய ஆழமான அர்த்தம் என்னவென்றால், ஒருவன் இந்த உலகத்தை, ஒரு கனவை

காண்பது போல சாட்சியாக நின்று பார்த்தால், அவனிடம் சாட்சித்தன்மை கூடுகிறது. கனவில், ஒருவன் எப்பொழுதும் சாட்சியாகவே இருக்க முடியும்; அதில் பங்கு பெறுபவனாக அல்ல. எந்த சூழ்நிலையிலும், அதில் நீங்கள் எந்த வேடமும் தரிக்க வில்லை. நீங்கள் அதில் நடிப்பது போல உணர்ந்தாலும், நீங்கள் எப்பொழுதும் ஒரு பார்வையாளனாகவே, அல்லது பார்ப்பவனாகவே இருக்கிறீர்கள்.

ஆகவே, உடலற்ற எல்லா அனுபவங்களும், கனவுகள் போலவே இருக்கும். அதாவது விதை வடிவத்தில். யார் ஒருவரிடம் துன்பமான அனுபவங்கள் கனவில் ஏற்படுகிறதோ, அவர்கள் கனவில் நரகத்தைத் தான் உணர்வார்கள். மாறாக, கனவில் இன்பமான அனுபவங்களை, யார் காண்கிறார்களோ, அவர்கள் சொர்க்கத்தை உணர்வார்கள். ஆனால், எல்லாம் கனவு போன்ற அனுபவங்கள்தான்.

சிலசமயம், பல வித்தியாசமான நிகழ்ச்சிகள் ஏற்படலாம். இவைகள் அனுபவத்திலும் வித்தியாசமாகவேப்படும். ஒருசில சமயம், நிலையாகவும் அல்லது அசையும் தன்மையோடும் இல்லாத நிலையில் உள்ள ஒரு ஆன்மா, அடுத்த உடம்பில் புகுந்துவிடும். அதாவது, சில உடல்கள், அந்த ஆன்மா புகுந்து கொள்வதற்கு ஏற்றதாக நடந்து கொள்ளும். இதைப் போல ஆன்மாக்கள் நிறைந்த உலகம், நம்முடைய உலகத்தைவிட வேறாக இருப்பது இல்லை. அந்த உலகமும் நம் உலகத்துக்குப் பக்கத்திலேயே, மிக அருகில் இருக்கிறது. பொதுவாக, நாம் எல்லோரும் இதே உலகத்தில் தான் வாழ்கிறோம். நமக்கு இடையே உள்ள ஒரு அங்குல இடைவெளியில் கூட, ஆன்மாக்கள் நிறைந்து காணப்படுகின்றன. நாம் இருக்கும் இடத்தில் உள்ள இடைவெளிகள், ஒன்றுமில்லாதது போலத் தோற்றம் அளித்தாலும், அவைகள் பல ஆன்மாக்களினால் நிரப்பப்பட்டே இருக்கின்றன.

மிக ஆழமாக வாங்கும் தன்மையில், இரண்டு விதமான உடல்கள் இருக்கின்றன. ஒன்று மிகுந்த பயத்தில் இருக்கிறது. எந்த உடல் மிகுந்த பயத்தில் இருக்கிறதோ, அது, அதன் ஆன்மாவை அந்த உடலுக் குள்ளேயே சுருக்கிக் கொண்டு விடுகிறது. அப்படிச் செய்யும் பொழுது, அந்த உடலின் சில பாகங்கள் முழுமையாக வெற்றுத்தன்மையில்

தள்ளப் படுகின்றன. அப்பொழுது, பக்கத்தில் உள்ள சில ஆன்மாக்கள், நீர் வெற்றிடத்தில் பாய்வது போல,அந்த வெற்றிடத்தை நிரப்ப ஓடோடி வருகின்றன. அந்தச் சமயங்களில், உடலோடு உள்ள ஆன்மாக்கள் எப்படி அனுபவப்படுமோ, அதைப் போல இந்த ஆன்மாக்கள் அனுபவங் களைப் பெறுகின்றன.

இரண்டாவது, ஒரு உடல் மிகவும் ஆழமான பிரார்த்தனையில் இருக்கும்பொழுது, ஒரு ஆன்மா அந்த உடலுக்குள் புக வாய்ப்புண்டு. இந்த ஆழமான பிரார்த்தனையின் மூலமாகக் கூட, அந்த உடலில் உள்ள ஆன்மா சுருங்குகிறது. ஆனால், பயத்தில் இருக்கும் பொழுது, எந்த ஆன்மா மிகுந்த துன்பத்திலும், துயரத்திலும் இருக்கிறதோ, அது அந்த உடலுக்குள் புகுந்துக் கொள்ளும். இவைகளைத்தான், நாம் கெட்ட ஆன்மாக்கள் என்று அழைக்கிறோம். ஒரு பயந்த ஆள், மிகவும் கீழான நிலையில் இருப்பதால், உயர்ந்த ஆன்மாக்கள், அந்த உடலுக்குள் செல்லாது.

ஒரு பயந்த மனிதன், ஒரு பள்ளம் அல்லது குழியைப் போல இருக்கிறான். அதில், கீழ்நோக்கிச் செல்லும் ஆன்மாக்கள் மாத்திரம் சென்று அடையும். ஒரு பிரார்த்தனை மயமான ஆணிடம் உள்ள உள்ளம் தெய்வீக நறுமணமும்; மிகுந்த அழகும் கொண்டதாக இருப்பதால், மேன்மையான ஆன்மாக்கள் தான், அவர்களிடம் ஆர்வம் காட்டும். நாம், இவைகளை பிரார்த்தனை மூலமாக அழைப்பதாக வைத்துக் கொள்ளலாம்.

இப்படி ஆன்மாக்கள் அடையும் இரண்டு விதமான அனுபவங்கள், உடலோடு சம்மந்தப்பட்டவைதான். இதற்கு, விஞ்ஞான பூர்வமான ஆதாரங்கள் இருக்கின்றன. இந்த மேலான ஆன்மாக்களையே நாம் 'தேவதாஸ்'(DEVATAS)அல்லது கடவுள்கள் என்று அழைக்கிறோம். இந்த உயர்ந்த ஆன்மாக்கள், எங்கேயோ உள்ள சொர்க்கத்திலிருந்து வந்தவைகள் அல்ல. அதைப்போல, கெட்ட ஆன்மாக்கள் எனப்படு பவைகள், எங்கேயோயுள்ள நரகத்திலிருந்து வந்தவையல்ல. நரகம் என்று எந்த உலகமும் கிடையாது. இந்த சொர்க்கம் மற்றும் நரகம் என்பவைகள் இங்கேயே, நம்முடனேயே இருக்கின்றன.

உண்மையில், இங்கேயுள்ள பரந்த இடத்தில், பலவிதமான உயர்தன்மைகள் இயங்கிக்கொண்டே இருக்கின்றன. உதாரணமாக, நாம் உட்கார்ந்திருக்கும் இந்த அறை, காற்றால் நிரப்பப்பட்டிருக்கிறது. யாராவது, வாசனைப் பொருள்களை இந்த அறையில் தெளித்தால், அந்த நறுமணம் இந்த அறைமுழுவதும் பரவிவிடும். அதைப்போல, இந்த அறையில் யாராவது உட்கார்ந்து இனிமையான பாட்டைப் பாடினால், அந்த ஒலி அலைகள் இந்த அறையை நிரப்பிவிடும். ஆனால், அந்த நறுமணப் புகையை, இந்தப் பாடலின் அலைகள் ஒன்றும் செய்யாது. இந்த அறை ஒலி அலைகளாலும், மற்றும் ஒளி அலைகளாலும் எந்தவித குறுக்கீடும் இல்லாமல் நிரப்பப்படும். ஒலி அலைக்காக, ஒளி அலைகள் தன்னை ஒதுக்கிக் கொள்வது இல்லை.

உண்மையாகச் சொன்னால், நம்மைச்சுற்றியுள்ள இந்த வெற்றிடம் ஒலி மற்றும் ஒளி அலைகளாலும் அடுத்து மூன்றாவதாக காற்று அலைகளினாலும் ஒருங்கே நிரப்பப்பட்டிருக்கின்றன. இதைப் போல, நூற்றுக்கணக்கான அலைகள், நூறுவிதங்களில், இந்த அறையை நிரப்பியிருக்கின்றன. ஆனால், இவைகளில் ஒன்றுக்கொன்று எந்தக் குறுக்கீடும் கிடையாது; அல்லது ஒன்றின் வருகைக்காக, மற்றது இடம் பெயர்வதும் கிடையாது. ஆகவே, எல்லா வெற்று இடங்களும் பல பரிமாணங்கள் (MULTI DIMENSIONAL) கொண்டதுதான்.

உதாரணமாக, இந்த இடத்தில் ஒரு மேஜை இருக்கிறது. ஆனால், அதே இடத்தில், அதே அளவு உள்ள வேறு ஒரு மேஜையை அங்கு போட முடியாது. மாறாக, அதே அளவில் உள்ள ஒரு உயரத்தன்மைக்கு, அந்த மேஜை ஒரு தடங்கலாக இருக்காது. ஆகவே, எல்லா ஆன்மாக்களும், நம்மைச் சுற்றி ஒருங்கிணைந்து காணப்படுகின்றன. அவைகளில் ஏதாவது ஒன்று, எப்பொழுது வேண்டுமானாலும், ஒரு உடலுக்குள் செல்ல முடியும். அப்படி அந்த ஆன்மா, ஒரு உடலுக்குள் சென்றபிறகு, அதற்கு அந்த உடலோடு கூடிய அனுபவம் ஏற்படுகிறது. அந்த அனுபவங்களை, உடலில்லாமல், வேறுவிதத்தில் அடைய முடியாது.

இப்படி உயிருள்ள உடலில் புகுந்த ஆன்மா, எப்படி தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறது என்பது ஒரு சுவாரசியமான விஷயம்.

உள்ளே சென்ற ஆன்மாவுக்கும், ஏற்கனவே அந்த உடலில் உள்ள ஆன்மாவுக்கும் இடையேதான், அந்த வெளித்தொடர்பு ஏற்படுகிறது. ஆகவேதான், இந்த உலகத்தில் இதுவரை, எந்த புனித ஆன்மாவோ அல்லது கெட்ட ஆன்மாவோ, நம்முடன் நேரடியாகத் தொடர்பு கொள்ள முடியவில்லை. ஆனால், அது தொடர்பு கொள்ளவில்லை என்று சொல்வதும் சரியில்லை. தொடர்பை, அது ஏற்படுத்திக் கொண்டுதான் இருக்கிறது. சொர்க்கத்தைப் பற்றியும், நரகத்தைப் பற்றியும், நாம் அறிந்துகொண்டவைகள், மக்களுடைய வெறும் கற்பனைகள் அல்ல. அவைகள், இந்த ஆன்மாக்கள் ஒரு சாதனத்தைக் கொண்டு(உடல்) நம்மிடம் ஏற்படுத்திய தொடர்பால் நாம் அறிந்து கொண்டவைகள்தான்.

பழைய காலத்தில், ஒரு முறை இருந்தது. உதாரணமாக, ஹிந்து வேத விற்பன்னர்கள் அதாவது வேதகாலத்து ரிஷிகள் யாரும், இதை இந்த வேதங்களை தாங்கள்தான் எழுதுகிறோம் என்று ஒருக்காலும் சொல்லமாட்டார்கள். பார்க்கப் போனால், அவர்கள் எழுதுபவர்களே அல்ல. அவர்கள், தங்களுடைய அடக்கத்தினால், அப்படிச் சொல்ல வில்லை. உண்மையைச் சொல்லப் போனால், அவர்கள் கேட்டதைத் தான், எழுத்தில் வடித்தார்கள். இது ஒரு உண்மையான அனுபவம். ஏதாவது ஒரு ஆன்மா உங்களிடம் புகுந்துகொண்டு, பேசினால், அப்பொழுது நீங்கள் வெறுமனே பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு இருக்க, நீங்கள் இல்லாமல், வேறு ஒன்று உங்கள் மூலமாகப் பேசுவதை, நீங்கள் மிகவும் தெளிவாக உணர்வீர்கள். அப்பொழுது நீங்கள் பேசுபவர் அல்ல; அடுத்தவர்களைப் போல நீங்களும் கேட்பவர்தான்!

ஆனால், இதை வெளியிலிருந்து சுலபமாகத் தெரிந்து கொள்ள முடியாது. நன்றாகக் கவனித்துப் பார்த்தால்தான், இது சாத்யம். உதாரணமாக, அப்பொழுது ஒருவர் பேசுகின்ற முறையும், பேசும் தன்மையும், குரலும் முற்றிலும் வேறாக இருக்கும். மேலும், அது சொல்கின்ற வார்த்தைகளும், உச்சரிப்பும் கூட வேறாக இருக்கும். அந்த உட லின் சொந்தக்காரருக்கு உள்ளேயிருந்து எல்லாமே ரத்ன சுத்தமாக (CRYSTAL CLEAR) மிகவும் தெளிவாக விளங்கும். அப்படி ஏதாவது கெட்ட ஆன்மா புகுந்துகொண்டால், அந்த உடலையுடையவன் மிகவும் பயந்துபோய், பிரக்ஞையை இழந்து, மயக்கம் போட்டுக்கூட விழ

நேரிடும். மாறாக, மேலான நிலையில் உள்ள ஒரு ஆன்மா, ஒரு உடலுக்குள் புகுந்தால், அவன் இதற்கு முன்பு அறிந்திராத விழிப்புத்தன்மையை அறிந்து கொள்வான். அப்பொழுது தனக்குள் ஏற்பட்ட மாற்றத்தை மிகத் தெளிவாக அவன் விளங்கிக் கொள்வான்.

ஒரு உடலுக்குள், கெட்ட ஆன்மா புகுந்தபொழுது, அந்த உடலுக்குரியவன், அப்படி ஒன்று உள்ளே நுழைந்திருப்பதை, அது அந்த உடலைவிட்டு அகன்றபிறகுதான் அறிந்துகொள்ள முடியும். ஏனென்றால் அது உடலுக்குள் நுழைந்த பொழுது அடைந்த பயத்தினால், பிரக்ஞையற்ற மயக்க நிலைக்குள் தள்ளப்படுகிறான். ஆனால், மேலான ஒரு உயர்ந்த ஆன்மா, ஒரு உடலுக்குள் சென்றால், அந்தக் கணத்திலேயே அவன், ''நான் சொன்னது அனைத்தும் பிறருடையதுதான்; என்னுடையது அல்ல'' என்று அவனால் கூற முடியும்.

ஒரு ஒலி பெருக்கியை (MICROPHONE), இரண்டு பேர்கள் ஒரே சமயத்தில் உபயோகித்தால் எப்படியோ, அப்படியேதான் இரண்டு குரல்கள் ஒரே கருவியை உபயோகித்துக் கொள்கின்றன. ஒன்று நிறுத்தும்பொழுது, அடுத்தது பேச ஆரம்பிக்கிறது. உடலிலுள்ள புலன்களை இப்படி உபயோகப்படுத்தலாம் என்ற நிலையில், உடலற்ற ஆன்மா அதை உபயோகித்து, பிறரோடு தொடர்பு கொள்கிறது. இப்படித்தான் இந்த உலகத்துக்குத் தெரிந்த தேவாஸும் (தேவர்கள்), மற்றும் கெட்ட ஆன்மாக்களும் தொடர்பு கொள்கின்றன. இவைகளை வேறு வகையில் அறிந்து கொள்ள முடியாது.

இதற்காக, ஒரு முழுமையான விஞ்ஞானம் உருவாக்கப்பட வேண்டும். அப்படி ஒன்று ஏற்பட்டால், அவைகளைப் புரிந்துகொள்வது மிகவும் எளிது. இந்த நிகழ்ச்சிகளை மிகவும் ஆழமாகப் புரிந்து கொள்ளலாம். அப்பொழுது பொதுப்படையான விஞ்ஞானக்கருத்துக் களை வகுத்துக் கொள்ளலாம். உதாரணமாக, ஒரு ஆன்மா, எதிர்பாராத விதமாக, திடீரென்று ஒரு உடலுக்குள் நுழைந்து விட்டால், அந்த நிகழ்ச்சியிலிருந்து, எந்த சூழ்நிலையில், எப்படி அந்த நிகழ்ச்சி ஏற்பட்டது என்று ஆழமாகச் சிந்தித்து அறிந்து, ஒரு பொதுப்படையான கொள்கையை வகுத்துக் கொள்ளலாம். அதன்பிறகு, இப்படிப்பட்ட

சூழ்நிலை உருவானால், அப்படிப்பட்ட நிகழ்ச்சி ஏற்பட வாய்ப்புண்டு என்று சொல்லலாம்.

உதாரணமாக, முகமதியர்கள் 'லோபான்' (LOHBAN) என்பதை எரிப்பார்கள். அதனால் ஏற்படும் ஒருவித நறுமணமிக்க வாசனையால், நல்ல ஆன்மாக்களை அழைக்கலாம். ஹிந்துக்கள், நெய்யில் திரியை துவைத்து, எரிய விடுவார்கள். இவைகளெல்லாம், ஒரு ஒழுங்குபடுத்திய சடங்காகத் தோன்றலாம். ஆனால், சில சமயங்களில், இதில் மிக ஆழமான அர்த்தம் உண்டு.

ஆன்மாக்களை அழைப்பதற்காக, ஹிந்துக்கள் சில மந்திரங்களை சொல்வார்கள். அந்த மந்திரங்களுக்கு, அர்த்தம் இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. சாதாரணமாக, இருக்கவும் இருக்காது. ஏனென்றால், நாட்கள் செல்லச்செல்ல, அர்த்தத்தோடு கூடிய மந்திரம், வேறு விதமாக மாறக்கூடும். ஆனால், அர்த்தமற்ற மந்திரத்தை அப்படி மாற்ற முடியாது. மேலும், அத்துடன் வேறு எதையும் அனாவசியமாக புகுத்தவும் முடியாது. ஆகவேதான், ஆழமான மந்திரங்களுக்கு அர்த்தம் இருக்காது. அப்பொழுது அதை மாற்ற முடியாது. அவைகள் வெறும் ஒலி ஓசைதான். இப்படி ஒலிகளை ஒரு குறிப்பிட்ட தொனியில் எழுப்ப, சில முறைகள் இருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட தாளத்தோடும், லயத்தோடும், ஒரு குறிப்பிட்ட தொனியில், அந்த மந்திரத்தை உச்சரித்தால், அந்த ஆன்மா உந்துதல்பெற்று, உடனே அது ஒரு உடலுக்குள் பாய்ந்துவிடும். எந்த குறிப்பிட்ட ஆன்மாவுக்காக, அந்த மந்திரம் ஜபிக்கப் பட்டதோ, அந்த ஆன்மா 'நிர்வாணா' நிலையை அடைந்து கரைந்து விட்டால், அதே போன்ற நிலையில் உள்ள வேறு ஒரு ஆன்மா, அந்த உடலுக்குள் சென்றுவிடும்.

இந்த உலகத்தில் உள்ள எல்லா மதங்களிலும், சில மந்திரங்கள் உண்டு. ஜைனர்களிடம் 'நமக்கார்' (NAMAKAR) என்ற மந்திரங்கள் உண்டு. அவைகள்

''யார் பகைவர்களை அழித்தார்களோ, அவர்களுக்கு தலை வணங்குகிறேன்.

யார் முக்தியை அடைந்தார்களோ, அவர்களுக்கு தலை வணங்குகிறேன்.

மதத்தன்மை நிரம்பியவர்கள் யாரோ, அவர்களுக்கு தலை வணங்குகிறேன்.

பாதிரிமார்கள் யாரோ, அவர்களுக்கு தலை வணங்குகிறேன்.

மதத்தன்மை வாய்ந்த அனைவருக்கும், தலை வணங்குகிறேன்.''

இப்படியாக, இதில் 5 பகுதிகள் இருக்கின்றன. ஒவ்வொரு பகுதியிலும், ஒரு குறிப்பிட்ட பிரார்த்தனை உண்டு. அது ஆழமாக, ஆழமாகச் சென்று கொண்டே இருக்கிறது.

சாதாரணமாக, மக்கள் ஒரே தடவையில் எல்லா மந்திரங்களையும் ஜபிப்பார்கள். ஆனால், இது சரியான முறையல்ல. மேலான நிலையில் உள்ள ஆன்மாக்களைத் தொடர்புகொள்ள நினைப்பவர்கள், முதல் பகுதியை மட்டும் திரும்பத் திரும்ப சொல்ல வேண்டும். அடுத்த நான்கு வரிகளை அல்லது பகுதிகளை திரும்பச் சொல்லத் தேவையில்லை. ஆகவே, ஒரு பகுதியை மட்டும் வலியுறுத்தினால் போதும். ஏனென்றால், அந்த பகுதிக்கு சம்மந்தப்பட்ட ஆன்மாக்கள், மற்றைய பகுதிக்கு சம்மந்தப்பட்ட ஆன்மாக்களிடமிருந்து வித்தியாசப்படுகிறது.

உதாரணமாக, இந்த மந்திரத்தின் முதல் பகுதிக்கு 'நமோ அரிஹண்டநாம்' (NAMO ARIHANTANAM) என்று பெயர். இது அரிஹண்டாவுக்கு தயார்படுத்துதல்-அதாவது யார் சகல சத்ருக்களையும் அழித்தார்களோ மற்றும் யார் சகல புலன்களையும் தாண்டிச் சென்றார்களோ, அவர்களுக்கு வணக்கம் சொல்வது. 'அரி' என்றால் சத்ரு என்றும், 'ஹண்டா' என்றால் அழித்தவர் என்றும் அர்த்தம். ஆகவே, ஒரே ஒரு மறுபிறவி எடுக்கக்கூடிய முழுமையாக ஞானம் அடைந்த ஆன்மாக்களுக்காக ஓதப்பட்ட ஒரு குறிப்பிட்ட பிரார்த்தனை அல்லது மந்திரம் இதுவாகும். இந்த ஒரு பகுதியை மட்டும், ஒரு தனிப்பட்ட தொனியில் திரும்பத் திரும்ப சொல்ல வேண்டும். இந்த பிரார்த்தனையால், மற்றைய ஜைன ஆன்மாக்களிடம் தொடர்பு ஏற்படாது.

இந்த 'அரிஹண்ட்' என்ற தனிப்பட்ட வித்தியாசமான வார்த்தை, மேலான ஜைன ஆன்மாக்களை தொடர்பு கொள்கிறது. இந்த மந்திரத்தின் மூலம், ஜீசஸ் கிறிஸ்துவின் ஆன்மாவை தொடர்பு கொள்ள முடியாது. அதைப் போன்ற ஆசையை இதன்மூலம் வெளிப்படுத்த வில்லை. ஏன், இந்த மந்திரத்தின் உதவியால், புத்தாவின் ஆன்மாவைக்கூட தொடர்பு கொள்ள முடியாது. ஒரு குறிப்பிட்ட ஜைன ஆன்மாக்களுக்கான, இது ஒரு முறைப்படுத்திய பிரார்த்தனை என்று கூறலாம். இதைப் போல, இந்த நமக்காரில் உள்ள 5 பகுதிகளும், 5 விதமான ஜைன ஆன்மாக்களுக்கான, தனிப்பட்ட பிரார்த்தனையாகும்.

இதில் உள்ள கடைசி பிரார்த்தனையாகிய ''நமோ லையி சாவ்ய சகுனம்'' (NAMO LOYE SAVYA SAHUNAM) என்பது எல்லா மதத்திலுள்ள மேலான ஆன்மாக்களுக்கானது. இது ஜைன உயர் ஆன்மாக்களுக்கோ மற்றும் ஜைனத்தைத்தவிர, வேறு ஒரு குறிப்பிட்ட மதத்தினருக்கோ உரியது அல்ல. இது ஒரு பொதுவான பிரார்த்தனை அல்லது மந்திரம் என்று சொல்லாம். இது எந்தக் குறிப்பிட்ட மதத்து மேலான ஆன்மாக்களுக்காக அல்ல.

எல்லா மதத்திலும், இப்படி ஆன்மாக்களுடன் தொடர்பு கொள்ளக்கூடிய மந்திரங்கள் உண்டு. இவைகள் முக்யத்துவம் பெற்று 'சக்தி மந்திரா'(SHAKTI-MANTRAS)வாகிறது. ஒரு மனிதனுக்கு பெயரிடுவது போல, இதை 'மந்திரம்' என்ற பெயரில் அழைக்கிறோம். ஒருவனை, ராமன் என்று அவன் பெயரில் அழைத்தால், அவன் உடனே தன் கவனத்தை அங்கு திருப்புகிறான். அதைப் போலத்தான் இந்த மந்திரமும்.

இதைப் போல, சாதாரண ஆன்மாக்களுக்கும், சில குறிப்பிட்ட மந்திரங்கள் உண்டு. ஆகவே, சாதாரண ஆன்மாக்களுக்கும், மேலான ஆன்மாக்களுக்கும் விஞ்ஞானரீதியான சில மந்திரங்கள் உண்டு. சிலசமயம், ஒரு குறிப்பிட்ட ஆன்மாவை, அதற்குரிய மந்திரங்களின் மூலம் நம்மால் உடனே தொடர்பு கொள்ள முடியாது. காலம் கடந்ததால், இது நடக்க முடியாமல் போகலாம். ஆனால், அதைப் போன்ற தன்மையுள்ள வேறு ஆன்மாக்களை, இந்த மந்திரத்தின் மூலம், நம்மால் தொடர்பு கொள்ள முடியும்.

இப்பொழுது, முகமதுவை உதாரணமாக எடுத்துக் கொள்ளுங்கள். அவர் எப்பொழுதும் தன்னை ஒரு ''பைகம்பரா'' (PAIGAMBARA) அதாவது தான் ஒரு 'கடவுள்தூதுவன்' என்றே அழைத்துக் கொள்வார். ஏனென்றால், அவர் தான் அடைந்த ஆன்மிக அனுபவம் எல்லாம், தன்னுடையது அல்ல என்றே உணர்ந்தார். மேலேயிருந்து, தன்னை வந்து அடைந்த குரல், அவருக்கு மிகவும் தெளிவாகக் கேட்டது. அவருடைய அனுபவங்களை, முகமதியர்கள் 'இல்ஹாம்' (ILHAM)-அதாவது வெளிப்படுத்துதல் என்று அழைத்தார்கள். தனக்குள்ளே ஏதோ ஒன்று புகுந்து கொண்டு, பேசுவதாக முகமது அறிவித்தார். இந்த வெளிப்பாட்டை அவரால் கூட நம்பமுடியவில்லை. தன்னைப் போலவே , மற்றவர்களும் இதை நம்பமாட்டார்கள் என்றும் அவர் நினைத்தார். ஏனென்றால், அதைப்போல அவர், அதற்கு முன்பு பேசியது இல்லை. மக்களும், அவர் இப்படிப் பேசியதைப் போல, அதற்கு முன்பு கேட்டதில்லை. இந்த வித்தியாசமான நிகழ்ச்சியை, மக்கள் ஒருக்காலும் நம்பமாட்டார்கள் என்று அவர் பயந்தார்.

ஆகவே, அந்த ஆன்மிக வெளிப்பாட்டு நிகழ்ச்சி நடந்த இடத்திலிருந்து, அவர் தன் வீட்டுக்கு மிகுந்த பயத்துடன் அடுத்தவர்கள் தன்னைப் பார்ப்பதைத் தவிர்த்து, வேகமாக வந்து சேர்ந்தார். தான் அறிந்ததை உடனே மக்களிடம் தெரிவிக்க, அவர் விரும்பவில்லை. அவருடைய வாழ்க்கையின் முற்பகுதியில், இப்படிப்பட்ட அனுபவம் ஏதும் நிகழாததால், இப்பொழுது மிகவும் வித்தியாசமாக அறிவித்தால், அவரை மக்கள் நம்ப மாட்டார்கள் என்றே அவர் கருதினார். வீட்டுக்கு திரும்பி வந்த பிறகு, அதைப் பற்றி உடனே தன் மனைவியிடம் மாத்திரம் சொன்னார். அப்பொழுது அவர், தன் மனைவி தன்னை நம்பினால் மாத்திரமே, அதைப் பிறரிடம் சொல்லப்போவதாகவும், இல்லா விட்டால், சொல்ல விரும்பவில்லை என்றும் அந்த அம்மையாரிடம் கூறினார். ஏனெனில், அவர் சொல்லப் போவது, தன்னுடையது அல்ல என்றும் அது மேலே இருந்து வந்ததாகவும் கூறினால், மக்கள் நம்புவார்களா? என்று அஞ்சினார். அது அவருடைய குரல் இல்லை. பிறகு, அவருடைய மனைவி, அவரை நம்பியதும்தான், அவர் பிறருக்கு எடுத்துச் சொன்னார்.

மோசஸுக்கு (MOSES)க்கூட, இதே அனுபவம் ஏற்பட்டது. ஒரு குரல், அவரை வந்து அடைந்தது. அந்தக் குரல் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள அந்த சிறந்த தெய்வீக ஆன்மா, ஒரு உடலைத் தேர்ந்தெடுத்து, தனக்கு ஒரு கருவியாக்கிக்கொள்ள வேண்டும். ஆனால், எல்லோரும் அப்படி ஒரு இடைப்பட்ட கருவியாக முடியாது. அப்படி ஒரு சாதனமாக, ஒருகருவியாகச் செயல்படுவதற்கு, அதற்கு ஏற்றதகுதியும்; மனசுத்தமும் அந்தக்கருவிக்கு இருக்க வேண்டும். அது அவ்வளவு எளிதான விஷயம் அல்ல. சரியான தகுதிபடைத்த சாதனம் இருந்தால்தான், அப்படிப்பட்ட தொடர்பு சாத்யம். அதற்கு, தகுந்த இன்னொரு உடல் இங்கு தேவைப்படுகிறது.

இதைப் போன்ற முயற்சி, சமீபத்தில் கிருஷ்ண மூர்த்தியிடம் மேற்கொள்ளப்பட்டது. ஆனால், அது தோல்வி அடைந்துவிட்டது. 'மைத்ரேயா' (MAITHREYA) என்ற பெயரில், புத்தரின் மறு அவதாரத்திற்காக முயற்சி செய்யப்பட்டது. புத்தர்,அப்பொழுது, தான் 'மைத்ரேயா' என்ற பெயரில், இன்னும் ஒரு பிறவி எடுக்கப் போவதாக அறிவித்திருந்தார். அவர் அறிவித்து 2500 வருடங்களாகி விட்டது-மிக நீண்ட நாட்கள்தான். இருந்தும், புத்தர் மறுபிறவி எடுத்ததாகத் தெரியவில்லை. மைத்ரேயா பிறப்பதற்கு தகுந்த கர்ப்பப்பை அல்லது தாய் கிடைக்கவில்லை என்ற குறிப்பு கிடைத்திருக்கிறது. ஆகவேதான், வேறு முறையில், முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அதாவது, சரியான தகுந்த கர்ப்பப்பை கிடைக்கவில்லையென்றால், ஒரு குறிப்பிட்ட ஆளை, தகுந்தமுறையில் தயார் செய்து, ஏற்றபடி வைத்திருந்தால், மைத்ரேயா அவர்கள் மூலமாக, தான் சொல்ல வேண்டியதை வெளிப்படுத்தும் என்பதுதான் அந்த ஏற்பாடு.

இதற்காக, இந்த பெரிய 'தியோசாபிகல்' (THEOSOPHICAL MOVEMENT) நிருவனத்தை ஆரம்பித்தார்கள். மைத்ரேயா, தனக்கு ஏற்றார்போல் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளத் தகுந்த நடுநிலை சாதனத்தை அல்லது ஆணை (MEDIUM) தேர்வு செய்து தயார்ப்படுத்தி வைப்பதுதான், இதன் முக்கிய நோக்கம். முகமதுவின் மூலமாக, ஆன்மிக செய்திகளை வெளியிட்ட அந்த உயர்ந்த ஆன்மா, ஏற்கனவே தயார் நிலையில் உள்ள முகமதுவை சுலபமாகத் தேர்ந்தெடுத்துக்

கொண்டு விட்டது. அதற்காக, வேறு யாரும் தயார் செய்யப்படவில்லை. அதைப் போலத்தான், மோசஸும் தயார் நிலையில் இருந்தார். அந்தக் காலத்தில், மக்கள் மிகவும் எளிமையாகவும், கள்ளம் கபடு அற்றத்தன்மையிலும், அகங்காரமற்று இருந்தார்கள். அப்பொழுது, ஒரு நடுநிலை ஆளை தேர்ந்தெடுத்துக் கொள்வது என்பது மிகவும் எளிதாக இருந்தது. ஏனெனில், அப்பொழுது ஒருவர் தன் உடலை முழுமையாக, மிக்க அன்புடன், வேறு ஒரு ஆன்மாவுக்கு சரணாகதியாக்கிக் கொள்ள முடியும். ஆகவே, அந்த ஆன்மா அதை தன் நோக்கப்படி உபயோகித்துக் கொள்ள முடியும்.

ஆனால் இப்பொழுது அது நடைபெறாது. ஏனெனில், ஒவ்வொருவரும் வளைந்து கொடுக்காமல், தன் தனித்தன்மையில் தன் முனைப்போடு, அகங்காரமாகச் செயல்படுகிறார்கள். ஆகவே, யாரும் தன்னை சரணாகதியாக்கிக் கொள்ள விரும்புவதேயில்லை. ஆகவே, இந்த இறை வழிபாடு உள்ளவர்கள் (THEOSOPHISTS) புத்தர், மைத்ரேயாவாக பயிற்சி கொடுத்தார்கள். ஏனெனில், எப்படி அந்த குழந்தைகள் பிற்பாடு அந்த ஆன்மா இறங்கி, பேசுவதற்று ஏதுவாக மாறும் என்று அவர்களால் முன்கூட்டியே தீர்மானிக்க முடியவில்லை. ஆகவே, அவர்கள் கிருஷ்ணமூர்த்தியையும், மற்றும் அவருடைய சகோதரர் நித்யானந்தாவையும் தேர்ந்தெடுத்தார்கள். பிற்பாடு, அவர்கள் கிருஷ்ணமேனனையும், ஜார்ஜ் அருண்டேலையும் தேர்ந் தெடுத்தார்கள்.

இந்த ஆரம்ப கடுமையான பயிற்சியில், நித்யானந்தா இளம் வயதிலேயே இறந்து விட்டார். தன்னுடைய சகோதரரின் இறப்பால், கிருஷ்ணமூர்த்தி மனத்தளவில் மிகவும் பாதிக்கப்பட்டார். அதனால், அவர் ஒரு தகுந்த நடுநிலை சாதனமாக விளங்க முடியவில்லை.

அன்னிபெசண்டாலும், லெட்பீட்டராலும் (ANNIE BESANT; LEAD BEATER) கிருஷ்ணமூர்த்தி 9 வயதில் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், இந்த உலகம், ஒரு பெரிய நாடகமேடைதான்! இந்த ஆன்மிக நாடகம், சக்திமிக்கவர்களால் உலக அரங்கில் நடத்தப்பட்டது. அப்பொழுது, மைத்ரேயா, கிருஷ்ணமூர்த்தியை அடையும் தருணம், தீர்மானமாக நெருங்கி வரும்பொழுது, புத்தருடைய மாமன் மகனாகிய

தேவதத்தா (DEVADATTA)வின் ஆன்மா கிருஷ்ணமூர்த்தியின் தகப்பனாரை ஆக்ரமித்துக்கொண்டு விட்டது. இந்த தேவதத்தா, புத்தரை தன் வாழ்நாள் முழுவதும் எதிர்த்தவர்; மற்றும் புத்தரை கொலை செய்யவும் பலமுறை முயன்றிருக்கிறார்.

இந்த ஆத்மா, கிருஷ்ணமூர்த்தியின் தகப்பனாரை தூண்டிவிட்டு, அன்னிபெசண்ட் மற்றும் அந்த நிறுவனத்தில் உள்ள மற்றும் சிலபேர்களின் மேல், தன்னுடைய மகனாகிய கிருஷ்ண மூர்த்தியை, தன்னிடம் ஒப்படைக்க வேண்டும் என்று கோர்ட்டில் மனு ஒன்றை தாக்கல் செய்யும்படி செய்துவிட்டது. இந்த விசாரனை 'பிரிவி கவுன்சிலிடம்' (PRIVY COUNCIL) வந்தது. இதற்கு முன்பு, இந்த உண்மையை யாரும் வெளியிடவில்லை. முதன்முதலில், நான்தான் வெளியிடுகிறேன். அன்னிபெசண்ட், இந்தச் சட்டப் பிரச்சினையை எதிர்த்துக் கடுமையாகப் போராடினார். ஆனால், நீதிமன்றத்தில் அவளால் ஜெயிக்க முடியவில்லை. ஏனென்றால், வயதுவராத (MINOR) குழந்தையை வளர்க்க தகப்பனாருக்கு உரிமை உண்டு என்று கோர்ட்டு தீர்ப்பு அளிக்கலாம். அப்படியே, அந்தக் குழந்தை தான் தன் தகப்பனாரோடு வசிக்க விரும்பவில்லை என்றாலும், அந்த குழந்தையாலும் ஜெயிக்க முடியாது. ஏனென்றால், அது தகுந்த வயதுக்கு வரவில்லை. ஆகவே, அன்னிபெசண்ட்டும் மற்றவர்களும், அந்த குழந்தையை (கிருஷ்ணமூர்த்தியை), இங்கிலாந்துக்கு வலுக் கட்டாயமாக எடுத்துக்கொண்டு செல்லும்படியாகிவிட்டது. அதாவது, இந்தியாவில் வழக்கு நடந்துகொண்டு இருக்கும்பொழுதே, அன்னிபெசண்ட், கிருஷ்ண மூர்த்தியோடு இங்கிலாந்துக்கு ஓடிவிட்டாள்! இந்த வழக்கு பிறகு சுப்ரீம் கோர்ட்டுக்கு மாற்றப்பட்டது. அங்கே, அன்னிபெசண்ட் தோற்கடிக்கப்பட்டாள். இது ஒரு சட்ட சண்டை. ஆனால், தேவதத்தாவின் ஆன்மா மிகுந்த வலிமை படைத்தாக இருந்தது.

சாதாரணமாக, குற்றவாளிகளின் கைகளில் சட்டம் மிகவும் வளைந்து கொடுக்கும். ஏனெனில், அவர்கள் தங்களுடைய சட்டபூர்வமான சண்டைகளை, தகுந்த முன்னேற்பாடுடன் செய்து

கொள்கிறார்கள். ஆனால், ஒரு நல்ல மனிதன் இப்படி சட்டத்தை முன்கூட்டியே தீர்மானிப்பது இல்லை.

அதன்பிறகு, லண்டனில் உள்ள ப்ரீவி கவுன்சிலுக்கு, அன்னிபெசண்ட் மேல்முறையீடு செய்தார். அங்கே, எல்லாச் சட்ட திட்டங்களுக்கும் மாறாக, முன்பு வழங்கிய தீர்ப்பை மறுத்து, இப்பொழுது அந்தக் குழந்தை, அன்னிபெசண்ட்டோடு இருக்கலாம் என்று தீர்ப்பு வழங்கியது. ஆமாம், இந்தத் தீர்ப்பு சரியானது அல்ல. இதற்கு முன்பு, இதைப் போன்ற தீர்ப்பு வழங்கப்பட்டது கிடையாது. இந்த கவுன்சிலின் தீர்ப்பை எதிர்த்து மேல் முறையீடு செய்ய எந்த கோர்ட்டும் கிடையாது. இந்தத் தீர்ப்பு, மைத்ரேயாவின் ஆன்மாவின் சக்தியால் வழங்கப்பட்டதுதான். இந்த ஆன்மா, கீழ் கோர்ட்டுகளில் தன் சக்தியை காண்பிக்கவில்லை.

இப்படி கீழ்நிலையில் நடந்த சட்ட சண்டைகளை, தினசரி ஏடுகள் சாட்சியாகப் பார்த்து தலையங்கம் தீட்டின. ஆனால், மேலான நிலையில், இரண்டு சக்திவாய்ந்த ஆன்மாக்களிடம் ஏற்பட்ட பெரிய சண்டைதான் இப்படி மிகுந்த பரபரப்பைத் தூண்டியது. பிறகு, கிருஷ்ண மூர்த்தியை தயார் செய்வதில், மிகுந்த சிரமம் எடுத்துக் கொண்டு, முழு மூச்சில் வேலை செய்தார்கள். ஒரு தனிப்பட்ட ஆளுக்காக, இவ்வளவு சிரமத்தை இதற்கு முன்பு வேறு யாருக்கும் எடுத்திருக்க மாட்டார்கள். ஆனால், ஒரு தனிமனிதன், தன்னுடைய முன்னேற்றத்திற்காக இவ்வளவுசிரமங்களை எடுத்திருக்கக்கூடும். ஆனால் வேறு ஒரு தனி மனிதனுக்காக, இவ்வளவு பேர்கள் இவ்வளவு சிரமம் எடுத்திருக்க மாட்டார்கள்.

ஆனால், இவ்வளவு பெரிய முயற்சிக்குப் பிறகும், சரியான நேரம் வரும்பொழுது, எல்லா நம்பிக்கைகளும் கீழே தள்ளப்பட்டு விடுகின்றன. உலகத்தில் உள்ள இந்த அமைப்பினர் (THEOSOPHISTS) சுமார் 6000 பேர்கள் ஹாலந்தில் கூடி, கிருஷ்ணமூர்த்தி தன் தனித்தன்மையை இழந்து, மைத்ரேயாவை ஏற்றுக் கொள்ளும் நிகழ்ச்சியைக் காண எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. அந்த நீண்ட நாள் கனவு பலிக்கும் நேரமும் நெருங்கியது. அப்பொழுது கிருஷ்ண மூர்த்தி மேடைமீது ஏறி, நான் இனிமேல் கிருஷ்ணமூர்த்தி இல்லை

என்று அறிவிக்க, மைத்ரேயாவின் ஆன்மா, அவருக்குள் சென்று, அது பேசஆரம்பித்து விடும். ஆகவே, அந்த நாளில் மிகுந்த எதிர்ப்பார்ப்புடன் 6000 பேர்கள் அங்கே கூடி, மைத்ரேயாவின் குரலைக்கேட்க, மிக்க ஆவலுடன் காத்திருந்தார்கள். ஆனால் ஒரு பெரிய எதிர்பாராத நிகழ்ச்சி ஏற்பட்டு விட்டது.

அப்பொழுது எதுவும் நிகழவில்லை. அந்தச் சரியான தருணத்தில், கிருஷ்ணமூர்த்தி, தன் தனித்தன்மையை இழக்க மறுத்து விட்டார்! அதாவது தேவதத்தா கடைசி முயற்சியில் வென்று விட்டார்! ப்ரீவி கவுன்சிலில் செய்ய முடியாததை, தேவதத்தா ஆன்மா, கடைசியாகக் கூடிய பல பேர்கள் அடங்கிய கடைசி நீதிமன்றத்தில், செய்துகாட்டி ஜெயித்துவிட்டது! அது, கிருஷ்ண மூர்த்தியை, தான் ஒரு உலக போதனையாளன் இல்லை என்று அறிவிக்கச் செய்துவிட்டது. அவர், தான் வேறு எந்த ஆன்மாக்களோடு எதுவும் செய்வதற்கில்லை என்றும், தான் எப்படி இருந்தாரோ, அப்படியேதான் இப்பொழுதும் இருக்கப் போவதாகவும் மற்றும் தான் இதற்கு மேல் எதுவும் சொல்வதற்கு இல்லை என்றும் அறிவித்துவிட்டார். ஆக, ஒரு பெரிய மகத்தான பரிசோதனை தோல்வியடைந்துவிட்டது. ஆனால், இன்னொரு வகையில் பார்த்தால், இந்த வகை பரிசோதனை இப்பொழுதுதான் முதன்முதலில் நடந்தது. கடைசியில், இந்த மகத்தான பரிசோதனை, மகத்தான தோல்வியைத் தழுவியது!

ஆகவே, ஆன்மாக்கள், வேறு உடல்களில் புகுந்துகொள்ளாமல், தங்களை வெளிப்படுத்திக் கொள்ள முடியாது. ஆகவேதான், மனிதப் பிறவி எடுப்பது என்பது மிகவும் தேவையானது. ஏனெனில், உதாரணமாக ஒரு மனிதன் இப்பொழுது இறந்தால், அவனுடைய ஆன்மா, உடலை எடுக்காமல் ஒரு 100 வருடம் அப்படியே இருந்தால், அதனிடம் எந்த வளர்ச்சியும் ஏற்படாது. அந்த நூறு வருடங்களில், அது அப்படியேதான் இருக்கும். அவன் முற்பிறவியில் எப்படி பிறந்து, இறந்தானோ, அதைப் போலவே ஒரு புதிய பிறவியை தொடங்க வேண்டும். அந்த இடைவெளி எவ்வளவு நீண்டதாக இருந்தாலும், அவன் ஆரம்பத்தில் இருந்தே புதிய பிறவியைத் தொடங்கத்தான் வேண்டும். இந்த இடைப்பட்ட காலத்தில் எந்த முன்னேற்றமும் அந்த

ஆன்மாவுக்கு ஏற்படாது. ஒருவன், முந்தைய இரவில் படுத்துத்தூங்கிய அதே படுக்கையில், மறுபடியும் எழுந்திருப்பதைப் போலத்தான் இதுவும்.

ஆகவேதான், அனேக மதங்கள் தூக்கத்துக்கு எதிராகவே இயங்குகின்றன. ஏனென்றால், தூங்கும்பொழுது, அந்த முன்னேற்றத்துக்கும் வழி கிடையாது. ஆகவேதான், இந்த மதங்கள் தூக்கத்தின் நேரத்தை குறைக்கச் சொல்கின்றன. நீங்கள் தூங்கிய அதே படுக்கையில், அப்படியே எந்த உள் மாற்றமும் இல்லாமல், அப்படியே விழித்து எழுந்திருக்கிறீர்கள். அதேபோலத்தான், நீங்கள் இறக்கும் பொழுது எங்கே, எப்படி விட்டீர்களோ, அதிலிருந்து மறுபிறப்பை எடுக்கிறீர்கள். உங்கள் நிலையில் எந்த மாறுதலும் கிடையாது. அது எது போல என்றால், இதோ என் கடிகாரத்தை இப்பொழுது நிறுத்துகிறேன்; மீண்டும் அதைத் தொடங்க ஆரம்பித்தால், எங்கே அதை நிறுத்தினேனோ, அங்கேயிருந்து தான் அது மறுபடியும் தொடங்க ஆரம்பிக்கும்.

ஆகவே, இரண்டு பிறவிகளுக்கு இடையே உள்ள காலத்தில், எல்லா முன்னேற்றமும் தடைபட்டு விடுகின்றன. ஆகவேதான், மோட்சநிலையில் இருக்கும், எந்த தேவதாசுக்கும் எந்த விடுதலையோ அல்லது விமோசனமோ கிடையாது. ஏனென்றால், அங்கு செயலே கிடையாது. அங்கு எந்த ஆன்மாவும் எதுவும் செய்வதில்லை; செய்யவும் முடியாது. அங்கே முடிவில்லாத கனவுகள் மாத்திரம்தான் உண்டு. ஆகவே, ஒரு ஆன்மா எதையாவது செய்ய, இந்த உலகத்தில் மறுபடியும் பிறவி எடுக்க வேண்டும். இது தவிர்க்க முடியாதது.

அடுத்து, இரண்டு ஆன்மாக்கள் ஒன்றை ஒன்று அறிந்து கொள்வது பற்றி: அவைகள் சந்தித்துக் கொள்ள விரும்பினால், அவைகள் இரண்டு உடல்களை எடுத்துதான் சந்தித்துக் கொள்ள முடியும். அந்த ஆன்மா நிலையில், நேரடியாக ஒன்றோடு ஒன்று தொடர்பு கொள்ள முடியாது. இந்த அறையில், எப்படி 20 பேர்கள் தூங்குகிறார்களோ, அதைப் போலத்தான் இதுவும். அவர்கள் எல்லோரும் இந்த முழு இரவில், இந்த அறையிலேயே தூங்கும் நிலையிலேதான் இருப்பார்கள்.

அப்பொழுது ஒருவரை ஒருவர் அறிந்துகொள்ள முடியாது. அவர்கள் விழித்து எழுந்த பிறகுதான், ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ள முடியும்.

நாம் எழுந்தபிறகு, ஒருவரை ஒருவர் அறிந்து கொள்வது தொடர்ந்து நடைபெறலாம். தூக்க நிலையில், இது சாத்யம் இல்லை. ஆனால், ஒருவர் விழித்து எழுந்தால், மற்றவர்கள் தூங்குவதை அவரால் பார்க்க முடியும் இதன் அர்த்தம் என்னவென்றால், ஒரு ஆன்மா, ஒரு உடலுக்குள் சென்றால், அந்த ஆன்மா, மற்றைய ஆன்மாக்களைப் பார்க்க முடியும். ஆனால், தூங்கும் நிலையில் உள்ள மற்ற ஆன்மாக்கள், இந்த உடலை எடுத்த ஆன்மாவைப் பார்க்க முடியாது.

ஆகவே, உடலற்ற ஆன்மாக்கள் ஒன்றை ஒன்று அறிந்து கொள்ள முடியாது. உண்மையில், ஒன்றை ஒன்று தெரிந்து, அறிந்து கொள்ளுதல் என்பது, உடலில் உள்ள மூளையால்தான் நடைபெறுகிறது. ஆகவே, உடல் இறக்கும்பொழுது, அத்துடன் சேர்ந்து மூளையும் இறக்கிறது. பிறகு ஆன்மாவால் தனித்து இயங்க முடியாது.

ஆனால் வேறு சில சாத்யக்கூறுகளும் உண்டு. சில பேர்கள், தாங்கள் வாழும்பொழுது, சில பரிசோதனைகளைச் செய்து பார்க்கலாம். அதாவது, உணர்வு அலைகளால், மூளையின் உதவியின்றி, ஆன்மாக்களுடன் ஒருவர் தொடர்பு கொள்ளலாம். இதில் வெற்றி பெற்ற வர்கள், அதாவது இந்தக் கலையை நன்றாகக் கற்றவர்கள், கெட்ட ஆன்மாக் களுடனும், மற்றும் நல்ல ஆன்மாக்களுடனும் தொடர்பு கொள்ள முடியும். ஆனால் இப்படிப்பட்டவர்கள், ஒரு சிலர் தான் இருக்க முடியும். எல்லோராலேயும், இதை செய்ய முடியாது. அப்பொழுது அந்தச் சில ஆன்மாக்கள், ஆன்மா உலகத்து நிலைகளைப் பற்றி நமக்குக் கூற முடியும்.

அது எப்படி உள்ளது என்றால் 20பேர்கள் குடித்துவிட்டு பிரக்ஞையற்று இருக்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். ஆனால் அவர்களில் ஒருவன், நீண்ட காலமாகக் குடிப்பதால், அவனுக்கு ஓரளவு பிரக்ஞை உணர்வு இருக்கிறது. இப்பொழுது அவனால், குடியின் அனுபவத்தைப் பிறருக்கு எடுத்துச் சொல்ல முடியும். இப்படி மற்றவர்களால் முடியாது. ஏனெனில், அந்த அனுபவத்தை அறியும் முன்பே, அவர்கள் பிரக்ஞை இழந்து விட்டார்கள்.

இந்த உலகத்தில், இதற்கென்றே சில அமைப்புகள் இருக்கின்றன. அவைகள், இறந்த பிறகு உள்ள ஆன்மா உலகத்தைப பற்றி அறிந்துகொள்ள சில பேர்களை தயார் செய்கிறார்கள். அவர்களால், அங்கு தொடர்பு கொள்ள முடியும். உதாரணமாக, லண்டனில் உள்ள சர் ஆலிவர் லாட்ஜ் (SIR OLIVER LODGE) தான் இறந்தபிறகு, ஒரு செய்தியை இங்கு அறிவிக்க நெடுநாட்கள் முயன்றார்; ஆனால் முடியவில்லை. சுமார் 20 வருடமாக முயற்சி செய்து, எந்தச் செய்தியையும் இங்கு தொடர்பு கொண்டு, அறிவிக்க முடியவில்லை. இதை, வேறு சில ஆன்மாக்கள் தெரிவித்தன. அதாவது ஆலிவர் லாட்ஜ் எவ்வளவோ முயற்சி செய்தும், அவரால் இங்கு தொடர்பு முடியவில்லை என்று.

ஆகவே, இருபது வருடகாலமாக, தான் இறந்தபிறகு, செய்திகளை அறிவிப்பதாக சத்தியம் செய்து கொடுத்த மக்களின் கதவுகளை தட்டியவாறுதான் இருந்தார். ஆனால் அவர்களோடு, அவர் தொடர்பு கொள்ள முடியவில்லை. இதற்காக அந்த அமைப்பு, அவரை தயார்படுத்தி இருந்தன. அதாவது அவருடைய நண்பர்களை, அவர்களுடைய தூக்கத்திலிருந்து எழுப்புவதற்காக, அவர் முயற்சி செய்ததுபோல் இருந்தது. ஆனால், ஆலிவர் தங்கள் பக்கத்தில் உட்கார்ந்து இருப்பது போலத்தான் அவர்கள் உணர்ந்தார்கள். ஆனால், யாரும் ஆலிவருடைய செய்தியை வாங்கும் அளவுக்கு தயார் நிலையில் இல்லை.

ஆலிவர் இறந்து, இங்கு உள்ளவர்களோடு தொடர்பு கொள்ள தயாராகி, 20 வருடமாக தொடர்ந்து முயற்சி செய்தார். ஆனால், இறந்தவரின் மொழியைப் புரிந்துகொள்ள, யாரும் தயாராக இல்லை. வீதியில் செல்லும்பொழுது, அவருடைய நண்பர்கள், ஆலிவரின் கைகள், அவர்களின் தோள்மேல் படுவதை அடிக்கடி உணர்ந்திருக் கிறார்கள். அது, ஆலிவருடைய கைகள்தான் என்று அவர்கள் நன்றாக உணர்ந்தார்கள். ஆனால், அவர் அவர்களுடன் பேச முயன்றபொழுது, அவர்களிடம் ஏற்பட்ட அந்தக் கைகளின் உணர்வு மறைந்துவிட்டது. இதனால், அவருடைய நண்பர்கள் மிகவும் வேதனையடைந்தார்கள். ஆகவே, ஆலிவரின் திரும்பத் திரும்ப செய்த பெருமுயற்சி, தோல்வியைத்தான் தழுவின.

இதற்குத் தயாரித்தல் என்பது இரண்டு விதமானது. ஒருவரிடம் இயற்கையாகவே உணர்வு மூலம், இந்த அனுபவம் ஏற்படலாம். மற்றவர்கள், வார்த்தைகள் இல்லாமல், தங்கள் எண்ணங்களை வெளிப்படுத்த, பயிற்சி எடுத்துக் கொள்ளலாம். ஒருவரிடம் தன் கண்களை மூடிக்கொண்டு, தொலை தூரத்தில் உள்ளதைப் பார்க்கும் திறன் இருந்தால், அந்த ஆன்மிக உலகத்தைப் பற்றிய பல விஷயங்களை அவர்கள் தெரிந்துகொள்ள முடியும்.

அறிந்து கொள்தல் என்பது, உடல் ரீதியாக மட்டும் சார்ந்தது அல்ல. உதாரணமாக, ஒரு தோட்டத்துக்கு, ஒரு தாவர இயல் படித்தவர், ஒரு கவிஞன், ஒரு கடைக்காரன் மற்றும் ஒரு குழந்தை செல்வதாக வைத்துக் கொள்வோம். அந்தக் குழந்தை, பலவர்ணங்களையுடைய பூச்சிகளின் பின்னால் ஓடும். கடைக்காரன், அங்கு தன் கடையைப் பற்றியே நினைத்துக்கொண்டு இருப்பான். கவிஞன், மலர்களைப் பார்த்ததும், கற்பனையில் மிதந்து கவிகளை புனைய ஆரம்பிப்பான். அடுத்து தாவரவியல் படித்தவர், மரங்களைப் பற்றிப் பல விஷயங்களை ஆராய ஆரம்பித்துவிடுவார்.

ஆகவே, அந்தக் கடைக்காரன், மலர்களையோ மற்றும் கவிதை களையோ பார்க்கமாட்டான். தாவரவியல் படித்தவன், ஒவ்வொரு வேரையும், இலைகள், மலர்கள் என்று அனைத்தையும் ஆராயும் கண்களோடுப் பார்த்து, தான் 20 அல்லது 50 வருடமாக சேகரித்த விஷய ஞானத்தோடு ஒப்பிட்டுப் பார்ப்பான். அப்படி அவன் பார்ப்பதை, மற்றவர்களால் பார்க்க முடியாது. அதைப் போல, தன் உடலைத் தவிர, வேறு எதையும் அறியாதவர்கள் இறந்தால், மற்ற உலகத்தைப் பற்றி அவர்களால் அறிந்துகொள்ளமுடியாது. மற்றும் அவர்களால் அடுத்த உலகத்தோடு தொடர்பு கொள்ளவும் முடியாது. அவர்கள், ஆழமான பிரக்ஞையற்றத் தன்மையில், கோமா (COMA) நிலையில் இறந்து, ஒரு புதிய பிறவியை எதிர்ப்பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஆனால், முன்பே தகுந்த ஏற்பாடு செய்தவர்கள், ஏதாவது அந்த உலகத்தைப்பற்றிப் புரிந்து கொள்ள முடியும். அப்படித் தயார் செய்வதற்கு, தகுந்த பழைய ஏடுகள் இருக்கின்றன.

ஒருவர், தன்னுடைய இறப்புக்கு முன்பு, விஞ்ஞான ரீதியாக தகுந்த ஏற்பாட்டுடன், சொல்லிய முறைகளைக் கடைப்பிடித்து, தான் இறந்தபிறகு என்ன செய்ய வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு இறந்தால், அவர்களால் ஏதாவது தங்கள் எண்ணப்படி செய்ய முடியும். அந்த அற்புதமான அனுபவத்துக்கு, வழிகள் இருக்கின்றன. ஆனால், ஒருவன் சாதாரணமாக இருந்தால், அவன் உடனே மறுபிறவி எடுத்து விடுவான் அல்லது சில வருடங்கள் கழித்து எடுத்து விடுவான். அப்பொழுது, பிறவிகளுக்கிடையே உள்ள அந்த இடைவெளியைப் பற்றி, அவனால் எதையும் அறிந்து கொள்ளமுடியாது. ஆகவேதான், நேரடியான தொடர்புக்கு, எந்த வழியும் இல்லாமல் இருக்கிறது.

*''சில சமயம், நீங்கள் அவசரப்படுவது போல, நான் உணர்கிறேன். அந்த அவசரம் என்ன, எதற்காக? என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால், நீங்கள் மிகவும் அவசரப் படுகிறீர்கள் என்பது நீங்கள், உங்களுடைய சில சீடர்களுக்கு எழுதிய கடிதத்திலிருந்து தெளிவாகிறது.*

*மேலும், நீங்கள் இந்த உலகத்தில் பிறவி எடுத்த நோக்கம் நிறைவேறிவிட்டதா என்ற கேள்வியும் எழுகிறது. அப்படி அந்த வேலை முடிந்து விட்டால், நீங்கள் ஏற்கெனவே சொன்னபடி, நீங்கள் அந்த அறிக்கையை விளக்கிச் சொல்வீர்களா? அதாவது, நீங்கள் கிராமம், கிராமமாகச் சென்று, மக்களுக்காக வாதாடுவேன் என்றும், அப்பொழுது சந்தர்ப்பவசமாக, விளக்காக மாறக்கூடிய கண்களை, நீங்கள் சந்தித்தால், நீங்கள் அந்த மனிதர்களிடம் உள்ளும் புறமும் ஆக்கிரமித்து செயல்படுவேன் என்றும் கூறியிருக்கிறீர்கள். நீங்கள் மேலும் சொன்னதாவது, நீங்கள் இந்த வேலையை செய்வதற்குக் காரணம், நீங்கள் மரணத்தை எதிர்நோக்கி இருக்கும்பொழுது, நீங்கள் ''நான் ஒரு 100 பேர்களைத் தேடினேன். ஆனால் தகுந்த ஆள் யாரும் கிடைக்கவில்லை'' என்று கூறத் தேவையிருக்காது என்றும் கூறினீர்கள். இவைகளைக் கொஞ்சம் விளக்க முடியுமா?''*

ஆமாம். நான் அவசரம்தான் படுகிறேன். அதற்கு மூன்று காரணங்கள் உண்டு. முதலில், ஒருவருக்கு எவ்வளவு நேரம் இருந்தாலும், அது அவர்களுக்குப் போதவில்லை என்றே உணர்வார்கள். எவ்வளவு நீண்டகாலமும், சக்தியும் எப்பொழுதும் போதவில்லை என்றே தோன்றும். ஏனென்றால், அவர்கள் செய்ய வேண்டிய வேலை, கடல் போல் பரந்து கிடக்கிறது. ஆனால், அவர்களிடம் உள்ள நேரமும், சக்தியும் அவர்கள் செய்ய வேண்டிய கடல்அளவு வேலையில், கையளவுக்கு மேல் இல்லை என்பதை அவர்கள் உணரவே செய்வார்கள்.

ஆனால், இந்த அவசரம் சாதாரணமாக ஏற்படுவதுதான். வேறு ஒரு காரணத்திற்காகாவும், இப்படி ஒரு அவசரம் ஏற்படக் கூடும். சில காலகட்டங்கள், மெதுவாக நகரும்; அப்பொழுது காலம் நகராமல், அப்படியே இருப்பது போலத் தோன்றும். உதாரணமாக, நாம் நம்முடைய சரித்திரத்தை பின் நோக்கிப் பார்த்தால், காலம் மிக மெதுவாகச் செல்வதுபோலத் தோன்றும். சில காலகட்டங்கள் வேகமாகச் செல்லும் அப்பொழுது எல்லாமே மிக வேகமாகச் செல்லுவது போலத் தோன்றும். இன்றைக்கு, நாம் மிக வேகமாக இயங்கும் காலகட்டத்தில் இருக்கிறோம். எல்லாமே மிக வேகமாகச் சென்று கொண்டு இருக்கின்றன. எதுவும் நிலையாக இருப்பதுபோலத் தோன்றவில்லை. ஆகவே மதம் பழைய காலம்போல மிக மெதுவாக இயங்கினால், அது மிகவும் பின்தங்கி, கடைசியில் இறந்தே போய்விடும்.

பழங்காலத்தில், விஞ்ஞானம்கூட மெதுவாகவே சென்றது. சுமார் 10,000 வருடங்களாக, அதே மாட்டு வண்டிதான் இருந்தது! அதைப் போல இரும்புக்கருவிகளைச் செய்பவர்களும், அப்படியேதான் இருந்தார்கள். சாதாரண ஒரே அளவில் இருக்கும் ஆற்றில், எப்படி நீர் மிக மெதுவாக நகருமோ, அதைப் போல எல்லாமே நகர்ந்தன. அப்பொழுது எதுவும் நகருவதுபோல, உங்களால் உணர முடியாது.

அந்தக் காலகட்டத்தில், மதமும் மெல்லத்தான் நகர்ந்தது. அந்த நகருதலில், ஒரு லயம் இருந்தது. அடுத்து, விஞ்ஞானமும், மதமும் ஒன்றை ஒன்று அனுசரித்து மெல்லவே நகர்ந்தன. ஆனால்,

இப்பொழுதோ மதம் மெல்ல நகருகிறது; மாறாக விஞ்ஞானமும் தொழில்நுட்பமும் மிக வேகமாக ஒடிக்கொண்டு இருக்கின்றன. இந்த சூழ்நிலையில், மதம் மெதுவாக நடந்து பின்தங்கிவிட்டதால், மக்கள் அனுசரித்து ச் செல்லாதது ஒரு பெரிய ஆச்சரியம் இல்லை. இந்த காரணத்திற்காகவும், அவசரப்பட வேண்டியுள்ளது.

உலக விஷயஞானம் மிகவும் அதிகரித்துக் கொண்டே போகிறது. ஆகவே, விஞ்ஞானமும் மிகவேகமாகச் சென்று கொண்டு இருக்கிறது. ஏனெனில், விஞ்ஞானம் உலகப்பொருள்களைப் பற்றியே அமைந் திருக்கிறது. இந்த நிலையில், மதம் அதைவிட வேகமாகச் சென்று, விஞ்ஞானத்துக்குப் பின்னாலே தங்கிவிட்டால், அது இந்த உலகத்திற்குப் பெரிய கெடுதலை ஏற்படுத்திவிடும். உலகத்தை வழிநடத்திச் செல்ல, மதம் விஞ்ஞானத்துக்குச் சற்று முன்னாலேயே எப்பொழுதும் இருக்க வேண்டும். அப்பொழுது அது, இந்த உலகத்தை வழிநடத்திச் செல்ல முடியும். ஒரு ஒழுக்க நியதி, எப்பொழுதும் முன்னாலேயே இருக்க வேண்டும். இல்லாவிட்டால், அது, தன் அர்த்தத்தை இழந்துவிடும். வெற்றிக்கு முன்பு, ஒழுக்க நியதி இருக்க வேண்டும். அது எப்பொழுதும் வெற்றியைக் கடந்தே இருக்க வேண்டும். இந்த இரண்டுக்கும் உள்ள அடிப்படை வித்தியாசம் இதுதான்.

நாம், ராமன் காலத்தைப் பார்த்தால், மதம்தான் எல்லாவற்றுக்கும் முந்தி இருந்தது தெரியவரும். ஆனால், இந்த நவீன காலத்தில், மதத்துக்கு முன்பு மனிதன் தான் எப்பொழுதும் நிற்கிறான்! இந்தக் காலத்தில், யார் மிகவும் பின்தங்கிய நிலையில் இருக்கிறானோ, அவன் தான் மதத்தன்மையுடையவனாக இருக்கிறான். இதற்குக் காரணமும் இருக்கின்றன. அதாவது, இதைப் போல உள்ளவர்கள்தான், மதத்தோடு இணைந்து செயல்பட முடிகிறது. இன்றைக்கு, ஒருவன் எந்த அளவுக்கு முன்னேற்றத்தில் இருக்கிறானோ, அந்த அளவுக்கு, அவன் மதத்திலிருந்து வெகுதூரத்தில் இருக்கிறான். அல்லது அவனுடைய மதத்தோடு சம்மந்தப்பட்ட உறவு மிகவும் மேலோட்டமாக, ஒரு சடங்காகவே இருக்கும். ஆகவேதான், மதம் எப்பொழுதும் எல்லா வற்றிற்கும் முன்பு இருக்க வேண்டும் என்று மீண்டும் கூறுகிறேன்.

நாம், மஹாவீரா அல்லது புத்தா காலத்தை, சற்று பின்நோக்கிப் பார்த்தால், அப்பொழுது உள்ள மிகச்சிறந்த அறிவாளிகள் எல்லாம் மிகுந்த மதத்தன்மை வாய்ந்தவர்களாகவே இருந்தார்கள் என்பதை அறிந்து, நாம் மிகவும் ஆச்சரியப்பட்டுப் போவோம். ஆனால், இந்த நவீன நாகரீகக் காலத்தில்; குறைந்த அறிவு உள்ளவர்கள்தான், மதத்தின் பக்கம் செல்கிறார்கள். அந்தக் காலத்தில், தலைவர்களும், மற்றும் மேலான நிலையில் உள்ளவர்களும், மதத்தன்மை வாய்ந்தவர்களாகவே இருந்தார்கள். ஆனால், இப்பொழுதோ, அறிவில் குறைந்தவர்களும், கிராமத்து பின்தங்கிய நிலையில் உள்ளவர்களும்தான் மதத்தை நாடுகிறார்கள். மிகச்சிறந்த அறிவாளிகள், இந்தக் காலத்தில் மதத் தன்மையுடையவர்களாக இல்லை. இதற்கு அர்த்தம் என்னவென்றால், மனிதனுக்கு முன்பு, மதம் நடைபோடவில்லை. இந்த காரணத்திற் காகவும், நான் அவசரப்படுகிறேன்.

நான் அவசரப்படுவதற்கு அடுத்த காரணம் என்னவென்றால், இந்த நவீன காலம் மிகவும் பரபரப்பாகவும், உச்ச நிலையிலும் இருக்கிறது. உதாரணமாக, நீங்கள் ஒரு ஆஸ்பத்திரிக்குச் சென்றால், உங்கள் காலடியின் வேகம், நீங்கள் ஒரு கடைக்குச் செல்லும் வேகத்தைக் காட்டிலும் மிகவும் அதிகமாகவே இருக்கும். நீங்கள் ஒரு ஆஸ்பத்திரிக்கு, மிகவும் பரபரப்போடு செல்கிறீர்கள். இப்பொழுது உள்ள யதார்த்த நிலைமை என்னவென்றால், ஏதாவது ஒரு மதம், மிகவும் வீறுகொண்டு முன்னேறிச் செல்லாவிட்டால், இந்த முழு மனித இனமே அழிந்துவிடக்கூடிய அபாய கட்டம் ஏற்பட்டுவிடும்.

இது ஒரு அவசர காலம்; அதாவது ஒருவனைச் சீக்கிரமாக ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டிய நிலையில் இருப்பதுபோல. அந்த வியாதியால் தான் ஆஸ்பத்திரியை அடைவதற்கு முன்பே, இறக்க நேரிடலாம் அல்லது மருந்து கொடுப்பதற்கு முன்பே இறக்க நேரிடலாம் அல்லது அவனுக்கு இருக்கும் வியாதியை கண்டுபிடிப்பதற்கு முன்பே இறக்க நேரிடலாம். இதைப் போல, இப்பொழுது உள்ள கெடுதலான சூழ்நிலை அல்லது நிகழ்ச்சிகள், மதத்தன்மையுடைய எண்ணங்கள் நிரம்பியவர்களை தாக்குவது இல்லை. அதற்குப் பதிலாக, அது இந்த

உலகத்தில் உள்ள இளம் தலைமுறையினரை தாக்குகிறது. முக்கியமாக, முன்னேற்றமடைந்த நாடுகளில் உள்ள இளைஞர்களை அது மிகவும் பாதிக்கிறது.

தன் மகனிடம், ஒரு அமெரிக்கத் தம்பதியர், ஒரு பல்கலைக்கழகத்தில் சேர்ந்து 10 வருடம் படித்தால், அவனுக்கு நல்ல வேலை கிடைக்கும் என்று கூறினால், அதற்கு அவன், தான் 10 வருடம் வாழ முடியும் என்பதற்கு என்ன உத்திரவாதம் என்று திருப்பிக் கேட்பான். இதற்கு அவர்கள் என்ன பதில் சொல்வது. அமெரிக்காவில், நாளையைப் பற்றிய நம்பிக்கை மிகவும் குறைவாகவே உள்ளது. நாளை வருமா என்பதே அவர்களுக்குச் சந்தேகமாக உள்ளது. ஆகவே, அவர்கள் இன்றைக்கே, தன்னால் எவ்வளவு அனுபவிக்கமுடியுமோ, அவ்வளவு அனுபவித்துவிடவேண்டும் என்று துடிக்கிறார்கள்.

இது எப்படி இருக்கிறது என்றால், ஆஸ்பத்திரியில் படுக்கையில் உள்ள ஒரு வியாதியஸ்தன், எந்த நேரத்திலும் இறக்கலாம் என்ற நிலையில் ஏற்படும் பரபரப்பு போலத்தான். ஏன், இந்த மனிதவர்க்கமே, இப்பொழுது அப்படித்தான் இருக்கிறது. எங்கும், எதிலும் ஒரு பரபரப்பு, மற்றும் படபடப்பு காணப்படுகிறது. ஏனென்றால், வியாதியைச் சரியாகக் கண்டுபிடிப்பதற்கு தாமதமானால், அதிலிருந்து மீள்வது என்பது சீக்கிரம் நடைபெறாமல் போகலாம். ஆகவேதான், நான் அவசரத்தில் இருக்கிறேன். செய்ய வேண்டிய அனைத்தையும், சீக்கிரம் செய்து முடிக்க வேண்டும்.

நான் ஒரு ஊரிலிருந்து, மறு ஊருக்குச் செல்வதைப் பற்றி, இப்பொழுது கூறுகிறேன். நான் இந்த வேலையை ஏற்கனவே ஆரம்பித்துவிட்டேன். நான் சில பேர்களை என் மனத்தில் வைத்திருக்கிறேன். அவர்களிடம், நான் ஆன்மிக வேலைகளைச் செய்யவேண்டும். ஆனால், அதில் உள்ள கஷ்டம் என்னவென்றால், நான் அவர்களைத்தான் எண்ணிக்கொண்டிருக்கிறேன். அதற்கு மாறாக, அவர்கள் என்னை அவர்களது மனத்தில் வைத்துக் கொண்டால், வேலை சுலபமாக முடிந்துவிடும். நான் அவர்களுடைய மனத்தில் இருக்காத வரையில், என்னால் உருப்படியாக எதையும் செய்ய முடியாது.

ஆனால், நான் இந்த வேலையையும் ஆரம்பித்துவிட்டேன். நான் பல ஊர்களுக்குச் செல்வதும், வருவதும் மற்றும் அங்கே தங்குவதும், அவர்களிடம் ஏதாவது செய்வதற்காகத்தான். அப்படிச் சில பேர்களைத் தயாரித்து இரண்டு வருடங்களுக்குப் பிறகு, அவர்களை பல ஊர்களுக்கு அனுப்ப விரும்புகிறேன். அவர்கள் செல்வார்கள். அப்படி 100 பேர்கள் அல்ல; 10,000 பேர்கள் தயாரிக்கப்படுவார்கள். இந்தப் பரபரப்பான, இறுக்கமான சூழ்நிலையில், வித்தியாசமான சக்திபரவல் காணப்படுகிறது. இதனால், அவர்கள் பல அபாயங்களைச் சந்திக்க நேரிடலாம். இந்தக் காலகட்டத்தை, அவர்கள் தைரியமாக, சரியான முறையில் உபயோகித்தால், ஒரு பெரிய ஆன்மிக மறுமலர்ச்சி ஏற்படும். இல்லாவிட்டால், விளைவு மிகவும் மோசமானதாகவே இருக்கும்.

அந்த அறியாதவற்றில் குதிக்க, அநேகம் பேர்களைத் தயாரிக்க முடியும். இந்தக் காலத்துக்கு அது தேவைதான். அது நடக்கத்தான் போகிறது. பொருள்களின் மேலோட்டமான தன்மைகளைப் பற்றி ஏற்கெனவே கூறியிருக்கிறேன். ஆனால் அழிவின் காலம் எப்பொழுதாவது நெருங்கினால், அநேக ஆன்மாக்கள், தங்களுடைய உள் பரிமாணத்தில், கடைசிக் கட்ட வளர்ச்சியை விரைவில் அடைந்துவிடும். அப்படிப்பட்ட ஆன்மாக்களுக்குத் தேவை ஒரு சிறிய தள்ளுதல் அல்லது தூண்டுதல்தான்; அப்பொழுது ஒரே குதியில் (JUMP) அடுத்த நிலையை அடைந்து விடும்.

சாதாரணமாக இறப்பு தன்னை நெருங்கி வருவதை ஒருவர் உணரும்பொழுது, அவர் இறப்புக்குப் பிறகு என்ன என்பதை நினைக்க ஆரம்பித்துவிடுவார். அப்பொழுது, ஒவ்வொருவரும் மதத்தன்மை யுடையவராக மாற ஆரம்பித்து விடுவார்கள். இறப்புக்குப் பிறகு, தங்களுடைய நிலை என்ன என்ற கேள்வியை அவர்கள் எழுப்பியவாறே இருப்பார்கள். இல்லாவிட்டால், இந்தக் கேள்வியே எழும்பாத வகையில், அவர்களுடைய வாழ்க்கை, இந்த வேளையில், மில்லியன் கணக்கான மக்கள், இறப்புக்கு அப்பால் என்ன என்பது பற்றி மனத்தளவில் மிகவும் தீவிரமாக எண்ண ஆரம்பித்துவிடுவார்கள். இந்த சூழ்நிலையைத் தகுந்த முறையில் உபயோகித்துக் கொள்ளலாம். அது, அப்பொழுது மிகவும் சக்தி வாய்ந்ததாக இருக்கிறது.

ஆகவேதான், நான் மெல்ல இந்த அறைக்குள்ளேயே என்னை அடைத்துக்கொண்டு விடுவேன். நான் வெளியே செல்வதையும், வருதையும் நிறுத்திக்கொண்டு விடுவேன். இப்பொழுது, என் மனத்தில் உள்ள சிலருக்காக, நான் வேலை செய்வேன். நான் அவர்களைத் தயார் செய்து, வெளியே அனுப்பி விடுவேன். ஒரு இடத்திலிருந்து, வேறு இடத்துக்கு என்னால் போகமுடியாத நிலையில், இந்த 10,000 பேர்களை அனுப்பி வைப்பேன்.

என்னைப் பொருத்தவரையில், மதம் கூட விஞ்ஞானரீதியானதே என்று கருதுகிறேன். ஆகவே, என் மனத்தில் முழுமையான விஞ்ஞான ரீதியான முறைகள் அதற்காக இருக்கின்றன. மக்கள் தயார் நிலையில் இருக்கும்பொழுது, நான் அவைகளை அவர்களிடம் செலுத்துவேன். அந்த முறைகளின் உதவியால், அவர்கள் மேலும் ஆயிரக்கணக்கான மக்களிடம் வேலை செய்வார்கள். என்னுடைய உதவி, பிறகு அவர்களுக்குத் தேவையில்லை. இந்த வேலையை ஏற்று செய்யக்கூடியவர்களை தேர்ந்தெடுத்து, அவர்களை தயார் செய்யும் அளவுக்குத்தான் நான் தேவைப்படுகிறேன்.

இதற்காக, நான் சில கொள்கைகளை வகுக்க வேண்டியுள்ளது. இவைகளை, நான் ஏற்கெனவே செய்துவிட்டேன். ஒரு ஆன்மிக விஞ்ஞானியின் வேலை முடிந்து விட்டது. இப்பொழுது, அவைகள் செய்முறையாளர்களின் (TECHNICIANS) வேலைதான். எப்படி எடிசன் (EDISON) மின்சாரத்தின் உதவியால் மின்சார விளக்கைக் கண்டுபிடித்தாரோ, அதைப் போல ஒரு விஞ்ஞானியின் வேலை முடிந்துவிட்டது. இப்பொழுது, அந்த விளக்கை (BULB)ப் பொருத்துவது என்பது ஒரு செயல்முறையாளனின் வேலைதான். அது ஒன்றும் பெரிய காரியமில்லை.

இப்பொழுது, மேற்கொண்டு செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றிய முழுத்திட்டமும் என்னிடம் உள்ளது. இப்பொழுது அவைகளை, அந்தத் தேர்ந்தெடுத்தவர்களிடம் வழங்கி, அவர்களைத் தயார் செய்து, பிறகு நான் அவர்களை வெளியே அனுப்பிவிடுவேன். ஆனால், பெரும்பாலோர் அந்த முறைகளின் வெளித்தோற்றத்தில்தான் கவனம்

வைக்கிறார்கள். அவைகளின் உள் சக்தி பரிமாணத்தைக் காண்பது என்பது வேறு விதமானது. அதற்காகாவும், அவர்களை நான் தயார் செய்ய வேண்டும்.

பிஹாரில் உள்ள சிறிய பகுதியில், மஹாவீரா அல்லது புத்தாவின் காலத்துச் சூழ்நிலை, உலக அளவில் இன்னும் சில வருடங்களில், மிகவும் இயல்பாக மறுபடியும் ஏற்படலாம். ஆனால், முழுவதும் புதியதாக மதத்தன்மை வாய்ந்தவனையும், ஒரு புதிய சந்நியாசியையும், மற்றும் புதிய வகை யோக மற்றும் தியான முறைகளையும் தயாரித்து அளிக்க வேண்டும். அவைகள் எல்லாம் என்மனத்தில் தயாராகவே இருக்கின்றன.

நான் சந்திக்கும் தகுதியானர்வர்களிடம், இவைகள் அனைத்தும் அளிக்கப்படும். பிறகு அவைகள், அவர்களின் மூலமாகப் பிறருக்குச் செல்லும். ஆனால், இதில் பெருத்த அபாயமும் இருக்கிறது. ஏனென்றால், அந்தத் தகுதியான சந்தர்ப்பம் இழக்கப்பட்டு விட்டால், அது மிகுந்த கெடுதலை ஏற்படுத்தி விடும். அந்த அரிய சந்தர்ப்பத்தை சரியாக உபயோகப்படுத்த வேண்டும். ஏனெனில், அதைப் போன்ற சந்தர்ப்பம் மீண்டும் வருவது அரிது. இந்தக் காலத்தில், ஒவ்வொன்றும் அதன் உச்சத் தன்மையில் இருக்கிறது. ஆனால், இதற்கு பிறகு கீழ்நிலைதான் அல்லது அழிவுதான். இப்பொழுது அமெரிக்காவால் மேலும் முன்னேற முடியாது. ஏனெனில், அது அதன் உச்சத்தன்மையில் இருக்கிறது. இனிமேல் அது அழிவைநோக்கித்தான் செல்ல வேண்டும். அதன் நாகரிகம் உச்சத்தில் இருக்கிறது. இன்னும் சில வருடங்களில், அது அழிவை நோக்கிக் கண்டிப்பாகச் செல்லும்.

மஹாவீரா மற்றும் புத்தாவுக்குப் பிறகு, இந்தியா அழிந்ததை நாம் அறிகிறோம். அதற்குப் பிறகு, அந்த உயரிய காலகட்டத்தை, இந்தியா திரும்பவும் பெறவில்லை. இவைகளுக்கெல்லாம் மஹாவீராவும் புத்தாவும்தான் காரணம் என்று மக்கள் சாதாரணமாக நினைக்கிறார்கள். ஆனால், உண்மை நிலை இதற்கு முற்றிலும் மாறுபாடானது. அப்பொழுது, அழிவு ஆரம்பமாவதற்கு முன்பே, மஹாவீரா மற்றும் புத்தா போன்றவர்கள் தங்கள் வேலையைத் தொடங்கி

விட்டார்கள். அழிவுக்கு முன்பு, எல்லாமே ஒரு நல்லமுறையில் செயல்பட்டுக்கொண்டிருந்தன.

ஒரு தனி மனிதனை எப்படி இறப்பு நெருங்குகிறதோ, அதைப் போல ஒரு முழுமையான நாகரிகத்தின் திரண்ட பிரக்ஞைத் தன்மையிடம், இறப்பு தன் கருப்பு முகத்தைக் காட்டிக்கொண்டு இருக்கிறது. அந்த நாகரிகத்தின் திரண்ட பிரக்ஞைத்தன்மை, அறியாதவற்றிலும், மதத்தன்மையிலும் மிக ஆழமாகச் செல்லத் தயாராக இருக்கிறது. ஆகவேதான், பிஹார் போன்ற சிறிய இடத்தில், சுமார் 50,000 சந்நியாசிகள், மஹாவீராவுடன் செல்ல முடிந்தது.

இது மீண்டும் நிகழலாம். அதற்கான முழுமையான தருணம் நெருங்கிக் கொண்டு இருக்கிறது. அதற்கு ஏற்ற திட்டங்கள் மற்றும் முறைகள் அனைத்தும் என் மனத்தில் இருக்கின்றன. ஒருவகையில், எனக்குத்தேவையான ஆட்களைத் திரட்டுவது, கிட்டத்தட்ட முழுமை அடைந்துவிட்டது. ஆனால், இதைப்பற்றி, அவர்களுக்கு எதுவும் தெரியாது. இப்பொழுது, என் செய்திகளைப் பரப்ப, அவர்களிடம் என் வேலையைக் கொடுத்து, தயார் செய்து வெளியே அனுப்ப வேண்டியதுதான்.

அது என் வேலையாக இருப்பதால், நான் என்ன செய்ய வேண்டும் என்பது எனக்கு மிக நன்றாகத் தெரியும். அடுத்து, அந்த வேலைகளை, நான் எந்தவிதப் பரபரப்பும் இன்றி செய்துகொண்டுதான் வருகிறேன். ஆனால், இப்பொழுது அந்த வேலையை பிறருக்குக் கொடுக்க வேண்டியுள்ளது. ஆகவே, இப்பொழுது என்னால் ஓய்வுத்தன்மையில் இருக்க முடியாது. நான் இப்போது வேகமாக வேலை செய்ய வேண்டியுள்ளது. இதை நான் என்னுடைய நண்பர்களுக்கும், சீடர்களுக்கும் சொல்லி, அவர்களைத் தூண்ட வேண்டியிருக்கிறது. ஆனால், இப்பொழுது உள்ள வேகத்தை அவர்கள் தொடர்ந்தால், அவர்கள் எந்த இலக்கையும் அடைய முடியாது. இப்பொழுது அவர்கள், தங்கள் வேலையைத் துரிதப்படுத்த வேண்டும். நான் வேகமாக இயங்குவதைப் பார்த்தால், அவர்களும் அப்படி வேகமாக இயங்க முடியும். இல்லாவிட்டால் எதுவும் நடக்காது.

ஜீசஸ் இப்படித்தான் அவசரப்பட வேண்டியிருந்தது. இந்த உலகம் வெகுவிரைவில், அழியப் போகிறது என்று மக்களுக்கு எடுத்துரைத்து, அவசரப்படுத்தினார். ஆனால், மக்கள் அவரைப் புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு, அவர்கள் முட்டாள்தனமாகவே இருந்தார்கள். அவர்களது கண்களின் முன்னாலேயே, இந்த உலகம் அழியப் போகிறது என்றும், அதற்குள் மக்கள் ஏதாவது ஒரு வழிமுறையைத் தேர்ந்து எடுக்க வேண்டும் என்றும் மற்றும் மக்களுக்கு இந்தச் சந்தர்ப்பத்தை விட்டால், வேறு சந்தர்ப்பம் கிடைப்பது அரிது என்றும் ஜீசஸ் அடிக்கடி எச்சரித்தார். யார், அவரைக் கேட்டு, புரிந்து கொண்டு நடந்தார்களோ, அவர்களிடம் ஆன்மிக மாற்றம் ஏற்பட்டது. ஆனால், பெரும்பாலான மக்கள், அந்த நேரம் எப்பொழுது வரப் போகிறது என்றுதான் ஆவலுடன் கேட்டார்கள்!

இப்பொழுது, 2000 வருடங்களுக்குப் பிறகு, சில கிறிஸ்துவ அறிஞர்கள், பாதிரிமார்கள் மற்றும் மத வல்லுனர்கள் எல்லோரும் உட்கார்ந்து, ஜீசஸ் சில தவறுகளைச் செய்திருக்கிறார் என்று முடிவெடுத்தார்கள். ஏனென்றால், ஜீசஸ் அறிவித்த அந்தத் தீர்ப்பு நாள், அன்று வரை வரவேயில்லை. ஆனால், ஜீசஸ் அவர்களது கண்களுக்கு முன்னாலே, அந்த பேரழிவு நிகழ இருக்கிறது என்று பயமுறுத்தியிருக்கிறார். அந்தநாள் வெகு சீக்கிரம் வர இருக்கிறது என்றும், யார் அதைத் தவற விடுகிறார்களோ, அவர்கள் அதை மீண்டும் காண முடியாது என்று வேறு எச்சரித்திருக்கிறார். ஆனால், அந்த நாள் வரவே இல்லை!

இந்தத் தவற்றை ஜீசஸ்தான் செய்தாரா அல்லது நாம் தான் அவரைத் தவறுதலாகப் புரிந்து கொண்டு விட்டோமா? சில பேர்கள், அவர் அறியாது, இந்தப் பெரிய தவற்றை செய்துவிட்டார் என்று கூறினார்கள். ஆகவே, இதைப் போல பலவற்றை அவர் அறியாது இருக்கலாம் என்று அவர்கள் அபிப்பிராயப்பட்டார்கள். மற்றும் சிலர், அவருடைய அறிவிப்புகளை, நாம் தவறாகக் கருத்தில் கொண்டு விட்டோம் என்று கருதினார்கள். ஆனால், ஜீசஸ் போன்றவர்கள் சொன்னதில் ஆழமான காரணங்களும், அனுமானித்த செயல்பாடும் உண்டு என்று யாரும் புரிந்து கொள்ளவில்லை. இப்படி அவர் ஒரு வித உத்வேகத்துடன் செய்த அறிவிப்பு, ஒரு பரபரப்பான சூழ்நிலையை

ஏற்படுத்தியதால், அனேகம் பேர்கள் ஆன்மிக மாற்றங்களை அடைந்தார்கள்.

இப்படிப்பட்ட நெருக்கமான சூழ்நிலையில் தான், அதிகமான மக்கள் மாற்றங்களை அடைந்திருக்கிறார்கள். நாளையோ அல்லது நாளை மறுநாளோ மாற்றம் அடையலாம் என்ற நிலை இருந்தால், யாரும் இன்று எதையும் செய்ய மாட்டார்கள். அதை, அவர்கள் நாளை அல்லது நாளை மறுநாளுக்கு ஒத்திப் போட்டு விடுவார்கள். ஆனால், நாளை என்று எதுவும் கிடையாது என்று அவர்கள் அறிந்தால், அவர்களுக்கு மாற்றம் இன்றே நிகழலாம்.

ஒருவகையில், நாகரிகம் எப்பொழுது அழிவை நோக்கிச் சென்று கொண்டு இருக்கிறதோ, அப்பொழுது நாளை என்பது நிச்சயமில்லாதது தான். ஆகவே, எல்லாவற்றையும் இன்றே முடிக்கக் கூடிய சாத்யக்கூறுகள் மிகவும் அனுகூலமாகவே இருக்கின்றன. ஒருவன் ஆனந்தமாக இருக்க வேண்டுமானால், அதை இன்றே முழுமையாக அனுபவிக்க வேண்டும். ஒருவன் இன்றே சரணாகதியடைந்து, எல்லாவற்றையும் துறக்க வேண்டுமானால், அவைகளையும் ஒருவன் இன்றே செய்ய வேண்டும். அதைப் போல, ஒருவன் தன் அகங்காரத்தை விட்டு, ஆன்மிக மாற்றம் அடைய வேண்டுமானால், அதையும் இன்றே செய்ய வேண்டும்.

ஆகவேதான், ஐரோப்பா மற்றும் அமெரிக்காவில், ஒருவர் ஒன்றைச் செய்ய முடிவு செய்தால், அதை இன்றே செய்து முடிக்க வேண்டும் என்ற உறுதியான மனநிலையில் இருக்கிறார். ஏன், பெரும்பாலோர் அப்படித்தான் செயல்படுகிறார்கள்.

''நாளைய கவலையை விடுங்கள். நீங்கள் இன்று குடிக்க விரும்பினால், தாமதமில்லாமல் குடியுங்கள். நீங்கள் அனுபவிக்க விரும்பினால் அல்லது திருட விரும்பினால், இப்படி நீங்கள் நினைத்தவற்றை இன்றே செய்து முடியுங்கள்'' மேற்கண்டவாறுதான் பொதுவாக ஆதிக்கம் நிறைந்த இந்த உலகத்தில், பரவலாக நடக்கிறது.

இதைப் போல, உள் ஆன்மிக நிலையிலும், நடக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். பொருள் ஆதிக்கம் நிறைந்த வெளிஉலகத்தில்

நடப்பதுபோல, உள் ஆன்மிக நிலையிலும் சமமாக நடக்க முடியும். இந்த என்னுடைய கருத்தைப், பரவலாக்க, நான் மிகவும் அவசரப்படுகிறேன். இந்தக் கருத்து, கிழை நாட்டிலிருந்துதான் பரவும் என்பதில், நான் உறுதியாக இருக்கிறேன். மேலை நாட்டிற்கு, இந்தக் கிழை நாட்டுக் காற்றுதான் அதை எடுத்துச் செல்ல வேண்டும். அப்பொழுது மேற்கு, அதன் மேல் மிகத்தீவிரமாக ஈடுபடும்.

சில குறிப்பிட்ட விஷயங்கள், கிளம்பி வளர்வதற்கு ஏற்ற நிலையில், சில குறிப்பிட்ட இடங்கள் தான் இருக்கின்றன. எல்லா நாடுகளிலும், எல்லாவகையான மரங்களும் ஒரு போதும் வளராது. ஒரு சில மரங்களுக்கு, ஒரு குறிப்பிட்ட வேர்களும், குறிப்பிட்ட நிலமும், மற்றும் குறிப்பிட்ட தட்பவெட்பமும், நீரும் தேவை. அதைப்போல, எல்லா வகையான கருத்துகளும், எல்லா இடங்களிலும் ஏற்படாது. அதற்கும் சில குறிப்பிட்ட சூழ்நிலை, தட்பவெப்பம், வளம் பொருந்திய மண் எல்லாம் தேவைதான்.

விஞ்ஞானம், கிழை நாட்டில் வளர்ச்சியடையாது. அந்த மரம் வளருவதற்கு ஏற்ற வேர், கிழை நாட்டில் கிடையாது. கிழை நாடு மதங்கள் வளர்வதற்குத்தான் ஏற்றது. ஏனெனில் அவைகளின் வேர்கள் மிகவும் ஆழமாகவே இருக்கின்றன. அது மாத்திரமல்ல, அதற்குத் தேவையான மண்வளம், நீர், சீதோஷ்ண நிலை எல்லாம் கிழை நாட்டில் தான் இருக்கின்றன. கிழை நாட்டுக்கு விஞ்ஞானம் வரவேண்டு மென்றால், அது மேற்கிலிருந்து தான் வரவேண்டும். அதைப் போல, மேலை நாட்டுக்கு, மதம் செல்ல வேண்டுமானால், அது கிழை நாட்டிலிருந்துதான் செல்ல வேண்டும்.

சில சமயம், இதற்கு விதிவிலக்கும் உண்டு. உதாரணமாக, கிழை நாடுகளில் ஒன்றான ஜப்பான், விஞ்ஞானத்தில் மேலை நாடுகளுக்கு சவால் விட்டுக் கொண்டு இருக்கிறது. ஆனால், ஜப்பான் இதில் பெரும்பாலும் மேலை நாட்டை காப்பிதான் அடிக்கிறது. அது சுயமாக செய்வது மிகவும் குறைவுதான். ஆனால், அதனுடைய காப்பி (COPY)க்கு முன்னால், சுயமாயனது (ORIGINAL) எடுபடுவதே இல்லை! அந்த அளவுக்கு அதை அவர்கள் அவ்வளவு நேர்த்தியாகச் செய்கிறார்கள்.

இருந்தாலும், காப்பி காப்பிதான். ஜப்பான் எதையும் போற்றத்தகுந்த வகையில், சுயமாக கண்டுபிடிக்கவில்லை. ஜப்பான் ஒரு ரேடியோவைச் செய்தால், அது அமெரிக்க ரேடியோவைத் தோற்கடித்துவிடும். ஆனால், அதனுடைய அடிப்படை விஞ்ஞான தொழில்நுட்பம், மேற்கிலிருந்து காப்பி அடித்ததாகவே இருக்கும். காப்பி அடிப்பதில், ஜப்பானியர்கள் மிகவும் கெட்டிக்காரர்கள். ஆனால், அதனுடைய விதை, மேலை நாட்டிலிருந்துதான் வரவேண்டியுள்ளது. அந்த விதையை, ஜப்பான் தன் மண்ணில் விதைத்து, அதிலிருந்து வரும் செடியை மிகவும் அக்கரையுடன் பேணிக் காத்து வளர்க்கிறார்கள். இருந்தாலும், அந்த விதைக்கு, ஜப்பான் உரிமை கொண்டாட முடியாது.

இதைப் போல, அமெரிக்கா, மதத்தில் கீழை நாட்டை விட மிகவும் அலங்கோலமாகச் செய்து காண்பிக்கலாம். ஆனால், அது காப்பிதான். அதற்கு ஆரம்பம், அதாவது அதன் முதல் கட்டம் அல்லது அதன் விதை கீழை நாட்டில்தான் இருக்கிறது.

ஆகவேதான், கீழை நாட்டு மக்களை தகுந்த முறையில் தயார் செய்ய, நான் மிகவும் அவசரப்படுகிறேன். அப்பொழுதுதான், அவர்களை மேற்குக்கு அனுப்ப முடியும். அப்பொழுது, மேற்கில் அந்த ஆன்மீகத்தீ உடனே பற்றிக் கொண்டு பரவ ஆரம்பித்துவிடும். ஆனால், அந்தத் தீ, கிழக்கிலிருந்துதான் செல்ல வேண்டும்.



***''நீங்கள் ஆன்மிகத்தில் தீவிரமாக ஈடுபட, ஏதாவது உங்கள் வாழ்க்கையில் நிகழ்ந்திருக்கிறதா? அந்த அற்புதம் என்ன என்று கூறுவீர்களா?''***

அதைப் போல குறிப்பிடும்படியான நிகழ்ச்சிகள் எதுவும் என்னிடம் இல்லை. அநேக தடவைகள், பல நிகழ்ச்சிகள் நடந்து, ஒருவருடைய வாழ்க்கையில் மாற்றம் ஏற்படக் காரணமாக இருந்திருக்கும். அந்தப் பல தடவைகளின் நிகழ்ச்சிகள் கூட்டாக அவனிடம் பெருத்த மாறுதல்களை உண்டு பண்ணக் கூடும். ஆனால், என்னுடைய வாழ்க்கையில், அந்த மாற்றத்துக்கு இதுதான் காரணம் என்று எதையும் என்னால் குறிப்பிடமுடியாது. இருந்தாலும் பல நிகழ்ச்சிகளின் கூட்டுத்தன்மை, என் வாழ்க்கையின் மாற்றத்துக்குக் காரணமாக இருந்திருக்கலாம். ஆனால், அது எப்பொழுது நிகழ்ந்தது என்று என்னால் உறுதியாகத் தீர்மானிக்க முடியவில்லை. மேலும், நான் 'ஆன்மிகத்திற்கு மாறினேன்' என்று என்னால் ஒருக்காலும் நினைக்க முடியவில்லை! நான் ஆரம்பத்திலிருந்தே அந்தப் பாதையில் தான் சென்று கொண்டு இருந்தேன். நான் ஆன்மிகத்தைப் பற்றி நினைக்காத நாள் ஏதும் உண்டா என்று என்னால் ஞாபகப்படுத்திப் பார்க்க முடியவில்லை. என்னுடைய ஆரம்ப ஞாபகங்களோ, அதைப் பற்றியதாகவே இருந்தன என்று சொல்லலாம்.

மொத்தத்தில், என் வாழ்க்கையில் நடந்த பல நிகழ்ச்சிகளின் தொகுப்பு நிலையை கவனிக்க வேண்டியுள்ளது. மிகவும் முக்யத்வம் வாய்ந்த எந்தத் தனிப்பட்ட நிகழ்ச்சி எதுவும் என் ஞாபகத்துக்கு வரவில்லை. சாதாரணமாக, ஒரு வித்தியாசமான நிகழ்ச்சி சில சமயம் மனதைத் திடீரென்று மாற்றி விடும். ஆனால், அப்படித் திடீரென்று மாறிய மனம், திரும்பவும் பழைய நிலைக்கே வரலாம். ஆனால், பலவித நிகழ்ச்சிகளின் தொகுப்பால் அதில் மாற்றம் ஏற்பட்டது என்றால், அந்த மனம் பழைய நிலைக்கு பெரும்பாலும் திரும்பாது. ஏனென்றால், அந்த மாற்றம் மிக ஆழமாக பல மன அடுக்குகளில் ஊடுருவிச் செல்கிறது. ஒரு தள்ளுதலால், உங்களை ஒரு வழியில் நேரடியாகச் செலுத்தலாம். அதைப்போல அங்கிருந்து எதிர்த்திசையில் ஒரு தள்ளு தள்ளினால், நீங்கள் பழைய இடத்துக்கே வந்துவிடலாம்.

மேலும், ஒரே தள்ளுதல் என்பது எதிர்செயலுக்கு சுலபமாக வழி வகுக்கிறது. தள்ளும் தன்மை மறைந்த பிறகு, நீங்கள் இயல்பாக பழைய நிலைக்கே வந்து விடுகிறீர்கள். ஆனால், வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் மெதுவாகவும், ஒரே அளவில் சீராகவும் நடைபெற்றால், நீங்கள் ஒரு நிலையான தன்மைக்கு வந்து விடுகிறீர்கள். அப்பொழுது, நீங்கள் எப்படி உங்களால் அந்த நிலைக்கு வரமுடிந்தது என்று கூட நீங்கள் ஆச்சரியப்படலாம். இந்த நிலையிலிருந்து திரும்பி, மீண்டும் பழைய நிலைக்கு உங்களால் வரமுடியாது. ஏனென்றால், அந்தத் தன்மை இப்பொழுது உங்கள் ஆன்மாவோடு இரண்டறக் கலந்து விட்டது.

இருந்தாலும், ஒரே ஒரு சம்பவம் மட்டும் என் ஞாபகத்துக்கு வருகிறது. அது ஒரு இறப்பைப் பற்றியது. அப்பொழுது அதை நான் எப்படி எதிர்கொண்டேன், அன்று என்ன நினைத்தேன் என்று என்னால் உறுதியாகக் கூற முடியாது. என்னுடைய இளமைப் பருவம், என்னுடைய தாய்வழிப் பாட்டன்-பாட்டி வீட்டில்தான் நடந்தது. நான் அவர்கள் மேல் வைத்த அன்பு மிகவும் புனிதமானது. அந்த நாட்களில், நான் என் பெற்றோர்களோடு வசிக்கவில்லை.

அவர்களுக்கு என் தாயார் தான் ஒரே குழந்தை. என் தாயாருக்குப் பிறகு, அவர்கள் மிகவும் தனிமையை உணர்ந்தார்கள். ஆகவேதான், என்னைக் கொண்டு வந்து, தங்களுடன் வைத்து வளர்க்க ஆரம்பித்தார்கள். நான் அவர்களுடன், 7 வயது வரை வளர்ந்தேன். நான் அவர்களைத்தான் என் பெற்றோர்களாகக் கருதி வந்தேன். அவர்கள் பணக்காரர்களாகவும், எல்லா வித வசதிகள் படைத்தவர்களாகவும் இருந்தார்கள். ஆகவே, நான் அங்கு ஒரு அரச குமாரனைப் போல வளர்ந்தேன். அவர்கள் இறந்த பிறகுதான், நான் என் சொந்தப் பெற்றோர்களோடு நெருங்கி வாழும் வாய்ப்புக் கிடைத்தது. அவர்களுடைய இறப்பு மற்றும் இறந்த விதம், என்னிடம் அழியாத ஞாபகமாக இருந்து வருகிறது. ஏனென்றால், அந்த அளவுக்கு அவர்கள் மேல் அன்பு செலுத்தினேன். அதைப் போல அந்த அளவுக்கு அவர்களிடமிருந்து அன்பைப் பெற்றேன். அவர்களுடைய இறப்பு மிகவும் வித்தியாசமானது. அவர்கள் வசித்த அந்தக் கிராமம், என்

பெற்றோர்கள் வசித்த சிறிய நகரத்திலிருந்து சுமார் 32 மைல் தூரத்தில் இருந்தது. அந்தக் கிராமத்தில், படித்த டாக்டரோ அல்லது நாட்டு வைத்தியர்களோ கிடையாது.

என்னுடைய பாட்டனாரை, இறப்பு நெருங்கும் பொழுதே அவர் தன் பேச்சை இழந்தார். அந்தக் கிராமத்தில், சுமார் 24 மணி நேரம் காத்திருந்தோம். அவருடைய பேச்சு திரும்பலாம் என்ற நப்பாசையில். ஆனால், எந்த முன்னேற்றமும் கிடையாது. அவர் ஏதோ சொல்ல முயன்றபோது, எடுத்துக் கொண்ட போராட்டத்தை, என்னால் நன்றாகக் கவனிக்க முடிந்தது. ஆனால், அவரால் பேச முடியவில்லை. அவர் ஏதோ சொல்ல விரும்பினார். ஆனால் வெளிப்படுத்த முடியவில்லை. ஆகவே அவரை, ஒரு மாட்டு வண்டியில் ஏற்றி, என் பெற்றோர்கள் வசிக்கும் நகரத்திற்குக் கொண்டு சென்றோம். அப்பொழுது, மெல்ல மெல்ல, அவருடைய புலன்களின் செயல்கள் ஒவ்வொன்றாக தன் செயலை இழக்க ஆரம்பித்தன. அவர் உடனே திடீரென்று இறக்கவில்லை. ஆனால் மெல்ல மெல்ல, வலியோடுதான் போராடி இறந்தார். முதலில், அவருடைய பேச்சு தடைப்பட்டது. பிறகு அவருடைய கேட்கும் தன்மை இழந்தது. பிறகு அவர் கண்களை தானே மூடிக்கொண்டார். இவைகளையெல்லாம், நானும் அவரோடு மாட்டுவண்டியில் சென்றதால், என்னால் நன்றாகக் கவனித்துப் பார்க்க முடிந்தது. 32 மைல் தூரத்தை, அந்தக்காலத்தில் அதுவும் மாட்டு வண்டியில் கடப்பது என்பது மிக நீண்ட தூரம்தான்.

ஆனால், அவருக்கு நடப்பது அனைத்தும் என்னுடைய புரிந்துகொள்தலுக்கு அப்பால் இருந்தது. ஏனெனில், நான் பார்த்த முதல் இறப்பு அதுதான். அவர் இறந்துகொண்டு இருக்கிறார் என்பதையே என்னால் விளங்கிக்கொள்ள முடியவில்லை. மெல்ல மெல்ல, அவருடைய புலன்களின் உணர்வுகள் மங்கிக்கொண்டே சென்று, அவர் பிரக்ஞையற்ற நிலைக்கு வந்துவிட்டார். நாங்கள், எங்களது நகரத்தை நெருங்கும் முன்னரே, அவருடைய மூச்சுமட்டும் நிகழ்ந்து கொண்டு இருந்தது. மற்றைய அனைத்தும் செயலிழந்துவிட்டன. அதன்பிறகு, அவருக்கு பிரக்ஞையே வரவில்லை. அந்த மூச்சு மட்டும் மூன்று நாட்கள் தொடர்ந்து இருந்தது. பிறகு அவர் பிரக்ஞையற்று இறந்துவிட்டார்.

அவருடைய புலன்களின் மெல்ல மெல்ல அடங்குதல் மற்றும் அவருடைய முடிவான இறப்பு அனைத்தும் என் ஞாபகத்தில் நன்றாக எழுதப்பட்டு விட்டன. அவரோடு ஏற்பட்ட நெருக்கம், அன்பு அனைத்தும் மிகவும் ஆழமானது. என்னைப் பொருத்த வரையில், அவர்தான் நான் அப்பொழுது விரும்பிய பொருள் எனலாம். அவருடைய இறப்பிற்குப்பிறகு, அதைப் போன்ற ஒரு பிணைப்பு எவரிடமும் எனக்கு ஏற்பட்டதில்லை. அதன்பிறகு, என் வாழ்க்கை தனிமையில்தான் நடந்தது எனலாம்.

தனிமை என்னை 7 வயதிலேயே ஆட்கொண்டு விட்டது. தனிமையில் இருத்தல் என்பது எனக்கு அப்பொழுதிலிருந்தே பழக்கமாகிவிட்டது. அவருடைய இழப்பு, என்னை எல்லா உறவுகளிலிருந்தும் துண்டித்து விட்டது. அவருடைய இறப்பு, எனக்குள்ள எல்லா பந்தங்களின் இறப்பாகிவிட்டது. ஆகவே, அதன்பிறகு எந்த ஆழ்ந்த பிணைப்பும் எவரிடமும் ஏற்பட்டது இல்லை. அப்படி ஏதும் அன்புப் பிணைப்பு ஏற்பட ஆரம்பித்தால், அவருடைய இறப்பு என்னை உற்றுப் பார்ப்பதுபோல் இருக்கும்! ஏனெனில், அந்த அன்பு அனுபவம் நிகழும்பொழுதே, இந்த மனிதரும் இன்று இல்லாவிட்டாலும், நாளையாவது இறக்கத்தான் நேரிடும் என்ற உணர்வு கூடவே என்னிடம் ஏற்படும்.

எப்பொழுது ஒரு மனிதனுக்கு, இந்த நிச்சயமான இறப்பு பற்றிய உணர்வு பிரக்ஞையாக மேலே எழும்புகிறதோ, அதற்கு ஏற்றார் போல் அவனுக்கு பிறர் மேல் ஏற்படும் பாசஉணர்வு குறைகிறது. வேறுவிதமாகச் சொன்னால், நம்முடைய இறப்பின் மறதியே, பாசப்பிணைப்புக்குக் காரணமாகிறது. நாம் யார்மேல் மிகவும் அன்பு செலுத்துகிறோமோ, அப்பொழுது நாம் தொடர்ந்து இறப்பை மறக்கவே முயல்கிறோம். ஆகவேதான், அன்பு சாசுவதமானது என்று சொல்லி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறோம்! நாம் ஆழ்ந்த அன்பு செலுத்துவோர் அனைவரும் இறக்க மாட்டார்கள் என்று நினைக்க ஆரம்பித்துவிடுகிறோம்.

ஆனால், என்னைப் பொருத்தவரையில், அன்பும், இறப்பும் ஒன்றை ஒன்று பிணைத்துக் கொண்டு இருக்கின்றன. இதன் அர்த்தம்

என்னவென்றால், இறப்பின் ஞாபகமின்றி அன்பு செலுத்த முடியாது என்பதே. அதாவது, என்னால் இறப்பின் உணர்வோடுதான் பிறரிடம் அன்பு காட்ட முடிகிறது. நட்புகள் தோன்றலாம், கருணை மலரலாம், ஆனால் அத்துடன் எழும்பும் நிலையானது என்ற பொய்மை என்னை ஆட்கொள்ள முடியாது. மிக ஆழத்தில், அதன் இறப்பு என்னைத் தொட்டுக்கொண்டுதான் இருக்கும்-நான் அந்த நட்பையும், கருணையையும் ஆழமாக உணரும் பொழுது, அதனுடைய இறப்பும் ஆழமாக ஒவ்வொரு நாளும் என்னை நெருங்கி வருவதை உணர்கிறேன்.

ஆகவே, வாழ்வின் பைத்தியக்காரத்தனம் என்னைப் பாதிக்கவில்லை. வாழ்க்கையைப் பற்றிய தாகம் அல்லது ஆர்வம் ஆரம்பமாவதற்கு முன்பே, இறப்பின் தன்மை என்னை ஆக்ரமித்துவிட்டது. இந்தச் சம்பவம் தான் முதன் முதலாக என்னிடம் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தி, என் மனதை ஆக்ரமித்துவிட்டது என்று கூறலாம். அந்த நாள் முதல், பிறகு ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு கணமும், வாழ்வின் உணர்வு, இறப்பின் உணர்வோடு சம்மந்தப்பட்டே என்னிடம் சேர்ந்து நிகழ்ந்து வந்திருக்கிறது. ஆகவே, அப்பொழுதிலிருந்தே, இந்த உலகத்தில் இருப்பதும், இல்லாது இருப்பதும் எனக்கு ஒன்றாகவேப் படுகிறது. அந்த இளம் வதிலேயே, தனிமை என்னை ஆட்கொண்டுவிட்டது.

வாழ்வில் இப்பொழுதோ அல்லது பிறகோ-அநேகமாக வயதான காலத்தில்-தனிமை ஒவ்வொருவரையும் பீடிக்கத் தான் செய்யும். ஆனால், சமூகம் என்றால் என்ன என்று அறிவதற்கு முன்பே, அது என்னை ஆக்ரமித்துவிட்டது. நான் எல்லோருடனும் சேர்ந்து இருப்பேன், அது ஒரு கூட்டமாக இருந்தாலும் சரி அல்லது ஒரு சமூகமாக இருந்தாலும் சரி, நான் என்னில் என் தனிமையில்தான் இருப்பேன். எதுவும் என்னை நெருங்க முடியாது. நான், வெளிஉறவுகளால் பாதிக்கப்படாமலே இருந்தேன்.

இந்தத் தனிமை உணர்வு என்னிடம் ஆழமாக ஆழமாக என் வாழ்க்கையில் ஏதோ ஒரு புதுமை ஏற்பட ஆரம்பித்தது. ஆரம்பத்தில் இந்தத் தனிமை என்னிடம் மகிழ்ச்சியற்ற தன்மையையே ஏற்படுத்தியது.

பிறகு அது மெல்ல மெல்ல மகிழ்ச்சியாக மாறியது! ஏனென்றால், நாம் ஒருவரோடு அல்லது ஒரு பொருளோடு பிணைப்பை அல்லது பாசத்தை உண்டாக்கிக் கொண்டால், நாம் நம்மையே நோக்குதலிருந்து அப்பால் செல்கிறோம். இது பொது விதி. சாதாரணமாக, ஒருவர் தன்னிடமிருந்தே தப்பவேண்டுமானால், பிறரிடம் அவர் பாசத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். நீங்கள் உங்களிடமிருந்து விலகுவதற்கு, இது ஒரு யுக்தி. அதைப் போல அடுத்தவர் அதிகமாக அதிகமாக முக்யத்வம் பெறும் பொழுது, அந்த அளவுக்கு அவர் உங்களது மைய நிலைக்கு வந்து, நீங்கள் அதன் சுற்றுவட்டமாக மாறிவிடுகிறீர்கள்.

அந்த மையநிலையில் அவரை வைத்தே, நீங்கள் உங்களது முழு வாழ்க்கையையே முடித்துக் கொண்டு விடுகிறீர்கள்! இதனால், ஒருவர் ஒருக்காலும் தன் மைய நிலையை எட்டுவதே இல்லை. ஆனால், என்னைப் பொருத்த வரையில், அடுத்தவர் என் மைய நிலையை ஆக்ரமிப்பது என்பது என் ஆரம்ப காலத்திலேயே அழிக்கப்பட்டு விட்டது. ஆரம்ப மைய நிலை. அப்பொழுதே உடைக்கப்பட்டு விட்டது. பிறகு மீண்டும் அந்த நிலைக்கு வரவே இல்லை. சொல்லப் போனால், நான் என்னுடைய மைய நிலைக்கு, அந்த இளம் வயதிலேயே தள்ளப்பட்டேன் என்று கூடச் சொல்லலாம். மெல்ல மெல்ல, நான் அதில் மகிழ்ச்சியடைய ஆரம்பித்தேன். அது அதிகரித்துக் கொண்டே சென்றது! பிறகுதான், அந்த இளம் வயதில் ஒரு இறப்பை நெருங்கி பார்த்ததின் விளைவு, அது ஓர் ஆசீர்வாதம் என்று கருதத் தொடங்கினேன். அந்த இறப்பை, நான் வளர்ந்த பிறகு பார்க்க நேரிட்டால், என்னுடைய பாட்டனாருக்குப் பதில் வேறு யாரையாவது பற்றிக் கொண்டு இருப்பேன்.

ஆகவே, பழுக்காத, கள்ளம் கபடமற்ற மனதில், ஒன்று ஆழமாகப் பதியும் பொழுது, அதற்கு மாற்றாக வேறு ஒரு அன்பு உருவத்தை அல்லது பொருளை நிரப்புவது என்பது மிகவும் கடினம். மனம் எப்பொழுது அறிவால் நிரப்பப்பட்டு, கபடு நிறைந்ததாகவும், எதையும் முன்கூட்டியே கணக்குப்பார்க்கும் தன்மை படைத்ததாகவும் மாறுகிறதோ, அப்பொழுது அது, ஒன்றை இழந்ததற்குப் பதிலாக, மாற்றுப் பொருளை சுலபமாக அந்த இடத்தில் வைத்துவிடும். அது

எவ்வளவு சுலபமாக, சீக்கிரமாக அந்த மாற்றுப் பொருளை தேர்ந்தெடுத்துவிடுகிறதோ, அவ்வளவு சீக்கிரமாக, அந்த முதல் இழப்பினால் ஏற்பட்ட மகிழ்ச்சியற்ற தன்மையிலிருந்து அது விடுபடுகிறது. ஆனால், அந்த இறப்பு நிகழ்ந்த பிறகு, என்னால் வேறு ஒரு பெர்ருளை அந்த இடத்தில் வைக்க முடியாமல் போய் விட்டது.

குழந்தைகள், தங்கள் இழப்பைச் சரி செய்ய வேறு ஒன்றைச் சுலபமாக வைக்காது. அவர்களுடைய விருப்பமான பொருளை இழந்துவிட்டால், அந்தப் பொருளின் இடம் வெறுமையாகவே இருக்கும். ஆனால், நீங்கள் எவ்வளவுக்கெவ்வளவு முதிர்சியடை கிறீர்களோ, அந்த அளவுக்கு சீக்கிரமாக அந்த இடத்தை நிரப்ப முயற்சி செய்வீர்கள். ஏனென்றால், நீங்கள் பலவற்றை யோசிக்க ஆரம்பித்து விட்டீர்கள். எண்ணங்களில் இடைவெளி ஏற்பட்டால், அந்த இடை வெளியை சீக்கிரமாக நிரப்பிவிடலாம். ஆனால், உணர்வு மயமான இடைவெளியை அவ்வளவு சுலபத்தில் நிரப்ப முடியாது. எண்ணம், இன்னொன்றை சுலபமாகப் பற்றிக் கொள்ளும். ஆனால் இதயம் இன்னொன்றை அவ்வளவு சீக்கிரத்தில் ஒத்துக் கொள்ளாது. ஆகவே, சிறு வயதில், சரியாக எண்ணத் தெரியாத நிலையில், உணர்வை மட்டும் புரிந்திருக்கும் அந்த வயதில், இந்த சங்கடம் மிகவும் அதிகம் தான்.

ஆகவே, என்னை நான் காப்பாற்றிக்கொள்ள, அடுத்தவரது முக்கியத்வம் எனக்குத் தேவையில்லை எனக் கருதினேன். பிறகு நான் என்னோடு தனிமையில் வாழவே முயன்றேன். ஆரம்பத்தில் இது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கவில்லை. பிறகுதான், மெல்ல மெல்ல மகிழ்ச்சியை உணர்ந்தேன். பிறகு நான் மகிழச்சியற்ற தன்மையை ஒருக்காலும் உணரவில்லை.

அடுத்தவரிடம் உள்ள நம்முடைய ஈடுபாடு, அடுத்தவரிட மிருந்து எதிர்பார்ப்பு, அடுத்தவரிடமிருந்து மகிழ்ச்சி வரும் என்ற நம்பிக்கை என்பவைகள்தான் நம்முடைய மகிழ்ச்சியற்றத் தன்மைக்கு முக்கிய காரணங்களாகும். நீங்கள் எந்த விதத்திலும் வெளியே இருந்து மகிழ்ச்சியை அடையவில்லை. ஆனால் அந்த நம்பிக்கையில் வாழுகிறீர்கள். அந்த நம்பிக்கை உங்களை விட்டு விலகும் பொழுது, நீங்கள் விரக்தியை அடைகிறீர்கள்.

என்னுடைய ஆரம்ப அனுபவத்திலேயே, நான் மிகவும் மோசமாக நம்பிக்கையை இழந்தேன். பிறகு நான் முயற்சிக்கவே இல்லை. அந்த வழி எனக்கு அடைக்கப்பட்டுவிட்டது. பிறகு நான் ஒருக்காலும் துன்பப்படவே இல்லை. பிறகு என்னுள் எழுந்த மகிழ்ச்சிக்கு பிறர் காரணமே இல்லை. ஆகவே, உண்மையான மகிழ்ச்சி பிறரிடமிருந்து வருவதே இல்லை என்பதை தீர்க்கமாகப் புரிந்து கொண்டேன். மற்றவர்கள் நம்முடைய வருங்கால மகிழ்ச்சிக்காக, நம்பிக்கையை ஊட்டுகிறார்கள் எனலாம். பிறரிடமிருந்து அந்த மகிழ்ச்சியின் நிழல்தான் நம்மிடம் வந்து சேருகிறது; மகிழ்ச்சியல்ல.

முதன் முதலில், நம்மை நாமே எதிர்கொள்ளும் பொழுது, மகிழ்ச்சிக்கு மாறாக, துக்கமே நிகழுகிறது. விரக்தி மேலிடுகிறது. நம்முடைய முயற்சியைக் கைவிடாமல் இருந்தால், மெல்ல மெல்ல ஆனந்தம் நம்மிடம் மேலிடுகிறது. அதற்கு மாறாக, நீங்கள் அடுத்தவரை முதன்முதலில் சார்ந்து நின்றால், ஆரம்பத்தில் மகிழ்ச்சி தோன்றலாம். ஆனால் முடிவில், நீங்கள் துக்கத்தைத்தான் சந்திக்க வேண்டிவரும்.

ஆகவே என்னைப் பொருத்தவரையில், என்னை என்னிடமே செலுத்தியது, ஆன்மிக யாத்திரைக்கு வழிவகுத்தது எனலாம். எப்படி நாம் நமக்குள்ளேயே சென்றோம் என்பது வேறுவிஷயம். அதற்கு, வாழ்க்கை நமக்குப் பல சந்தர்ப்பங்களை ஏற்படுத்துகிறது. நாம் எவ்வளவுக் கெவ்வளவு புத்திசாலித்தனமாக இருக்கிறோமோ, அவ்வளவு சீக்கிரமாக நாம் அந்தச் சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொள்வோம்.

என்னுடைய மனைவி இறந்தால், நான் உடனே வேறு ஒரு பெண்ணைத் தேடி மறுமணம் செய்து கொள்கிறேன். என்னுடைய நண்பனை இழந்தால், நான் வேறு ஒருவனை தேடிக்கொள்கிறேன். நான் எந்த வெற்றிடத்தையும் அப்படியே விட்டுவிடுவதில்லை. இதனால், நான் என்னுள்ளே செல்வதை ஒரு கணத்தில் இழந்துவிடுகிறேன். அப்படி சென்றுவிட்டால், நான் அடுத்தவருக்கு ஒரு அந்நியனாகிவிடுகிறேன்.

பொதுவாக, அந்த இளம் வயதில், நாம் பிறரைச் சார்ந்தே இருக்கிறோம். அப்பொழுது நாம் நம் சமூகத்தின் ஒரு அங்கமாக

சேர்க்கப்படுகிறோம். அந்த வயதில், நம்முடைய சமூகத்தால் நாம் தீர்மானிக்கப்படுகிறோம். அப்பொழுதுதான் அது நம்மை ஏற்றுக்கொள்ளும். ஆனால், நான், சமூகத்தால் அந்த வயதில் ஒருபோதும் ஆக்ரமிக்கப்படவில்லை. அது என்னிடம் நடைபெறவில்லை. அவ்வளவுதான். நான் சமூகத்துக்குள் நுழையும்பொழுது, ஒரு தனிப்பட்ட ஆளாகத்தான் சென்றேன். ஆகவே, என்னை ஒரு தனியனாகவே உணர்ந்தேன். அப்படியேதான் வாழ்ந்தேன். அதாவது ஒரு தனிப்படுத்தப்பட்ட தீவு போல.

நான் எந்த நட்பையும் உண்டாக்கிக் கொள்ளவில்லை என்பது எனக்கு நன்றாக ஞாபகத்தில் உள்ளது. ஆனால், எவ்வளவோ பேர்கள் என்னிடம் நட்பாக இருக்க விரும்பினார்கள். அதைப் போல பலபேர்கள் அவர்களாகவே வந்து என்னிடம் நட்பு பாராட்டி மகிழ்ந்தார்கள். ஏனென்றால், அவர்களால் என்னை அவர்களது பகைவனாகப் பார்க்க முடியவில்லை! ஆனால், எந்தச் சந்தர்ப்பத்திலும் நானே வலியச் சென்று, யாரிடமும் நட்பு பாராட்டினதாக எனக்கு ஞாபகம் இல்லை. யாராவது வந்து தானே என்மேல் விழுந்தால், அது வேறு விஷயம். அப்பொழுது அவர்களை முழு மனதுடன் நான் ஏற்றுக்கொள்வேன். ஆனால் அப்பொழுது கூட,சாதாரண முறையில் அவர்களோடு நட்பு பாராட்டியது இல்லை. நான் அந்த நிலையிலும் தனி ஆளாகத்தான் என்னை உணர்ந்தேன்.

சுருக்கமாகச் சொன்னால், நான் பள்ளியில் படிக்கும்பொழுதே, என் தனிமையில்தான் இருந்தேன். என்னுடைய எந்தஆசிரியர்களுடனோ அல்லது வகுப்பு மாணவர்களிடமோ இல்லை வேறு யாரோடும், நான் எந்த நட்பையும் ஏற்படுத்திக் கொண்டதில்லை. ஆகவே அவர்களால் என் தனிமைத்தன்மையைக் கெடுக்க முடியவில்லை. நண்பர்கள் வருவார்கள். வந்து என்னுடன் தங்கி இருப்பார்கள். அந்த வகையில், நான் பல பேர்களை சந்தித்து இருக்கிறேன். பல நண்பர்களை அடைந்திருக்கிறேன். ஆனால், அது என் பக்கத்திலிருந்து அல்ல! அவர்களை நான் எதற்கும் சார்ந்து இருந்ததில்லை. அதைப் போன்ற நிகழ்ச்சி எதுவும் என் ஞாபகத்தில் இல்லை.

நான் யாரையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வில்லை என்பது ஒரு வித்தியாசமான அனுபவமாக உங்களுக்குப் படலாம்.

நான் ஒருவருக்காக காத்திருந்து, அவர் வரவில்லையென்றால், அவர் வந்தால் மகிழ்ச்சியாக இருக்குமே என்று நான் ஏங்கியதாக, ஒருபோதும் நிகழவில்லை. யாருமே என்னைச் சந்திக்கவில்லை யென்றால், அது உண்மையிலேயே எனக்கு மகிழச்சியைத்தான் கொடுக்கும். எனக்குள்ளே நான் மகிழ்ச்சியாக இருந்தேன் என்றால், அதற்கு முக்கிய காரணம் என்னுடைய பாட்டனாரின் இறப்புதான். அந்த இறப்பு என்னை நிரந்தரமாக என்னுள்ளேயே செலுத்திவிட்டது. அந்த மையப் பகுதியிலிருந்து என்னால் மீண்டும் பழைய நிலைக்கு வரவே முடியவில்லை. இப்படி நான் ஒரு வெளி ஆண் போலவும், சம்மந்தமில்லாதவன் போலவும் நடந்துகொண்டதால், ஒரு புதுமையான அனுபவம் என்னுள்ளே எழுந்தது. ஆகவே, நான் பல பேர்களுடன் சூழ்ந்திருந்தாலும், நான் அவர்களிடமிருந்து விலகியே இருந்தேன்.

நானே ஒரு சிறிய பிரபஞ்சமாக மாறிவிட்டேன்! இந்தப் புதிய அனுபவம்-அது அப்பொழுது வித்தியாசமாக இருந்தாலும்-அது ஒரு வலியை என்னிடம் ஏற்படுத்தியது. அந்த வலி ஒரு மகிழ்ச்சிகரமான வலிதான்! அது ஏனென்றால், அந்த சிறிய வயதில், நான் ஒருவித முதிர்ச்சித் தன்மையை என்னுள்ளே உணர்ந்தேன். அந்த அனுபவத்தில், எனக்கு எந்தவித அகங்காரமும் கிடையாது. ஆனால், அது என்னிடம் ஒரு தனித்தன்மையை ஏற்படுத்தியது. இந்தத் தன்மை பலசங்கடமான சூழ்நிலையைச் சந்திக்க வழிவகுத்துவிட்டது.

உதாரணமாக என்னுடைய ஆசிரியர் என்று யாரையும் என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. நான் ஒரு மாணாக்கனாக இருக்க ஆசைப்பட்டாலும், அது என்னால் முடியவில்லை. ஆனால், என்னுடைய குரு என்று எவரையும் என்னால் அங்கீகரிக்க முடிய வில்லை. நான் பார்த்த ஒவ்வொருவரும், இந்த வாழ்க்யைில் மிகவும் ஊன்றிப்போய், ஐக்கியப் படுத்திக்கொண்டவர்களாகவே எனக்குத் தோன்றியது. இறப்பைக் கவனிக்காத எவரும் எனக்கு ஆசிரியராக இருக்க முடியாது. நான் அவர்களை மதிக்கவே விரும்பினேன். ஆனால்

அது என்னால் முடியவில்லை. நான் இந்த ஆறுகளையும், மலைகளையும், ஏன் ஒவ்வொரு கல்லையும் மதிக்கும் அளவுக்கு, மனிதனை மதிக்க முடியவில்லை. இது ஒரு தர்மசங்கடமான நிலைதான். இதனால் நான் அடைந்த பாதிப்புகள் கணக்கிலடங்காது.

நான் இயல்பாக மதிக்கக்கூடிய எந்த ஆசிரியரையும் நான் சந்தித்ததே இல்லை. ஏனெனில், எவரிடமும் முழுமையான உண்மையை வெளிப்படுத்தக்கூடிய எதுவும் அவர்களிடம் இருந்ததாக, நான் உணர்ந்ததே இல்லை. அநேக தடவைகள், பல ஆசிரியர்கள் சொல்வதும், செய்வதும் மிகவும் குழந்தைத்தனமாகவும், அற்பத்தன மாகவும் இருப்பதை உணர்ந்திருக்கிறேன்- அவைகளை அந்த வயதில் கூட என்னால் சொல்லவும் முடியாது மற்றும் செய்யவும் முடியாது. ஆகவே, நான் ஒரு குழந்தை என்ற உணர்வு என்னிடம் எப்பொழுதும் தோன்றியதில்லை. ஆகவே, நான் ஒருவரது வழிகாட்டுதலின்படியும் மற்றும் அவரது ஆதரவு தேடியும் நடக்க விரும்பவில்லை. இதனால், நான் யாரிடமும் செல்லவில்லை என்று சொல்லவில்லை. நான் பல பேர்களைச் சந்தித்து இருக்கிறேன். ஆனால் வெறுங்கையுடன் தான் பெரும்பாலும் திரும்பியிருக்கிறேன்! ஏனெனில், அவர்கள் சொல்லியவைகள் அனைத்தும், எனக்கு ஏற்கெனவே தெரிந்ததுதான். அவர்களிடம் புதிதாகக் கற்பதற்கு ஒன்றும் இல்லை.

இதனால் ஏற்பட்ட சங்கடம் என்னவென்றால், அடுத்தவர்கள் என்னை அகங்காரமிக்கவன் என்று கருதத் தொடங்கிவிட்டார்கள். அப்படி அவர்கள் நினைப்பது சரிதான். ஏனெனில், என்னால் யாரையும் மதிக்கவோ, பெருமைப்படுத்தவோ அல்லது யாரிடமும் கீழ்படிந்து நடக்கவோ முடியவில்லை. ஒவ்வொருவரும் என்னை, ஒரு பணிவற்ற, மோசமான எதிர்ப்பாளன் என்றே கருதினார்கள். ஒரு குறிப்பிட்ட வயதுவரை, நான் எவருக்கும் அடங்காமல், எதையும் எதிர்த்து, மோசமான அகங்காரமுடையவனாக காட்சியளித்தேன். நான், வாழ்க்கையில், யாருக்கும் எந்த விதத்திலும் உபயோகப்பட மாட்டேன் என்றே கருதினார்கள். அந்த நம்பிக்கை அப்பொழுதே அவர்களுக்கு போய் விட்டது.

அவுர்கள் நம்பும் எதையும், என்னால் நம்ப முடியவில்லை-அது எவ்வளவு சிறியதாக இருந்தாலும் சரி. அவர்கள் எந்த உருவத்தின் முன்னாலும், நம்பிக்கையோடு குனிந்து வணங்கினாலும், அவர்களோடு என்னால் சேர்ந்து கொள்ள முடியவில்லை. அதைப் போல செய்யக் கூடிய உணர்வு என்னிடம் ஏற்பட்டதே இல்லை. நான் என்னை ஒருபோதும் ஏமாற்றிக்கொள்ள நினைத்ததே இல்லை. மேலும், எதையும் ஆதாரம் இல்லாமல் நம்பவும் மாட்டேன். என்னிடம் ஆழ்ந்த நம்பிக்கை இல்லாவிட்டால், அது முழுமையாகவே இருக்கும். அதற்காக எந்த சமாதானமும் செய்து கொள்ளமாட்டேன். உண்மை இல்லை என்று நான் நம்பினால், அதை மறைக்க ஒருக்காலும் முயலமாட்டேன்.

ஆகவே, இவைகள் அனைத்தும் பல சங்கடங்களை எனக்கு ஏற்படுத்தின. அதே சமயம், அதனால் பல அனுகூலங்களும் எனக்குக் கிட்டியது. வேறு ஒரு திசையில் இருந்தும், நான் என்னுள்ளே தள்ளப்பட்டேன். ஏனென்றால், உண்மையைப் பிறரிடமிருந்து அறிந்துகொள்ள முடியாது, கற்றுக்கொள்ள முடியாது என்பதை நான் நன்றாக உணர்ந்துகொண்டேன். அதைக் கற்றுக் கொள்ள ஒரே ஒரு வழிதான் உண்டு-அது, என்னிடமிருந்தேதான் அதைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதுதான். ஆகவே, எனக்குக் குரு என்று யாரையும் நான் பார்த்ததில்லை. நானே குரு, நானே சீடன்! ஆகவே, பிறரைக் கண்ணை மூடிக்கொண்டு நம்பமுடியவில்லை என்று நான் உணர்ந்த பிறகு, வேறு வழி அதை என்னிடமே தேடுவதுதான். நான் பின்பற்றக்கூடிய வழியை, வேறு யாரும் எனக்குக் காண்பித்தது இல்லை. நான் என் கால்களின் துணை கொண்டுதான் நடந்துசெல்ல வேண்டும்.

இதனால் ஏற்பட்ட விலைமதிக்க முடியாத அனுபவம் என்னவென்றால், நான் என்னுடைய வழியை நானே அமைத்துக்கொள்ள வேண்டும். நான் தீர்மானித்த முறையில் செல்ல வேண்டும். இப்படி ஒவ்வொன்றிலும், நானே முடிவு எடுக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. யாருடைய உதவியையும் நாடுவது என்ற பேச்சுக்கே இடமில்லை. இதனால், நான் மேலும் மேலும் என்னுள்ளே மிகவும் தீவிரமாகத் தள்ளப்பட்டேன். இது எவ்வளவு மதிப்பு மிகுந்தது என்பதை போகப் போகப் புரிந்து கொண்டேன்.

இதனால் நான் ஒவ்வொருவருக்கும் தொந்திரவு கொடுத்தேன் அல்லது யாருக்கும் மதிப்புக் கொடுக்கவில்லை அல்லது யாரையும் மறுத்தேன் என்று அர்த்தமில்லை. எனக்கு இயல்பாக யார் மீதும் மதிப்பு ஏற்படவில்லை. அவ்வளவுதான், இதனால் ஏற்பட்ட சந்தேகங்கள் மேலும் மேலும் வலுவடைய ஆரம்பித்தன. நான் ஒவ்வொன்றையும் சந்தேகப்பட்டேன்.

பிறகு நான் எழுத மற்றும் படிக்க ஆரம்பிக்கும்பொழுது, இந்தச் சந்தேக இயல்பு எனக்கு மிகவும் உதவியாக இருந்தது. நான் கீதையைப் படித்தாலும், குரான், பைபிள் மற்றும் புத்தா, மஹாவீரர் போன்றவர்களைப் படித்தாலும் சரி, அந்தச் சந்தேக உள்ளுணர்வு என்னிடம் இருந்துகொண்டே இருந்தது. நான் மற்ற கடவுள்களின் மேல், கிருஷ்ணாவைத் தூக்கி வைத்து, எல்லாச் சந்தேகங்களையும் கொன்றுவிட்டேன் என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டதே இல்லை. சந்தேகம் என் கூடவே கடைசி வரை இருந்தது! ஆகவே, என்னிடம் வெறித்தனம் மற்றும் குருட்டு நம்பிக்கை, ஒருவரை மட்டும் பின்பற்றுதல் அல்லது ஒரு மதத்தின் மேலே மட்டும் பக்தி செலுத்துதல் போன்றவைகள் என்னிடம் ஏற்பட்டதே இல்லை.

இவைகளுடைய பயன் என்னவென்னில், நான் எந்த முடிவிலும் நிற்காமல், என்னுள்ளே கேள்விகள் எழுந்த வண்ணமாகவும், சந்தேகங்கள் உதித்தவாறும் இருந்தன. எதிலும் எந்த முடிவான பதிலும் எனக்குக் கிடைக்கவே இல்லை. எதற்காவது பதில் கிடைத்தால், அது பிறரிடமிருந்து வந்ததாகவே இருந்தது. ஆனால், மற்றவர்களது பதிலில் எனக்கு ஆழ்ந்த நம்பிக்கை கிடையாது. அவர்களுடைய பதில்கள் ஒன்றை மட்டும் என்னிடம் ஏற்படுத்தின. அதாவது அவைகள் என்னிடம் 10 அதிக கேள்விகளை ஏற்படுத்தின! யாருடைய பதில்களும், என்னுடையதாக இல்லை.

ஆகவே, ஆரம்பத்திலிருந்தே இது எனக்கு அபாயமாகவே இருந்தது. ஏனென்றால் இலக்கு என்று எதுவுமில்லாமல் வாழ்வது என்பது மிகவும் பாதுகாப்பற்றது. எனக்கு ஒரு அங்குலத்திற்கு அப்பால் என்ன இருக்கிறது என்றுகூட என்னால் தீர்மானிக்க முடியவில்லை.

ஏனென்றால், அதை நான் பிறரிடமிருந்துதான் வாங்கிக் கொள்ள வேண்டும். ஒருவர், தான் சென்ற வழியைப் பற்றித் தீர்க்கமாக எதுவும் சொல்ல முடியும். ஆனால், அவர் மேற்கொண்டு செல்லாத நிலையில், அதைப்பற்றி எதுவும் சொல்ல முடியாது. அதைப் பற்றித் தெரிந்து கொள்ள பிறருடைய உதவி தேவை. ஆகவே, என்னைப் பொருத்தவரையில் என்னுடைய வழி தெளிவாகப் புரியவில்லை. எல்லாமே இருட்டாகவே இருந்தன. அடுத்த அடியை இருட்டில்தான் வைக்க வேண்டியிருந்தது-இலக்கு இல்லாமல், தெளிவு இல்லாமல்.

என்னுடைய அந்த நிலை, இறுக்கம் நிறைந்ததாகவும், பாதுகாப்பு எதுவுமில்லாமல்,அபாயகரமாகவே இருந்தது. இந்த நிலையால், என்னுடைய உறவினர்கள் மற்றும் நெருங்கியவர்கள் அனைவரும் நான் ஒரு எதிர்ப்பாளன் மற்றும் மூர்க்கமானவன் என்று எண்ணத் தொடங்கினார்கள். மெல்ல, அவர்கள் நான் ஒரு பைத்தியம் என்று எண்ண ஆரம்பித்துவிட்டார்கள்! இதுதான் என்னுடைய அப்போதைய நிலை!

ஒவ்வொரு சிறிய நிகழ்ச்சியிலும், சந்தேகம்தான். சந்தேகத்தைத் தவிர வேறு இல்லை. விடைகள் இல்லாத வெறும் கேள்வி மேல் கேள்விகளாலேயே நான் நிரப்பப்பட்டேன். ஒருவகையில், நான் பைத்தியத்துக்கு ஈடாகவே இருந்தேன். நான் எந்த நேரத்திலும் பைத்தியமாகலாம் என்ற நிலை என்னுள் எழுந்து என்னை பயமுறுத்தியது.

பகலும், இரவும் நான் பல கேள்விக்கணைகளால் துளைக்கப்பட்டேன். அவைகள் என்னைச் சுற்றி வட்டமடித்த வண்ணமாகவே இருந்தன. எந்தக் கேள்விக்கும் சரியான பதில் கிடைக்கவில்லை. சொல்லப் போனால், நான் கடலின் ஆழத்தில் இருந்தேன். அதற்கு கரையோ அல்லது படகோ கிடையாது. அப்படியே ஏதும் படகு இருந்தால், அது என்னுடையதாகவே இருக்கும். அங்கே நிறையப் படகுகள் இருந்தன. ஆனால், அவைகள் அனைத்தும் பிறருக்குத்தான் சொந்தம். ஆகவே, நான் அதில் ஏற மறுத்தேன். ஏனெனில் பிறருக்கு சொந்தமான படகில் ஏறுவதைவிட, நான் கடலில்

மூழ்கி இறப்பதே மேல் என்று கருதினேன். அப்படி மூழ்கித்தான் என் வாழ்வு நடக்கவேண்டும் என்று இருந்தால், அதை நான் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்று உறுதியாக உணர்ந்தேன்.

அடர்ந்த இருட்டில் வாழ்வதுபோல் என் நிலைமை ஆகிவிட்டது. ஒரு ஆழமான இருள் நிறைந்த கிணற்றுக்குள் வீழ்ந்தது போல் நான் என்னை உணர்ந்தேன். அந்த நாட்களில், நான் அடியில்லாத கிணற்றுக்குள் ஆழமாகச் சென்றுகொண்டே இருப்பதுபோல கனவுகளைக் கண்டேன். அநேக தடவைகள், இரவில் திடீரென்று எழுந்துவிடுவேன். அப்பொழுது என் உடல் முழுவதும் வேர்வையால் நனையப் பெற்றிருக்கும். உடலிருந்து வேர்வை வழிந்தோடும். ஏனெனில், நான் ஆழந்தெரியாத, அடியில்லாத கருமை நிறைந்த கிணற்றுக்குள் எவ்வளவு தூரம்தான் செல்வது?

இருளும், தொடர்ந்து கீழே செல்லுதலும் தவிர, வேறு ஒன்றும் அங்கு நிகழவில்லை. ஆனால், மெல்ல மெல்ல, அந்த சூழ்நிலையை ஏற்றுக்கொண்டேன். அநேக தடவைகள், நான் பிறரோடு ஒத்துப் போவதுபோல் உணர்ந்தேன். பிறருடைய பதில்களை ஏற்றுக் கொள்வதுபோல் உணர்ந்தேன். ஆனால் இவைகள் என் இயல்புக்கு ஒத்துவரவில்லை. பிறருடைய அபிப்ராயங்களை, எண்ணங்களை முழுமனதோடு ஏற்றுக்கொள்ளவே முடியவில்லை!

மெல்ல மெல்ல, தவிர்க்க முடியாத வகையில், என்னுள் எந்த எண்ணங்களுக்குமே இடமில்லாமல் போய் விட்டது. இப்பொழுது நான் உணர்ந்து கொண்டது என்னவெனில், எல்லாப் பதில்களும், என் எண்ணங்களைத் தவிர வேறு எதுவுமில்லை. ஒருவரிடம் வெறும் கேள்விகள் மட்டும் இருந்தால், அவர் வரையில் எண்ணமற்ற நிலையை அடைந்துவிடலாம்.

உங்கள் மனத்தில் எழும்பும் முடிவு, எண்ணம் உதயமாவதற்கு வழி வகுக்கிறது. எந்த முடிவும் ஏற்படாதபொழுது, தானாகவே அங்கு ஒரு வெறுமை நிலை (VACCUM) ஏற்படுகிறது. அப்படி ஒரு வெறுமை நிலை தானாகவே உண்டாகும் என்று எனக்கு அப்பொழுது தெரியாது. அநேக கேள்விகள், என்னைச் சுற்றி சுற்றி வட்டமிட்டவண்ணமாக

இருந்தன. ஆனால், அவைகளுக்கு விடை ஏதும் கிடைக்காததால், அவைகள் களைத்து, தானாகவே இறந்து விடுகின்றன. எனக்கு விடைக்கிடைக்காத பொழுது, அந்தக் கேள்விக்ள் தானாகவே அழிவதை என்னிடம் உணர்ந்தேன்.

ஒருநாள், கேள்வியே இல்லாத நிலை என்னிடம் ஏற்பட்டது. அதனால், அதற்கு பதில் கிடைத்துவிட்டது என்று அர்த்தம் இல்லை. இல்லை. உண்மையில், அவைகள் தானாகவே என்னைவிட்டு அகன்றுவிட்டன. அது ஒரு வெறுமை நிலையை என்னுள் ஏற்படுத்தியது. அது என்னுள் வெடிக்கும் தன்மையை (EXPLOSIVE SITUATION) ஏற்படுத்தியது. அத்துடன் வாழ்வது என்பது இறப்புக்கு சமம்தான். அதாவது அந்தக் கேள்விகளைக் கேட்டவர் இறக்க ஆரம்பிக்கிறார். அந்த அனுபவத்தில், என்னால் எந்தக் கேள்வியையும் மேற்கொண்டு கேட்க முடியவில்லை. கேள்விகள் எழும்பும் எல்லா வஸ்துகளும், இறந்துவிட்டன! இதற்கு முன்பு, கேட்பது மட்டும்தான் இருந்தது. இப்பொழுது எந்தக் கேள்வியுமே என்னிடம் இருக்கவில்லை.

இப்பொழுது என்னிடம் கேள்விகளும் இல்லை, பதில்களும் இல்லை! யாராவது என்னிடம் கேள்வி ஏதும் கேட்டால், அதற்குப் பதில், அந்த உள்ளே உள்ள வெறுமை நிலையிலிருந்துதான் வருகிறது. அதுதான் என் பதிலாக இருக்கிறது. அந்தப் பதில் என்னுடையது என்று என்னால் உரிமை கொண்டாட முடியாது. ஏனெனில், அதற்காக என் மனத்தின் துணைகொண்டு எந்த முன்னேற்பாடும் செய்வதில்லை. அதைக் கேட்பவர்கள் எப்படி முதன்முதலில் என் மூலமாகக் கேட்கிறார்களோ, அதைப் போலத்தான், நானும் அதை முதன்முதலில் கேட்கிறேன்! இங்கு பேசுபவர் என்றும், கேட்பவர் என்றும் வேறுபாடு இல்லை. அல்லது நான் கொடுப்பவன் இல்லை, அவர்கள் வாங்குபவர்கள் இல்லை. அந்த பதில்கள் தானாகவே வருகிறது. அப்பொழுது இரண்டு பேர்களுமே, கேட்பவராகவும், எடுத்துக் கொள்பவராகவும் இருக்கிறோம்.

ஆகவே, என்னுடைய இன்றைய பதில், நாளைய பதிலிலிருந்து வேறுபட்டிருந்தால், அதற்கு நான் பொறுப்பல்ல. ஏனென்றால், அந்தப் பதில் நான் என் மனத்தைக் கொண்டு கூறவில்லை. அந்த மாறுபட்ட

பதிலுக்குப் பொறுப்பு, அந்த வெறுமை நிலைதான் காரணம். ஆகவேதான், நான் ஒரே மாதிரியாக இல்லை என்று நீங்கள் நினைக்க வேண்டியுள்ளது. 'நான்', அந்தப் பதிலுக்குப் பொறுப்பானால், அதாவது 'நான்', பதில் அளித்திருந்தால், அந்த பதில் மாறுபாடு இல்லாமல் இருக்கும். ஆகவே, அந்த மாறுபட்ட பதில்கள், அந்த வெற்றிடத்தால் வெளிப்படுத்தப்படுகிறது. அதைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. அந்த அனுபவத்திலிருந்து, நான் எந்தக் கேள்வியும் கேட்பதில்லை அல்லது எந்த பதிலையும் எதிர்ப்பார்ப்பதில்லை. அந்தச் சக்திமயமான வெடித்தல் (EXPLOSION), முந்தைய வருடத்து பழைய மனிதனின் இறப்புக்குக் காரணமாயிற்று. பிறகு எழுந்த புதிய மனிதன், முழுமையாக புதிய மனிதனாகவே இருக்கிறான்.

நீங்கள் கேட்கிறீர்கள், ''ஏதாவது புதுமையான நிகழ்ச்சி உங்களது ஆன்மிக வாழ்க்கைக்கு வழி வகுத்ததா?'' என்று அப்படி எந்தப் புதுமையான, வித்தியாசமான நிகழ்ச்சி ஏதும் என் வாழ்க்கையில் நிகழவில்லை; ஆனால் ஒரு இறப்பைத்தவிர. இதன்மூலம் நான் சொல்லவருவது என்னவென்றால், அந்த ஆன்மிகப் பாதையில் நடக்கும் அந்த மனிதனின் வாழ்க்கையில், எந்த வித்தியாசமான நிகழ்ச்சியும் நடக்கவில்லை என்பதே. அதற்குப் பதிலாக அவன் இறந்தே போய்விட்டான்! இப்பொழுது நீங்கள் பார்ப்பது, முற்றிலும் புதிய மனிதன். ஆகவே, மறுபடியும் பழைய நிலைக்கு வரும் கேள்விக்கே இங்கு இடமில்லை. எனக்குள்ளே, மறுபடியும் திரும்பிவரும் நிலைக்கு யாருமே இல்லை. அப்படி யாரும் இருந்தால், நான் மீண்டும் பழையநிலைக்கே வரக்கூடிய சாத்யம் ஏற்படலாம். ஆனால், என்னுள்ளே அந்தப் பழைய மனிதன் இல்லை. உதாரணமாக, 100 டிகிரி செண்டிகிரேடு வெப்பத்தில், நீர் ஆவியாகிப் போய்விட்டது. நீர் அங்கு திட நீராக இல்லை. அது வேறு வடிவம் எடுத்துவிட்டது.

இப்பொழுது நான், நானாக எதையும் யோசிப்பதுஇல்லை. யாராவது என்னிடம் ஏதும் கேள்விகேட்டால், உங்களைப் போலவே நானும் பேசுகிறேன். நான் யோசித்துப் பேசுவதில்லை. நான் நேரடியாக, இயல்பாக அந்தக் கணத்துக்கு ஏற்றவாறு பேசுகிறேன் அல்லது பேசப்படுகிறேன். என் ஞாபகத்தைப் பொருத்த வரையில், அவைகளை

நான் தான் பேசுகிறேன் என்று என்னால் ஒருக்காலும் சொல்ல முடியாது. அது யாரிடமிருந்தோ என் மூலமாக வெளிப்படுகிறது. அவ்வளவுதான் சொல்ல முடியும். அதாவது அந்தச் சக்தி வெடித்தலுக்கு முன், நான் கூறியவைகள் அனைத்தும் என்னுடையது அல்ல; மேலும் அது யாருடையது என்று கூட சரியாகச் சொல்ல முடியவில்லை. அவைகள் எப்படி எனக்கு தோற்றம் தந்தது என்றால், அவைகளை நான் எங்கேயோ, எப்பொழுதோ கேட்டது போலவும், அல்லது ஏதோ ஒரு நாவலில் படித்தது போலவும் அல்லது ஏதோ நாடகத்தில் பார்த்தது போலவும் உணர்ந்தேன்.

இங்கு, அனேகம் பேர்கள், என்னுடைய சுயசரிதத்தை எழுதும்படி கேட்கிறார்கள். அது மிகவும் கஷ்டம். ஏனெனில், நான் யாரைப் பற்றி எழுதுகிறேனோ, அது நான் அல்ல. நான் இப்பொழுது உள்ள நிலையில், அதற்கு எந்தக் கதையும் கிடையாது. அந்தச் சக்தி வெடித்தலுக்குப் பிறகு, எந்த நிகழ்ச்சியோ அல்லது எந்தக் கதையோ கிடையாது. எல்லா நிகழ்ச்சிகளும், அந்த வெறுமைநிலைதான். அதற்கு பின்பு நான் என்று அல்லது என்னுடையது என்று எதுவும் இல்லை.

ஒருவன் தன்னைப் பற்றி எழுதுவதுதான், சுயசரிதம். அவன், வேறு ஒருவரைப் பற்றி எழுதினால், அது வெறும் சரிதம்தான். நான் அப்படி ஒரு சரிதம் எழுதினால், அது என்னுடையதாகாது. மேலும், அது சுயசரிதமாகவும் ஆகாது. ஏனெனில், என்னுள் 'நான்' என்று எதுவுமில்லை. அது, முன்பு நான் அறிந்த மனிதனைப் பற்றிய சரிதமாகவே இருக்கும். அந்த ஆள் இப்பொழுது என்னிடம் இல்லை. நான் அறிந்த மனிதன் அல்லது கேட்ட மனிதன், இப்பொழுது இறந்துவிட்டான்!

நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தும், ஆன்மிகத் தேடுதலுக்கு சம்மந்தப்பட்டது என்று. ஆனால், உண்மை என்னவென்றால், என்னை சிறுவயது முதலே அறிந்தவர்கள் யாரும் நானும், ஆன்மிகமும் ஒன்றாக இணைந்து செல்வோம் என்று அறிந்து கொள்ளவில்லை. அவர்களுடைய எதிர்ப்பார்ப்பை மீறின செயல் அது. ஏனென்றால், அவர்கள் நம்பிவந்த மதம் என்பவைகள் அனைத்திற்கும் எதிராகவே செயல்பட்டேன்.

அவர்கள் எதை வணங்குதல் என்று கருதினார்களோ, அது எனக்கு மிகவும் மடத்தனமாகப்பட்டது. அவர்கள் யாரை சந்நியாசி என்று கருதினார்களோ, அவர்கள் எனக்கு வாழ்க்கையிலிருந்து தப்பிச் சென்றவர்களாகவேப்பட்டது. அவர்கள் எதை வேதம் என்று கருதினார்களோ, அதை நான் என் காலால் மிதிக்கக்கூடிய சாதாரணப் புத்தகமாகவேபட்டது. அவர்கள் எதையெல்லாம் சந்தேகமற நம்பினார்களோ, நான் அவைகளையெல்லாம் சந்தேகக் கண்ணோடு நிச்சயமற்றது என்றே கருதினேன். அவர்களுடைய கடவுள், ஆன்மா மற்றும் பரிகாரம் காணுதல் போன்றவைகள் எனக்கு விளை யாட்டாகவும், வேடிக்கையாகவுமே தோன்றியது!

அவர்களுடைய கடுமைத்தன்மை எனக்குச் சிறுபிள்ளைத் தனமாகப்பட்டது. அவர்கள் கடவுளின் சிலைகளுக்கு முன், தன் கைகளைக் கட்டிக் கொண்டு வணக்கமாக உட்கார்ந்திருப்பது, என்னிடம் சிரிப்பையும் மற்றும் அவர்களுக்குத் தொந்திரவு கொடுக்க வேண்டும் என்ற ஆர்வத்தையுமே தூண்டும். இப்படி அவர்கள் செய்யும் எல்லாமே எனக்கு சிறுபிள்ளைத்தனமாகப்பட்ட காரணத்தால், பிறகு நான் ஒரு பெரிய மதவாதியாக மாறியதை அவர்களால் கற்பனை பண்ணிக் கூடப் பார்க்க முடியவில்லை.

அந்தச் சக்தி வெடித்தலுக்கு முன், அந்த நாளில் யார் யார் என்னை அறிந்திருந்து, இப்பொழுது இறந்துவிட்டார்களோ, அவர்களெல்லாம் மீண்டும் உயிர்பெற்று, என்னை இப்பொழுது நான் இருக்கும் மிகவும் வித்தியாசமான நிலையைக் கண்டால், அவர்களால் என்னை நிச்சயம் அடையாளம் கண்டு கொள்ள முடியாது! அவர்கள் அறிந்த அதே ஆள்தானா என்று அவர்களால் கற்பனை பண்ணிக் கூடப் பார்க்க முடியாது!

அவர்களால் நிச்சயம் நம்ப முடியாது. ஏனென்றால், அவர்கள் நம்பிய மதங்களையெல்லாம், மதமில்லை என்று வாதிட்டவன் நான். அவர்களைப் பொருத்தவரையில், நான் ஒரு நாஸ்திகன். அதில் முழுமையாக இருந்தேன் என்றே கருதினார்கள். இது என் தகப்பனார் வழிவந்த உறவினர்கள், மற்றும் பிற உறவினர்கள், நண்பர்கள் மற்றும் என்னுடன் வேலை செய்தவர்கள் எல்லோருக்கும் பொருந்தும்.

அவர்களைப் பொருத்தவரையில், நான் ஒரு முழு நாத்திகவாதிதான். ஆகவே, அவர்களெல்லாம் 20-25 வருடங்களுக்குப் பிறகு, இப்பொழுது என்னைச் சந்திக்க நேர்ந்தால், ஒரு பெரிய அதிர்ச்சியை கண்டிப்பாக அடைவார்கள். அதைப் போல, என்னைச் சுற்றியிருந்த நாத்திகவாதிகள் எல்லோரும், இப்பொழுது என்னைச் சந்தித்தால் மிகவும் சங்கடப்படுவார்கள். ஏனென்றால், அவர்கள் இன்னும் நாத்திக வாதிகளாகவே இருக்கிறார்கள்!

என்னால் நாத்திக வாதியாக மாறிய ஒருவனை, சமீபத்தில் என்னுடைய கிராமத்துக்கு நான் சென்றிருந்த பொழுது, சந்திக்க நேர்ந்தது. அவன் இன்னும் நாத்திகவாதியாகவே இருந்தான். அவன் என்னைக் கண்டு பயப்பட்டான்! அவன், நான் அப்பொழுது என்ன சொன்னேனோ, அவைகளை இன்றுவரை நம்பிவருவதாகச் சொன்னான். ஆகவே, நான் அப்பொழுது என்னவெல்லாம் செய்தேனோ, அதனால்தான் நான் ஞானம் அடைந்தேன் என்று என்னால் சொல்ல முடியவில்லை.

என்னைப் பொருத்தவரையில், அதை முன்பே அறிந்துகொண்டு, அதைச் சொல்ல முடியாது. அது இதுவரை அறியப்படாதது. அப்படியிருக்கும்பொழுது, அதனுடைய விலாசம் யாருக்குத் தெரியும்? அதற்கு என்று தனியிடம் எதுவுமில்லை. அப்படி ஏதும் இருந்தால், அதன் விலாசத்தைக் கண்டு பிடித்து, நீங்கள் அங்கே செல்லலாம். அப்படி யாராவது அதன் விலாசத்தைக் கொடுத்தால், அவன் மதத்தன்மை வாய்ந்தவன் அல்ல என்று கண்டுகொள்ளவும். அதை அறியாமல், எப்படி ஒருவன் அதைத் தீர்மானிக்க முடியும். அப்படிப்பட்ட மதத்தன்மை யற்றவன் செய்வதெல்லாம் மதத்தன்மையற்றதாகவே இருக்கும். ஆகவே, அதை இலக்கு வைத்து யாரும் சொல்ல முடியாது. மற்றும் அதை அறிந்துகொண்டு அந்தத் திசையில் செல்லவும் முடியாது.

ஆமாம். மதத்தன்மையற்று வாழ்ந்த சிலருக்கு, அவர்களுடைய வித்தியாசமான முயற்சியால், தங்களுடைய மதத்தன்மையற்ற செயலை திடீரென்று விட்டுவிட, அவர்களுக்கு ஒரு புதிய அனுபவம் கிட்டியிருக்கிறது. அவர்கள் அதை விட்டதனால், மதத்தன்மை யுடையவர்களாக மாறவில்லை. அவர்களுடைய மதத்தன்மையற்ற

செயல் திடீரென்று முழுமையாக மறைய, ஒருநாள் அவர் தான் எதுவுமற்று (NAKED) வெறுமனே இருப்பதை உணருகிறார். மதத்தன்மையற்ற ஆடைகள் அனைத்தும் இப்பொழுது அவரைவிட்டு அகன்றுவிட்ட நிலையில், ஒரு இன்ப அதிர்வு அவரிடம் ஏற்பட்டு, அவர் ஆச்சரியத்துடன், ''ஆஹா, இது ஏதோ ஆன்மிகப் புதுமை! என்னிடம் நிகழ்ந்தது ஒரு மதத்தன்மைவாய்ந்த அனுபவம்தான்!'' என்று மகிழ்ச்சியுடன் கூறுவார்.

ஆகவே, மதத்தன்மை வாய்ந்த அனுபவம் என்பது ஒரு எதிர்பாராத நிகழ்தல்தான். அது முன்பே தீர்மானித்து நிகழ்தல் அல்ல. மற்றும் அது ஒரு சாதனை அல்ல. மேலும், அது மெல்ல மெல்ல முயற்சி செய்து அடைந்த் இலக்கும் அல்ல. ஆனால், நீங்கள் மதத்தன்மையைப் புறக்கணித்து, மறுத்து வாழ வாழ, அதுவே ஒரு கட்டத்தில் சிதறிவிடுகிறது. அந்த அறியாமையும், பொய்யான விஷய ஞானங்களும் அழியும்பொழுது, ஞானத்தன்மை தன்னை வெறுமனே வெளிக்காட்டிக் கொள்கிறது. ஆகவே, அந்தத் தெய்வீக ஞானத்தை, ஒரு இலக்காக வைத்து நீங்கள் எதுவும் செய்ய முடியாது. அறியாமை அழியும்பொழுது, இருக்கும் ஞானத்தன்மை தன்னை வெளிப்படுத்திக் காட்டுகிறது. அவ்வளவுதான்.

எல்லாவற்றிற்குமே, என்னுடைய பார்வை எளிதாகவே இருக்கும். ஒரு தீவிரவாதி, சாத்வீகவாதியாக மாறமுடியாது. எப்படி ஒரு தீவிரவாதி, சாத்வீக வாதியாக மாற முடியும்? அவன் எதைச் செய்தாலும், அதில் மிருகத்தன்மை கலந்தே இருக்கும். ஏன், அவன் சாத்வீகவாதியாக மாறுவதில் கூட, அவன் தன் தீவிரத்தைக் காட்டத்தான் செய்வான்! அப்பொழுது வெளித்தன்மைக்கு அவன் சாத்வீக வாதியாகவும், தன் உள்ளே தீவிரவாதியாகவுமே அவன் இருப்பான். அந்த உள்ளடங்கிய தீவிரவாதம், முழுமையானது.

ஆனால், ஒரு நாள் அவனுக்குத் தீவிரவாதத்தில் அலுப்பு அல்லது களைப்பு ஏற்பட வாய்ப்புண்டு. ஒருவன் எப்பொழுது முழுமையான பரபரப்பில் மற்றும் நிறைந்த கஷ்டத்தால் ஏற்படும் கவலையால் உண்டாகும் தாங்க முடியாத துக்கத்தால், அவன் அந்த தீவிரமான

சூழ்நிலையிலிருந்து ஒரே தட்டவையாகக் குதித்து வெளியேறுகிறான். அது எப்படியென்றால், நீங்கள் செல்லும் வழியில் திடீரென்று ஒரு பாம்பு குறுக்கே வந்தால், நீங்கள் எப்படிக் குதித்து மறுபக்கம் ஓடுகிறீர்களோ அல்லது உங்கள் வீட்டில் தீப்பிடித்துக் கொண்டால், எப்படி குதித்து வெளியேறுகிறீர்களோ, அதைப் போல, அதிலிருந்து ஒரே தாவலாக வெளியேற வேண்டும். ஒருவன் மிகவும் தீவிரமாக இருக்கலாம். ஆனால், அந்தத் தீவிரத்தன்மையே ஒரு இறுக்க நிலையை அல்லது கஷ்டத்தை ஏற்படுத்தி, அதன் உச்சநிலையில் ஒரு கட்டத்தில், நீங்கள் மேலும் தீவிரமாக இருக்க முடியாது. அதாவது தீவிரத்தன்மையில் அப்பொழுது முழுமையாக இருக்கிறீர்கள். அப்பொழுது அது வெடித்து சிதறுகிறது. அதன்பிறகு அவர் தன்னை ஒரு தீவிர தன்மை உள்ளவராகக் கருத முடியவில்லை. அதாவது அவருடைய தீவிரத்தன்மை அவரைவிட்டு முழுமையாக நீங்கிவிட்டது. இப்பொழுது அவர் முழுமையான சாத்வீக நிலையில் இருக்கிறார்.

இப்படித்தான் சாத்வீகத்தன்மை ஒருவனிடம் முழுமையாக ஏற்படமுடியும். அது மெல்ல மெல்ல நடக்கும் செயல்அல்ல. மெல்ல மெல்ல மேலே ஏறி முன்னேறிச் செல்வது அல்ல. அப்படிச்செய்வது யார்? அந்த தீவிரத் தன்மை உள்ளவனா? அவன் அப்படி மேலே ஏறினால், அவனுடைய தீவிர தன்மையும் கூடவே வரும். அப்படி ஏறி, அவனால் சாத்வீகத்தன்மையை அடைய முடியாது. ஒரு திருடன் எவ்வளவு அடிகள் வைத்து முன்னேறினாலும், அவன் திருடனாகவேதான் இருப்பான். அவனால் ஒருபோதும் திருட்டுத்தன்மையிலிருந்து விடுபடமுடியாது. ஒரு பொய்யன், எவ்வளவு அடிகள் வைத்து முன்னேறிச் சென்றாலும், பொய்யன், பொய்யனாகவேதான் இருப்பான். அவன் ஒருக்காலும் உண்மை பேசுபவனாக மாற முடியாது. ஆனால், அவனிடமிருந்து பொய்மை முழுமையாக விடுதலையடைந்தால், அவன் தானே உண்மையை உணருவான்.

ஆகவே, வாழ்க்கையில் எது அதிமுக்கியமானதோ, தெய்வீகமானதோ, அதை உங்களால் கொஞ்சம் கொஞ்சமாக முயற்சி செய்து அடைய முடியாது. அதாவது, ஆன்மிகத்தில், முயற்சி தோல்வியைத்தான் கொடுக்கும். ஆகவேதான், எனக்கு என்ன நேர்ந்தது

என்று அது நேரும் வரை எனக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. மேலும், அது மதத்தன்மை வாய்ந்த மேன்மையான ஒரு தெய்வீக நிகழ்ச்சி என்று கூட என்னால் அப்பொழுது எண்ணிப் பார்க்க முடியவில்லை. நான் அதை எப்படிப் புரிந்து கொள்ள முடியும்? அறிந்துகொள்தலும், புரிந்துகொள்தலும் எப்பொழுதுமே ஏற்கனவே ஓரளாவாவது நிகழ்ந்திருக்க வேண்டும். ஆனால், இந்த அனுபவம் மிகவும் புதியது. உதாரணமாக, நீங்கள் இன்று என்னிடம் வந்தால், நீங்கள்தான் தந்தோஜி என்று என்னால் புரிந்து கொள்ள முடியும். ஏனெனில், நீங்கள் நேற்றே வந்திருக்கிறீர்கள். அதனால், உங்களை என்னால் சுலபமாகப் புரிந்து கொள்ள முடிகிறது. நீங்கள் என்னை முதன் முதலில் சந்திக்கும் பொழுது நேருவது என்னவென்றால், ஒரு நட்புப் பரிவர்த்தனை; புரிந்து கொள்தல் அல்ல.

ஆகவே, அந்தச் சக்தி வெடித்தல் என்னிடம் முதன் முதலில் நிகழும்பொழுது அதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நான் அப்பொழுது உணர்ந்து கொண்டது என்னவென்றால், ஏதோ ஒரு பெரிய மாற்றம் என்னிடம் நிகழ்ந்திருக்கிறது என்பது மட்டும்தான். அது, இதுவரை என்னிடம் நிகழ்ந்ததில்லை. அதை மட்டும் என்னால் உறுதியாகச் சொல்ல முடியும். அவ்வளவுதான்.

நான் அதனோடு பரிச்சயமாவதற்கு, கொஞ்ச நாட்களாகியது. நான் அதனிடம், ''நீ யார், நீ என்னவாக இருக்கிறாய்?'' என்று கேள்விகள் கேட்பதன் மூலமாக, நான் அதனோடு மெல்ல மெல்ல பரிச்சயமானேன். ஆனால், இந்த பரிச்சயம் எனக்கு மிகவும் விநோதமாகவே இருந்தது. அதை அறிந்துகொள்வதற்று வெளியிலிருந்து வந்தவைகளனைத்தும் உபயோகமற்றுவிட்டது. அதற்குபதில், மேலும் சில, என்னிடமிருந்து அகன்றுவிட்டது. நான் இதுவரை அறிந்திராத அத்துடன் மட்டும்தான் மிகவும் பரிச்சயமாகும் நிலைக்குத் தள்ளப்பட்டேன். அப்படியும் அதனுடன் முழுமையாக என்னைப் பரிச்சயமாக்கிக் கொண்டேன் என்று சொல்ல முடியாது. அதாவது அந்தப் பரிச்சயம் முழுமை அடையவில்லை. ஏனென்றால், அது தினமும் மாறிக் கொண்டே இருந்தது! நான் அதை ஒரு கட்டத்தில் முழுமையாக அறிவதற்கு முன்பே, அது புதியதன்மைக்கு வேறாக மாறிவிடுகிறது! அதாவது அது மறுபடியும் புதிய தன்மையை எடுத்துக் கொள்கிறது. அது ஆன்மிக

ஞானத்தின் முடிவில்லாத யாத்திரை என்று மட்டும் புரிந்தது. அதற்கு ஆரம்பமும் இல்லை, முடிவும் இல்லை. அது எல்லையில்லாதது.

மதத்தன்மை என்பது ஒரு இறந்த முடிவு அல்ல; ஆனால் அது ஒரு தெய்வீக முடிவு என்று கூறலாம். அதை ஒரு ஆற்றோட்டத்துக்கு ஒப்பிடலாம். தினமும் அதன் கரையோரம் மாற்றம் அடைந்துகொண்டே இருக்கிறது. தினமும்,அந்த மரங்களின் தோற்றத்தில் மாறுதல் ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறது.புதிய பாறைகளும், புதிய குன்றுகளும், புதிய சந்திரனும் மற்றும் புதிய நட்சத்திரங்களும் தோன்றிக் கொண்டே இருக்கின்றன.நேற்றுப் பார்த்த அனைத்தும், இன்று மறைந்துவிட்டன. இந்தத் தெய்வீக அனுபவத்தில், ''நான் அதை அடைத்துவிட்டேன், நான் அதைப் புரிந்துகொண்டேன், தெரிய வேண்டிய அனைத்தையும், தெரிந்துகொண்டேன்'' என்று யாரும் உறுதியாகச் சொல்ல முடியாது. அப்படி யாராவது அந்த அர்த்தத்தில் சொன்னால், அவர் அதை அடையவில்லை என்றுதான் கூறவேண்டும். ஒருவர்தான் அதை அடைந்ததாகச் சொல்லமுடியும். அவர் யாரென்றால், அந்த தெய்வீகத்தன்மையை முழுமையாக அடையவில்லை என்று புரிந்துகொண்டவர் எவரோ,அவர் தான். ஏனெனில் அது முடிவில்லாதது. யாராவது கடலில் விழுந்தால், அவர் அதை அடைந்து விட்டேன் என்று கூறலாம் . கரைகள் மறைந்துவிட்டது என்றுகூடக் கூறலாம். ஆனால், அவர் கடலை முழுமையாக அடைந்துவிட்டதாக ஒருக்காலும் கூற முடியாது. ஏனென்றால், எங்கும் கடல் தான் சூழ்ந்திருக்கிறது. ஒரு புதிய கரையை அவரால் காணவே முடியாது. பழைய கரை என்பது அவரது சக்திக்கு எட்டாத தொலைவில் உள்ளது.

ஆகவே, ஒரு மதத்தன்மை வாய்ந்தவன், தான் ஆன்மிகத்தில் அடைந்த நிலையைப்பற்றியும், வெற்றியைப்பற்றியும் எதுவும் எழுதமுடியாது. அவன், அந்தப் பழைய நிலை இப்பொழுது என்னிடம் இல்லை என்று வேண்டுமானால் கூறலாம். அடுத்து, இப்பொழுது நிகழ்ந்த புதிய நிலையில், ஒவ்வொரு கணமும், ஒவ்வொரு நாளும் மாற்றம் நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. ஆகவே, அது இப்பொழுது புதிதாக இருக்கிறது; மறுபடியும் புதிதாகவே தோன்றகிறது. அது நாளை எப்படி இருக்கும் என்று யாரும் உறுதியாகச் சொல்ல

முடியாது.ஏனெனில், நேற்று இருந்தது, இன்று கிடையாது. இன்று இருப்பது மெல்ல மெல்ல மறைந்துகொண்டே இருக்கிறது. ஒவ்வொரு கணமும் மாறும் எல்லையற்ற இந்த வாழ்வு ஒரு கணமும் நிலையாக இருப்பதில்லை- இதுதான் மதத்தன்மை வாய்ந்த அனுபவம். நாம் அந்த நிலையை அடைய முயற்சி செய்வதே இல்லை. அப்படி முயற்சி செய்பவர்களும் அதை முழுமையாக அடைவது இல்லை.

ஆகவே, யாரெல்லாம் அதை அடைந்தேன் என்று கூறுகிறார்களோ, அவர்கள் உண்மையிலேயே அதை அடையவில்லை; அடையவும் முடியாது. ஆனால், யார் ஒருவர் அதை , மேலும் மேலும் தினசரி அடைந்து கொண்டிருக்கிறார்கள் என்றும், அதை முழுமையாக இன்னும் அடையவில்லை என்றும் அல்லது அதை முழுமையாக அடைந்தபிறகு தெரிவிக்கிறேன் என்றும் அல்லது அது இன்னும் அடைய முடியாத நிலையில்தான் இருக்கிறது என்றும் கூறுகிறார்களோ,அவர்கள் தான் உண்மையிலேயே அதை அடைந்தவர்கள். உண்மை என்பது முழுமையாகத் தெரிந்துகொள்ள முடியாத நிலையில் இருக்கும் ஒரு புரியாத புதிர். இருந்தாலும், ஒருவர் அதை அறிந்து கொண்டதாகவே உணருவார். ஆகவே, நம்முடைய மொழிகள் எல்லாவற்றையும் தவறாகவே வெளிப்படுத்துகின்றன. வாழ்க்கையில், ஒருவர் ஆன்மீக இலக்கோடு அதை முயற்சிசெய்யும்பொழுது- அநேகம்பேர்கள் இப்படித்தான் செய்துகொண்டு இருக்கிறார்கள்- அவர்கள் அதை ஒருபோதும் அடைவது இல்லை.

சமீபத்தில்,ஒருவர் என்னை அணுகி, தான் சந்நியாசம் பெற இயலுமா என்று கேட்டார். அதற்கு நான் "நீங்கள் இப்படி கேட்டுக் கொண்டே இருக்கவேண்டும் என்ற நிலையில் இருந்தால், நீங்கள் சந்நியாசம் பெற வேண்டாம். ஏனென்றால்,அதனால் ஒன்றுமட்டும் உறுதியாகத் தெரிகிறது. அதாவது நீங்கள் சந்நியாசத்தை இயல்பாக எடுத்துக்கொள்ள விரும்பவில்லை. சந்நியாசத்தை எடுத்துகொள்வது அல்ல. அதை எடுத்துக்கொள்ளவும் முடியாது. ஒரு நாள் அது தானாகவே உங்களிடம் நிகழும். நீங்கள் வெளியே சடங்குகளாக எடுத்துக்கொள்வது உண்மையான சந்நியாசம் இல்லை. அது சந்நியாச நிலைக்கு ஓர்

ஆரம்பம்தான். நீங்கள் அதில் முன்னேறிச் செல்லும்பொழுது, ஒருநாள் திடீரென்று சந்நியாசியானதை உணர்வீர்கள். அப்பொழுது, நீங்கள் முன்பு இருந்த ஆள் இல்லை என்பதை உணர்வீர்கள்.'' என்றேன் அப்பொழுது அவர், ''அநேகம்பேர்கள் சந்நியாசம் எடுத்துக் கொள்கிறார்களே'' என்றார்.

என்னைப் பொருத்தவரையில், அதை எடுத்துக்கொள்தல் என்பது பொய்தான். எடுத்துக்கொள்ளும் மதத்தன்மை என்பது பொய். அதை அடைய முயற்சிசெய்வதும் பொய்தான். வாழ்வு, இறப்பு, வெறுப்பு, ஆக்ரமிப்பு, துன்பம், வலி, பரபரப்பு- இவைகளையெல்லாம் நாம் எடுத்துக் கொள்வது அல்ல. அவைகள் உங்கள் மன இயல்புப்படி தானே ஏற்படுகின்றன. அதில் முழுமையாக வாழுங்கள். அந்த முழுமையான அனுபவத்திலிருந்து, அதிலிருந்து கடந்துசெல்தல் தானே நிகழும்.

எந்த அளவுக்கு அதில் முழுமையாக வாழ்கிறோமோ, அந்த அளவுக்கு, அதைத்தாண்டி அப்பால் செல்ல முடியும். அது எப்படியென்றால்: ஒரு மனிதன் ஆற்றில் மூழ்கிக்கொண்டு இருக்கிறான். அவன் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள முனைந்தால், ஒரு சமயம் அவன் நீரில் மூழ்கி இறக்க நேரிடலாம். அப்படி அவன் நீரில் மூழ்கினால்; அப்படியே அவன் அதில் ஆழ்ந்து மூழ்கட்டும். அவன் நீந்த முயற்சிக்காமல், நீரின் ஆழத்துக்கு அமிழ்ந்து சென்றால், அவன் தரைப்பகுதியைத் தொட நேரிடும். பிறகு அதை உதைத்து, மேலே திரும்பிவர முடியும். ஆகவே, யார் ஒருவன் மூழ்கத் தயாராக இருக்கிறானோ, அவன் காப்பாற்றப்படுவான். யார் ஒருவன் மூழ்கப் பயப்படுகிறானோ அவன் நிச்சயமாக மூழ்கிவிடுவான். இறந்தவன் நீரில் மேல் மிதக்கிறான். உயிரோடு இருப்பவன் அதில் மூழ்கிக்கொண்டு இருக்கிறான். அந்த இறந்த உடல் மேலே மிதப்பதற்குக்காரணம், அது வாழப் போராடுவதில்லை. ஆகவே, அது இயல்பாக நீரின்மேல் மிதக்கிறது.

ஆகவே,நான் ஒரு இறந்த உடலைப்போல, நீரின்மேலே வருகிறேன். நான் அதற்காக எந்த முயற்சியும் செய்யவில்லை.

அதுமட்டுமல்ல, அடுத்ததாக எனக்கு என்ன நேரிடப் போகிறது என்றும் எனக்குத் தெரியாது. நான் எங்கே செல்லப் போகிறேன் என்று இன்றைக்கு மாத்திரமல்ல, நாளைக்கும் தெரியாது. அந்தக் கேள்வியே என்னிடம் எழவில்லை. நான் இப்படி இயல்பாக எங்கு சென்று அடைகிறேனோ, அதுதான் என்னுடைய இலக்கு. நான் அடையவேண்டிய இடம். எனக்கு என்று எந்தக் குறிக்கோளும் கிடையாது. ஆகவே, நான் அடைய வேண்டியது என்று எதுவும் என்னிடம் கிடையாது. மற்றும் எந்தத் தேடுதலும் கிடையாது. ஆனால், இவைகள் அனைத்தும் என் வாழ்க்கையில் நடந்த எந்த வித்தியாசமான நிகழ்ச்சிகளாலும் நேர்ந்தது அல்ல. மேலும், அதைப் போன்ற வித்தியாசமான நிகழ்ச்சிகளிலும் நானாகப் பங்கு பெறவில்லை. அந்தச் சத்திவெடித்தலும் எந்த நிகழ்ச்சிகளாலும் ஏற்பட்டதில்லை. அநேக நிகழ்ச்சிகள் கூட்டாக அதற்கு உதவின என்று கூறலாம்- அதைப் போலவேதான் நிகழ்ந்தது.

இந்த உலகத்தில், மதம் என்பது ஒரு பெரிய பொய். ஏனென்றால், அதை நம்மால் எடுத்துக் கொள்ள முடியும் என்று மக்கள் நம்புகிறார்கள். நீங்களாக எதை எடுத்துக்கொண்டாலும், அது ஒருக்காலும் உங்களைவிடப் பெரிதாக இருக்கமுடியாது. மிஞ்சிப் போனால், உங்களுடைய 'நான்' என்ற அகங்காரம்தான். அதை எடுத்துக் கொண்டால், அது எப்படி என்னை விடப் பெரிதாக இருக்கும்? என்னை விடப் பரந்ததாக இருக்க முடியும்? அது தானே வரும்பொழுது, அதை பிடித்துக்கொள்ள, நாம் அங்கு இருப்பதில்லை. நாம், நம்மையே இழந்தபிறகுதான் அது உங்களை நோக்கி வருகிறது. அதை நீங்கள் எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம்-அதை உண்மை என்றும், கடவுள் என்றும், ஞானம் என்றும் அழைத்துக் கொள்ளுங்கள். அது ஒரு பெரிய விஷயமல்ல. அந்த தெய்வீக வெறுமை (VOID) நிலையில், இவைகள் அனைத்தும் நிகழ்கிறது.

இதை யார் அடைந்தார்களோ, அவர்கள் அதைக் கடவுளின் அனுக்கிரகம் என்றே உணர்வார்கள். அப்படி அவர்கள் சொல்வதற்குக் காரணம், அது அவர்களுடைய முயற்சியால் அடைந்தது கிடையாது. ஆனால் அதைக் கடவுளின் அனுக்கிரகத்தால்

மட்டும் அடைந்ததாகவும் எடுத்துக் கொள்ள முடியாது. ஆனால், அது அப்படி உங்களைஉணரச்செய்யும். ஏனெனில், அதில் உங்களுடைய முயற்சி என்று எதுவும் கிடையாது.

ஆகவேதான், நான் அதைத் தேடி அடையமுடியாது என்று ஆரம்பத்திலேயே சொல்லிவிடுவேன். கடவுளுடைய பெயரும், விலாசமும் தெரியாத நிலையில், நாம் அவரை எங்கே , எப்படித் தேடுவது? மேலும், அவரை யாரும் அறிந்திருக்கவில்லை. அப்படியிருக்கும்பொழுது, எப்படி அவரை அடையாளம் கண்டுகொள்வது? நமக்கு ஏற்கனவே அவரைத் தெரிந்திருந்தால், தேடுவதற்கு அவசியம் ஏது? தேவையே இல்லையே? ஆகவே, அப்படி தேடும்பொழுது, என்னிடமுள்ள 'நான்' அழிகிறது. அப்பொழுது அவர் என்னைக் கண்டுகொள்கிறார். அவருக்கு என்னைப்பற்றி மிக நன்றாகத் தெரியும்.

ஒரு சமயம், அவர் ஏற்கனவே என்னைக் கண்டுபிடித்திருக்க வேண்டும். ஆனால், நான் அவரைத் தேடி அங்கும் இங்கும் ஓடிக் கொண்டே இருந்தேன். அதில் எனக்கு இன்றுவரை களைப்பு ஏற்படவில்லை. ஆனால், என்னுடைய முயற்சியை கை விடும் வரை, களைத்து அலுத்து முழுமையான ஓய்வு நிலையை அடையும் வரை,அவர் கண்டிப்பாகக் காத்துக் கொண்டு இருப்பார். அப்படி நான் களைத்து விழுவது, அவரது காலடியாகவே இருக்கும்.



★



## 6. வாழ்வு முழுவதும் புரியாத புதிர்களே!
## (LIFE IS FULL OF MYSTERIES)

''வாழ்வின் அடிப்படை உந்து சக்தியாகிய மூன்று குணங்களைப்பற்றி எங்களுக்கு விளக்கியிருக்கிறீர்கள். முதலில் 'தாமஸ' (TAMAS) குணம். இது செயலற்ற, இயங்காத, சோம்பல் தனமான நிலையைக் குறிப்பிடுவது . அடுத்த குணம் 'ராஜஸ' (RAJAS) என்பது. இது செயல்திறனையும், செயலில் ஆர்வத்தையும் குறிப்பிடுவது. மூன்றாவது குணம் 'சத்வா' (SATVA) எனப்படுவது. இது மனத்தெளிவு, அமைதி மற்றும் ஞானத்தைக் குறிப்பிடுவது. லாசூ (LAOTZU), ஜீசஸ், மஹாவீரர் மற்றும் கிருஷ்ணா போன்றவர்களிடம் இந்த மூன்று குணங்களும் சமமாக இருந்ததாக, நீங்கள் எங்களுக்கு விளக்கியிருக்கி றீர்கள்.

இந்தச் சமயத்தில், நீங்கள் முன்பு மிகவும் வித்தியாசமான புரட்சிக் கருத்துக்களை வெளியிட்டதை இப்பொழுது நாங்கள் நினைவு கூறுகிறோம்.அவைகள், சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் மதசம்மந்தமாக இருந்தன. அப்பொழுது நாடு முழுவதும், நீங்கள் மிகுந்த உணர்வுப்பூர்வமான, மறுப்புடன் கூடிய பல கருத்துகளை வெளியிட்டீர்கள். அதிலிருந்து நாங்கள் புரிந்து கொண்டது என்னவென்றால், ஜீசஸ் போல, செயல்திறன் மிக்கவராகவும், சமூக மாற்றத்தில் மிகவும் ஆர்வமுடையவராக இருந்தீர்கள் என்பதே. ஆனால் 1970க்குப் பிறகு , நீங்கள் மெல்ல உங்கள் செயலைச்சுருக்கிக் கொண்டுவிட்டீர்கள். நீங்கள் தெளிவு மிகப்பெற்று அமைதி அடைந்து விட்டதாக நாங்கள் உணர்கிறோம். இதைப்போன்ற மாற்றம் நிகழ வாய்ப்பிருக்கிறதா?''

இவைகளைப் புரிந்துகொள்ள, நாம் சிலவற்றை முதலில் எடுத்துக்கொள்வோம். முதலாவதாக, புத்தா, மஹாவீரா, முகமது மற்றும் ஜீசஸ் போன்றவர்கள், இந்த மூன்று குணங்களில், ஒன்றைத்தான் தாங்கள் விளக்குவதற்கு ஏதுவாக எடுத்துக் கொண்டார்கள். 'ராஜஸ' குணத்தை, ஜீசஸும், முகமதுவும் பெரும்பான்மையாகக் கையாண்டார்கள். லாசூவும், ரமண மகரிஷியும் இந்த மூன்று குணங்களையுமே ஒருங்கே கையாண்டிருக்கின்றனர்.

இதைத்தவிர இன்னுமொரு சாத்யக்கூறும் இருக்கிறது. நான் அதை பரீட்சார்த்தமாகக் கையாண்டு வருகிறேன். அதாவது, நான் இந்த மூன்று குணங்களை அடுத்தடுத்து கையாண்டு வருகிறேன். என்னுடைய அபிப்ராயத்தில், இதைப்போல கையாள்வது மிகவும் விஞ்ஞானப் பூர்வமானது என்று கருதி, அதையே நடைமுறைப்படுத்தி வருகிறேன்.

எல்லோரிடமும் இந்த மூன்று குணங்கள் இருக்கின்றன. எல்லோரிடமும் இந்த மூன்று குணங்களின் சேர்க்கை இருப்பதால், உடலும், மனமும் ஒரு குறிப்பிட்டத்தன்மையில் செயல்படுகின்றன. எப்படி மூன்று கோடுகள் இல்லாமல், ஒரு முக்கோணம் ஏற்பட முடியாதோ, அதைப்போல,இந்த மூன்று குணங்களும் இல்லாமல், ஒருவன் தன் தனித்தன்மையை ஏற்படுத்திக் கொள்ள முடியாது. இந்த மூன்று குணங்களில், ஒன்று தவறினாலும் சரி, அவனுடைய தனித்தன்மை அழிந்துவிடும்.

ஒருவரிடம் சத்வகுணம் அதிகமாக இருந்தாலும், மற்ற இருகுணங்களும் அதற்குப் பின் மறைந்து செயலற்று இருக்கவே செய்யும். அவைகளுடைய நிழல், அந்த வெளிப்படும் சத்வ குணத்தில் தொடர்ந்து படிந்தே இருக்கும். இதன் அர்த்தம் என்னவென்றால், அந்த மறைவாக உள்ள இரு குணங்களும் அடுத்தடுத்து வெளிப்படக் காத்துக்கொண்டு இருக்கின்றன என்பதாகும். தற்பொழுது அவைகள் இரண்டாம்பட்சமாக உள்ளன. அவ்வளவுதான்.

ஆனால், கிருஷ்ணனிடம் மாத்திரம் இந்த மூன்றும் சமச்சீர் நிலையில் காணப்படுகின்றன. அதாவது ஒரு சமச்சீர் முக்கோணத்தில், மூன்று கோடுகளும் சமமாக இருப்பதுபோல. இந்தக் காரணத்தினால் தான், கிருஷ்ணாவைப் புரிந்துகொள்வது மிகவும் கடினமாக உள்ளது.

ஒரு குணம் மட்டும் தெளிவாக வெளிப்படும்பொழுது, அந்த மனிதரைப் புரிந்துகொள்வது மிகவும் சுலபம். இப்படிப்பட்டவரின் குணம் அல்லது தனித்தன்மை பெரும்பாலும் ஒரே சீராக இருக்கும். நீங்கள் லாசூவிடம் காணும் நிலையான தனித் தன்மையை,

கிருஷ்ணாவிடம் காணமுடியாது. லாசூ கூறிய ஒரு வார்த்தையில் அடங்கிய அர்த்தம், அவருடைய அதே வார்த்தையில் பிற இடங்களிலும் ஒன்றாகவே இருக்கும். அதைப்போல, புத்தாவின் அறிக்கைகளும் ஏறத்தாளநிலையானதாகவே இருக்கும். புத்தர், ''எல்லா இடங்களிலும் உள்ள கடல்நீர் எப்படி ஒரேதன்மையில் உப்பு ருசியாக இருக்கிறதோ, அதைப்போல, என் போதனைகளை நீங்கள் ஆராய்ந்து பார்த்தால், அவைகள் கிட்டத்தட்ட ஒரே மாதிரியாகவே இருக்கும்.'' என்று கூறுகிறார்.

ஜீசஸிடமும், முகமதுவிடமும் ஒரே ஒரு குணம்தான் மேன்மையாக இருந்தது. ஆனால், கிருஷ்ணாவிடமோ, பலவிதத் தன்மைகள் வெளியாயின. அவருடைய மேன்மையான மூன்று குணங்களும் நூற்றுக்கணக்கான வகையில் ஒன்றோடு ஒன்று கலந்து வெளியாயின. ஆகவேதான், கிருஷ்ணனை பலவிதத் தன்மைகள் நிறைந்தவர் என்று அழைக்கிறோம். ஆனால், யாரும் கிருஷ்ணனை முழுமையாக ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். ஒருவர், அவருடைய ஒரு சில தன்மைகளை மட்டும்தான் எடுத்துக்கொண்டு அன்பு செலுத்தமுடியும். கிருஷ்ணன் பற்றிக் கூறியவைகள் அனைத்தும் ஒரு சார்பு உடையதே. அது முழுமை இல்லை. சங்கரரோ அல்லது ராமானுஜரோ அல்லது நிம்பர்க்காவோ (NIMBARKA) அல்லது வல்லபாச்சாரியாவோ (VALLABHACHARYA) அல்லது திலக்கோ அல்லது காந்தியோ அல்லது அரபிந்துவோ, கிருஷ்ணனை முழுமையாக ஏற்றுக் கொள்ளவில்லை. கிருஷ்ணனுடைய வாழ்க்கையில் எவைகளெல்லாம் நிலையற்றதாகவும், முரண்பாடு உள்ளதாகவும் இருந்ததோ, அவைகளை அவர்கள் ஒதுக்கிவிட்டார்கள்.

உதாரணமாக, சாத்வீகச் செயலில் மிகவும் ஈடுபாடு கொண்ட காந்தி, கிருஷ்ணன், அர்ஜுனனைப் போருக்குத் தூண்டி விடுதல் சம்மந்தமாக விளக்குவதற்கு மிகவும் சங்கடப்பட்டார். மேலும், காந்தி, உண்மையை உயிரினும் மேலாக மதித்தவர். ஆனால், கிருஷ்ணன் தேவையான சமயத்தில், பொய் சொல்வதற்குக்கூட கூசவில்லை. இதைக்

காந்தியால் புரிந்து கொள்ள முடியாது. கிருஷ்ணன் போன்ற மேலான நிலையில் உள்ளவர்கள், பொய் சொல்லிக் கூட ஏமாற்ற முடியும் என்று காந்தியால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. கிருஷ்ணன் அப்படிச் செய்திருந்தால், கிருஷ்ணன் காந்தியால் பூஜிக்கத் தகுந்தவர் இல்லை. காந்தியால் அந்த நிலையோடு அவரை ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

இந்தச் சங்கடத்தைப் போக்க ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது, கிருஷ்ணன் இதைப் போன்ற காரியத்தை உண்மையிலேயே செய்யவில்லை என்று விளக்க வேண்டியுள்ளது. இது ஒரு நீதிக்கதை தான் என்றும், உண்மையிலேயே மஹாபாரத யுத்தம் நடைபெறவேயில்லை என்றும் காந்தி நம்ப வேண்டியதாகிவிட்டது! அவரைப் பொருத்த வரையில், கௌரவர்களும், பாண்டவர்களும் மனிதப் பகைவர்கள் அல்ல என்றும், அந்தச் சண்டை புண்ணியத்துக்கும், பாவத்துக்கும், தெய்வீக லோகத்தில் நடந்த சண்டையைக் குறிப்பதாகும் என்றே நம்பினார். ஆகவே, மஹாபாரதம் என்பது, அவரைப் பொருத்தவரையில், ஒரு நீதிக்கதைதான். காந்தி, பாவத்துடன் போரிடப் பயப்படவில்லை. ஆனால், அந்தப் பாவம் புரிபவனை (VILLAN) அடிப்பதற்குப் பயப்பட்டார்! அவரைப் பொருத்த வரையில் பாவத்தைத்தான் ஒழிக்க வேண்டுமே தவிர, பாவம் செய்பவனை அல்ல.

ஆனால், பாவத்தை மட்டும் கொன்று ஒழிப்பது என்றால், அர்ஜுனனுக்குக் கூட எந்தச் சிக்கலும், மனக்கஷ்டமும் இருந்திருக்காது. ஆனால், அந்தப் பாவம் செய்த தீயவர்களை அவன் அழிக்க வேண்டியதாகிவிட்டது. அவர்களைக் கொல்வதா, வேண்டாமா என்ற தர்மசங்கடமான நிலை அர்ஜுனனுக்கு ஏற்பட்ட காரணம் என்ன வென்றால், அவனுக்கு எதிராகப் போர் செய்ய வந்திருப்பவர்கள் அனைவரும், அவனுடைய சொந்தக்காரர்கள் மற்றும் குருஸ்தானத்தில் உள்ள மதிக்கத் தகுந்த மூத்தவர்கள். அவர்களெல்லாம் 'என்னுடையவர்கள்' என்ற உணர்வு அவனிடம் மேலோங்கி விட்டது. அவர்கள் இல்லாமல் இந்த உலகம் நிறைவுபெறாது, முட்டாள் தனமானது, மகிழ்ச்சியற்றது என்று அவன் நினைத்தான்.

மூன்று குணங்களும் கிருஷ்ணனிடத்தில் ஒருங்கே செயல் பட்டதால், அவனுடைய தனித்தன்மையை யாராலும் முன்கூட்டியே தீர்மானிக்க முடியாது இருந்தது. அது நிலையற்று இருந்தது. என்னிடத்திலும் அதே நிலையற்ற தனித்தன்மைதான் இருக்கிறது. ஆனால், கிருஷ்ணனிடம் உள்ள அளவுக்கு இல்லை. என்னுடைய சொந்த அனுபவப்பரிட்சையில் நான் உணர்ந்துகொண்டது என்னவென்றால், இன்னொரு சாத்யக்கூறும் உண்டு என்பதுதான். அதாவது, எல்லோரிடமும் இந்த மூன்று குணங்களும் இருக்கின்றன. ஆனால் இந்த மூன்று குணங்களையும் உபயோகித்தால்தான், ஒருவனுடைய தனித்தன்மை முழுமையாக நிறைவு பெறும். எந்தக் குணத்தையும் அடக்கக்கூடாது. கிருஷ்ணனோ அல்லது நானோ அப்படி எந்தக் குணத்தையும் அடக்கவே இல்லை. அவைகளில் எதையும் உயர்த்தவில்லை. பொதுவாக ஒருவனிடம் உள்ள இந்த மூன்று குணங்களையும், ஆக்க பூர்வமாக உபயோகப்படுத்த வேண்டும்.

என்னுடைய சொந்தச் சோதனையில், ஒரு சமயத்தில் ஒரு குணத்தை மட்டும் வெளிப்படுத்த முயல்கிறேன். முதலில், தாமஸ குணத்தைக் கையாள்கிறேன். ஏனெனில், ஒவ்வொருடைய அடிப்படைத்தன்மை இந்தக் குணத்தில்தான் அமைந்திருக்கிறது. ஒரு தாயின் கர்ப்பத்தில், ஒன்பது மாதம் ஒரு குழந்தை வளரும் பொழுது, அது இந்தக் குணத்தில் தான் இருக்கிறது. அந்தக் குழந்தை முழுமையான இருட்டில் வளர்கிறது. அதற்கு எந்தச் செயலும் கிடையாது. மனித வாழ்க்கையில், அந்த நிலைதான் மிகவும் செயலற்ற நிலை என்று கருதலாம். ஏன், அந்தக் குழந்தை மூச்சுக் கூட விடுவது இல்லை! அது, அதனுடைய தாயாரால் நடத்தப்படுகிறது. அது சாப்பிடுவது கூட இல்லை. அதையும், அதனுடைய தாயாரே செய்கிறாள்! அந்தக் குழந்தையின் உடலில் ஓடும் இரத்தம் கூட, அதன் தாயாருடையதுதான். அந்த குழந்தை எதுவும் தனக்கென்று செய்வது கிடையாது. அது, ஒரு முழுமையான செயலற்ற நிலையில் வளர்கிறது. அங்கே குழந்தை என்ற ஒன்று இருக்கிறது. அதற்கு வாழ்வு என்று ஒன்று இருக்கிறது. ஆனால், அந்த வாழ்வு செயலற்று இயங்குகிறது!

தாயின் கருப்பையில் வளரும் குழந்தையின் வாழ்வு செயலற்று இருப்பதற்குக்காரணம், விடுதலை, மோட்சம் என்று தேடுதலின் ஆவல் அதனுடைய அடிமனத்தில் பிரக்ஞையற்ற ஞாபகத்தில் இருப்பதுதான் காரணம் என்று மனநல வல்லுனர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். அந்தக் கர்ப்பப்பையில் உள்ள குழந்தை மிகுந்த அமைதி நிலையில் அல்லது நிசப்தமான நிலையில் இருக்கிறது. அதனுடைய பிரக்ஞையற்ற மன ஆழத்தில் அந்த ஞாபகம் மறைந்திருக்கிறது. தாயின் கர்ப்பத்தில் இருக்கும் அந்த ஒன்பது மாதமும், அது மிகுந்த பேரானந்த நிலையில் இருக்கிறது. ஏனென்றால், அது செய்வதற்கு என்று எதுவும் இல்லை. அதற்கு எந்தப் பொறுப்பும், எந்தச்சுமையும், எந்த எதிர்ப்பார்ப்பும் எந்த வேலையும் கிடையாது. அது இந்தப் பேரியிக்க உயிர்த்தன்மையோடு இயல்பாக அப்படியே இருக்கிறது. நாம் விடுதலை என்று அழைக்கும் நிலையோடு, அதன் இந்த அமைதி நிலை ஒத்துப்போகிறது. இந்த அனுபவம் உங்களிடம் மறைந்து இருக்கிறது. ஆகவேதான், உங்கள் பிறப்புக்குப் பிறகு, நீங்கள் ஒருபோதும் ஆனந்தமாக இருப்பதில்லை. எல்லாவற்றிலும் ஏதோ ஒரு திருப்தியின்மையை நீங்கள் உணருகிறீர்கள். மனநல வல்லுனர்கள் மேலும் சொல்வது என்ன வென்றால், உங்களுக்கு ஏற்கெனவே அந்த ஆனந்த அனுபவம் இருந்து, அதை இப்பொழுது உள்ள நிலையோடு ஒப்பிட முடிந்தால், நீங்கள் அந்த ஆனந்த நிலையில் இருக்கக்கூடிய சாத்யம் ஏற்படும்.

வாழ்வு துன்பமயமானது என்று ஒவ்வொரு மனிதனும் கூறுகிறான். உங்களுக்கு மகிழ்ச்சி என்ற அனுபவம் ஏற்பட்டிருக் காவிட்டால், நீங்கள் துன்பத்தை எப்படி உணர முடியும். தான் இன்பத்தைத் தேடி அலைவதாக ஒவ்வொருவரும் கூறிக் கொள்கிறார்கள். இப்படித் தேடும் அந்த மகிழ்ச்சி அல்லது இன்பம் என்றால் என்ன? நீங்கள் முன்பு ருசித்திராத அந்த இன்பத்தை உங்களால் எப்படித் தேட முடியும்? நீங்கள் இதுவரை அறிந்திராத ஒன்றை, அறிய எப்படி ஆசைப்பட முடியும்? உங்களுடைய பிரக்ஞையற்ற மன ஆழத்தில், அந்த இன்ப அல்லது மகிழ்ச்சி விதை மறைந்து இருக்கிறது. நீங்கள் அந்த ஆனாந்தக்கீற்றை முன்பே அறிந்திருக்கிறீர்கள். அந்தச்

சொர்க்கத்தில் வாழ்ந்திருக்கிறீர்கள். அந்தத் தெய்வீகக் கீதத்தைக் கேட்டிருக்கிறீர்கள். நீங்கள் அவைகளை யெல்லாம் எவ்வளவு தூரம் மறந்திருந்தாலும், அந்தத் தணியாத தாகம் உங்கள் வாழ்வு முழுவதும் தொடர்ந்து வந்து கொண்டே இருக்கிறது. அதனுடைய ஞானம் உங்களுக்குள்ளேயே மறைந்திருக்கிறது! அதைத்தான் நாம் வெளியே தேடிக் கொண்டிருக்கிறோம்! உண்மையில், அதைத் தேட வேண்டிய இடம், உங்களுக்குள்ளே தான்.

அடுத்து, மனநல வைத்தியர்கள் என்ன சொல்கிறார்கள் என்றால், நீங்கள் விடுதலைக்குத் தேடுவது என்பது உண்மையிலேயே பிரபஞ்ச கருப்பையை தேடுவதற்குச் சமம்தான் என்றும் அதுவரையில், இந்த பேரியக்க உயிர்த்தன்மைதான் உங்களுடைய கருப்பையாக இருக்கும் என்பதாகும். இது மிகவும் அர்த்தமுடையதும், சிந்திக்கக் கூடிய அறிக்கையுமாகும். இந்தக் கட்டத்தில், ஒரு குழந்தை தன் தாயின் கர்ப்பத்தில் செயலற்று வளர்வதை நாம் ஞாபகப்படுத்திக் கொள்வது நல்லது. அந்தச் சமயத்தில், அது செயல் புரிய வேண்டும் என்ற கேள்விக்கே இடமில்லை. அது ஒரு பேரானந்த அமைதி நிலை. அந்த குழந்தை 24 மணி நேரமும் தூங்கிக்கொண்டு, மிக ஆழ்ந்த செயலற்ற தன்மையில் இருக்கிறது. அந்த 9 மாத காலத் தூக்கம் என்பது மிக நீண்டதுதான்! ஆனால், குழந்தை பிறந்த பிறகு, அதனுடைய தூக்கம் 22 மணி, 20 மணி, பிறகு 18 மணி நேரம் என்று குறைந்து கொண்டே வந்து, அது மெல்ல மெல்ல தன் விழிப்பு நிலையை அதிகரிக்கிறது. பல வருடங்கள் கழித்து, அந்தக் குழந்தையின் தூக்கம் 8 மணி நேர அளவில் நிலைப்படுத்தப் படுகிறது. பிறகு அநேக பிறவிகளுக்குப் பிறகு, அந்த தூக்க நேரம் மெல்ல மெல்ல குறைந்து 0 அளவுக்கு வந்து விடுகிறது. அதாவது தூக்கமற்ற, முழு விழிப்புநிலை! அப்பொழுது, அவன் தூங்குவது போல இருந்தாலும், அவன் முழுவிழிப்பு நிலையில் தான் இருக்கிறான்!

ஞான விழிப்பு, நிலை அடைந்தவர்களைத்தவிர, மற்றவர்கள் வெறும் தூக்கத்தில்தான் இருக்கிறார்கள் என்று கிருஷ்ணா சொல்கிறார்.

ஆனால், இந்த நிலையை அடைவதற்கு முன், ஒருவன் அநேக பிறவிகளை எடுத்தாக வேண்டும்.

செயலற்ற தன்மை என்பது அடித்தளம். பேரானந்த அமைதி நிலை என்பது உச்சம். வாழ்வு என்ற வீடு செயலற்ற தன்மையை அடித்தளமாகக் கொண்டது. அதன் நடுவில் உள்ள பகுதி செயல்புரியும் பகுதி. அந்த வீட்டின் மேல் உச்சி முடிவானது பேரானந்த நிலை. என்னைப் பொருத்தவரையில், இதுதான் வாழ்வின் அமைப்பு. ஆகவேதான், என்னுடைய வாழ்வின் முதற்பகுதியில் நான் செயலற்ற தன்மையைக் கடைப்பிடித்தேன்.

என் வாழ்வின் ஆரம்பகாலத்தில், லாவூவின் வாழ்க்கையைப் போல, தாமஸகுணத்தின் அற்புதங்களை அனுபவித்தேன். லாவூவோடு எனக்கிருந்த பிடிப்பு, என் வாழ்வின் அடித்தளமாகியது. அப்பொழுது ஒவ்வொன்றிலும் செயலற்று இருந்தேன். அதுதான் என்னுடைய அப்போதைய சாதனை எனலாம். முடிந்தவரை வெறுமனே இருந்தேன். வேறுவழியில்லாத நிலையில் அல்லது கட்டாயத்தின் பேரில், கையையோ அல்லது காலையோ தேவையான அளவுக்கு அசைப்பேன்!

என்னுடைய வீட்டில், என்னுடைய தாயார் எனக்கு முன்னே உட்கார்ந்து கொண்டே, ''வேறு யாரையும் காணோமே. சந்தையிலிருந்து காய்கறி வாங்கி வர வேண்டும்'' என்பார். அப்பொழுது அதை நான் கேட்டுக்கொண்டே சோம்பேறியாய் உட்கார்ந்திருப்பேன்! ஏன், அந்த வீடு தீப்பிடித்துக்கொண்டால் கூட, அவள் என்னிடம், ''யாரையுமே காணோமே வீடு தீப்பிடித்து எரிகிறது. யார் இதை அணைப்பார்கள்?'' என்று தான் கூறுவாள்! ஆனால், நான் அமைதியாகச் செய்யக்கூடிய காரியம் என்னவென்றால், என்னுடைய செயலற்றதன்மையை முழு விழிப்போடு, ஒரு சாட்சிபோலப் பார்த்துக் கொண்டிருப்பதுதான். இதை விளக்குவதற்கு, சில நிகழ்ச்சிகளை இப்பொழுது எடுத்துக் கூறுகிறேன்.

என்னுடைய பல்கலைக்கழகத்தின் கடைசி வருடப்படிப்பின் போது, என் வகுப்புக்கு ஒரு தத்துவப் பேராசிரியர் வந்தார். அவர் ஒரு வித்தியாசமான புத்திசாலி மற்றும் வைராக்கியம் மிக்கவர். அவர் எந்தப்

பெண்ணையுமே, ஏறெடுத்தும் பார்ப்பதில்லை என்ற வைராக்கியத்தோடு இருந்தார். அதிர்ஷ்டவசமாக, என்னுடைய வகுப்பில் இரண்டே இரண்டு மாணவர்கள்தான் இருந்தோம். ஒன்று நான், அடுத்தது ஒரு இளம் பெண். ஆகவே, அந்தப் பேராசிரியர், தன் வகுப்பில் பாடம் நடத்தும்பொழுது, தன் கண்களை மூடிக்கொண்டேதான் நடத்துவார்!

எனக்கு இது மிகவும் அதிர்ஷ்டமான நேரம்! ஏனெனில், அவர் வகுப்பை நடத்தும்பொழுது, நான் ஆழ்ந்த தூக்கத்தில் எந்தவித தொந்திரவும் இல்லாமல் இருப்பேன்! அந்தப் பெண் அங்கு இருப்பதால், அவர் நிச்சயம் தன் கண்களைத் திறக்க மாட்டார். அதே சமயம், அவருக்கு என்மேல் அளவுகடந்த பிரியம். ஏனெனில், அவரைப் போலவே, நானும் பெண்களைப் பார்க்க மாட்டேன் என்று நம்பினார். ஆகவே, அந்தப் பல்கலைக்கழகத்தில், தன்னைப் போலவே, இன்னொருவரும் இருக்கிறார் என்பதில் அவருக்குப் பரமதிருப்தி. ஆகவே, அவர் என்னைத் தனியாகச் சந்திக்கும்பொழுதெல்லாம், நான் ஒருவன்தான் அவரைச் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறேன் என்று மகிழ்ந்து சொல்வார்.

ஆனால், ஒருநாள் என்னுடைய தோற்றம் அவரைப் பொருத்த வரையில் அழிந்துவிட்டது. அந்தப் பேராசிரியருக்கு, இன்னொரு பழக்கமும் இருந்தது. அவர், ஒரு மணி நேரத்தில் வகுப்பு நடத்துவதில் நம்பிக்கையில்லை. ஆகவேதான், அவருக்கு, கடைசி நேரத்தை ஒதுக்கித் தந்தார்கள். அவர் சொல்வதாவது, ''என்னுடைய வகுப்பை ஆரம்பிப்பது என்பது என் கையில் இல்லை'' என்று ஆகவே, அவருடைய வகுப்பு 60 நிமிடம் கூட நீடிக்கும்! ஒரு வகுப்பு முடிய மணி அடிப்பது பற்றி அவருக்குக் கவலையில்லை. அது அடிக்கப்பட்டதால், என் வகுப்பை முடித்துக் கொள்ள வேண்டும் என்ற கட்டாயம் எனக்கில்லை என்று சொல்வார். அவர் எடுத்துக் கொண்ட பொருள் பற்றிய விளக்கம் முடிந்தால்தான் அவர் தன் விரிவுரையை நிறுத்துவார். மணியைப் பற்றிக்கவலையில்லை. ஆகவே, அந்த 80-90 நிமிட நேரம், நான் வகுப்பில் நன்றாகத் தூங்க வசதியாக இருக்கும்!

எனக்கும், அந்தப் பெண்ணுக்கும் ஒரு நட்பு உடன் படிக்கை இருந்தது. அதாவது, வகுப்பு முடியும் நேரம் வந்து விட்டால், அவள் மெல்ல என்னை எழுப்பிவிடுவாள்! ஒருநாள், அவளை யாரோ அழைத்தார்கள் என்று, வகுப்பின் நடுவிலேயே எழுந்து சென்று விட்டாள். ஆனால், அவளை நம்பிக்கொண்டு, நான் எப்பொழுதும் போல் நன்றாகத் தூங்கிக் கொண்டு இருந்தேன்! அந்த ஆசிரியர் தன் பாட்டுக்கு வகுப்பை நடத்திக் கொண்டிருக்கிறார். தன்னுடைய விரிவுரை முடிந்தபிறகு, அவர் தன் கண்களை விழித்துப் பார்த்திருக்கிறார். அப்பொழுது நான் தூங்கிக்கொண்டு இருப்பதைப் பார்த்து, அருகில் வந்து என்னை எழுப்பி, எதற்காகத் தூங்கிக் கொண்டு இருக்கிறாய் என்று கேட்டார். அதற்கு நான், ''நான் தூங்கிக் கொண்டு இருப்பதை இன்றுதான் நீங்கள் பார்க்கிறீர்கள். ஆனால், நான் தினமும் தூங்கிக் கொண்டுதான் இருக்கிறேன் என்பதை உங்களிடம் சொல்ல எத்தனையோ தடவை முயன்றேன். ஆனால், அந்த பெண் எனக்கு ஒத்துழைப்புக் கொடுத்தாள். ஆகவே, உங்கள் வகுப்பில் மிக ஆனந்தமாகவே தூங்கினேன்'' என்றேன்.

தூங்குதல் என்பது, என்னைப் பொருத்தவரையில், ஒரு தியானம் போலத்தான். என்னால் எவ்வளவு நீண்டநேரம் தூங்க முடியுமோ, அவ்வளவு நேரம் தூங்கவே முயற்சி செய்வேன். இதில் விஷேசம் என்னவென்றால், நீங்கள் தேவைக்கு அதிகமாகத் தூங்கினால், உங்கள் தூக்கத்திலும், நீங்கள் விழிப்பு நிலையில் இருக்க முடியும். அதே சமயம், தேவைக்குக் குறைவாகத் தூங்கினால், நீங்கள் உங்கள் தூக்கத்தில் பிரக்ஞையற்றத் தன்மையில்தான் இருப்பீர்கள். தேவைக்கு அதிகமாக உங்களால் தூங்கமுடியாது. இருந்தும், நீங்கள் அதிகமாகத் தூங்க முயற்சிசெய்தால், உங்களுக்குள்ளே இருக்கும் ஒருவர், விழிப்பாக இருந்து கொண்டு, உங்களைச் சுற்றி நடப்பவைகளை ஒரு சாட்சிபோல பார்த்துக்கொண்டு இருப்பார். நீங்கள் இதைப் போல தொடர்ந்து 36 மணி நேரம் இருந்தால், நீங்கள் கிருஷ்ணன் சொன்ன தன் அர்த்தத்தை அதாவது ரிஷிகள் இரவில் விழிப்பு நிலையில் இருப்பார்கள் என்று சொன்னதைப் புரிந்து கொள்வீர்கள். ஆகவே, உங்கள் உடல் தேவைக்கு மேல், நீங்கள்

தொடர்ந்து தூக்கத்தில் இருந்தால், உங்களுக்குள்ளே ஒரு விழிப்பு ஒலி கேட்பதை உணர்வீர்கள்.

அந்த நாளில், இப்படித் தொடர்ந்து தூங்கும் பொழுது, தூக்கத்தில் கூட விழிப்பாக இருக்க முடியும் என்பதை நான் புரிந்து கொண்டேன். அப்பொழுது, நான் இரவிலும், காலையிலும் மற்றும் மாலையிலும் தொடர்ந்து தூங்குவேன். எப்பொழுதாவது, தூங்கு வதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தால், அதை நான் நழுவவிட மாட்டேன். என்னுடைய குடும்பத்தினரும் மற்றும் நண்பர்களும் நான் ஒரு சோம்பேறி என்றும் வாழ்க்கையில் நான் எதுவும் சாதிக்க முடியாது என்றும் முழுமையாக நம்பினார்கள். ஒரு வகையில், அவர்களது பார்வையின் படி அது மிகவும் சரிதான். ஆனால், என்னைப் பொருத்த வரையில் அப்படி இல்லை. செயலற்றதன்மையை, தியானத்தின் சோதனையாக அப்பொழுது நான் செய்துகொண்டு இருந்தேன்.

இப்பொழுது என்னுடைய இன்னொரு பேராசிரியரைப் பற்றிச் சொல்ல வேண்டும். அவர் எனக்கு நல்ல நண்பர்தான். ஆனால் அவர் என்னைப் போல ஒரு சோம்பேறி! அவரும் என்னைப் போலத் தனியாக இருந்ததால், நாம் இருவரும் ஒரே அறையில் தங்கலாமே என்று அவர் அபிப்ராயப்பட்டார். அதில் சில சங்கடங்கள் உள்ளன என்று நான் கூறினேன். முக்கியமாக, அவர் என் தூக்கத்தைக் கெடுக்கக்கூடும் அல்லது அவரது தூக்கத்தை நான் கெடுக்கக்கூடும். அப்படியும், அவர் நாங்கள் இருவரும் ஒன்றாகத் தங்கலாம் என்று வற்புறுத்தினால், இரண்டு பேருக்கும் ஒத்த ஒரு ஏற்பாட்டை முன்கூட்டியே செய்ய வேண்டும் என்று கருதினேன். ஏனெனில், இரண்டு பேர்களுமே சோம்பேறிகள்! இப்பொழுதும் கூட, அவர் அப்படியேதான் இருக்கிறார். ஆனால், அந்தத் தூக்கத்தை, அவர் தன் தியானத்தின் சோதனையாக நடத்தவில்லை. இதுதான் எனக்கும், அவருக்கும் உள்ள வித்தியாசம். அப்படி அவர் செய்திருந்தால், இன்னேரம் அவர் அதைத்தாண்டிச் சென்றிருக்கக்கூடும்.

ஒன்றை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் அதாவது, நீங்கள் ஒன்றை, தியானத்தின் ஒரு பகுதியாக்கிக் கொண்டால், ஒரு சில நாட்களில், நீங்கள் அதிலிருந்து விடுபட்டு மேலே செல்ல முடியும். நீங்கள் ஒன்றை முழுமையாகத் தியானத்தன்மையோடு அல்லது விழிப்புணர்வோடு அனுபவித்தால், நீங்கள் அதிலிருந்து விடுதலை யடைந்து, மேலே செல்ல முடியும். அதைப் போல, செயலற்ற தன்மையை முழுமையாக ஒரு சாட்சிபோல் நின்று கவனித்தால், அது உங்களை விட்டு முழுமையாக அகல்வதைக் காண்பீர்கள். ஆகவே, நீங்கள் ஒன்றிலிருந்து விடுபட எண்ணினால், அதை முழுமையாக பிரக்ஞையோடு அனுபவிக்கவும். இதன் காரணமாகவே, நான் என்னுடைய செயலற்ற தன்மையை முழுமையாக அனுபவிக்கக் கருதினேன்.

ஆகவே, நானும், என்னுடைய பேராசிரியர் நண்பரும் ஒன்றாக வசிக்கும்பொழுது, முதல் நாளிலேயே எங்களுக்கிடையே உள்ள ஏற்பாடுகளைப் பற்றிப் பேசி ஒரு முடிவுக்கு வர நினைத்தேன். இதுவரையில், நாங்கள் இருவரும் தனித்தனியே வசித்தோம். ஆகவே, எங்களுக்குள் பிரச்சினை ஏதும் உண்டாக வழியில்லை. இப்பொழுது ஒன்றாக இருக்கிறோம். அவர் முதலில் சொன்னது என்னவென்றால், யார் முதலில் காலையில் எழுந்திருக்கிறார்களோ, அவர் சென்று பால் வாங்கி வரவேண்டும். அதற்கு நான் உடனே சம்மதித்தேன். இதில் எங்களுக்குச் சந்தோசம்தான். ஆனால், இருவருக்குமே, அடிமனத்தில் சந்தேகம் இருந்தது. ஏனெனில், நான் காலையில் முதலில் எழுந்திருக்க வேண்டிய அவசியம் இருக்காது என்று நான் நினைத்தேன். அதே எண்ணம்தான் அவருக்கும் இருந்திருக்க வேண்டும் என்று சந்தேகப்பட்டேன்! அடுத்த நாள் காலை 9 மணிக்கு, நான் கண் விழித்தேன். அப்பொழுது அவர் தூங்கிக்கொண்டு இருந்தார்! அதைப் பார்த்ததும், நானும் மீண்டும் தூங்க ஆரம்பித்துவிட்டேன். அவர் சுமார் 10 மணிக்கு எழுந்தார். அப்பொழுது நான் தூங்கிக் கொண்டு இருப்பதைப் பார்த்தார். ஆகவே, அவர் மறுபடியும் தூங்க எத்தனித்தார். ஆனால், அதில் ஒரு சங்கடம் இருந்தது. அவர் பல்கலைக்கழகத்துக்கு 11 மணிக்குச் செல்ல வேண்டும். அவர்

உத்தியோகத்தில் இருக்கிறார். ஆனால், நான் வெறும் மாணாக்கன்தான். அதனால், நான் கட்டாயம் போகவேண்டும் என்ற நிபந்தனையும் கிடையாது, அவசியமும் கிடையாது. மேலும், நான் கல்லூரிக்கு ஒழுங்காகவே செல்வதும் இல்லை.

முடிவில், அவருடைய தேவையைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகவாவது, அவர் எழுந்துசென்று, பால் வாங்கி வரும்படியாகி விட்டது. அவர் பால் வாங்கி வருவதற்குள், நானும் எழுந்து உட்கார்ந்துவிடுவேன். ஒருநாள், அவர் ''இந்த மாதிரியான நட்பு ரொம்ப நாளைக்கு நிலைக்காது. ஏனென்றால், இதுவே தினசரி ஒரு பெரிய தொல்லையாகி விட்டது'' என்றார். மேலும் அவர், தான் கல்லூரிக்கு கண்டிப்பாகப் போக வேண்டி இருப்பதால், அவரால் காலை 10 மணிக்கு மேல் தூங்க முடியவில்லை. ஆனால், நானே அந்த நாள் முழுவதும் அறையிலேயே தங்கியிருக்கலாம். ஆகவே, அவரே தினமும் பால் வாங்கி வர நேர்ந்தால், எங்களுடைய நட்பு நீண்ட நாள் நிலைக்காது என்று அபிப்ராயப்பட்டார்.

ஆனால், நானோ ஆரம்பத்திலிருந்தே, எந்தச் செயலிலும் ஈடுபடக்கூடாது என்று உறுதியாக இருந்தேன். முதல் இரண்டு வருடம் பல்கலைக்கழக ஹாஸ்டலில் தங்கியிருக்கும் பொழுது, நான் என் அறையைப் பெருக்கியதோ அல்லது சுத்தம் செய்ததோ கிடையாது. அதுமாத்திரமல்ல, என்னுடைய கட்டிலை, அறைவாசலுக்கு நேராகப் போட்டு வைப்பேன். ஏனெனில், அறைக்கதவைத் திறந்தவுடன், நேராக கட்டிலில் போய் விழுந்து விடுவேன்! அதைப்போல அறையை விட்டு வெளியேறும் பொழுது, நேராக கட்டிலிலிருந்து ஒரு குதிகுதித்து அறைக்கு வெளியே வந்துவிடுவேன். அப்படி ஒரு ஏற்பாடு செய்து வைத்திருந்தேன். ''எதற்காக முழு அறையைச் சுற்றிக்கொண்டு செல்ல வேண்டும்?'' என்று இந்த ஏற்பாட்டைச் செய்தேன். ஆகவே, நான் அந்த அறையை அனாவசியமாக உபயோகிக்க வேண்டியதில்லை. மேலும் அதை நான் சுத்தம் செய்யவேண்டிய அவசியமும் இல்லை. இது எனக்கு ஒருவகையில், மகிழ்ச்சியையே கொடுத்தது.

நான் அந்த அறையில் வசிப்பதற்குமுன், அது எப்படி இருந்ததோ, அப்படியேதான் நான் அங்கு சென்ற பிறகும் இருந்தது. அதில் எந்த மாற்றமும் இல்லை. தேவையான அளவுக்குமேல் அங்கு எதுவுமில்லை. இதனால், எனக்கு அபூர்வமான அனுபவங்கள் ஏற்பட்டன. ஏனெனில் ஒவ்வொரு குணத்துக்கும் ஒரு குறிப்பிட்ட அனுபவம் ஏற்படும். என்னுடைய அறையில் எவ்வளவு குப்பைகள் இருந்தாலும், அதனால் நான் சங்கடப்படவில்லை. ஒரு மிக சுத்தமான இடத்தில் எப்படி சுகமாக வசிப்பேனோ, அதைப் போல என்னுடைய அறையில் வசித்தேன்.

நான் படித்த பல்கலைக்கழகத்தில், புதியகட்டிடங்கள் இன்னும் எழும்பவில்லை. அது புதிதாகத் தோன்றிய பல்கலைக்கழகம் என்பதால், அதனுடைய ஹாஸ்டலை, பக்கத்தில் உள்ள மிலிட்டரி கட்டிடத்தில் வைத்திருந்தார்கள். அந்தக் கட்டிடம், அடர்ந்த காட்டுப் பகுதியில் இருந்ததால், அங்கு பாம்புகள் நடமாட்டம் அதிகம். நான் படுக்கையில் படுத்துக் கொண்டே, அவைகள் செல்வதை வெறுமனே கவனிப்பேன். அந்தப் பாம்புகள் என் அறைக்குள் வரும், சிறிது நேரம் தங்கும். பிறகு சென்றுவிடும். அவைகளும் ஒருபோதும் எனக்கு தொந்திரவு கொடுத்ததில்லை.

ஏதாவது குறித்து எதுவும் செய்ய விரும்பவில்லை யெனில் அனேக நிகழ்ச்சிகளை இயல்பானது என்று மனம் தானே ஏற்றுக் கொள்ளும். வாழ்க்கையில் எதுவும் செய்ய விருப்பமில்லை யெனில், நிறைவற்ற அல்லது திருப்தியற்ற தன்மை தானே மறைகிறது. ஆகவே, அந்த நாட்களில், திருப்தியற்ற நிலை என்பதற்கு வேலையே இல்லை. ஏனெனில், நான் எதுவும் செய்யாதபோது, எனக்கு எந்த எதிர்ப்பார்ப்பும் இல்லை மற்றும் எந்தப் பலனையும் எதிர்பார்க்கவில்லை. ஆகவே, அந்த செயலற்ற நிலையில், வருவது அனைத்தும் எனக்கு திருப்தியையே கொடுத்தது. சிலசமயம், சில நண்பர்கள் பரிதாபப்பட்டு, என் அறையைச் சுத்தம் செய்து கொடுப்பார்கள். அதற்காக அவர்களுக்கு நான் நன்றி செலுத்துவேன்.

பரிட்சை நடக்கும் அந்த 8 அல்லது 10 நாட்களுக்கு, என்னுடைய ஹாஸ்டல் மேலதிகாரி, என் அறைக்கு வந்து என்னைக் காலை 7 மணி அளவில் காரில் ஏற்றிக் கொண்டு, பரிட்சை நடக்கும் ஹாலில் கொண்டு போய் விட்டு விடுவார். எந்தவித முயற்சியும் இல்லாமல், எனக்கு அனுதாபமும், கருணையும் எல்லோரிடமிருந்தும் கிடைத்தது. ஏனென்றால், நான் எதுவும் செய்ய மாட்டேன் என்று அவர்களுக்கு மிக நன்றாகத் தெரியும்.

இதனால், பல எதிர்பாராத நிகழ்ச்சிகளும் ஏற்பட்டன. நான் இவைகளைப் பற்றிச் சொல்லப் போவது எதற்காக என்றால், வாழ்க்கை முழுமையான புதிரால் நிரம்பியது என்று நீங்கள் புரிந்த கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான். பரிட்சைத் தேதிக்கு முன், என்னுடைய விரிவுரையாளர் என் அறைக்கு வந்து, ஒரு சில குறிப்பிட்ட முக்கியமான கேள்விகளுக்கு, எதைப் படிக்க வேண்டும் என்று அக்கறையோடு என்னிடம் விளக்குவார். நான் யாரிடமும் எதற்காகவும் சென்றதில்லை. அந்த விரிவுரையாளர் என்னிடம் குறிப்பிட்ட கேள்விகளைச் சொன்ன பிறகும், அதற்கான பதில்களை நான் படிப்பேன் என்ற நம்பிக்கை அவரிடம் ஏற்படாது. ஆகவே, அவர், எல்லாமே சொல்லி முடித்த பிறகு, என்னைச் சந்தேகக்கண் கொண்டு பார்ப்பார்! அதாவது, நான் அவர் சொன்னதை உண்மையிலேயே புரிந்து கொண்டேனா என்று. ஆகவே, அவர் தான் குறிப்பிட்ட அந்த கேள்விகள் கண்டிப்பாக பரிட்சைக்கு வரும் என்பார். ஏனெனில் அந்தக் கேள்விகளைத் தயாரித்ததே அவர்தான். ஆகவே, அவைகள் கண்டிப்பாக வரும் என்று மீண்டும் மீண்டும் சொல்வார்.

நான் இதன்மூலம் சொல்ல வருவது என்னவென்றால், நீங்கள் இந்த உலகத்தில், உங்களுக்காக எதையாவது அபகரிக்க, திருட முனைந்தால், அதற்கு எங்கும் பெரிய எதிர்ப்புத் தோன்றும். ஆனால், நீங்கள் உங்களுக்காக எதையும் செய்யாமல் இருந்தால், எல்லா கதவுகளும் உங்களுக்காகத் திறக்கப்படும் மற்றும் தேவையான அனைத்தும் தானே உங்களைத் தேடிவரும் என்பது தான்.

அந்தக் கல்லூரி நாட்களில், நான் பெரும்பாலும் என் கட்டிலில் படுத்துக் கொண்டு, வெறுமனே மேற்கூரையைப் பார்த்துக் கொண்டே இருப்பேன். ரொம்ப நாளைக்குப் பிறகு, மெஹர் பாபா (MEHAR BABA) இப்படித்தான் தியானம் செய்தார் என்று அறிந்துகொண்டேன். ஆனால், நான் இதை எந்தவித முயற்சியும் இல்லாமல், நானே செய்ய ஆரம்பித்தேன். ஏனெனில், நீங்கள் கட்டிலில் வெறுமனே படுத்திருந்தால், வேறு என்ன செய்ய முடியும். என்னுடைய தூக்கம் கலைந்தபிறகு, நான் அப்படியே கண்களைச் சிமிட்டாமல் மேலே பார்த்துக்கொண்டே இருப்பேன். கண்களை எதற்காகச் சிமிட்ட வேண்டும்? அப்படிச்செய்தால், அதுவும் செயலில் சேர்ந்துவிடும் அல்லவா? நான் அப்படியே எவ்வளவு நேரமானாலும் படுத்திருப்பேன். இப்படி ஒருவன் ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் வெறுமனே படுத்திருந்தால், அவனுடைய மனம் சுத்தமாகி, மேகமற்ற ஆகாயம் போல் காட்சி அளிக்கும். அதாவது எண்ணமற்ற நிலையில் இப்படி ஒருவன் தன் வாழ்க்கையைக் கடைப்பிடித்தால், எண்ணமற்ற அனுபவத்தை அவன் இயல்பாகவும்; சுலபமாகவும் அடைய முடியும்.

அப்பொழுதெல்லாம், நான் ஆன்மா மற்றும் கடவுளைப் பற்றி எதையும் நம்புவதில்லை. அப்படி நம்பாததற்கு முக்கியக் காரணம் என்னவென்றால், நம்புதல் என்பதுகூட செயலில் சேர்த்திதான். செயலற்று இருப்பதற்கு, நாத்திகத்தன்மையே மேலானது. ஏனெனில், கடவுள் இருக்கிறார் என்று நினைத்தால், அதற்காக நாம் ஏதாவது முயற்சி செய்ய வேண்டிவரும். அப்படி எதையும் நம்பாமல், வெறுமனே கட்டிலில் கிடந்தால், கடவுளும், ஆன்மாவும் தன் ஒளியைக் காட்டுவார்கள். அதை நம்மால் பார்க்க முடியும். நான் இந்தச் செயலற்ற தன்மையை, அதுவாக தானே என்னை விலக்கும் அளவுக்கு, அதை விடவே இல்லை. அதுவே அப்பொழுது என் தீர்மானமாக இருந்தது-ஆகவே, எதுவுமே செய்யாமல் அப்படியே இருந்தேன்.

ஒருவன் செயலற்ற நிலையில் முழுமையாக வாழ்ந்தால், 'ராஜஸகுணா' தானே உள்ளே பரிணமிக்க ஆரம்பித்துவிடும் என்று நான்

அப்பொழுது புரிந்துகொண்டேன். ஏனென்றால், வாழ்க்கையில் இது இரண்டாவது கட்டம்; இது, இரண்டாவது நிலையில் நம் உள்ளே மறைந்திருக்கிறது. ஆகவே, முதல் நிலை முடிந்து, கடந்த நிலையில், அடுத்த நிலை ஆரம்பமாகிவிடுகிறது. அது தானா உங்கள் உள்ளே வர ஆரம்பிக்கிறது. இந்த செயல், ஒரு தனித்தன்மை வாய்ந்தது. இது ஒரு அரசியல்வாதியின் செயல்போல, பரபரப்பும் இறுக்கமும் நிறைந்து, ஓட்டு வாங்க ஓடும் செயல் போல அல்ல. உங்களுடைய செயலற்ற தன்மை, அதனுடைய பலனான எண்ணமற்ற நிலையை உங்களிடம் தோற்றவிக்குமானால், பிறகு ஏற்படும் செயல்தன்மை எந்த ஆசையும் இல்லாமல்தான் இருக்கும். அதற்குமாறாக, அது கருணை நிரம்பி வழியும். இந்தச் செயலிலும், நான் முழுமையாக வாழ்ந்திருக்கிறேன்.

ஒரு இயல்பான நிகழ்ச்சிக்கு எதிராக ஒரு தடங்கலை உண்டு பண்ணுவதற்கு எனக்கு இஷ்டம் எதுவுமில்லை. எது நடக்க வேண்டுமோ, அதை அப்படியே நடக்க அனுமதிப்பேன். அப்படி அவைகளை இயல்பாக அனுமதித்தால், ஒருவன் அந்த சாதாரண தன்மைகளிலிருந்து தாண்டிச் செல்ல முடியும். ஏனினல், ஒருவன் எதையும் செய்வதில்லை. அந்த செயலிலேயே அதைச் செய்பவன் இருக்கிறான்.

எனக்கு அந்த இரண்டாவது தன்மை, அதாவது ராஜஸகுணம் பரிணமித்தபிறகு, நான் இந்த தேசம் முழுவதும் சுற்ற ஆரம்பித்துவிட்டேன். நான் 10-15 வருடத்தில் சுற்றிய அளவுக்கு, ஒருவன் சுற்ற 2 அல்லது 3 பிறவிகளாவது எடுக்க வேண்டும். அந்த 10-15 வருடங்களில், நான் பேசியவைகளை எட்ட, சாதாரணமாக ஒருவனுக்கு 10-15 பிறவிகள் வேண்டும். காலையிலிருந்து இரவுவரை, நான் எங்கும் சுற்றியவாறே இருந்தேன். காரணம் இருக்கிறதோ அல்லது இல்லையோ, நான் பல மாறுபட்ட கருத்துகளையும், வித்தியாசமான அபிப்பிராயங்களையும் வெளிப்படுத்திக் கொண்டே இருந்தேன். ஏனென்றால், நான் எந்த அளவுக்கு மாறுபட்ட மற்றும் வித்தியாசமான கருத்துக்களை ஏற்படுத்துகிறேனோ, அவ்வளவு சீக்கிரமாக அந்த இரண்டாவது

தன்மையிலிருந்து விடுபடுவேன். ஆகவேதான், நான் காந்தி மற்றும் சோஷலிசம் போன்றவைகளை மாறுபட்டு விமர்சித்துப் பேசினேன்.

இந்த விஷயங்களுக்கும், மற்றும் அரசியலுக்கும் எனக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை. முக்கியமாக அரசியலில் எனக்கு எந்தப்பற்றும் கிடையாது. ஆனால், இவைகளினால், இந்த மானிட இனம் தாக்கப்படுமானால், நானும் அந்த மானிட இனத்தில் ஒருவன் என்ற முறையில், அவைகளைத் தாக்க முற்படுகிறேன். சமயத்தில், விளையாட்டாகக் கூட, என் மாறுபட்ட கருத்துகளை வெளியிடுவேன். ஆனால், அதற்கும் ஆதாரம் இருக்கும். ஆகவே, இந்த இரண்டாவது தன்மையில் செயல்படும்பொழுது, நான் பல மாறுபட்ட வித்தியாசமான கருத்துகளை வெளியிட்டு, அதனால் மகிழ்ச்சியும் அடைந்தேன்!

ஆனால் இந்த என்னுடைய மாறுபட்ட கருத்துக்கள், ஆசையினால் உந்தப்பட்டு, இறுக்கம் நிறைந்ததாக, இருந்திருந்தால், அது எனக்கு மகிழ்ச்சியற்ற நிலையையே உண்டு பண்ணியிருக்கும். ஆனால், இவைகளெல்லாம் என்னுடைய ராஜஸ குணத்தை மேம்படுத்த தேவையாக இருந்ததால், எனக்கு அதில் ஒரு ஈடுபாடும், உற்சாகமும் ஏற்பட்டது. இந்த முரண்பாடான கருத்துக்கள் எப்படியென்றால், ஒரு நடிகன் நடித்து அப்படிப்பட்ட கருத்துக்களை வெளியிடுவது போலத்தான்!

பஞ்சாபில் உள்ள புகழ்பெற்ற வேதாந்த வித்தகர் ஹரிகிர்ஜி மகாராஜாவுக்கும் (HARIGIRJI MAHARAJ), எனக்கும் வேதாந்தத்தில் ஒரு பெரிய சர்ச்சை ஏற்பட்டது. என்னைப் பொருத்தவரையில், அது ஒரு நாடகம்தான்! ஆனால், அவரைப் பொருத்தவரை மிகக் கடுமையான சங்கதி. அது அவருடைய நிலையான கொள்கையைப் பாதித்தது. அவர் முடிவில் இறுக்கம் நிறைந்தவராக இருந்தார்.

அதைப் போல பாட்னாவில் பூரி சங்கராச்சாரியாருக்கும் எனக்கும் ஏற்பட்டது. முன்பு சொன்னதுபோல, அது எனக்கு ஒரு விளை யாட்டுதான், நாடகம்தான். ஆனால், அவரைப் பொருத்தவரையில், அது அவருடைய தொழில். அதில் அவர் இறுக்கம் மிகுந்து, ஒரு கட்டத்தில்,

மேடையிலிருந்து கீழே விழ இருந்தார். அவர் முழு உடலே, இறுக்க நிலையில் ஆடியது. ஆனால், என்னுடைய செயலில் நான் முழுமையாக இருந்தேன். அப்பொழுதான் என்னால் அதைக் கடந்து செல்ல முடியும். பல நண்பர்கள், என் வாதத்தை நிறுத்தும்படி முயற்சி செய்தார்கள். ஆனால், அதை நானாக நிறுத்த விரும்பவில்லை. அந்த வாதமே, தானே செயலிழந்து, முடியும்வரை காத்திருந்தேன்.

மாதத்தில், மூன்று வாரங்கள் நான் புகைவண்டியில்தான் உட்கார்ந்திருப்பேன். ஒரு நாள் காலையில் பம்பாயில் இருப்பேன். அடுத்த நான் மாலை கல்கத்தாவில் இருப்பேன். அதற்கு அடுத்த நாள் அமிர்தசரஸ்ஸில், அதற்கு அடுத்த நாள் லூதியானாவில் அல்லது டெல்லியில் இருப்பேன். என்னுடைய செயலுக்கு, இந்த முழு தேசமே ஒரு அங்கமாக இருந்தது. நான் எங்கு சென்றாலும், எல்லா இடங்களிலும், மாறுபட்ட கருத்துக்கள் ஏராளமாக உருவெடுத்தன. ஏனெனில், நீங்கள் ஒரு செயலைத் தீவிரமாகச் செய்யும்பொழுது, அதற்கு மறுசெயல் (REACTION) தானே ஏற்படும். செயலும், எதிர்செயலும் ஒருங்கே பிறப்பவை.

செயலற்ற நிலையில் இருக்கும்பொழுது, நான் பேசுவதைக் கூட பெரும்பாலும் தவிர்த்தேன். அல்லது மிகவும் தேவையானால், சிறிதுபேசுவேன். திரும்பத்திரும்ப கேள்விகள் கேட்கப்பட்டால், மிகச் சுருக்கமாகப் பதில் அளிப்பேன். ஆனால், செயல்தன்மையில் இருக்கும்பொழுது, என்னைக் கூப்பிடாவிட்டாலும், நானே வலியச்சென்று மிக விரிவாகப் பேசிக் கொண்டே இருப்பேன். நானே மக்களிடம் வலியச் சென்று பேசுவேன். அப்பொழுது என்னுடைய வார்த்தைகளில் பொறிபறக்கும்! ஒருவருடைய இதயத்துடிப்பை நிறுத்தும் அளவுக்கு என் பொறி பறக்கும் பேச்சை, ஏன் இப்பொழுது நிறுத்திவிட்டீர்கள் என்று இப்பொழுது மக்கள் என்னிடம் வந்து கேட்கிறார்கள்.

அந்தக் காலத்தில், என் பேச்சில் நெருப்புப் பொறி பறந்தது உண்மைதான். ஆனால், அந்த நெருப்பு, நானாக ஏற்படுத்திக்

கொண்டதல்ல. அது ராஜஸ குணத்திலிருந்து வெளிப்பட்டது. அதிலிருந்து வெளிப்பட்ட நெருப்பை அணைக்க, ஒரே ஒரு வழிதான் உண்டு. அதுதானே முழுமையாக, தீவிரமாக எரிந்து, முடிவில் தானே சாம்பலாக வேண்டும். அது எவ்வளவுக்கெவ்வளவு தீவிரமாக செயல்படுகிறதோ, அவ்வளவு சீக்கிரம் அது சாம்பலாகி மறைந்து போகும். அதனுடைய செயல் மெதுவாக இருந்தால், அது சாம்பலாக மிக நீண்ட நாளாகும். ஆகவேதான் என் செயலில் அப்பொழுது மிகத் தீவிரமாக இருந்தேன். அப்பொழுதுதான் நான் அதிலிருந்து சீக்கிரம் வீடுதலையடைய முடியும்.

இப்பொழுது அந்த நெருப்பு அணைந்து விட்டது. இப்பொழுது, மாலையில் எப்படி சூரியன் தன் கதிர்களை தானே வாங்கிக் கொள்ளுமோ, அல்லது மீன் பிடிப்பவன் எப்படி தன் வலையை சுருட்டிவைத்துவிடுவானோ, அதைப் போல, நான் என் செயலை மெல்ல உள்வாங்கிக் கொண்டேன். 'நான்' என்ற சொல்லை உபயோகிப்பது சரியில்லைதான். அந்த உள்வாங்கிக்கொள்ளல், தானே நிகழ்ந்தது. ஏனெனில், அடுத்த குணமாகிய 'சத்வகுணா' ஏற்பட ஆரம்பித்து விட்டது. ஆகவே, நான் மெல்ல என் செயலை ஒடுக்கிக்கொண்டு வருவதை, நீங்கள் கவனித்திருக்கலாம். இந்த இடத்தில், ஒருசமயம் 50,000 பேர்கள் என் பேச்சைக் கேட்க குழுமியிருந்தார்கள். ஆனால், இப்பொழுது 50 பேர்கள் என் பேச்சைக் கேட்டாலே, நான் திருப்தியடைந்து விடுகிறேன். கூடிய சீக்கிரம், என் பேச்சை 5 பேர்கள் கேட்டாலே போதும் என்ற நிலைக்கு நான் வந்துவிடுவேன்.

ஆகவே, ராஜஸகுணா மெல்லக் குறைந்து, மறைந்து, 'சத்வகுணா'வின் சக்தி மேம்பட ஆரம்பித்த பொழுது, எல்லா செயல்களும், அமைதியில் கரைந்துவிட்டது. 'தாமஸகுணா' வில், எல்லாச் செயல்களும் இழந்து நின்றது. ஆனால், அந்த இழப்பு என்பது அந்தச் செயல்கள் தூங்குவது போலத்தான். அது மேலே கிளம்ப சந்தர்ப்பம் பார்த்துக்கொண்டு இருந்தது. ஆனால், 'சத்வகுணா'வில், எல்லா செயல்களும் அமைதி நிலையில் கரைந்து மறைந்துவிட்டது.

ஆனால், அந்தக் கரைதல், முழுமையான விழிப்புணர்ச்சிக்கு வழிவகுத்தது.

செயலற்ற தன்மைக்கும், தெளிவு பெற்ற நிலைக்கும் ஒரு ஒற்றுமை இருக்கிறது. இரண்டும் அமைதி நிலையில் தான் முடிவடைகிறது. ஆனால், செயலற்ற தன்மையிலிருந்து எழும்பும் அமைதிநிலை, (அதாவது 'தாமஸ குணா'விலிருந்து) தூக்க நிலைக்கு ஒப்பாகும். ஆனால், 'சத்வகுணா'விலிருந்து எழும்பும் அமைதி நிலை, அமைதியான விழிப்பு நிலையில் முடியும். இரண்டுக்கும் முடிவில்தான் வேறுபாடு.

வாழ்வில் இயல்பான மாறுபாடு இவைகள்தான் என்று நான் அறிவிக்கிறேன். அதாவது முதல்கட்டம் செயலற்ற தன்மை, இரண்டாவது கட்டம் செயல்நிறைந்த தன்மை, மூன்றாவதுகட்டம் தெளிவுபெற்ற அமைதிநிலை. இந்த மூன்று நிலைகளிலும், ஒருவன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்ளாமல், ஒரு சாட்சிபோல் செயல்பட்டால், அவன் முழுமையான தியானத்தில் இருக்கிறான் என்று அர்த்தம். இந்த மூன்று கட்டத்திலும், நீங்கள் அவைகளைச் செய்யவில்லை என்பதை பிரக்ஞையாக உணரவேண்டும். அந்த குணம்தான் அந்த வேலையை செய்கிறது என்றும், நீங்கள் அதை வெறுமனே பார்ப்பவனாக மட்டும் இருக்கிறார்கள். இந்தப் பிரக்ஞை உணர்வு உங்களிடம் முழுமையாக இருந்தால், அந்தக் குணங்கள் ஒன்றன் பின் ஒன்றாக விரைவாகச் செயல்பட்டு மறைந்துவிடும். பிறகு, நீங்கள் அந்த மூன்றையும் கடந்தநிலையில், மிக அமைதியாக, நிசப்தமான மற்றும் பேரானந்த நிலையில் இருப்பீர்கள்.

இந்த மூன்று குணங்களையும் கடந்து, ஒருவன் நான்காவது நிலையை அடையவேண்டும். அதை நான்காவது நிலை என்று சொல்லுவது கூடச் சரியில்லை. ஏனெனில் அது வெறும் வெறுமை நிலைதான் (NOTHINGNESS). இந்த மூன்று குணங்களில் எதுவும் அங்குக் கிடையாது.

கிருஷ்ணா இந்த மூன்று குணங்களையும் ஒரே சமயத்தில் வெளியிட்டிருக்கிறார். நானும் இந்த மூன்று குணங்களை வெளியிட்டிருக்கிறேன். ஆனால் ஒன்றை அடுத்து அடுத்தது என்ற கட்டமாகத்தான்; அதாவது ஒரு கால இடைவெளிக்குப் பிறகுதான். ஆகவேதான் என் கருத்துக்களில் அல்லது அறிக்கைகளில் ஒரே நிலை வெளிப்படாது. 'தாமஸகுணா'வில் இருக்கும்பொழுது, நான் என்ன செய்தேனோ அல்லது என்ன சொன்னேனோ, அவைகள் 'ராஜஸ்குணா'வில் இருக்கும்பொழுது வெளியிட்டதிலிருந்து முற்றிலும் மாறுபட்டு இருக்கும். 'ராஜஸ்குணா'வில் இருக்கும்பொழுது செய்த அல்லது சொன்ன கருத்துக்கள் அனைத்தும், 'சத்வகுணா'வில் இருக்கும்பொழுது செய்ததற்கு அல்லது சொன்னதற்கு மாறாகவே இருக்கும்.

ஆகவே, ஒருவன் உட்கார்ந்து என் அறிக்கைகளையும், கருத்துக்களையும் திரட்டினால், அவைகளை அவன் மூன்று பகுதிகளாகப் பிரிக்க வேண்டிவரும். அப்பொழுது அவன் பலவித முரண்பாடுகளைச் சந்திக்க வேண்டிவரும். அது அப்படித்தான் இருக்கும். ஏனெனில், அந்த வெளிப்பாடு, மூன்று வெவ்வேறு நிலைகளில், ஒருமித்த கருத்தை எதிர்ப்பார்க்க முடியாது. ஆனால், என்னிடம் ஒருமித்த நிலையான தன்மையை ஒருவன் எதிர்ப்பார்த்தால், அவன் என்னுடைய நாலாவது நிலையில் தான் அதைப் பார்க்க முடியும். முதல் மூன்று நிலைகளிலும், என்னிடம் உள்ள ஒரே நிலையான தன்மை எதுவென்றால், நான் வெறும் காட்சியாக அல்லது பார்வையாளனாக இருப்பது மட்டும்தான்.

★★★